# ब्रह्मसूत्रशाङ्करभाष्यम् ॥

# ப்ரம்ஹ ஸூத்ர சாங்கர பாஷ்யம்

Released by Maran's Dog ,Toronto, Canada

## மூன்றாவது ஸாதனாத்தியாயம்
(தமிழுரையுடன்)

Released by Maran's Dog ,Toronto, Canada




கடலங்குடி பப்ளிகேஷன்ஸ்
சென்னை - 600 017.

Released by Maran's Dog ,Toronto, Canada



श्री:

॥ श्रीराधाकृष्णपरब्रह्मणे नमः ॥



# ब्रह्मसूत्रशाङ्करभाष्यम् ॥

## तृतीयस्साधनाध्यायः ॥

# ப்ரம்ஹஸூத்ர சாங்கர பாஷ்யம்.

## மூன்றுவது ஸாதனுத்தியாயம்.

(தமிழுரையுடன்)

இச்சிறந்த உரை

மஹாமஹோபாத்யாய வேதாந்த கேஸரி பங்கானாடு, ப்ரம்ம ஸ்ரீ கணபதி சாஸ்திரிகள் அவர்களின் முக்கிய சிஷ்யரும், வ்யாகரண வேதாந்த சாஸ்திர பாரங்கதரும், பாகவத பகவத் கீதோபன்யாஸகரும், சோதிட மந்திர சாஸ்திர வித்வானுமான

வ்யாகரண வேதாந்த சாஸ்திர பாரங்கத: குலபதி:

## ப்ரம்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள்

அவர்களால் இந்நூலில் தேவநாகரலிபியில் பாஷ்யமும், தமிழில் மொழி பெயர்ப்பும், ஒவ்வொரு சூத்திரமும் தமிழிலும் வெளியிடப்பட்டுள்ளது. அன்னாரால் பாமதீ, கல்பதரு, பரிமள ப்ரம்ஹவித்தியாபரணம், ராமாநந்தியம், நியாயரக்ஷாமணி முதலிய பாஷ்ய வியாக்யானங்களை யொட்டி ஆங்காங்கே குறிப்பு எழுதியும் விளக்கியும் அத்வைத சித்தாந்தத்தை யொட்டி ஆங்காங்கே சூத்திரார்த்தங்களைத் தெளிவாக விளக்கியும் ஒவ்வொரு அதிகாரத்திலும் வித்யாரண்ய சுவாமிகளால் இயற்றப்பட்ட வைஃயாஸிக நியாயமாலையை எழுதி அதற்குக் கருத்துரை எழுதியும் வெளியிடப்பட்டது.

தொகுப்பாசிரியர் : **Dr. K.N. சரஸ்வதி**

M.A., M.S., M.Ed., Doctorate in Counselling, Diplomas in Naturopathy, Art, Yoga and Computer

பதிப்பாசிரியர் : **M.A. ஜெய்சங்கர் B.A., M.B.A**

"கடலங்குடி பப்ளிகேஷன்ஸ்"

38, நடேச அய்யர் தெரு,

தி.நகர், மெட்ரூஸ் – 600 017

✆ : 4343406 E-Mail : sara@giasmd01.vsnl.net.in.

Web Site: http://www.indiayellowpages.com/K.N.Saraswathy.htm

முதற் பதிப்பு : 1932
**இரண்டாம் பதிப்பு : பிப்ரவரி 1998**



**விலை ரூ 350.00**

அச்சிட்டோர் :
ஜெய்சங்கர் பிரிண்டர்ஸ்
38, நடேச அய்யர் தெரு,
தி.நகர், மெட்ரூஸ் – 600 017
✆ 4343406





கோபால தத்வ ரக்ஷாமணி, அபிநவ வியாஸர்,
குலபதி, ஜோதிஷ சக்கரவர்த்தி, அபிநவ
சுகபிரம்மம், அபிநவ வராஹமிஹிரர்.

கடலங்குடி

பிரமமஸ்ரீ நடேச சாஸ்திரிகள்

(1878 – 1961)

# முகவுரை.



முதலாவது அத்தியாயத்தில் ஸர்வவேதாந்தங்களுக்கும் அத்விதீயமான ப்ரம்ஹத்தினிடத்தில் ஸமன்வயம் சொல்லப்பட்டது. இரண்டாவது அத்தியாயத்தில் ஸாங்கியாதி ஸ்மிருதிகள் மூலமும், யுக்திகள் மூலமும், முற்கூறிய ஸமன்வய விஷயத்தில் வரும் விரோதம் போக்கப்பட்டது. ஆகவேப்ரம்ஹமானது வேதாந்தங்களால் மட்டுமறியக்கூடியதேயொழியப் பிறவற்றால் அறியக்கூடியதன்று எனப் பெறப்பட்டது. இந்த மூன்றாவது அத்தியாயத்தினால் அத்தகைய ப்ரம்ஹத்தின் ப்ராப்த்திக்குரிய ஸாதனமானது சொல்லப்படுகிறது. ஆனதுபற்றியே தான் இது "ஸாதனாத்யாயம்" என்றழைக்கப்படுகிறது. இதில் வைராக்கியபாதம் என்றும், பதார்த்தசோதன பாதமென்றும், குணோபஸம்ஹார பாதமென்றும், க்ஞானங்க பாதமென்றும் நான்கு பாதங்களிருக்கின்றன. முதலாவதுபாதம் முதலாவது அதிகரணத்தில் ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரத்துக்கு ஸாதனமான வைராக்கியமானது ஜீவனுடைய கதாகதிகளைச் சொல்லும் வாயிலாக விளக்கப்பட்டது. ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரமானது தத்த்வமஸி என்றதாதி மஹாவாக்கியங்களாலுண்டாவது பற்றியும், அதற்கு தத்த்வம் பதார்த்தக்ஞானமானது இன்றியமையாதது பற்றியும், இரண்டாவது பாதத்தில் ஜீவனது அவஸ்தைகளை நிரூபணஞ்செய்கின்ற சில அதிகரணங்களால் த்வம் பதார்த்த சோதனமும், "ந ஸ்தானதோபி பரஸ்யோபயலிங்கம் ஸர்வத்ரஹி" என்றதாதி அதிகரணங்களால் தத் பதார்த்த விவேசனமும் செய்யப்பட்டது. "பலமத உபபத்தே:" எனப் பாதத்தின் முடிவிலுள்ள அதிகரணத்தால் ஈஸ்வரானுக்கிரஹமே அதற்குக் காரணம் என்பதுவும் விளக்கப்பட்டது. மூன்றாவது குணோபஸம்ஹாரபாதத்தில் உபாஸனையினாலுண்டாவதும், சித்தைகாக்ர்யரூபமானதுமான ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரத்துக்குரிய ஸாதனமானது நிரூபிக்கப்பட்டது. நான்காவதுபாதத்தில் சில அதிகரணங்களால் க்ஞானத்துக்குப் பஹிரங்கஸாதனங்களும், சில அதிகரணங்களால் ஸன்னியாஸம், சமம், தமம் முதலிய அந்தரங்கஸாதனங்களை நிரூபணஞ் செய்யவேண்டி அவற்றைப்பற்றிய விதிபேதங்களும் விசாரிக்கப்பட்டன. ஆகவே இந்தமூன்றாவது அத்தியாயத்தில் மோக்ஷஸாதனமான ப்ரம்ஹஸாக்ஷாத்காரமானது அதற்குவேண்டிய ஸாதனங்களுடன் உபதேசிக்கப்பட்டதாகவாகிறது.

ஆகவேஇந்தமூன்றாவது அத்தியாயத்தை எனது குருநாதனுடைய உபதேச மூலம் எனது சிற்றறிவுக்கெட்டியவரை தமிழில் பெயர்த்து வெளியிட்டிருப்பதில் ஏதேனும் சொற்பிழை பொருட்பிழை இருக்குமாயின் அதைஅடுத்த பதிப்பில் திருத்துவதற்கு உபயோகமாகும் வழியில் நின்று உபகரிக்கவேண்டுமாய் பண்டித சிகாமணிகளை நான்ப்ரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆனால் ஸூத்திரபாஷ்யத்தைத் தமிழில்பெயர்த்து வெளியிட்டிருப்பதில் இடையிடையே ஸம்ஸ்கிருதக்கலப்புடனேயே மொழிபெயர்க்கப்பட்டிருப்பதாகவும், தனித்தமிழில் பெயர்க்கப்படவில்லை என்றும் சிலர்எண்ணுவதாகத் தெரிகிறது. அவ்விதம் அவர்எண்ணுவது நியாயமாக இருந்தபோதிலும் எனது சிற்றறிவுக்கேற்ப எவ்வளவு தமிழில்பெயர்க்கமுடியுமோ அவ்வளவு பாடுபட்டும்,

தனித்தமிழில்பெயர்க்கமுடியாதவற்றை ஸம்ஸ்கிருதம் கலந்தமொழியில் பெயர்த்தும், ஸம்ஸ்கிருதபதத்தினுல் சொன்னுலல்லாது பாஷ்யத்தின்பொருளை நன்கு விளக்கமுடியாதிருக்குமிடத்தில் அப்படியே ஸம்ஸ்கிருதபதத்தைச் சொல்லி () இந்த அடையாளங்கொடுத்து கூடுமானவரை தமிழில் அதன் பொருளைவிளக்கியும் எழுதியிருக்கிறேன். அத்துடன் பாஷ்யம் ஏற்பட்டகாலந்தொடங்கி இன்றுவரை இதுஇம்முறையில் தமிழில் பெயர்க்கப்படாது இஃதேமுதலாக வெளிவர ஆரம்பித்திருப்பதால்இம்முதற்பதிப்பில் இவ்விதமிருந்தபோதிலும் அடுத்துள்ள பதிப்புகளில் வேண்டிய திருத்தத்துடன் வெளிவரக்கூடும் எனஎதிர்பார்க்கலாம் என்பதைமட்டுந்தான் நான் இப்பொழுது சொல்லக்கூடியவனுக விருக்கிறேன்.

மேலும் இதுவரை எவரும் செய்யத்துணியாத இவ்வழியிலிறங்கி நான் செய்யும் வேலையைப் புகழ்ந்தும், இகழ்ந்தும் பலர் பேசுகின்றனர் என்பது எனக்குத் தெரியுமாயினும் அதைக்கவனியாது வடமொழியிலிருப்பதுபற்றி அதன்பொருளைத்தொடர்ந்து அறியமுடியாதவர்களும், ஆனுல் தொடர்ந்து அதன்பொருளை அறியவிருப்பமுள்ளவர்களுமான ஆர்யர்களுக்கு உபகரிக்கவேண்டியே இவ்வேலையைச்செய்ய நான் துணிந்தேனே அன்றி புகழ்ச்சியில் விருப்புக்கொண்டோ, இகழ்ச்சிக்குப் பயந்தோ இதை நான் செய்யமுன்வரவில்லை என்பதைமட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

"முனிவரு மன்னனுமுன்னுவ பொன்னுன் முடியும்" என்றபடி ஏராளமான பொருளுள்ளவர் செய்யக்கூடியதும், எனதுசக்திக்கு மீறினதுமான இப்பெரிய காரியத்திலிறங்கி இதைஎவ்விதம்முடிப்பது? எனஏங்கி இருக்கும்ஸமயத்தில் எவ்விதப்ரதிப்ரயோஜனத்தையும் எதிர்பாருது இம்மூன்ருவது அத்தியாயவெளியீட்டுக்காகத் தக்கஸமயத்தில் பொருளுதவிசெய்து 'அஞ்சேல்!' என அபயப்ரதானஞ் செய்தவர்களும், அத்வைதாத்மானந்தானுபவத்திலீடுபட்டுத் தனது ஜன்மாவை ஸபலமாக்கிக்கொண்டவர்களும், கருணுமூர்த்திகளுமான மகா-ா-ஸ்ரீ பாலக்காடு சித்தூர் ஆர். சுப்பிரமணிய அய்யர்வாள் அவர்களுக்கும், ஸாதுக்களுக்கு இருப்பிடமும் கொடையில் கர்ணனுக்கு நிகரானவர்களும், தர்மமார்க்கத்திலேயே இடையருப் பிரவிருத்தியுள்ளவர்களும் கருணுமூர்த்திகளும், மஹாப்ரபுக்களுமான மகா-ா-ஸ்ரீ கொழுமம் பெரியசாமி அய்யர்வாள் அவர்களுக்கும், மஹாராஜாக்களும் செய்தற்கரிதான துலாபாரதானம் முதலியவற்றைத் தனதன்னைக்குச் செய்துவைத்தவர்களும், ஜனகாதிகளைப்போல ப்ரவிருத்தி நிவிருத்தி மார்க்கங்களிலீடுபட்டவர்களும் பரோபகாரஞ் செய்தலையே சொந்ததர்மமாகக் கொண்டவர்களுமான மகா-ா-ஸ்ரீ கூ. ரா. லக்ஷ்மணச் செட்டியாரவர்களுக்கும் நன்றி பாராட்டுகிறேன் என எழுதுவதைவிட வேறு எதை நான் செய்யமுடியும்.

**दिनेदिने च वेदान्तश्रवणाद्भक्तिसंयुतात् । गुरुशुश्रूषया लब्धात्कृच्छ्राशीतिफलं भवेत् ॥**

என்றறியாயப்படி முன்னர் குருமுகாதீனமான சொந்தவிசாரத்தாலும், பிறரைவிசாரிக்கும்படி செய்தலாலும் எனக்கேற்படும் புண்ணியத்தால் திருப்தியடைந்த சாஸ்வததர்ம கோப்தாவான ஸ்ரீகோபாலன் அந்தமஹான்களுக்கு ஆயுராரோக்ய ஐஸ்வரிய போகபாக்கியாதிகளைத் தந்து அருள்புரியவேண்டுமாய் எனது இஷ்டதைவமான ஸ்ரீகோபாலனையே இடைவிடாது ப்ரார்த்திக்கிறேன்.

**கடலங்குடி நடேச சாஸ்திரிகள்,**

ஆர்யமத ஸம்வர்த்தனீ பத்திராதிபர்,

கஸ்தூரிரங்கவிலாஸ் நடேசய்யர் தெரு,

மாம்பலம் சென்னை.

29-2-1932.

# விஷய அட்டவணை.



## முதல் பாதம்.

### ததந்தரப்ரதிபத்யதிகாணம். (1)



*

பக்கம்.

## இரண்டாவது பாதம்.

**

பக்கம்.

***

பக்கம்.

பராமர்சாதிகரணம். (2)



ஸ்துதிமாத்ராதிகரணம். (3)



பாரிப்லவாதிகரணம். (4)



அக்னீந்தனாத்யதிகரணம். (5)

விஷயஅட்டவணை முற்றிற்று.



ओं तत्सद्ब्रह्मणे नमः ॥

# ब्रह्मसूत्रशाङ्करभाष्यम् ॥

## साधनाख्ये तृतीयाध्याये प्रथमः पादः ॥ १ ॥

[अस्मिन्पादे वैराग्यजननार्थं जीवस्य गत्यागतिप्रकारश्चिन्त्यते]

---

ओं नमो भगवते वासुदेवाय ॥

# ப்ரம்ஹ ஸூத்திர சாங்கரபாஷ்யம்.

## மூன்ருவது ஸாதநாத்தியாயம்.

அவதாரிகை—"उपाये यत्नः कर्तव्यः नोपेये" "ஸாதநத்தில் முயற்சி செயய வேண்டுமேயொழிய பயனில் முயற்சி செய்யத்தேவையில்லை" என்றபடியும், "ஸாதநமின்றி யொன்றைச் சாதிப்பாருலகிலில்லை" என்றபடியும் முக்தி (வீடு) பெறுதற்கு அதற்குற்ற ஸாதநத்தைத்தேடல் அவஶ்யமாகிறது. அத்தகைய ஸாதநம் ஸாக்ஷாத் ஸாதநமென்றும், பரப்பராஸாதநமென்றும் இருவகைப்படும். அவற்றுள் ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரமானது ஸாக்ஷாத் ஸாதநமென்றும், நித்தியாநித்யவஸ்து விவேகம், ஶமதமாதிகள், வைராக்கியம், முமுக்ஷுத்வம் என்ற இந்த நான்கும் பரம்பராஸாதனமென்றும் சொல்லப்படும். இவ்விதமே பெரியாரும்

ज्ञात्वा देवं सर्वपाशापहानिर्नान्यः पन्थाश्चेति भूयोवचोभिः ।
ज्ञप्तेस्साक्षान्मुक्तिहेतुत्वसिद्धावध्यासत्वं बंधनस्यार्थसिद्धम् ॥ என்றதாலும்,

अधीतेज्यादानव्रतजपसमाधाननियमै-
विशुद्धस्वान्तानां जगदिदमसारं विमृशताम् ।
अरागद्वेषाणामभयचरितानां हितमिदं
मुमुक्षूणां हृद्यं किमपि निगदामस्सुमधुरम् ॥

என்றதாலுமுபதேசித்திருக்கின்றனர். ஆகவே இந்த மூன்ருவது அத்தியாயத்தில் பரம்பரா ஸாதனங்களுள் சிறந்த வைராக்கியமானது 1-வது பாதத்தாலும், ஸாக்ஷாத்ஸாதனமான ப்ரம்ஹாத்மைக்யஞானத்தையடையும் முறை 2-வது பாதத்தாலும், பரம்பராஸாதனங்களுள் சிறந்த சித்தஸமாதானமென்ற சித்தைகாக்ர்ய ஸம்பாதனத்துக்குரிய ஸகுணப்ரம்ஹோபாஸனமுறை 3-வது பாதத்தாலும், க்ஞானத்

## १ तदन्तरप्रतिपत्त्यधिकरणम्। सू० १–७

**तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः प्रश्ननिरूपणाभ्याम् ॥ १ ॥**

अवेष्टितो वेष्टितो वा भूतसूक्ष्मैः पुमान् व्रजेत्। भूतानां सुलभत्वेन यात्यवेष्टित एव सः ॥ १ ॥
बीजानां दुर्लभत्वेन निराधारेन्द्रियागतेः। पञ्चमाहुतियुक्तेश्च जीवस्तैर्याति वेष्टितः ॥ २ ॥

---

துக்குப் பஹிரங்க ஸாதநங்களான சமதமாதிகள் 4 வது பாதத்தாலும் உபதேசிக்கப்படுகின்றன. அவற்றுள் 1-வது பாதத்திலுள்ள 1, 2-வது அதிகரணங்களால் ஜனன மரணங்களையும் அவற்றில் நேரும் கஷ்டங்களையுமுபதேசிக்கும் வாயிலாக வைராக்யத்தை யடையவேண்டுவது அவஶ்யமெனத் தெரிவிக்கப்படுகிறது. 7 ஸூத்திரங்கள் கொண்ட முதலாவது அதிகரணத்தில் வைராக்யத்துக்கு வேண்டி ஸம்ஸாரகதியானது உபதேசிக்கப்படுகிறது. அவற்றின் முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

**(ஸூ) ததந்தரப்ரதிபத்தௌ ரம்ஹதி ஸம்பரிஷ்வக்த. ப்ரச்ந நிரூபணாப்யாம் (1)**

(ப–ரை) [**जीवः** (ஜீவ:)=ஜீவன்] **तदन्तरप्रतिपत्तौ** (ததந்தரப்ரதிபத்தௌ)= வேறு தேஹத்தை மனத்தாற் பற்றினபின்னர் **संपरिष्वक्तः** (ஸம்பரிஷ்வக்த:)= தேஹ பீஜங்களான பூத ஸூக்ஷ்மங்களுடன் நன்கு கூடினவனாக **रंहति** (ரம்ஹதி)= இந்தத் தேஹத்தினின்றும் செல்லுகிறான். ஏன்? **प्रश्ननिरूपणाभ्याम्** (ப்ரஶ்நநிரூபணாப்யாம்)=ஶ்ருதியில் அவ்விதமே கேள்வியும் அதற்குப் பதிலும் காணப்படுவதே அதன் காரணமாகும். (எ–று)

குறிப்பு—இந்த ஸூத்திரத்தில் ததந்தரப்ராப்தௌ என லகுவான ஸூத்திரஞ்செய்தாலே போதுமானதாயிருக்க ப்ரதிபத்தௌ என குரு (அதிக எழுத்துள்ள) ஸூத்திரம் செய்திருப்பதிலிருந்து ஸூத்திரக்காரர் அவர்களின் கருத்து பின்வருமாறு ஏற்படுகிறது. அதாவது:—ஜீவன் இந்தச்சரீரத்தினின்றும் வெளியேறுங்கால் எந்தக்கர்மங்கள் ஒன்றுகூடி இவனுக்கு அடுத்த சரீரத்தைக் கொடுக்கின்றனவோ அக்கர்மங்காரணமாய் இனிவரும் சரீரமானது இவனது மனத்திற் றோன்றவே அச்சரீரத்தில் தாதாத்மியாபிமானத்தை இவனடைந்து விடுகிறான். அதன்பின்னரே இந்தச் சரீரத்தினின்றும் வெளியேறுகிறான் என்பதாம். இவ்விதம் பொருள் கொள்ளாது ததந்தரப்ரதிபத்தௌ = வேறு சரீரத்தையடையும் விஷயத்தில் எனப்பொருள் கொண்டால் ப்ரதிபத்தௌ என்ற குரு ஸூத்திரம் செய்ததுவீணாவதுடன் "கர்மோபஸ்தாபிதப்ரதிபத்தவ்யதேஹவிஷயபாவநாதீர்க்கீபாவமாத்ரம்" என இதேஸூத்திரத்தின் முடிவிலுள்ள பாஷ்யமும் வீணாகிவிடும்.

### வையாஸிக நியாயமாலா.

(க–ரை) ஜீவன் பூத ஸூக்ஷ்மங்களுடன் அவேஷ்டிதனாக (சூழாதவனாக) செல்லுகின்றானா? அல்லது அவற்றுடன் சூழ்ந்தவனாகச் செல்லுகின்றானா? என்

द्वितीयेऽध्याये स्मृतिन्यायविरोधो वेदान्तविहिते ब्रह्मदर्शने परिहृतः । परपक्षाणां चानपेक्षत्वं प्रपञ्चितम् । श्रुतिविप्रतिषेधश्च परिहृतः । तत्र च जीवव्यतिरिक्तानि तत्त्वानि जीवोपकरणानि ब्रह्मणो जायन्त इत्युक्तम् । अथेदानीमुपकरणोपहितस्य जीवस्य संसारगतिप्रकारस्तदवस्थान्तराणि ब्रह्मसतत्त्वं विद्याभेदाभेदौ गुणोपसंहारानुपसंहारौ सम्यग्दर्शनात्पुरुषार्थसिद्धिः सम्यग्दर्शनोपायविधिप्रभेदो मुक्तिफलानियमश्चेत्येतदर्थजातं तृतीयेऽध्याये निरूपयिष्यते प्रसङ्गागतं च किमप्यन्यत् । तत्र प्रथमे तावत्पादे पञ्चाग्निविद्यामाश्रित्य संसारगतिप्रभेदः प्रदर्श्यते वैराग्यहेतोः । 'तस्माज्जुगुप्सेत' इति चान्ते श्रवणात् । जीवो मुख्यप्राणसचिवः सेन्द्रियः समनस्कोऽविद्याकर्मपूर्वप्रज्ञापरिग्रहः पूर्वदेहं

---

பது ஸந்தேஹம். பஞ்சபூதங்கள் எங்கும் சுளுவில் கிடைக்கக்கூடியனவாக விருப்பனபற்றி அவற்றுடன் கூடாதவனாகவேதான் செல்லுகின்றான் என்பது பூர்வபக்ஷம். பூதஸூக்ஷ்மபீஜங்கள் எங்கும் துர்லபமாகையாலும், தமக்கு ஆதாரமின்றி இந்திரியங்களுக்குக் கதிஸம்பவிக்க வியலாதாகையாலும், த்யுலோகம், பர்ஜன்யம், ப்ருதிவீ, புருஷன், யோஷித் என்ற ஐந்து அக்னிகளில் முறையே சிரத்தை, ஸோம, விருஷ்டி, அன்ன, ரேதஸ் என்ற ஆஹுதிரூபமாகத் தன்னைப் பாவிக்கவேண்டும் என்றவிடத்தில் ஐந்தாவது ஆஹுதியான ரேதஸ்ஸாகத் தன்னைப் பாவிக்கவேண்டுமென்று சொல்லிய யுக்தியைக்கொண்டும் ஜீவன் பூதஸூக்ஷ்மங்களுடன் கூடினவனாகவேதான் செல்லுகின்றான் என்பது ஸித்தாந்தம். (எ-று)

அவதாரிகா பாஷ்யம்—வேதாந்தத்திற் சொல்லப்பட்ட ப்ரம்ஹதர்சனவிஷயத்தில் ஸ்ம்ருதி, யுக்தி இவைகள் மூலம் வரும் விரோதமானது இரண்டாவது அத்தியாயத்தில் போக்கப்பட்டது. பிறரது பக்ஷமானது அபேக்ஷிக்கத்தக்கதன்று என்பதும் விரிக்கப்பட்டது. சுருதிகளுக்குள் நேரும் விரோதமும் போக்கப்பட்டது. அவ்விடத்தில் ஜீவனை விடவேறுபட்டதத்துவங்களான ஜீவனது உபகரணங்கள் ப்ரம்ஹத்தினிடமிருந்துண்டாகின்றன எனச் சொல்லப்பட்டது. பிறகு இதுபோழ்து உபகரணங்களுடன் கூடின ஜீவனது ஸம்ஸாரகதிபேதமும், அவனது அவஸ்தைகளும், ப்ரம்ஹஸ்வரூபமும், வித்தையினது (உபாஸனையினது) பேதாபேதங்களும் (உபாஸ்யரானபகவானுடைய) குணோபஸம்ஹாரமும் அஃதின்மையும், ஸம்யக்தர்சனத்தால் புருஷார்த்தஸித்தியும், ஸம்யக்தர்சன உபாயவிதிகளின் வேற்றுமையும், முக்திரூபமான பயனில் தாரதம்ய நியமமின்மையும் ஆகிய இப்பொருள்கள் இம்மூன்றாவது அத்தியாயத்தில் நிரூபிக்க (விளக்கப்) படுவதுடன் தொடர்ந்துவரும் பிறவும் விளக்கப்படுகின்றன. அவற்றுள் முதலாவது பாதத்தில் பஞ்சாக்னிவித்தையை யாஶ்ரயித்து வைராக்யத்துக்கு வேண்டி ஸம்ஸாரகதி பேதமானது உபதேசிக்கப்படுகிறது. "ஆனதுபற்றி வெறுப்பையடைதல் அவஶ்யமாகிறது" என (பஞ்சாக்னிவித்தையின்) முடிவில் சுருதி சொல்லியிருப்பதே அதன் காரணமாகும்.

பூர்வபக்ஷ பாஷ்யம்.—ஜீவன் முக்கிய ப்ராணனின் உதவிகொண்டு இந்திரியங்களுடனும், மனஸ்ஸுடனும் கூடினவனாய் அவித்தை, கர்மம், முன்னுள்ள

विहाय देहान्तरं प्रतिपद्यत इत्येतदवगतम्। 'अथैनमेते प्राणा अभिसमायन्ति' इत्येवमादेः 'अन्यन्नवतरं कल्याणतरं रूपं कुरुते' (बृ० ४।४।१, ४) इत्येवमन्तात्संसारप्रकरणस्थाच्छब्दात्। धर्माधर्मफलोपभोगसंभवाच्च। स किं देहबीजैर्भूतसूक्ष्मैरसंपरिष्वक्तो गच्छत्याहोस्वित्संपरिष्वक्त इति चिन्त्यते। किं तावत्प्राप्तम्। असंपरिष्वक्त इति। कुतः करणोपादानवद्भूतोपादानस्याश्रुतत्वात्। 'स एतास्तेजोमात्राः समभ्याददानः' (बृ० ४।४।१) इति ह्यत्र तेजोमात्राशब्देन करणानामुपादानं सङ्कीर्तयति। वाक्यशेषे चक्षुरादिसङ्कीर्तनात्। नैवं भूतमात्रोपादानसङ्कीर्तनमस्ति। सुलभाश्च सर्वत्र भूतमात्राः। यत्रैव देह आरब्धव्यस्तत्रैव सन्ति, ततश्च तासां नयनं निष्प्रयोजनम्। तस्मादसंपरिष्वक्तो यातीति॥

एवं प्राप्ते पठत्याचार्यः—तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्त इति। तदन्तरप्रतिपत्तौ देहान्तरप्रतिपत्तौ देहबीजैर्भूतसूक्ष्मैः संपरिष्वक्तो रंहति गच्छतीत्यवगन्तव्यम्। कुतः—

---

அறிவு இவற்றுடன்கூட முந்தின தேஹத்தைவிட்டு வேறு தேஹத்தையடைகிறான் என்பது "பிறகு இவனை இந்த ப்ராணன்கள் பின்தொடருகின்றன" என்று தொடங்கி "வேறுபட்டதும் மிக்க புதிதானதும் மிக்க வழகுபொருந்தியதுமான ரூபத்தை (சரீரத்தை) அடைகிறான்" என்ற ஈறாகவுள்ள ஸம்ஸாரப்ரகரணத்திலுள்ள சுருதியினின்றும், தர்மாதர்மங்களின் பலானுபவம் நிகழ்வதைக் கொண்டும் அறியப்பட்டது. அத்தகைய ஜீவன் தேஹத்துக்குப் பீஜங்களான பஞ்சபூத ஸூக்ஷ்மங்களுடன் சேராதவனாகவே போகிறானா? அல்லது (அவற்றுடன்) கூடினவனாகவே போகிறானா? எனவாலோசிக்கப்படுகிறது. முதலிற் கிடைப்பது யாதென்றால் (அவற்றுடன்) கூடாதவனாகவே போகிறான் என்பதாம் என்? கரணங்களின் (இந்திரியாதிகளின்) உபாதானம் (பெறல்) சொல்லியிருப்பதுபோல சுருதியில் பூத (ஸூக்ஷ்மங்) களின் உபாதானம் சொல்லப்படாதிருப்பதே அதன் காரணமாகும். "அவன் (ஜீவன்) தேஜோமாத்திரைகளை (இந்திரியங்களை) எடுத்துக் கொள்பவனாய்" என்ற இந்தவிடத்திலோ தேஜோமாத்திரா=என்றசப்தத்தால் கரணங்களின் உபாதானத்தைச் சொல்லுகிறது. இந்த வாக்கியத்தின் முடிவில் சக்ஷுராதிகள் சொல்லப்படுவதே அதன் காரணமாகும். இதுபோல பூதமாத்திரைகளினுபாதானம் சொல்லப்படவில்லை. பூதமாத்திரைகள் (பூத ஸூக்ஷ்மங்கள்) எல்லாவிடங்களிலும் சுளுவில் கிடைக்கக்கூடியன. எங்கு தேஹமானது உண்டாக வேண்டுமோ அவ்விடத்திலேயே இருக்கின்றன. ஆனதுபற்றி அவற்றை உடன் கொண்டுபோகவேண்டுவது பயனற்றதேயாகும். ஆகவே (பூத ஸூக்ஷ்மங்களின்) ஸம்பந்தமற்றவனாகவே போகிறான் என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே ஆசிரியர் "ததந்தர ப்ரதிபத்தௌ ரம்ஹதி ஸம்பரிஷ்வக்த:" என்றதால் (ஸித்தாந்தத்தைப்) படிக்கிறார்.

ததந்தரப்ரதிபத்தௌ=வேறு தேஹத்தை (மனத்தால்) அடைந்ததும் தேஹ பீஜங்களான பூத ஸூக்ஷ்மங்களுடன் நன்கு கூடினவனாக (ச்சரீரத்தினின்றும்)

प्रश्ननिरूपणाभ्याम्। तथाहि प्रश्नः—'वेत्थ यथा पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति' (छा० ५।३।३) इति। निरूपणं च प्रतिवचनं द्युपर्जन्यपृथिवीपुरुषयोषित्सु पञ्चस्वग्निषु श्रद्धासोमवृष्ट्यन्नरेतोरूपाः पञ्चाहुतीर्दर्शयित्वा 'इति नु पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति' (छा० ५।९।१) इति। तस्मादद्भिः परिवेष्टितो जीवो रंहति व्रजतीति गम्यते। नन्वन्या श्रुतिर्जलूकावत्पूर्वदेहं न मुञ्चति यावन्न देहान्तरमाक्रमतीति दर्शयति—'तद्यथा तृणजलायुका' (बृ० ४।४।३) इति। तत्राप्यप्परिवेष्टितस्यैव जीवस्य कर्मोपस्थापितप्रतिपत्तव्यदेहविषयभावनादीर्घीभावमात्रं जलूकयोपमीयत इत्यविरोधः। एवं श्रुत्युक्ते देहान्तरप्रतिपत्तिप्रकारे सति याः पुरुषमतिप्रभवाः कल्पना व्यापिनां करणानामात्मनश्च देहान्तरप्रतिपत्तौ कर्मवशाद्वृत्तिलाभस्तत्र भवति। केवलस्यैवात्मनो वृत्तिलाभस्तत्र भवति। इन्द्रियाणि तु देहवदभिनवान्येव तत्र तत्र भोगस्थान उत्पद्यन्ते। मन एव वा केवलं

வெளியேறுகிறான் எனவறிந்து கொள்ளல்வேண்டும். ஏன்? ப்ரஶ்னமும் அதற்குற்ற விளக்கமும் காணப்படுவதே அதன் காரணமாகும். அதை விளக்குவாம். ப்ரஶ்னமாவது—"ஐந்தாவது ஆஹுதியில் அப்புக்கள் புருஷன் என்ற சப்தமுள்ளனவாக எவ்விதமாகின்றனவோ அதை நீவிர் அறிந்ததுண்டோ" என்பதாம். நிரூபணமென்ற அதன் விளக்கமாவது—த்யுலோகம், பர்ஜன்யம் (மேகம்) பூமி, புருஷன், யோஷித் (ஸ்திரீ) என்ற ஐந்து அக்னிகளில் முறையே ஶ்ரத்தை,ஸோம, விருஷ்டி அன்னம், ரேதஸ் என்ற ஐந்து ஆஹுதிகளைக் காண்பித்து முடிவில் "இவ்விதமன்றோ ஐந்தாவது ஆஹுதியில் அப்புக்கள் புருஷன் (தேஹம்) என்ற சப்தத்தையடைந்தனவாகவாகின்றன" என்பதாம். ஆகவே அப்புக்களுடன் பரிவேஷ்டிதனாகவே ஜீவன் போகிறான் எனவறியக்கிடக்கிறது.

சங்கை—வேறு ஶ்ருதியானது எதுவரை பூர்வதேஹத்தை விடுகின்றானில்லையோ அதுவரை வேறு தேஹத்தையடைவதில்லை என "அச்சமயத்தில் புல்லிலுள்ள அட்டை எவ்விதமோ" என்றதால் உபதேசிக்கின்றதே எனின்?

உத்தரம்—அவ்விடத்திலுங்கூட அப்புக்களுடன் (அப்முதலிய பூதஸூக்ஷ்மங்களுடன்) சூழ்தவனாகவே யுள்ள ஜீவனுக்கு கர்மாவினால் அச்சமயம் தோற்றம்படி செய்யப்பட்டதும் இனி அடையவேண்டியதுமான தேஹத்தைப் பற்றிய பாவனையின் தீர்க்கிபாவம்மட்டுமே புல்லட்டையுடன் ஒத்துக் கூறப்படுவதால் முற்கூறிய ஆசங்கைக்கிடமில்லை. சுருதியிற் கூறிய வேறுதேஹத்தை யடையும் முறை இவ்விதமிருக்குங்கால் (1)எங்கும் நிறைந்துள்ள இந்திரியங்களுக்கும் ஆத்மாவுக்கும் வேறுதேஹத்தையடைந்ததும் கர்மவசத்தால் விருத்திலாபம் அதில் ஏற்பட்டுவிடுகிறது. (2)தனித்த ஆத்மாவுக்கே அதில் விருத்திலாபமேற்படுகிறது. இந்திரியங்களோ தேஹம்போலப்புதிதுகளாகவே அந்தந்த போகஸ்தானத்திலுண்டாகின்றன. (3)தனித்தமனம் மட்டுமேயாவது போகஸ்தானத்தைக்குறித்துக்கிளம்புகிறது. (4)ஜீவன்மட்டுமே ஓரேதாவலாகதேஹத்தினின்றும் உயரத்தாவிகிளியா

(1) இது சாங்க்யர்களின்மதம் (2) பௌத்தர்களின் மதம் (3) இது காணாதரின்மதம் (4) இது ஜைனர்களின்மதம்.

भोगस्थानमभिप्रतिष्ठेत । जीव एवोत्प्लुत्य देहाद्देहान्तरं प्रतिपद्यते शुक इव वृक्षाद्वृक्षान्तरम् । इत्येवमाद्याः सर्वा एवानादर्तव्याः श्रुतिविरोधात् ॥ १ ॥

ननूदाहृताभ्यां प्रश्नप्रतिवचनाभ्यां केवलाभिरद्भिः संपरिष्वक्तो रंहतीति प्राप्नोति । अप्शब्दश्रवणसामर्थ्यात् । तत्र कथं सामान्येन प्रतिज्ञायते सर्वैरेव भूतसूक्ष्मैः संपरिष्वक्तो रंहतीति । अत उत्तरं पठति—

त्र्यात्मकत्वात्तु भूयस्त्वात् ॥ २ ॥

तुशब्देन चोदितामाशङ्कामुच्छिनत्ति । त्र्यात्मिका ह्यापस्त्रिवृत्करणश्रुतेः । तास्वारम्भिकास्वभ्युपगतास्वितरदपि भूतद्वयमवश्यमभ்युपगन्तव्यं भवति । त्र्यात्मकश्च देहस्त्रयाणामपि तेजोऽबन्नानां तस्मिन्कार्योपलब्धेः । पुनश्च त्र्यात्मकस्त्रिधातुत्वात्त्रिभिर्वातपित्तश्ले-

---

னது ஒரு மரத்தினின்றும் மற்றொரு மரத்தைப்போல வேறு தேஹத்தையடைகிருன்" என்ற இம்மாதிரியான புருஷபுத்தி கல்பனையாவும் ஒப்பத்தகாதன. ஶ்ருதிக்கு முறண்பட்டனவாக அவையிருப்பதே அதன் காரணமாகும். (1) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—சங்கை—எடுத்துக்காட்டின ப்ரஶ்ன ப்ரதிவசனங்களைக் கொண்டு தனித்த ஜலத்துடன் கூடினவனைப் போகிருன் என்பதுமட்டும் ப்ராப்தமாகிறது. அப் என்ற சப்தம் மட்டும் ஶ்ருதியிலிருப்பதே அதன் காரணமாகும். அவ்விதமிருக்கப் பொதுவாய் எல்லாப் பூதஸூக்ஷ்மங்களுடனும் கூடினவனைப் போகிருன் என எவ்விதம் உறுதி கூறமுடியுமெனின்? அதற்கு வேண்டிய பதிலை அடுத்த ஸூத்திரத்தாற் படிக்கிருர்—

(ஸூ) த்ர்யாத்மகத்வாத்து பூயஸ்த்வாத் (2)

(ப—ரை) तु (து)=முற்கூறிய ஆசங்கைக்கிடமில்லை. अपाम् (அபாம்)=ஜலங்கள் त्र्यात्मकत्वात् (த்ர்யாத்மகத்வாத்)=த்ரிவிருத்கிருதமாக (ப்ருதிவீ, அப், தேஜஸ் மூன்றும் கலந்ததாக) இருப்பதே அதன் காரணமாகும். மண்ணின் பாகம் தேஹத்தில் அதிகம் காணப்படுகிறதே எனின்? भूयस्त्वात् (பூயஸ்த்வாத்)=சுக்ல சோணித ரூபமான தேஹபீஜத்தில் ஜலத்தின் பாகம் அதிகமாக காணப்படுவதால் இது பொருந்தக் கூடியதே ஆகும். (2) (எ—று)

பாஷ்யம்.—ஸூத்திரத்திலுள்ள து என்ற சப்தத்தால் முன்னற் கூறப்பட்ட ஆசங்கையைப் போக்குகிருர். ஆப: (ஜலங்கள்) மூன்றும் கலந்தனவன்ரே? த்ரிவிருத்கரணத்தை (மூன்றும் ஒன்று கூடியிருத்தலை) உபதேசிக்கும் ஶ்ருதியிருப்பதே அதன் காரணமாகும். அந்த ஜலத்தைச் சரீராரம்பகமாகவொப்புங்கால் மற்ற இரண்டு பூதங்களையும் (ப்ருதிவீ, தேஜஸ் இரண்டையும்) சரீராரம்பகங்களாக வொப்பவேண்டுவது அவஶ்யமாகிவிடுகிறது. தேஜஸ், அப், பூமி ஆகிய மூன்றினுடையவும் காரியமானது அந்தச்சரீரத்தில் காணப்படுவதிலிருந்து தேஹமானது மூன்றும் கலந்தவுருவமுள்ளதேயாகின்றது. மேலும் வாதம், பித்தம், ஶ்லேஷ்மம் என்ற மூன்றும் நிறைந்திருப்பதுபற்றி அம்மூன்று பொருளுமுள்ளதாகவாவ

प्सभिः । न स भूतान्तराणि प्रत्याख्याय केवलाभिरद्भिरारब्धुं शक्यते । तस्मात्प्रत्यय-स्त्वापेक्षोऽयमापः पुरुषवचस इति । प्रश्नप्रतिवचनयोरप्शब्दो न कैवल्यापेक्षः । सर्वदेहेषु हि रसलोहितादिद्रवद्रव्यभूयस्त्वं दृश्यते । ननु पार्थिवो धातुर्भूयिष्ठो देहेषूप-लक्ष्यते । नैष दोषः । इतरापेक्षयाप्यपां बाहुल्यं भविष्यति । दृश्यते च शुक्रशोणितलक्ष-णेऽपि देहबीजे द्रवबाहुल्यम् । कर्म च निमित्तकारणं देहान्तरारम्भे । कर्माणि चाग्निहोत्रा-दीनि सोमाज्यपयःप्रभृतिद्रवद्रव्यव्यपाश्रयाणि । कर्मसमवायिन्यश्चापः श्रद्धाशब्दोदिताः सह कर्मभिर्द्युलोकाख्येऽग्नौ हूयन्त इति वक्ष्यति । तस्मादप्यपां बाहुल्यप्रसिद्धिः । बाहु-ल्याच्चाप्शब्देन सर्वेषामेव देहबीजानां भूतसूक्ष्माणामुपादानमिति निरवद्यम् ॥ २ ॥

**प्राणगतेश्च ॥ ३ ॥**

---

தினின்றும், த்ர்யாத்மகமாக சரீரமாகும். அந்தத் தேஹமானது வேறு பூதங்களைவிடுத்து தனித்த ஜலத்தால் மட்டும் உண்டுபண்ணமுடியாததாகவுமிருக்கிறது. ஆகவே ஜலம் அதிகமாகவிருப்பதைமுன்னிட்டு "அப்புக்கள் புருஷ (தேஹ) சப்தமுள்ளனவாகின்றன" என்று சொல்லப்பட்டது என்றேற்படுகிறது. ப்ரஶ்னம் அதன் பதில் இரண்டிலுமுள்ள அப் என்ற சப்தமானது தனித்த ஜலத்தைமட்டும் பற்றியதன்று. எல்லாத் தேஹங்களிலும் ரஸம், ரக்தம் முதலிய த்ரவப்பொருள் அதிகமாகக் காணப்படுகின்றதன்றோ.

சங்கை—தேஹங்களில் பூமியின் பாகம் அதிகமாகக் காணப்படுகின்றதன்றோ எனின் ?

உத்தரம்—இது தோஷமாகாது. மற்றப் பூதங்களைக் காட்டிலும் ஜலம் அதிகமாகவே இருக்கிறது. சுக்ல சோணிதரூபமான தேஹபீஜத்தில் த்ரவம் அதிகமாகக் காணவும்படுகிறது. மேலும் வேறு தேஹாரம்பவிஷயத்தில் கர்மமானது நிமித்தகாரணமாகிறது. அக்னிஹோத்ராதியான கர்மங்களோ ஸோமம், நெய், பால் முதலிய த்ரவப்பொருளைப்பற்றி யேற்படுகின்றன. ஜலங்களோ கர்மங்களுக்கு ஸமவாயிகாரணங்களாக (இன்றியமையாக்காரணங்களாக) வாகி ச்ரத்தை, ஸோமம் முதலிய சப்தங்களாற் சொல்லப்படுகின்றனவாய் கர்மங்களுடன் கூட த்யுலோகமெனப் பெயரிய அக்னியில் ஹோமம் செய்யப்படுவனவாகப் பின்னர் சொல்லப்படப்போகின்றன. ஆனது பற்றியும் ஜலங்களுக்கு ஆதிக்ய ப்ரஸித்தியேற்படுகிறது. அதிகமாக இருப்பதுபற்றி அப் என்ற சப்தத்தால் தேஹபீஜங்களான எல்லாப் பூதஸூக்ஷ்மங்களும் க்ரஹிக்கபபட்டிருப்பதாகவாவதால் எவ்விததோஷமுமிங்கில்லை. (2) (எ–று)

(ஸூ) ப்ராணகதே:ச (3)

(ப–ரை) வேறு தேஹாரம்பவிஷயத்தில் **प्राणगतेश्च** (ப்ராணகதேஶ்ச)=ப்ராணனுடைய கதி காணப்படுவதிலிருந்தும் வேறு பூதங்களுடன் கலந்த ஜலங்களின் கதியிருப்பதாகவே ஏற்படுகிறது. (3)

प्राणानां च देहान्तरप्रतिपत्तौ गतिः श्रूयते—'तमुत्क्रामन्तं प्राणोऽनूत्क्रामति प्राणमनूत्क्रामन्तं सर्वे प्राणा अनूत्क्रामन्ति' (बृ० ४।४।२) इत्यादिश्रुतिभिः। सा च प्राणानां गतिर्नाश्रयमन्तरेण संभवतीत्यतः प्राणगतिप्रयुक्ता तदाश्रयभूतानामपामपि भूतान्तरोपसृष्टानां गतिरवगम्यते। नहि निराश्रयाः प्राणाः क्वचिद्गच्छन्ति तिष्ठन्ति वा जीवतो दर्शनात्॥ ३॥

## अग्न्यादिगतिश्रुतेरिति चेन्न भाक्तत्वात्॥ ४॥

स्यादेतत्। नैव प्राणा देहान्तरप्रतिपत्तौ सह जीवेन गच्छन्ति अग्न्यादिगतिश्रुतेः। तथाहि श्रुतिर्मरणकाले वागादयः प्राणा अग्न्यादीन्देवान्गच्छन्तीति दर्शयति—'यत्रास्य पुरुषस्य मृतस्याग्निं वागप्येति वातं प्राणः' (बृ० ३।२।१३) इत्यादिनेति चेत्। न।

---

பாஷ்யம்.—வேறு தேஹத்தைப் பெறுங்கால் ப்ராணன்களின் கதியும் "உயரக் கிளம்பும் அவனை (ஜீவனை) ப்ராணன் பின்தொடர்ந்து செல்லுகிறது. பின் தொடர்ந்து செல்லும் ப்ராணனை எல்லா ப்ராணன் (இந்திரியங்) களும் பின் தொடர்ந்து செல்லுகின்றன" என்றதாதி ச்ருதிகளாலுபதேசிக்கப்படுகிறது. அந்த ப்ராணன்களின் கதியானது ஆச்ரயமில்லாவிடில் ஸம்பவிக்காதாதலால் ப்ராணகதி மூலமாக அவற்றுக்கு ஆச்ரயமானதும் வேறு பூதங்களுடன் கலந்ததுமான ஜலத்தின் கதியானது அறியப்படுகிறது. ப்ராணன்கள் ஆச்ரயமின்றி ஓரிடத்திற் செல்லவோ, ஓரிடத்தில் நிற்கக்கூடியனவோ அன்று. உயிருடனிருக்குங்கால் அவ்விதம் காணப்படுவதே அதன் காரணமாகும். (3) (எ—று)

## (ஸூ) அக்னியாதிகதிசுருதேரிதிசேத் ந பாக்தத்வாத்(4)

(ப—ரை) अग्न्यादिगतिश्रुतेः (அக்னியாதிகதிசுருதேః)=அக்னிமுதலியவற்றில் ப்ராணன்களுக்கு கதியை (லயத்தை) க்கூறும் சுருதியிருப்பதினின்று [प्राणा अपि सहजीवेन न गच्छन्ति (ப்ராணா அபி ஸஹஜீவேந ந கச்சந்தி)=ப்ராணன்களும் ஜீவனுடன் கூட செல்லுவதில்லை] इतिचेत् (இதிசேத்)=என்றாலோ न (ந)=அது பொருந்தாது. ஏன்? भाक्तत्वात् (பாக்தத்வாத்)=அக்னியாதிகளிடத்துச் சொல்லிய கதியானது (ப்ராணன்களின் லயமானது) கௌணமாக இருப்பதே அதன் காரணமாகும். (4) (எ—று)

பாஷ்யம்.—இஃதிருக்கட்டும். வேறுதேஹப்ராப்திகாலத்தில் ப்ராணன்கள் ஜீவனுடன் கூடச் செல்லுவதில்லை. அக்னியாதிகளிடத்தில் அவற்றுக்குக் கதி சொல்லும் சுருதியிருப்பதே அதன் காரணமாகும். அதாவது: சுருதியானது மரணகாலத்தில் வாகாதிகளான ப்ராணன்கள் அக்னியாதிகளான தேவர்களை யடைகின்றன என்பதாய் "எந்த ஸமயத்தில் மிருதனான இந்தப் புருஷனுடைய வாக்கானது அக்னியை யடைகிறது ப்ராணன் வாயுவை (யடைகிறது)" என்றதாதியால் தெரிவிக்கின்றதன்றோ எனின்? என்பதாம். அவ்விதம் சொல்லவியலாது. கௌணமாக (முக்கியமற்றதாக) விருப்பதே அதன்காரணமாகும். வா

भाक्तत्वात् । वागादीनामग्न्यादिगतिश्रुतिर्गौणी लोमसु केशेषु चादर्शनात् । 'औषधीर्लोमानि वनस्पतीन्केशाः' (बृ० ३।२।१३) इति हि तत्राम्नायते । नहि लोमानि केशाश्चोत्प्लुत्यौषधीर्वनस्पतींश्च गच्छन्तीति संभवति । नच जीवस्य प्राणोपाधिप्रत्याख्याने गमनमवकल्पते । नापि प्राणैर्विना देहान्तर उपभोग उपपद्यते । विस्पष्टं च प्राणानां सह जीवेन गमनमन्यत्र श्रावितम् । अतो वागाद्यधिष्ठात्रीणामग्न्यादिदेवतानां वागाद्युपकारिणीनां मरणकाल उपकारनिवृत्तिमात्रमपेक्ष्य वागादयोऽग्न्यादीन्गच्छन्तीत्युपचर्यते ॥ ४ ॥

**प्रथमेऽश्रवणादिति चेन्न ता एव ह्युपपत्तेः ॥ ५ ॥**

स्यादेतत् । कथं पुनः 'पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति' (छा० ५।३।३) इत्येतन्निर्धारयितुं पार्यते । यावता नैव प्रथमेऽग्नावपां श्रवणमस्ति । इह हि द्युलोकप्रभृतयः

---

காதி இந்திரியங்களுக்கு அக்னியாதிகளில் கதியை (லயத்தைச்) சொல்லும் சுருதியானது கௌணமாகவே ஆகும். ஏன்? உரோமம், கேசம் இவற்றிற் காணப்படாததே அதன் காரணமாகும். அதாவது:—"உரோமங்கள் ஓஷதிகளையும், கேசங்கள் வனஸ்பதிகளையும் அடைகின்றன" என்றல்லவோ அவ்விடத்தில் சுருதியிற்படிக்கப்படுகிறது. உரோமங்களும், கேசங்களும் ஒரே தாவலாகத் தாவிமுறையே ஓஷதிகளையும் வனஸ்பதிகளையும் அடைவதாகக் காண்கின்றோமில்லையன்றோ. மேலும், ப்ராணனென்கிற உபாதியை மறுத்தால் ஜீவனுக்குக்கதியே ஸம்பவிக்காதன்றோ. ப்ராணன்களில்லாது வேறு தேஹத்தில் விஷயாநுபவம் ஸம்பவிக்கவுமியலாது. ஜீவனுடன் கூட ப்ராணன்கள் போகின்றனவென்பது தெளிவாக வேறிடத்தில் சுருதியிற் கூறப்பட்டுமிருக்கிறது. ஆனதுபற்றி வாக்குமுதலிய இந்திரியங்களுக்கு உபகாரஞ்செய்கின்றனவும், வாகாதிகளுக்கு அதிஷ்டாதாக்களுமான அக்னிமுதலிய தேவதைகளுடைய உபகாரநிவிருத்திமட்டும் மரணகாலத்திலேற்படுகிறது என்பதை யபேக்ஷித்து வாகாதிகள் அக்னியாதிகளை யடைகின்றன என்பதாய் உபசாரமுறையால் சொல்லப்படுவதாக வேற்படுகிறது. (4)

(ஸூ) ப்ரதமே அச்ரவணாத் இதிசேத் ந தா ஏவஹ்யுபபத்தே: (5)

(ப-ரை) **प्रथमे** (ப்ரதமே)=ஐந்து அக்னிகளைச் சொல்லத்தொடங்குமிடத்தில் முதலாவதாகவுள்ள த்யுலோகம் என்ற அக்னியில் **अश्रवणात्** (அஶ்ரவணாத்)=ஜலமானது படிக்கப்படவில்லை **इति चेत्** (இதிசேத்)=என்றாலோ **न** (ந)=அவ்விதமில்லை. **ता एव हि** (தா ஏவ ஹி)=அந்த ஜலங்களேயன்றோ அங்குள்ள ஶ்ரத்தா என்ற சப்தத்தாற் சொல்லப்படுகின்றன. ஏன்? **उपपत्तेः** (உபபத்தே:)=போதியயுக்தியிருப்பதே அதன் காரணமாகும். (5) (எ-று)

பாஷ்யம்—இஃதிருக்கட்டும். "ஐந்தாவது ஆஹுதியில் அப்புக்கள் புருஷசப்தத்தை யடைகின்றனவாகின்றன" என்ற இதை (இன்னதுதான் அதன்

**पञ्चाग्नयः पञ्चानामाहुतीनामाधारत्वेनाधीताः । तेषां च प्रमुखे 'असौ वाव लोको गौतमाग्निः' (छा० ५ । ४ । १) इत्युपन्यस्य 'तस्मिन्नेतस्मिन्नग्नौ देवाः श्रद्धां जुह्वति' (छा० ५ । ४ । २) इति श्रद्धा हौम्यद्रव्यत्वेनावेदिता । न तत्रापो हौम्यद्रव्यतया श्रुताः । यदि नाम पर्जन्यादिषूत्तरेषु चतुर्ष्वग्निष्वपां हौम्यद्रव्यता परिकल्प्येत, परिकल्प्यतां नाम । तेषु होतव्यतयोपात्तानां सोमादीनामब्बहुलत्वोपपत्तेः। प्रथमे त्वग्नौ श्रुतां श्रद्धां परित्यज्याश्रुता आपः परिकल्प्यन्त इति साहसमेतत् । श्रद्धा च नाम प्रत्ययविशेषः प्रसिद्धिसामर्थ्यात् । तस्मादयुक्तः पञ्चम्यामाहुतावपां पुरुषभाव इति चेत् । नैष दोषः । यतस्तत्रापि प्रथमेऽग्नौ ता एवापः श्रद्धाशब्देनाभिप्रेयन्ते । कुतः—उपपत्तेः । एवं ह्यादिमध्यावसानसङ्गानादनाकुलमेतदेकवाक्यमुपपद्यते । इतरथा पुनः पञ्चम्यामाहुतावपां पुरुषवचस्त्वप्रकारे पृष्टे प्रतिवचनावसरे प्रथमाहुतिस्थाने यद्यनपो हौम्यद्रव्यं श्रद्धां नामावतारयेत्त-**

---

பொருளென) எவ்விதம் நிர்த்தாரணஞ்செய்யமுடியும். முதலாவது அக்னியில் அப்பைப் பற்றிய ப்ரஸ்தாபம் காணப்படவில்லையன்றோ? இவ்விடத்திலோ த்யுலோகம் முதலிய (1)ஐந்து அக்னிகள் ஐந்து (2)ஆஹுதிகளுக்கு ஆதாரங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றின் தொடக்கத்தில் "ஹேகௌதம! இந்தவுலகமே அக்னியாகவாகிறது" எனவுபதேசித்து "அந்த இந்த அக்னியில் தேவர்கள் ஶ்ரத்தையை ஹோமஞ்செய்கின்றனர்" என்பதாய் ஶ்ரத்தையானது ஹோமஞ்செய்யத்தக்க த்ரவியமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் அப்புக்கள் (ஜலங்கள்) ஹோமஞ்செய்யத்தக்க த்ரவியமாகச் சொல்லப்படவில்லை. மேகம் முதலிய மேலுள்ள நான்கு அக்னிகளில் அப்புக்களுக்கு ஹோமஞ்செய்யத்தக்க த்ரவியமாகவிருத்தல் கல்பிக்கப்படுமானல் கல்பிக்கப்படட்டும். அவற்றுள் ஹோமஞ்செய்யவேண்டுவனவாக வெடுப்பப்பட்ட ஸோமாதிகளுக்கு அப்பின் ஆதிக்கியம் இருப்பதிலிருந்து அதுபொருந்தலாம். முதலாவது அக்னியிலோ சுருதியினுல் நேரில் சொல்லப்பட்ட ஶ்ரத்தையைவிடுத்து சுருதி சொல்லாத அப்பைக் கற்பிப்பதானது வெரும் பிடிவாதமேயாகும். ஶ்ரத்தையென்பது மனத்தின் ஒருவித அறிவே ஆகும். ப்ரஸித்தி அவ்விதமிருப்பதே அதன்காரணமாகும். ஆகவே ஐந்தாவது ஆஹுதியில் அப்புக்களுக்கு புருஷ (தேஹ) த்தன்மை ஏற்படுவதென்பது பொருந்தாததே. எனின்? இது தோஷமாகவாகாது. அந்தமுதலாவது அக்னியிலுங்கூட அதே அப்புக்கள்தான் ஶ்ரத்தா சப்தத்தாற் சொல்லப்படுகின்றன. என்? யுக்தியிருப்பதே அதன்காரணமாகும். இவ்விதம் ஆதிமத்யாவஸானங்களை ஒத்துப்பார்ப்பதால் இந்தவாக்கியமானது எவ்விதக்குற்றமுமற்றுப் பொருந்தக்கூடியதாகவாகிறது. இதற்குமாருகப்பார்த்தாலோ ஐந்தாவது ஆஹுதியில் அப்புக்கள் புருஷசப்தத்தாற் சொல்லப்படும் விஷயமாகக் கேள்விகேட்டதற்குப்பதில் சொல்லுமிடத்து முதலாவது ஆஹுதிஸ்தானத்தில் ஜலமில்லாதஹோம்யத்ரவிய

---

(1) 1 த்யுலோகம், 2பர்ஜன்யம், 3பிருதிவீ, 4புருஷன், 5ஸ்திரீ இவ்வைந்துகளும் ஹோமாதாரமாகவாவதுபற்றி அக்னிகளாகச் சொல்லப்படுகின்றன.

(2) 1 சிரத்தை, 2 ஸோமம். 3 விருஷ்டி. 4 அன்னம். 5 ரேதஸ்.

तोऽन्यथा प्रश्नोऽन्यथा प्रतिवचनमित्येकवाक्यता न स्यात् । 'इति नु पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति' इति चोपसंहरन्नेतदेव दर्शयति । श्रद्धाकार्यं च सोमवृष्ट्यादि स्थूलीभवदब्बहुलं लक्ष्यते । सा च श्रद्धाया अप्त्वे युक्तिः । कारणानुरूपं हि कार्यं भवति । नच श्रद्धाख्यः प्रत्ययो मनसो जीवस्य वा धर्मः सन्धर्मिणो निष्कृष्य होमायोपादातुं शक्यते पश्वादिभ्य इव हृदयादीनीत्याप एव श्रद्धाशब्दा भवेयुः । श्रद्धाशब्दश्चाप्सूपपद्यते, वैदिकप्रयोगदर्शनात् 'श्रद्धा वा आपः' इति । तनुत्वं श्रद्धासारूप्यं गच्छन्त्य आपो देहबीजभूता इत्यतः श्रद्धाशब्दाः स्युः । यथा सिंहपराक्रमो नरः सिंहशब्दो भवति । श्रद्धापूर्वककर्मसमवायाच्चाप्सु श्रद्धाशब्द उपपद्यते, मञ्चशब्द इव पुरुषेषु । श्रद्धाहेतुत्वाच्च श्रद्धाशब्दोपपत्तिः 'आपो हास्मै श्रद्धां संनमन्ते पुण्याय कर्मणे' इति श्रुतेः ॥

---

மான ஶ்ரத்தை என்ற வொன்றைச் சொல்லத்தொடங்குவாரேல் கேள்வி வேறு விதமாகவும், பதில் வேறுவிதமாகவுமாகி ஏகவாக்யதை (ஒரேபொருளுள்ளதன்மை) இல்லாமல் போகத்தெரியும். "இவ்விதமன்றோ ஐந்தாவது ஆஹுதியில் அப்புக்கள் புருஷ சப்தத்தாற் சொல்லப்பட்டனவாகவாகின்றன" என முடிவு கூறுகின்றவராய் இவ்விதமே (ஶ்ரத்தா சப்தத்தாற் அப்புக்கள் சொல்லப்படுவதாகவே)உபதேசித்திருக்கிறார். ஶ்ரத்தையின் காரியமான ஸோமம்,விருஷ்டி முதலியன ஸ்தூலமாகவாகுங்கால் அதிகம் அப்புள்ளனவாகவே காணவும்படுகின்றன. ஶ்ரத்தை அப்பாகும் விஷயத்தில் அதுவும் யுக்தியாகவாகிறது. காரணத்துக் கொத்ததாகக் காரியமிருப்பதே அதன் காரணமாகும். மேலும் ஶ்ரத்தையெனப்பெயரிய அறிவானது மனத்தினுடையவோ, ஜீவனுடையவோ தர்மமாகவிருக்குங்கால் தர்மியான பொருளினின்றும் தனியாய்ப்பிரித்து பசு முதலியவற்றினின்றும் ஹிருதயாதிகளைப்போல ஹோமத்துக்காக எடுக்க முடியாததாகவிருப்பதுபற்றி அப்புக்களே ஶ்ரத்தா சப்தத்தாற் சொல்லப்பட்டனவாகவாகின்றன. "ஶ்ரத்தையே அப்பாகும்" என வைதிகமான ப்ரயோகமானது காணப்படுவதுபற்றி ஜலங்களில் ஶ்ரத்தா சப்த ப்ரயோகமானது பொருந்தக் கூடியதாகவுமாகிறது. ஶ்ரத்தைக் கொத்து நுட்பமாயிருத்தலை அடைந்த அப்புக்கள் தேஹத்துக்குப் பீஜங்களாகவாகின்றனபற்றி அவை ஶ்ரத்தா சப்தத்தாற் சொல்லப்பட்டன என்பதாம். சிங்கத்தின் பராக்கிரமமுள்ள மனிதன் சிங்க சப்தத்தாற் சொல்லப்படுவதுபோலவே இங்கும் காண்க. ஶ்ரத்தையை முன்னிட்டே கர்மங்கள் யாவுமேற்படுவதிலிருந்து அப்புக்களில் ஶ்ரத்தா சப்தமானது பொருந்தக்கூடியதாகவே ஆகிறது. *மஞ்ச என்ற சப்தம் புருஷர்களிடத்தில் எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க. "ஜலங்களன்றோ இந்த யஜமானனுக்குப் புண்ணிய கர்மத்தையும் பொருட்டு ஶ்ரத்தையைத் தருகின்றன" என்ற ஶ்ருதியிருப்பதிலிருந்து ஶ்ரத்தைக்கு ஹேதுவாகவிருப்பதிலிருந்து (ஜலங்கள்) ஶ்ரத்தையென்றழைக்கப்படுவது யுக்திக்கொத்ததாகவேயாகிறது. (5) (எ—று)

---

* "மஞ்சா:காயந்தி" ஊஞ்சல்கள் பாடுகின்றன என்றவிடத்தில் மஞ்சபதம் ஊஞ்சலிலுட்கார்ந்திருக்கும் மனிதனைக் குறிப்பது போலவாம்.

## अश्रुतत्वादिति चेन्नेष्टादिकारिणां प्रतीतेः ॥ ६ ॥

अथापि स्यात्प्रश्नप्रतिवचनाभ्यां नामापः श्रद्धादिक्रमेण पञ्चम्यामाहुतौ पुरुषाकारं प्रतिपद्येरन्। नतु तत्संपरिष्वक्ता जीवा रंहेयुः। अश्रुतत्वात्। नह्यत्रापामिव जीवानां श्रावयिता कश्चिच्छब्दोऽस्ति। तस्माद्रंहति संपरिष्वक्त इत्ययुक्तमिति चेत्। नैष दोषः। कुतः—इष्टादिकारिणां प्रतीतेः। 'अथ य इमे ग्राम इष्टापूर्ते दत्तमित्युपासते ते धूममभिसंभवन्ति' (छा० ५।१०।३) इत्युपक्रम्येष्टादिकारिणां धूमादिना पितृयाणेन पथा

---

(ஸூ) அச்ருதத்வாத் இதிசேத் ந இஷ்டாதிகாரிணாம் ப்ரதீதே: (6)

(ப—ரை) அப்புக்கள் முறையே ஐந்தாவது ஆஹூதியில் புருஷ வடிவத்தை யடைந்தபோதிலும் ஜீவன் அந்த அப்புக்களுடன் கூடினவனுகவேதான் போகிருன் என்று சொல்லமுடியாது. ஏன்? **अश्रुतत्वात्** (அஶ்ருதத்வாத்)=ஜீவனைப்பற்றிய சப்தமொன்றுகூட ஶ்ருதியிலில்லாதிருப்பதே அதன்காரணமாகும். [ஆகவே **रंहति संपरिष्वक्तः** (ரம்ஹதி ஸம்பரிஷ்வக்த:)=அப்புடன் கூடினவனுகவே போகிருன் என்றது பொருந்தாது.] **इतिचेत्** (இதிசேத்)=என்றுலோ, **न** (ந)=அவ்விதம் சொல்லவியலாது. ஏன்? **इष्टादिकारिणां प्रतीतेः** (இஷ்டாதிகாரிணாம் ப்ரதீதே:)=வேறு ஶ்ருதியில் யாகம் முதலியவற்றைச் செய்தவர்களுக்கு கதி சொல்லுவதுபோல இங்கும் "அந்த இந்த அக்னியில் தேவர் ஶ்ரத்தையை ஹோமஞ் செய்கின்றனர்" எனச் சொல்லியிருப்பதிலிருந்து யாகாதிகளைச் செய்த ஜீவனைப்பற்றிய உபதேசம் காணப்படுவதே அதன் காரணமாகும். (6) (எ—று)

பாஷ்யம்.—கேள்வி அதன் பதில் இவற்றைக்கொண்டு அப்புக்கள் ஶ்ரத்தாதி க்ரமமாக ஐந்தாவது ஆஹூதியில் புருஷவடிவத்தையடைகின்றன என்பது இருந்தாலுமிருக்கட்டும். ஜீவன் அவற்றுடன் நன்கு கூடினவனுகப் போகின்றுன் எனச்சொல்லவியலாது. ஶ்ருதியில்லாதிருப்பதே அதன்காரணமாகும். அதாவது: இவ்விடத்தில் ஜலங்களைப்போல ஜீவனைச்சொல்லும் சப்தம் ஒன்றுகூட இருப்பதாகத்தெரியவில்லை. ஆகவே "அவற்றுடன் (அப்புடன்) நன்கு கூடினவனுகவே போகிருன்" என்று சொன்னது பொருந்தாது எனின்? இந்தத் தோஷமிங்கில்லை. ஏன்? யாகாதிகளைச் செய்தவர்களைப்பற்றிய தோற்றம் காணப்படுவதே அதன் காரணமாகும். அதாவது:—"பின்னர் யாதொரு *கிராமத்திலுள்ள இந்த அதிகாரிகள் (1)இஷ்டா (2)பூர்த்தங்களையும், (3)தானத்தையும் இவ்விதம் முறைப்படி அனுஷ்டிக்கின்றனரோ அவர் தூமத்தை (தக்ஷிணாயனமார்க்கத்தை) யடைகின்றனர்" என்று தொடங்கி இஷ்டாதிகளைச் செய்தவர்க்கு தூமத்தை ஆதியாகக்கொண்ட

---

* இங்கு சுருதியில் காரமே என்றதால் கிராமவாஸிகளான கிருஹஸ்தாச்ரமிகள் சொல்லப்படுகின்றனர் எனப் பாஷ்யத்திற் கூறப்பட்டிருக்கிறது.

(1) யாகம் முதலியன (2) குளம் வெட்டல், தண்ணீர் பந்தல் வைத்தல் ஆலயமமைத்தல், பூந்தோட்டம் அமைத்தல் முதலியனவாம். (3) எவ்வித ப்ரதி ப்ரயோஜனத்தையும் எதிர்பாருது உத்தமபாத்திரமறிந்து தானஞ்செய்தலாம்.

चन्द्रप्राप्तिं कथयति—'आकाशाचन्द्रमसमेष सोमो राजा' (छा० ५ । १० । ४) इति । त एवेहापि प्रतीयन्ते 'तस्मिन्नेतस्मिन्नग्नौ देवाः श्रद्धां जुह्वति तस्या आहुतेः सोमो राजा संभवति' (छा० ५ । ४ । २) इति श्रुतिसामान्यात् । तेषां चाग्निहोत्रदर्शपूर्णमासादिकर्मसाधनभूता दधिपयःप्रभृतयो द्रवद्रव्यभूयस्त्वात्प्रत्यक्षमेवापः सन्ति । ता आहवनीये हुताः सूक्ष्मा आहुत्योऽपूर्वरूपाः सत्यस्तानिष्टादिकारिण आश्रयन्ति । तेषां च शरीरं नैधनेन विधानेनान्त्येऽग्नावृत्विजो जुह्वति 'असौ स्वर्गाय लोकाय स्वाहा' इति । ततस्ताः श्रद्धापूर्वककर्मसमवायिन्य आहुतिमय्य आपोऽपूर्वरूपाः सत्यस्तानिष्टादिकारिणो जीवान्परिवेष्ट्यामुं लोकं फलदानाय नयन्तीति यत्तदत्र जुहोतिनाभिधीयते—'श्रद्धां

---

பிதிருயான மார்க்கத்தினல் சந்திர ப்ராப்த்தியை "ஆகாசத்தினின்றும் சந்திரனை யடைந்தவர் இந்த ஸோமராஜன் எனப்படுவர்" என்றதால் ஸ்ருதி உபதேசிக்கிறது. அவர்களே (சந்திரமண்டலத்தை யடைந்தவர்களே) "அந்த இந்த அக்னியில் தேவர் ஸ்ரத்தையை ஹோமஞ் செய்கின்றனர். அந்த ஆஹுதியினின்றும் ஸோமராஜாவாக (சந்திரனுக) வாகிருன்" என்றதால் இங்கும் சொல்லப்படுவதாக ஏற்படுகிறது. (1) "ஸோமோராஜா" என்ற சப்தம் இரண்டிடத்திலுமொன்ருக இருப்பதே அதன் காரணமாகும். அந்த இஷ்டாதிகாரிகளுக்கு அக்னி ஹோத்ரம், தர்ச பூர்ணமாஸம் முதலிய கர்மங்களுக்கு ஸாதனங்களான தயிர், பால், முதலியன அதிகம் த்ரவத்ரவ்யமாக விருப்பதிலிருந்து ப்ரத்யக்ஷத்தில் அப்புக்களாக இருக்கின்றன. ஆஹவநீயம் என்ற அக்னியில் ஹோமஞ்செய்யப்பட்ட அந்த ஆஹுதிகள் ஸூக்ஷ்மங்களான அபூர்வ ரூபங்களாகவாகி இஷ்டாதிகளைச் செய்த அவர்களை யாஸ்ரயிக்கின்றன. அவர்களின் சரீரத்தை மரணத்திற்குப் பிறகு செய்யவேண்டிய முறைப்படி ருத்விக்குகள் முடிவிலுள்ள அக்னியில் "இவன் ஸ்வர்க்கலோகத்தைச் சேரட்டும்" என்பதாய் ஹோமஞ் செய்கின்றனர். பின்னர் ஸ்ரத்தையை முன்னிட்ட கர்மங்களுடன் கலந்த ஆஹுதிமயங்களான அப்புக்கள் அபூர்வரூபங்களாக (பலனல் ஊஹித்தத் தக்கபடி கண்ணுக்குப் புலப்படாதவைகளாக) வாகி இஷ்டாதிகளைச் செய்த அந்த ஜீவர்களைச் சூழ்ந்துகொண்டு பலனைத்தரவேண்டி ஸ்வர்க்கலோகத்தில் கொண்டு சேர்க்கின்றன என்பது யாதுண்டோ இதுவே இங்குள்ள "ஸ்ரத்தையை ஹோமஞ்செய்கின்றனர்" என்றதாற் சொல்லப்படுகிறது. ஆகவே அக்னி ஹோத்திர விஷயத்திலுள்ள (2)ஆறு

---

(1) வேறிடத்தில் "ஆகாசத்தினின்றும் சந்திரனையடைந்தவர் இந்த ஸோமராஜாவாக (சந்திரனுக) வாகின்றனர்" என்றவிடத்தில் இஷ்டாதிகாரிகளை ஸோமராஜா என்றதாற் சொல்லுகிறது. இவ்விடத்திலும் "அந்த இந்த அக்னியில் தேவர் சரத்தையை ஹோமஞ் செய்கின்றனர். அந்த ஆஹுதியினின்றும் ஸோம ராஜாவாக வாகிருன்" என்பதாய் ஸோமராஜா என்ற சப்தம் காணப்படுவதால் இஷ்டாதிகாரிகளைப் பற்றிய உபதேசந்தான் இது என்பது தெளிவாகிறது.

(2) (1) ஸாயம் ப்ராதராஹுதிகளின் உத்க்ராந்தி, (2) அவற்றின் கதி, (3) அவற்றின் ப்ரதிஷ்டை, (4) அவற்றாலுண்டாகும் திருப்தி, (5) புனராவிருத்தி, (6) லோகத்

जुह्वति' (बृ० ६ । २ । ९) इति । तथाचाग्निहोत्रे षट्प्रश्नीनिर्वचनरूपेण वाक्यशेषेण 'ते वा एते आहुती हुते उत्क्रामतः' इत्येवमादिनाग्निहोत्राहुत्योः फलारम्भाय लोकान्तरप्राप्तिः प्रदर्शिता । तस्मादाहुतिमयीभिरद्भिः संपरिष्वक्ता जीवा रंहन्ति स्वकर्मफलोपभोगायेति श्लिष्यते ॥ ६ ॥

कथं पुनरिदमिष्टादिकारिणां स्वकर्मफलोपभोगाय रंहणं प्रतिज्ञायते । यावता तेषां धूमप्रतीकेन वर्त्मना चन्द्रमसमधिरूढानामन्नभावं दर्शयति—'एष सोमो राजा तद्देवानामन्नं तं देवा भक्षयन्ति' (छा० ५ । १० । ४) इति 'ते चन्द्रं प्राप्यान्नं भवन्ति तांस्तत्र देवा यथा सोमं राजानमाप्यायस्वापक्षीयस्वेत्येवमेनांस्तत्र भक्षयन्ति' (बृ० ६ । २ । १६) इति च समानविषयं श्रुत्यन्तरम् । नच व्याघ्रादिभिरिव देवैर्भक्ष्यमाणानामुपभोगः संभवतीति । अत उत्तरं पठति—

**भाक्तं वानात्मवित्त्वात्तथाहि दर्शयति ॥ ७ ॥**

---

கேள்விகளுக்குப் பதிலையுபதேசிக்கும் வாக்கிய சேஷத்தால் "அந்த இந்த ஆஹுதிகள் உயரக்கிளம்புகின்றன" என்றதாதியால் அக்னிஹோத்ராஹுதிகளுடைய பலாரம்பத்துக்கு வேண்டி லோகாந்தர ப்ராப்தியானது காண்பிக்கப்பட்டது. ஆனதுபற்றி ஆஹுதிமயங்களான அப்புக்களுடன் நன்கு கூடினவர்களான ஜீவர்கள் தமது கர்மபலாநுபவத்துக்குவேண்டிப் போகின்றனர் என்பது பொருத்தமுள்ளதாக வாகிவிடுகிறது. (6) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்—இஷ்டாதிகளைச் செய்தவர்க்குத் தமது கர்மபலாநுபவத்துக்குவேண்டியே இந்தக் கமனம் சொல்லப்பட்டது என்ற இந்த ப்ரதிக்ஞை எவ்விதம் பொருந்தும். யாது காரணம்பற்றி தூமத்தை ஆலம்பனமாகக்கொண்ட மார்க்கம் வாயிலாக சந்திர மண்டலத்தையடைந்த அந்த இஷ்டாதிகாரிகட்கு அன்னபாவத்தை "இவன் ஸோமராஜாவாக (சந்திரனாக) வாகிறான். அதுவோ தேவர்கட்கு அன்னமாகிறது. அதைத் தேவர்கள் பக்ஷிக்கின்றனர்" என்றும், "அவர் சந்திரனையடைந்து அன்னமாகவாகின்றனர். அவ்விடத்தில் அவர்களைத் தேவர்கள் யாகத்தில் ருத்விக்குகள் ஸோமரஸத்தைக் குடித்துக் குடித்துக் குறைப்பது போலப் பக்ஷித்துவிடுகின்றனர்" என்றும் இதே விஷயத்தைப் பற்றிய வேறு ஶ்ருதிகளுமிருக்கின்றன. புலி முதலியவற்றினாற் போல தேவர்களால் பக்ஷிக்கப்படுபவர்க்கு கர்மபலாநுபவம் ஸம்பவிக்க இடமில்லையன்றோ எனின்? இதற்குப் பதிலை அடுத்த ஸூத்திரத்தாலுபதேசிக்கிறார்—

---

தைக் குறித்துக்கிளம்புதல் என கேள்விகள் ஆறு. இவற்றுக்கு ஹோமஞ்செய்யப்பட்ட இந்த ஆஹுதிகள் உயரகிளம்புகின்றன. அவை அந்தரிக்ஷலோகம் வாயிலாக த்யுலோகத்தை யடைகின்றன. த்யுலோகமாகிற ஆஹவனீயத்தை ப்ரதிஷ்டையாகக் கொள்ளுகின்றன. த்யுலோகத்தைத் திருப்தி செய்விக்கின்றன. அங்கிருந்து திரும்புகின்றன. பூமியில் புருஷன் ஸ்திரீ இவர்களிடத்தில் ஹோமஞ்செய்யப்பட்டனவாய் சரீரரூபத்துடன் வெளிவருகின்றன என்பன அக்கேள்விகளின் பதிலாகும்.

वा शब्दश्चोदितदोषव्यावर्तनार्थः। भाक्तमेषामन्नत्वं न मुख्यम्। मुख्ये ह्यन्नत्वे 'स्वर्गकामो यजेत' इत्येवञ्जातीयकाधिकारश्रुतिरुपरुध्येत। चन्द्रमण्डले चेदिष्टादिकारिणामुपभोगो न स्यात्किमर्थमधिकारिण इष्टाद्यायासबहुलं कर्म कुर्युः। अन्नशब्दश्चोपभोगहेतुत्वसामान्यादनन्नेऽप्युपचर्यमाणो दृश्यते। यथा विशोऽन्नं राज्ञां पशवोऽन्नं विशामिति। तस्मादिष्टस्त्रीपुत्रमित्रभृत्यादिभिरिव गुणभावोपगतैरिष्टादिकारिभिर्यत्सुखविहरणं देवानां तदेवैषां भक्षणमभिप्रेतं न मोदकादिवच्चर्वणं निगरणं वा। 'न ह वै देवा अश्नन्ति न पिबन्त्येतदेवामृतं दृष्ट्वा तृप्यन्ति' (छा० ३।६।१) इति च देवानां चर्वणादिव्यापारं वारयति। तेषां चेष्टादिकारिणां देवान्प्रति गुणभावोपगतानामप्युपभोग उपपद्यते राजोपजीविनामिव परिजनानाम्। अनात्मवित्त्वाच्चेष्टादिकारिणां देवोपभोग्यभाव उपपद्यते। तथा-

---

(ஸூ) பாக்தம் வா அநாத்மவித்வாத் ததாஹி தர்சயதி

(ப-ரை) वा (வா)=முற்கூறிய ஆசங்கைக்கிடமில்லை. [एषा मन्नत्वं (ஏஷா மன்னத்வம்)=இவர்களை யன்னமாகச் சொன்னது] भाक्तं (பாக்தம்)=கௌணமாக வாகும். अनात्मवित्वात् (அநாத்மவித்வாத்)=ஆத்மக்ஞானமற்றவராக இவர் இருப்பதே அதன் காரணமாகும். तथाहि दर्शयति (ததாஹி தர்ஶயதி)=அவ்விதமேயன்றே வேறு ஶ்ருதியும் காண்பிக்கிறது. (7) (எ-று)

பாஷ்யம்.—ஸூத்திரத்திலுள்ள வா என்ற ஶப்தமானது முன்னர்சொன்ன தோஷத்தைப் போக்குகின்றது. இவர்களுக்குச் சொல்லிய அன்னத் தன்மையானது கௌணமேயொழிய முக்கியமானதன்று. அன்னமாகவிருக்குந்தன்மை முக்கியமாகவிருக்குமானல் "ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் யாகஞ் செய்தல் வேண்டும்" என்ற இம்மாதிரியான அதிகாரத்தைச்சொல்லும் ஶ்ருதியானது வீணுகிவிடும். சந்திரமண்டலத்தில் இஷ்டம் (யாகம்) முதலியவற்றைச் செய்தவர்க்கு பலாநுபவமில்லாவிடில் கர்மாதிகாரிகள் ஆயாஸம் நிறைந்த இஷ்டாதி கர்மங்களைச் செய்ய முன்வருவதெப்படி. அன்ன என்ற சப்தமும் அநுபவத்துக்கு ஹேதுவாகவிருக்கும் ஸாதிருஶ்யத்தை முன்னிட்டு அன்னமாகவில்லாதவற்றிலும் உபசார முறையால் கூறப்படுவதாகக் காணக்கிடக்கின்றது. அரசர்களுக்கு ப்ரஜைகள் அன்னமாகின்றன. ப்ரஜைகளுக்குப் பசுக்கள் அன்னமாகின்றன என்பது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க. ஆகவே இஷ்டர்களான ஸ்திரீ புத்திர மித்திரர்கள் போல குணபாவத்தையடைந்த இஷ்டாதிகாரிகள் மூலம் தேவர்களுக்குச் சுகமான விஹரணம் யாதுண்டோ அதுவே இவர்களின் பக்ஷணமாக எண்ணப்பட்டதேயொழிய மோதகத்தைபோல கடித்தலோ விழுங்குதலோ அன்று. மேலும் "தேவர்கள் சாப்பிடுவதுமில்லை. குடிப்பதுமில்லை. இந்த அமுதத்தைக் கண்ணுற்கண்டே திருப்தியை யடைகின்றனர்" என்றதால் ஶ்ருதியானது தேவர்களுக்குச் சாப்பிடுதல் முதலிய வியாபாரத்தை மறுக்கிறது. தேவர்களைக் குறித்துக் குணபாவத்தை யடைந்தவர்களான அந்த இஷ்டாதிகாரிகளுக்கும் ராஜாக்களையண்டிப் பிழைக்கும் வேலைக்காரர்களுக்குப்போல உபபோகம் ஸம்பவிக்கவும் கூடும்.

हि श्रुतिरनात्मविदां देवोपभोग्यतां दर्शयति—'अथ योऽन्यां देवतामुपास्तेऽन्योऽसावन्योऽहमस्मीति न स वेद यथा पशुरेवं स देवानाम्' (बृ० १।४।१०) इति। स चास्मिन्नपि लोक इष्टादिभिः कर्मभिः प्रीणयन्पशुवद्देवानामुपकरोत्यमुष्मिन्नपि लोके तदुपजीवी तदादिष्टं फलमुपभुञ्जानः पशुवद्देवानामुपकरोतीति गम्यते॥ अनात्मवित्त्वात्तथाहि दर्शयतीत्यस्यापरा व्याख्या—अनात्मविदो ह्येते केवलकर्मिण इष्टादिकारिणो न ज्ञानकर्मसमुच्चयानुष्ठायिनः। पञ्चाग्निविद्यामिहात्मविद्येत्युपचरन्ति प्रकरणात्। पञ्चाग्निविज्ञानविहीनत्वाच्चेदमिष्टादिकारिणां गुणवादेनान्नत्वमुद्भाव्यते पञ्चाग्निविज्ञानप्रशंसायै। पञ्चाग्निविद्या हीह विधित्सिता। वाक्यतात्पर्यावगमात्। तथाहि श्रुत्यन्तरं चन्द्रमण्डले भोगसद्भावं दर्शयति—'स सोमलोके विभूतिमनुभूय पुनरावर्तते' (प्र० ५।४) इति। तथान्यदपि श्रुत्यन्तरम् 'अथ ये शतं पितॄणां जितलोकानामानन्दाः स एकः कर्मदेवनामानन्दो ये कर्मणा देवत्वमभिसंपद्यन्ते' (बृ० ४।३।३३)

---

இஷ்டாதிகாரிகள் ஆத்மவித்தாக இல்லாதிருப்பதுபற்றி தேவர்களுக்கு உபபோக்யமாகவாகுதல் பொருந்தக்கூடியதே. அதாவது:—ஶ்ருதியானது "எவன் தேவதையைத் தன்னைவிட வேறானதாகவெண்ணித் தேவதைவேறு, நான்வேறாகவிருக்கிறேன் என உபாஸிக்கின்றானோ அவன் க்ஞானத்தையடைந்தவனன்று. பசு எவ்விதமோ இவ்விதமே இவன் தேவர்களுக்கு ஆகிறான்" என்றதால் ஆத்மக்ஞானமற்றவர்க்கு தேவர்களுக்கு உபபோக்யமாகவிருத்தலைத் தெரிவித்திருக்கிறது. அந்த இஷ்டாதிகாரியானவன் இந்தவுலகிலும் யாகம் முதலிய கர்மங்களால் (தேவர்களை) திருப்தி செய்விக்கின்றவனாய் பசுக்கள் போன்று தேவர்களுக்கு உபகரிக்கின்றான். அவ்வுலகிலும் அவர்களையண்டிப் பிழைக்கின்றவனாய் அவர் காட்டிய பலனையனுபவிக்கின்றவனாய் பசுக்கள் போலவே தேவர்களுக்கு உபகரிக்கின்றான் எனவறியக்கிடக்கின்றது. (ஸூத்திரத்திலுள்ள) அநாத்மவித்வாத் ததாஹி தர்ஶயதி என்பதற்கு வேறுவிதமான வியாக்கியானஞ் செய்யப்படுகின்றது. அதாவது:—இஷ்டாதிகாரிகளான இவர்கள் கேவலம் கர்மாவைமட்டும் செய்தவர்களே யன்றி க்ஞானம் (கர்மாங்கமான உபாஸனம்) கர்மம் இவற்றைச் சேர்த்து அநுஷ்டித்தவர்களன்று. ப்ரகரணத்தையொட்டி பஞ்சாக்னிவித்யையை ஆத்மவித்யை என உபசாரமுறையாற் கூறுகிறார். பஞ்சாக்னிவிக்ஞானம் (உபாஸனம்) இல்லாதிருப்பது பற்றி இஷ்டாதிகாரிகட்கு அன்னமாகவாகுந்தன்மையானது குணவாதத்தினால் பஞ்சாக்னி வித்யையைப் புகழவேண்டி கல்பித்துக் கூறப்படுகிறது. பஞ்சாக்னி வித்யையன்றோ இங்குவிதிக்க விரும்பப்பட்டது. வாக்கிய தாத்பரியம் அவ்விதமிருப்பதே அதன் காரணமாகும். அவ்விதமே "அவன் ஸோம லோகத்தில் விபூதியை அனுபவித்துத் திரும்பிவருகிறான்" என்றதால் வேறு ஶ்ருதியானது சந்திரமண்டலத்தில் போகத்தின் இருப்பைக் காண்பிக்கிறது. அவ்விதமே வேறு ஶ்ருதியும் "லோக ஜயத்தையடைந்த பிதிருக்களுடைய யாதொரு நூறு ஆனந்தங்களுண்டோ அவை கர்மத்தினால் எவர் தேவத்தன்மையை யடைகின்றனரோ அந்தக் கர்ம தேவர்களுடைய ஒரு ஆனந்தமாகும்." என்றதால் தேவர்களுடன்

इतीष्टादिकारिणां देवैः सह संवसतां भोगप्राप्तिं दर्शयति । एवं भाक्तत्वादन्नभाववचनस्येष्टादिकारिणोऽत्र जीवा रंहन्तीति प्रतीयते । तस्माद्रंहति संपरिष्वक्त इति युक्तमेवोक्तम् ॥

## २ कृतात्ययाधिकरणम् । सू० ८–११

### कृतात्ययेऽनुशयवान्दृष्टस्मृतिभ्यां यथेतमनेवं च ॥ ८ ॥

स्वर्गावरोही क्षीणानुशयः सानुशयोऽथवा । यावत्संपातवचनात्क्षीणानुशय इष्यते ॥ १ ॥
जातमात्रस्य भोगित्वादैकभव्ये विरोधतः । चरणश्रुतितः सानुशयः कर्मान्तरैरयम् ॥ २ ॥

---

கூட வஸிக்கின்ற யாகாதிகாரிகளுக்குப் போக லாபத்தைத் தெரிவிக்கிறது. இவ்விதம் இவ்விடத்தில் அன்னபாவஞ் சொல்லும் வசனம் கௌணமாகவாவதால் யாகாதிகாரிகளான ஜீவர்கள் வேறு லோகஞ் செல்லுகின்றனர் எனத் தோற்றுகின்றது. ஆனதுபற்றி “பூத ஸூக்ஷ்மங்களுடன் கூடினவனுகவே போகிருன்” என்று சொன்னது பொருத்தமுள்ளதாகவே ஆகிறது. (7) (எ—று)

ஒன்ருவது ததந்தரப்ரதிபத்யதிகரணம் முற்றிற்று.



## கிருதாத்யயாதிகரணம் 2.

(அ—கை) தேவலோகத்தினின்றும் திரும்பிவரும் முறையும் அதிலுள்ள விசேஷமும் 4 ஸூத்திரங்கள்கொண்ட இந்த அதிகரணத்தாலுபதேசிக்கப்படுகிறது. அவற்றின் முதலாவது ஸூத்திரம் பின்வருமாறு—

### (ஸூ) கிருதாத்யயே அநுசயவாந் திருஷ்டஸ்மிருதிப்யாம் யதேதம் அநேவஞ்ச (8)

(ப—ரை) **कृतात्यये** (கிருதாத்யயே)=தேவலோக வாஸத்தைத்தந்த செய்த கர்மத்தின் முடிவேற்பட்டதும் **अनुशयवान्** (அநுஶயவாந்)=மீதமுள்ளகர்மவாஸனையுள்ளவனுய் **यथेतम्** (யதேதம்)=போனமுறையையொட்டியும், **अनेवम्** (அநேவம்)=சிலவிடங்களில் அதற்குமாருகவும் **अवरोहति** (அவரோஹதி)=இறங்குகிருன். **दृष्टस्मृतिभ्याम्** (திருஷ்டஸ்மிருதிப்யாம்) = அவ்விதம் ஶ்ருதிஸ்மிருதிகளிருப்பதே அதன் காரணமாகும். (8) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ஸ்வர்க்கத்தினின்றும் இரங்குபவன் தேய்ந்த கர்மமுள்ளவனுக வருகின்ருனு? மீதமுள்ள கர்மத்துடன் வருகின்ருனு? என்பது ஸந்தேஹம். “அங்குவாஸத்தைத் தரும் கர்மமுள்ளவரை வஸித்துவிட்டுப் பின்னர் திரும்புகிருன்” என்ற ஶ்ருதியிருப்பதிலிருந்து தேய்ந்த கர்மவாஸனையுள்ளவனுகவே வருகிருன் என்று கொள்ளுவதுதான் பொருந்தும் என்பது பூர்வபக்ஷம். பி

इष्टादिकारिणां धूमादिना वर्त्मना चन्द्रमण्डलमधिरूढानां भुक्तभोगानां ततः प्रत्यवरोह आम्नायते—'तस्मिन्यावत्संपातमुषित्वाथैतमेवाध्वानं पुनर्निवर्तन्ते यथेतम्' (छा० ५।१०।५) इत्यारभ्य यावत् 'रमणीयचरणा ब्राह्मणादियोनिमापद्यन्ते कपूयचरणाः श्वादियोनि' मिति। तत्रेदं विचार्यते—किं निरनुशया भुक्तकृत्स्नकर्माणोऽवरोहन्त्याहोस्वित्सानुशया इति। किं तावत्प्राप्तम्। निरनुशया इति। कुतः—यावत्संपातमिति विशेषणात्। संपातशब्देनात्र कर्माशय उच्यते—संपतन्त्यनेनास्माल्लोकादमुं लोकं फलोपभोगायेति। यावत्संपातमुषित्वेति च कृत्स्नस्य तस्य कृतस्य तत्रैव भुक्ततां दर्शयति। 'तेषां यदा तत्पर्यवैति' (बृ० ६।२।१६) इति च श्रुत्यन्तरेणैष एवार्थः प्रदर्श्यते। स्यादेतत्।

---

வியையடைந்த ஒவ்வொருவனுக்கும் போகம் (கர்மபலாநுபவம்) இருப்பதாலும், எல்லாக் கர்மங்களும் ஒரே பிறவியில் பலன் தருகின்றனவென்பது முறண்படுமாதலாலும், கபூயசரணா: கபூயாம் யோநிமாபத்யந்தே ரமணீயசரணா: ரமணீயாம் யோநிமாபத்யந்தே=கெட்டகாரியஞ் செய்தவர் கெட்டபிறவியையும், நல்லகாரியஞ் செய்தவர் நல்லபிறவியையுமடைகின்றனர். என ஶ்ருதி சொல்லுவதாலும், ஸ்வர்க்க லோகத்தினின்றும் இந்த ஜீவன் பலனைத்தரக்கூடிய எஞ்ஜிய வேறு கர்மங்களுடன் கூடவே இறங்குகிறுன் என்பது ஸித்தாந்தம்.

பாஷ்யம்.—இஷ்டம் (யாகம்) முதலியவற்றைச் செய்தவர்களும், தூமாதி மார்க்கமாகச் சந்திரமண்டலத்தை யடைந்தவர்களும் அங்கு அதன் போகத்தை யடைந்தவர்களுமானவர்கட்கு அங்கிருந்து திரும்புதலானது (ஶ்ருதியிற்) சொல்லப்படுகிறது. அதாவது:—" அங்கு (ஸ்வர்க்கத்தில்) யாவத் ஸம்பாதம்=ஸ்வர்க்க லோகாநுபவத்தைத் தரும் கர்மமுள்ளவரை வஸித்துப் பின்னர் இதேமார்க்கத்தில் சென்றமுறைப்படித் திரும்புகின்றனர்" என்று தொடங்கி ரமணீய சரணர்கள் (சாஸ்திரமொப்பத்தக்கப் புண்ணிய கர்மத்தைச் செய்தவர்) ப்ராம்ஹணர் முதலிய பிறவியை யடைகின்றனர். கபூயசரணர்கள் (சாஸ்திரத்தால் மறுக்கப்பட்ட கர்மத்தைச் செய்தவர்) நாய் முதலிய பிறவியை (அதாவது:—கெட்டபிறவியை) அடைகின்றனர் என்பதீருகவுள்ளதாம். அவ்விஷயத்தில் பின்வருமாறு விசாரிக்கப்படுகிறது. அதாவது:—அநுஶய மற்றவர்களாய் அதாவது:—எல்லாக் கர்மபலனையும் அநுபவித்தவர்களாய் இரங்குகின்றனரா? அல்லது எஞ்ஜிய கர்ம முள்ளவர்களாய்த் திரும்புகின்றனரா? என்பதாம். முதலிற்கிடைப்பது யாதென்னில்? எல்லாக் கர்மபலனையு மநுபவித்தவர்களாகவே வருகின்றனர் என்பதாம். ஏன்? ஶ்ருதியில் யாவத்ஸம்பாதம் என்ற அடைமொழி காணப்படுவதே அதன் காரணமாகும். இங்குள்ள ஸம்பாத என்ற சப்தத்தால் "இதனால் இவ்வுலகினின்றும் அவ்வுலகைப் பலாநுபவத்துக்கு வேண்டிச் செல்லுகின்றனர்" என்ற வ்யுத்பத்தியால் (விரிவுரையால்) கர்மங்களின் வாஸனையானது சொல்லப்படுகிறது. "ஸம்பாதமுள்ளவரை (கர்மவாஸனை உள்ளவரை) வஸித்து" என்றதால் செய்யப்பட்ட எல்லாக் கர்மங்களும் அங்கு அநுபவிக்கப்பட்டுவிடுகின்றன எனத் தெரிகிறது. மேலும் " அந்த யாகாதிகாரிகளுடைய அந்தக் கர்மமானது எதுபோழ்து

यावदमुष्मिल्लोक उपभोक्तव्यं कर्म तावदुपभुङ्क्त इति कल्पयिष्यामीति । नैवं कल्पयितुं शक्यते यत्किञ्चेत्यन्यत्र परामर्शात् । 'प्राप्यान्तं कर्मणस्तस्य यत्किञ्चेह करोत्ययम् । तस्माल्लोकात्पुनरेत्यस्मै लोकाय कर्मणे' (बृ० ४ । ४ । ६) इति ह्यपरा श्रुतिर्यत्किञ्चेत्यविशेषपरामर्शेन कृत्स्नस्येह कृतस्य कर्मणस्तत्र क्षयिततां दर्शयति । अपिच, प्रायणमनारब्धफलस्य कर्मणोऽभिव्यञ्जकम् । प्राक्प्रायणादारब्धफलेन कर्मणा प्रतिबद्धस्याभिव्यक्त्यनुपपत्तेः । तच्चाविशेषाद्यावत्किञ्चिदनारब्धफलं तस्य सर्वस्याभिव्यञ्जकम् । नहि साधारणे निमित्ते नैमित्तिकमसाधारणं भवितुमर्हति । न ह्यविशिष्टे प्रदीपसन्निधौ घटोऽभिव्यज्यते न पट इत्युपपद्यते । तस्मान्निरनुशया अवरोहन्तीत्येवं प्राप्ते ब्रूमः—कृतात्ययेऽनुशयवानिति ॥

येन कर्मवृन्देन चन्द्रमसमारूढाः फलोपभोगाय तस्मिन्नुपभोगेन क्षयिते तेषां यदम्मयं शरीरं चन्द्रमस्युपभोगायारब्धं तदुपभोगक्षयदर्शनशोकाग्निसंपर्कात्प्रविलीयते ।

---

முடிவடைகின்றதோ (அதுபோழ்து திரும்பிவருகின்றனர்)" என்ற வேறு ஶ்ருதியாலும் இதேபொருள்தான் தெரிவிக்கவும்படுகிறது.

சங்கை—இஃதிருக்கட்டும் அவ்வுலகில் அநுபவிக்கவேண்டிய கர்மம் எவ்வளவுண்டோ அவற்றைமட்டும் அநுபவிக்கிறான் எனக் கற்பிக்கிறோம். எனின்?

உத்தரம்—இவ்விதம் கற்பிப்பது பொருந்தாது என்? வேறு ஶ்ருதியில் யத்கிஞ்ச என்று கூறி இருப்பதே அதன் காரணமாகும். அதாவது: "இங்கு (உயிருடனிருக்குங்கால்) எந்தெந்த கர்மத்தை இவன் செய்தானோ அக்கர்மத்தின் பலனையநுபவித்துப் பிறகு அவ்வுலகினின்றும் இவ்வுலகுக்குக்கர்மத்தையும் பொருட்டுத் திரும்புகிறான்" என்றவேறு ஶ்ருதியானது யத்கிஞ்ச என்றதால் எல்லாக் கர்மத்தையும் பொதுவாகச் சொல்லியிருப்பதிலிருந்து இவனால் செய்யப்பட்ட எல்லாக் கர்மங்களும் அங்கு தேய்ந்துவிட்டன என்பதைத்தெரிவிக்கிறது. மேலும்,ப்ராயணம் (மரணம்) ஆனது பலனைத் தராதகர்மத்தை பலோந்முகமாகச் செய்யக் கூடியது. பலனைத் தரவாரம்பித்த கர்மத்தினால் தடுக்கப்பட்ட அநாரப்தபலமான கர்மத்துக்கு மரணத்துக்கு முந்தி அபிவியக்தி (பிரகாசம்) ஏற்படுவது பொருந்தக் கூடாததாகவுமிருக்கிறது. அந்த ப்ராயண (மரண) மானது பொதுவாகப் பலனையாரம்பிக்காத கர்மம் எவை எவையுண்டோ அவை யாவற்றுக்கும் அபிவியஞ்ஜகமாக (பிரகாசகமாக) வாகிறது. காரணமானது ஸாதாரணமாக (பொதுவாக) இருக்குங்கால் காரியமானது அஸாதாரணமாக (ஒருவஸ்துவை மாத்திரம் ஸம்பந்தித்ததாக) ஏற்படுவது பொருந்ாதன்றோ? விளக்கினருகில் குடம் பிரகாசிக்குமே யொழிய துணியானது பிரகாசிக்காது என்பது பொருந்தாதன்றோ? ஆகவே அநுசயமற்றவர்களாகவே (வேறு கர்ம வாஸனையற்றவர்களாகவே) இறங்குகின்றனர் எனப் பூர்வபக்ஷம் ப்ராப்த்தமாகவே "கிருதாத்யயே அநுஶயவான்" என்றதால் ஸித்தாந்தம் சொல்லுகிறோம்.

எந்தக் கர்மக்கூட்டத்தினால் சந்திரமண்டலத்தை பலாநுபவத்துக்குவேண்டியடைந்தனரோ அந்தக் கர்மக்கூட்டம் அநுபவத்தால் தேய்ந்தவுடன் சந்திரமண்

सवितृकिरणसंपर्कादिव हिमकरकाः । हुतभुगर्चिःसंपर्कादिव च घृतकाठिन्यम् । ततः कृतात्यये कृतस्येष्टादेः कर्मणः फलोपभोगेनोपक्षये सति सानुशया एवेममवरोहन्ति । केन हेतुना । दृष्टस्मृतिभ्यामित्याह । तथाहि प्रत्यक्षा श्रुतिः सानुशयानामवरोहं दर्शयति— 'तद्य इह रमणीयचरणा अभ्याशो ह यत्ते रमणीयां योनिमापद्येरन्ब्राह्मणयोनिं वा क्षत्रिययोनिं वा वैश्ययोनिं वाथ य इह कपूयचरणा अभ्याशो ह यत्ते कपूयां योनिमापद्येरञ्श्वयोनिं वा सूकरयोनिं वा चण्डालयोनिं वा' (छा० ५ । १० । ७) इति । चरणशब्देनानुशयः सूच्यत इति वर्णयिष्यति । दृष्टश्चायं जन्मनैव प्रतिप्राण्युच्चावचरूप उपभोगः प्रविभज्यमान आकस्मिकत्वासंभवादनुशयसद्भावं सूचयति, अभ्युदयप्रत्यवाययोः सुकृतदुष्कृतहेतुत्वस्य सामान्यतः शास्त्रेणावगमितत्वात् । स्मृतिरपि 'वर्णा आश्रमाश्च स्वकर्मनिष्ठाः प्रेत्य कर्मफलमनुभूय ततः शेषेण विशिष्टदेशजातिकुलरूपायुःश्रुतवृत्तवित्तसुखमेधसो जन्म प्रतिपद्यन्ते' इति सानुशयानामेवावरोहं दर्शयति—

---

டலத்தில் உபபோகத்திற்காக ஆரம்பிக்கப்பட்ட ஜலமயமான அவர்களின் சரீரம் யாதுண்டோ அது பலாநுபவத்தின் குறைவைக்காண்பதாலுண்டான சோகாக்னியின் சேர்க்கையினால் சூரியனுடைய கிரணஸம்பந்தத்தால் பனிக்கட்டிகள் போன்றும், அக்னியினது ஜ்வாலையின் சேர்க்கையால் நெய்கட்டிபோன்றும் உருகிவிடுகின்றது. பிறகு கிருதத்தின் முடிவில் அதாவது: செய்யப்பட்ட இஷ்டம் (யாகம்) முதலிய கர்மத்துக்கு பலாநுபவத்தால் தேய்வேற்பட்டதும் ஸாநுஶயர்களாகவே (பலனைத்தராது எஞ்ஜியிருக்கும் கர்மத்துடன் கூடினவர்களாகவே) திரும்புகின்றனர். என் ? த்ருஷ்டஸ்மிருதிகளிருப்பதாலெனச் சொல்லுகிறார். அதாவது: ப்ரத்யக்ஷமான ஶ்ருதியானது "இறங்கும் ஜீவர்களுக்குள் எவர் கர்மபூமியிலிருக்குங்கால் புண்ணிய கர்மஞ்செய்தனரோ, அக்காரணம்பற்றி அவர் புண்ணியமான பிறவியையடைகின்றனர் என்பது நிஶ்சயம். அதாவது: ப்ராம்ஹணப் பிறவியையோ, க்ஷத்திரியப் பிறவியையோ, வைஶ்யப் பிறவியையோ என்பதாம். பின்னர் எவர் பாபகாரியஞ்செய்தனரோ அக்காரணம் பற்றி அவர் கெட்ட பிறவியை யடைகின்றனர் என்பதுநிஶ்சயம். அதாவது:—நாய்பிறவியையோ, பன்றிப் பிறவியையோ, சண்டாளப் பிறவியையோ என்பதாம்." எனச் சுருதி யிருப்பதால் என்க. (உபநிஷத்திலுள்ள) சரண என்ற சப்தத்தால் அநுஶயம்=(கர்மம்) குறிக்கப்படுகிறது எனப் பின்னர் ஸூத்திரக்காரர் சொல்லப்போகிறார்.

மேலும், ஒவ்வொரு பிராணிதோரும் இந்தச் சுகதுக்கா நுபவமானது உயர்வு தாழ்வுள்ளதாகப் பிரித்துக் காணப்படுவதாய்க் கொண்டு அநுஶயத்தினிருப்பை ஸூசிப்பிக்கிறது. திடீரென நிகழக்கூடாததாகவிருப்பதே அதன் காரணமாகும். சுகதுக்கங்கள் புண்ணியபாபங்கள் மூலமேற்படுவதாகப் பொதுவாகச் சாஸ்திரத்தாலுபதேசிக்கப்பட்டு மிருக்கிறது. ஸ்மிருதியும்—"ஸ்வகர்மாநுஷ்டானஞ் செய்யும் வர்ணங்களும் ஆஶ்ரமிகளும் மரித்தபின்னர் (வேறு உலகில்) தமது கர்ம

कः पुनरनुशयो नामेति। केचित्तावदाहुः—स्वर्गार्थस्य कर्मणो भुक्तफलस्यावशेषः कश्चिदनुशयो नाम भाण्डानुसारिस्नेहवत्। यथाहि स्नेहभाण्डं रिच्यमानं न सर्वात्मना रिच्यते भाण्डानुसार्येव कश्चित्स्नेहशेषोऽवतिष्ठते तथाऽनुशयोऽपीति। ननु कार्यविरोधित्वाददृष्टस्य न भुक्तफलस्यावशेषावस्थानं न्याय्यम्। नायं दोषः। नहि सर्वात्मना भुक्तफलत्वं कर्मणः प्रतिजानीमहे। ननु निरवशेषकर्मफलोपभोगाय चन्द्रमण्डलमारूढः। बाढम्। तथापि स्वल्पकर्मावशेषमात्रेण तत्रावस्थातुं न लभ्यते। यथा किल कश्चित्सेवकः सकलैः सेवोपकरणै राजकुलमुपसृप्तश्चिरप्रवासात्परिक्षीणबहूपकरणश्छत्रपादुकादिमात्रावशेषो न राजकुलेऽवस्थातुं शक्नोति। एवमनुशयमात्रपरिग्रहो न चन्द्रमण्डलेऽवस्थातुं शक्नोतीति। नचैतद्युक्तमिव। नहि स्वर्गार्थस्य कर्मणो भुक्तफलस्यावशेषानुवृत्तिरुपपद्यते

---

பலனை அநுபவித்து அங்கிருந்து அநுபவித்ததுபோக எஞ்சிய கர்மமூலம் தேசம் ஜாதி குலம் ரூபம் ஆயுள் வித்தை நடத்தை பணம் சுகம் புத்தி இவற்றில் வேறு பட்டவர்களாய் பிறவியை யடைகின்றனர்.” என்றதால் அநுஶயமுள்ளவர்க்கே அவரோஹத்தைத் தெரிவிக்கிறது.

சங்கை—அநுஶயமென்பது யாது எனின்?

உத்தரம்—முதலில் சிலர் சொல்லுவதாவது—செய்யப்பட்ட கர்மத்துக்கு ஸ்வர்க்கத்தில் போகம் ஏற்பட்டதும் பாத்திரத்திலொட்டின எண்ணைபோன்ற அதனுடைய எஞ்ஜிய ஒருபங்கு அநுஶய மெனப்படும். அதாவது:—எண்ணை வைத்த மண்பாத்திரத்தைக் கழுவியபோதிலும் முற்றிலும் எண்ணைப்பற்றே இல்லாது கழுவவியலாததாய் சட்டியிலொட்டிய எண்ணை யினொருபங்கு இருப்பதாக காணப்படுவது எவ்விதமோ அவ்விதமே அநுஶயமுமாகும் என்பதாம்.

சங்கை—கர்மமானது போகத்தைத் தந்ததும் அழிந்துவிடக் கூடுமாதலால் அநுபவத்தைத் தந்தகர்மம் மீதமிருப்பது பொருந்ாதெனின்?

உத்தரம்—இந்தத் தோஷமிங்கில்லை. கர்மத்தின் பலன் முற்றிலும் அநுபவிக்கப்பட்டுவிடுகிறது என நாம் சொல்லுகின்றோமில்லை?

சங்கை—மீதமின்றிக் கர்மபலனையநுபவிப்பதற்காகவன்றோ சந்திரமண்டலத்தை இவனடைந்தான் எனின்?

உத்தரம்—ஆம். ஆயினும் ஸ்வல்பகர்மம் எஞ்ஜியிருப்பதைக்கொண்டுமட்டும் அங்கு (ஸ்வர்க்கத்தில்) இருக்கவியலாது. தனது வேலைக்கு அவஶ்யமான ஆடையாபரணங்களுடன் ராஜகுலத்தையண்டினவொரு வேலைக்காரன் வெகுநாள் வெளியில் வஸித்தமையால் ஆடையாபரணங்களையிழந்தவனாய் குடை பாதரக்ஷை இவற்றை மட்டுப்மீதமாகக் கொண்டிருப்பானேல் ராஜகுலத்தில் முன்னரமர்ந்த வேலையிலிருக்க அவனால் எவ்விதம் முடியாதோ இவ்விதமே அநுசயத்தைமட்டும் ஸாதனமாகக் கொண்ட ஜீவன் சந்திரமண்டலத்திலிருக்க முடியாதவனாகவாகிவிடுகிறான் என்கின்றனர். இது பொருந்தக்கூடியது போன்றதன்று. ஏன்? ஸ்வர்க்கபலனைத் தரும் கர்மம் பலாநுபவத்துக்குப் பின்னர் எஞ்ஜியிருப்பதென்பது பொருந்தக்

कार्यविरोधित्वादित्युक्तम् । नन्वेतदप्युक्तम् । न स्वर्गफलस्य कर्मणो निखिलस्य भुक्तफलत्वं भविष्यतीति । तदेतदपेशलम् । स्वर्गार्थं किल कर्म स्वर्गस्थस्यैव स्वर्गफलं निखिलं न जनयति स्वर्गच्युतस्यापि कञ्चित्फललेशं जनयतीति । न शब्दप्रमाणकानामीदृशी कल्पनाऽवकल्पते । स्नेहभाण्डे तु स्नेहलेशानुवृत्तिर्दृष्टत्वादुपपद्यते । तथा सेवकस्योपकरणलेशानुवृत्तिश्च दृश्यते । नत्विह तथा स्वर्गफलस्य कर्मणो लेशानुवृत्तिर्दृश्यते नापि कल्पयितुं शक्यते स्वर्गफलत्वशास्त्रविरोधात् । अवश्यं चैतदेवं विज्ञेयम् । न स्वर्गफलस्येष्टादेः कर्मणो भाण्डानुसारिस्नेहवदेकदेशोऽनुवर्तमानोऽनुशय इति । यदि हि येन सुकृतेन कर्मणेष्टादिना स्वर्गमन्वभूवंस्तस्यैव कश्चिदेकदेशोऽनुशयः कल्प्येत ततो रमणीय एवैकोऽनुशयः स्यान्न विपरीतः । तत्रेयमनुशयविभागश्रुतिरुपरुध्येत— 'तद्य इह रमणीयचर-

---

கூடியதன்று. கார்யத்தை விரோதியாயுடையதாக (பலனுண்டானதும் அவை யழிந்துவிடுவதாக) இருப்பதே அதன் காரணமாகும் எனச் சொல்லப்பட்டிருக்கிறது.

சங்கை—ஸ்வர்க்கபலனைத்தரும் எல்லாக்கர்மாவினுடையவும் பலன் அநுபவிக்கப்பட்டுவிடுகிறது என்ற இதுவும் பொருந்தாததாகவேதானுகிறது என்பது சொல்லப்பட்டதே எனின்?

உத்தரம்—ஸ்வர்க்கத்துக்காக ஏற்பட்ட கர்மமானது ஸ்வர்க்கத்திலிருப்பவனுக்கே தனது பலன்யாவையும் தருவதில்லை. ஸ்வர்க்கத்தினின்றும் நழுவினவனுக்கும் ஒரு ஸ்வல்பபலனைத்தருகிறது என்பதுவும் வலுப் பெறுவாததேயாகும். சுருதியை ப்ரமாணமாகக் கொண்டவர்க்கு இம்மாதிரியான கல்பனை பொருந்தக் கூடியதாகவாகாது. எண்ணெப் பாத்திரத்திலோ எண்ணெயின் லேசம் தொடர்ந்து வருவது கண்கூடாகக்காணப்படுவதால் பொருந்தலாம். அதுபோலவே ராஜாங்க ஸேவகனுக்கும் ஆடையாபரணங்களின் லேசாநுவிருத்தியானது கண்கூடாகக் காணவும்படுகிறது. இவ்விடத்திலோ ஸ்வர்க்கபலனைத்தரும் கர்மாவினுடைய லேசாநுவிருத்தியானது கண்கூடாகக் காணப்படவில்லை. அவ்விதம் கல்பிக்கவுமியலாது. அவற்றுக்கு ஸ்வர்க்கத்தைப் பலனுகச் சொல்லும் சாஸ்திர விரோதம் வரக் கூடியதாகவிருப்பதே அதன் காரணமாகும். ஆகவே இதை இவ்விதமறியவேண்டுவது அவசியமாகிறது. அதாவது: ஸ்வர்க்கத்தைப் பலனுகவுடைய யாகம் முதலிய கர்மத்தினுடைய சட்டியிலொட்டின எண்ணெபோலத் தொடர்ந்துவரும் ஒருபகுதி அநுஶயமன்று என்பதாம். யாகாதியான எத்தகைய புண்ணிய கர்மத்தினல் ஸ்வர்க்கத்தை யநுபவித்தனரோ அக்கர்மத்தினது ஏக தேசமே (ஒருபகுதியே) அநுஶயமெனப்படும் என்று கல்பிக்கப்படுமானுல் அது போழ்து ரமணீயமென்ற (புண்ணியமென்ற) அநுஶயமொன்றே யேற்படுமே யொழிய விபரீதமான (பாபத்தினுடையதான) அநுஶயமேற்படமாட்டாது. அவ்விதம்வருவதில் அநுஶயத்தின் பிரிவைக்கூறும் பின்வரும் சுருதியானது பொருத்தமற்றதாகவாகிவிடும். அதாவது:—"அவர்களுள் எவர் ரமணீய சரணரோ, பின்

णा, अथ य इह कपूयचरणाः' (छां० ५ । १० । ७) इति । तस्मादामुष्मिकफले कर्मजात उपभुक्तेऽवशिष्टमैहिकफलं कर्मान्तरजातमनुशयस्तद्वन्तोऽवरोहन्तीति ॥

यदुक्तं यत्किञ्चेत्यविशेषपरामर्शात्सर्वस्येह कृतस्य कर्मणः फलोपभोगेनान्तं प्राप्य निरनुशया अवरोहन्तीति । नैतदेवम् । अनुशयसद्भावस्यावगमितत्वात् । यत्किञ्चिदिह कृतमामुष्मिकफलं कर्मारब्धभोगं तत्सर्वं फलोपभोगेन क्षपयित्वेति गम्यते । यदप्युक्तं प्रायणमविशेषाद नारब्धफलं कृत्स्नमेव कर्माभिव्यनक्ति तत्र केनचित्कर्मणाऽमुष्मिँल्लोके फलमारभ्यते केनचिदस्मिन्नित्ययं विभागो न संभवतीति । तदप्यनुशयसद्भावप्रतिपादनेनैव प्रत्युक्तम् । अपि च केन हेतुना प्रायणमनारब्धफलस्य कर्मणोऽभिव्यञ्जकं प्रतिज्ञायत इति वक्तव्यम् । आरब्धफलेन कर्मणा प्रतिबद्धस्येतरस्य वृत्त्युद्भवानुपपत्तेस्तदुपशमात्प्रायणकाले वृत्त्युद्भवो भवतीति यद्युच्येत । ततो वक्तव्यम् । यथैव तर्हि प्राक्प्रायणादारब्धफलेन कर्मणा प्रतिबद्धस्येतरस्य वृत्त्युद्भवानुपपत्तिरित्येवं प्रायणकालेऽपि विरुद्धफलस्यानेकस्य

---

னர் இங்கு எவர் கபூய (கெட்ட) சரணரோ (கர்மமுள்ளவரோ)" என்பதாம். ஆகவே மறுமைப் பயனையுடைய கர்மஸமூஹமானது அநுபவித்து முடிந்ததும் எஞ்ஜியுள்ளதும், இப்மையில் பயன்தருவதுமான வேறு கர்மஸமூஹமானது அநுஶயமாக வாகிறது. அத்தகைய அநுஶயமுள்ளவர்களாக இரங்குகின்றனர் என்றேற்படுகிறது.

"யாதானும் கொஞ்சம்" எனப்பொதுவாகச் சொல்லியிருப்பதிலிருந்து இங்கு செய்யப்பட்ட எல்லாக் கர்மத்தினுடையவும் முடிவை பலாநுபவத்தாலடைந்து அநுஶயமேதவுமற்றவராகவே இரங்குகின்றனர் எனயாதொன்று சொல்லப்பட்டதோ இது இவ்விதமன்று. அநுஶயமிருப்பதாகக் காட்டப்பட்டுவிட்டதே அதன் காரணமாகும். மறுமைப்பயனையுடையதும் ஆரம்பிக்கப்பட்ட போகத்தையுடையதுமான எந்தக்கொஞ்சக்கர்மமானது இங்கு செய்யப்பட்டதோ அவை யாவையும் பலாநுபவத்தால் தேய்த்துவிட்டு (திரும்புகிறான்) என்று அறியக்கிடக்கிறது. மரணமானது பொதுவாக பலனையாரம்பிக்காத எல்லாக் கர்மத்தையுமே பிரகாசப்படுத்துகிறது. அவற்றுள் சிலகர்மத்தால் அவ்வுலகில் பலன் ஆரம்பிக்கப்படுகிறது. சிலவற்றால் இம்மையில் பலனாரம்பிக்கப்படுகிறது என்ற பாகுபாடு ஸம்பவிக்காது எனயாதொன்று சொல்லப்பட்டதோ அதுவும் அநுஶயமிருப்பதாக விளக்கினதிலிருந்தே மறுக்கப்பட்டதாகவாகிவிட்டது.

மேலும், எக்காரணம்பற்றி மரணமானது பலனையாரம்பிக்காத கர்மத்துக்கு ப்ரகாசகம் என வுறுதிசெய்யப்படுகிறது என்பதை (வாதி) சொல்லவேண்டும். பலனைக்கொடுக்கவாரம்பித்தகர்மத்தினால் தடுக்கப்பட்ட வேறுகர்மத்துக்கு விருத்யுத்பவம் (பலனைத் தரத்தக்க ஸ்வரூபலாபம்) ஸம்பவிப்பது பொருந்தாதாகையால் அக்கர்மமானது அடங்கிவிடுகின்றமையின் மரணகாலத்தில் அதற்கு விருத்தியினுத்பவம் (பலனைத் தரத்தக்க ஸ்வரூபலாபம்) ஏற்படுகிறது எனச்சொல்லப்படுமானால் அப்பொழுது மரணத்துக்கு முந்திப் பலனைக்கொடுக்கவாரம்பித்த கர்மத்தால் தடுக்-

कर्मणो युगपत्फलारम्भासंभवाद्बलवता प्रतिबद्धस्य दुर्बलस्य वृत्त्युद्भवानुपपत्तिरिति। नह्यनारब्धफलत्वसामान्येन जात्यन्तरोपभोग्यफलमप्यनेकं कर्मैकस्मिन्प्रायणे युगपदभिव्यक्तं सदेकां जातिमारभत इति शक्यं वक्तुं, प्रतिनियतफलत्वविरोधात्। नापि कस्यचित्कर्मणः प्रायणेऽभिव्यक्तिः कस्यचिदुच्छेद इति शक्यते वक्तुम्। ऐकान्तिकफलत्वविरोधात्। नहि प्रायश्चित्तादिभिर्हेतुभिर्विना कर्मणामुच्छेदः संभाव्यते। स्मृतिरपि विरुद्धफलेन कर्मणा प्रतिबद्धस्य कर्मान्तरस्य चिरमवस्थानं दर्शयति—'कदाचित्सुकृतं कर्म कूटस्थमिह तिष्ठति। मज्जमानस्य संसारे यावद्दुःखाद्विमुच्यते' इत्येवञ्जातीयका। यदि च कृत्स्नमनारब्धफलं कर्मैकस्मिन्प्रायणेऽभिव्यक्तं सदेकां जातिमारभेत ततः स्वर्गनरकतिर्यग्योनिष्वधिकारानवगमाद्धर्माधर्मानुत्पत्तौ निमित्ताभावान्नोत्तरा जातिरुपपद्येत। ब्रह्महत्यादीनां चैकैकस्य कर्मणोऽनेकजन्मनिमित्तत्वं स्मर्यमाणमुपरुध्येत। नच धर्माधर्मयोः

கப்பட்ட வேறுகர்மத்துக்கு விருத்தியுண்டாவது எவ்விதம் பொருந்தாததோ இவ்விதமே மரணகாலத்திலுங்கூட மாறுபட்ட பலனையுடைய அநேகம் கர்மத்துக்கு ஒரே ஸமயத்தில் பலாரம்பம் ஸம்பவிக்கமுடியாததலால் வலுப்பெற்ற கர்மத்தால் தடுக்கப்பெற்ற துர்ப்பல கர்மத்துக்கும் விருத்தியுண்டாவது பொருந்தமாட்டாது எனப்பதில் சொல்லவேண்டும். பலனைக் கொடுக்கவாரம்பிக்காதிருத்தல் என்பது பொதுவாக விருப்பதுபற்றி வேறுபிறவியில்பயன் தரக்கூடிய வெகு கர்மங்கள் ஒரு மரணகாலத்தில் அபிவியக்தியை யடைந்தனவாய்க் கொண்டு ஒரு பிறவியைத் தருகின்றனவென்று சொல்லமுடியாதல்லவா? ஒவ்வொரு கர்மமும் தனித்த பயனுடையது என்றதற்கு விரோதம் வரக்கூடியதாயிருப்பதே அதன் காரணமாகும். மரணகாலத்தில் ஒரு கர்மத்துக்கு அபிவியக்தியும், மற்றொரு கர்மத்துக்கு அடியோடு ஸ்வரூபநாசமும் வருகிறது என்றும் சொல்லமுடியாது. கர்மங்கள் நிஸ்சிதமான பயனையுடையன என்பதற்கு விரோதம் வரக்கூடியதாக விருப்பதே அதன் காரணமாகும். ப்ராயஸ்சித்தம் முதலிய காரணங்களின்றி ஒரு கர்மத்துக்கும் அடியோடு ஸ்வரூபநாசம் ஸம்பவிக்கவியலாதன்றோ? ஸ்மிருதியும் முறண்பட்ட பலனையுடைய கர்மத்தாற்றடுகப்பட்ட வேறு கர்மத்துக்கு வெகு காலமிருத்தலை "ஸம்ஸாரத்தில் முழுகுகின்றவனுக்கு ஒரு ஸமயத்தில் நிகழ்ந்த புண்ணிய கர்மமானது எப்பொழுது துக்கத்தினின்றும் (துக்கபகுளமான ஸம்ஸாரத்தினின்றும்) முக்தியையடைகின்றானோ அதுவரை அழிவற்றதாகவே இருக்கின்றது" என்றதாதியால் உபதேசித்திருக்கிறது.

மேலும், பலனையாரம்பிக்காத எல்லாக்கர்மமும் ஒரே மரண ஸமயத்தில் அபிவியக்தியை யடைந்ததாய்க்கொண்டு ஒரே பிறவியைத் தருமானால், ஸ்வர்க்கம் நரகம் விலங்கினம் இப்பிறவிகளில் கர்மாதிகாரம் இல்லாமைபற்றி தர்மாதர்மங்களுண்டாவதற்கிடமில்லாததிலிருந்து காரணமில்லாமையால் அடுத்த பிறவியேற்படுவது விரோதப்படத் தெரியும். *ப்ரம்ஹ ஹத்தி முதலியவற்றுள் ஒவ்வொரு கர்ம

* ச்வஸூகரகரோஷ்ட்ராணும் கோஜாவிம்ருகபக்ஷிணும், சண்டாளபுல்கஸா

स्वरूपफलसाधनादिसमधिगमे शास्त्रादतिरिक्तं कारणं शक्यं संभावयितुम् । नच दृष्टफलस्य कर्मणः कारीर्यादेः प्रायणमभिव्यञ्जकं संभवतीत्यव्यापिकाऽपीयं प्रायणस्याभिव्यञ्जकत्वकल्पना ॥

प्रदीपोपन्यासोऽपि कर्मबलाबलप्रदर्शनेनैव प्रतिनीतः । स्थूलसूक्ष्मरूपाभिव्यक्त्यनभिव्यक्तिवच्चेदं द्रष्टव्यम् । यथा हि प्रदीपः समानेऽपि सन्निधाने स्थूलं रूपमभिव्यनक्ति न सूक्ष्मम् । एवं प्रायणं समानेऽप्यनारब्धफलस्य कर्मजातस्य प्राप्तावसरत्वे बलवतः कर्मणो वृत्तिमुद्भावयति न दुर्बलस्येति । तस्माच्छ्रुतिस्मृतिन्यायविरोधादश्लिष्टोऽयमशेषकर्माभिव्यक्त्यभ्युपगमः । शेषकर्मसद्भावेऽनिर्मोक्षप्रसङ्ग इत्ययमप्यस्थाने संभ्रमः । सम्यग्दर्शनादशेषकर्मक्षयश्रुतेः । तस्मात्स्थितमेतदेवानुशयवन्तोऽवरोहन्तीति । ते चावरोहन्तो यथे-

---

மும் அநேகம் ஜன்மத்துக்கு நிமித்தம் என ஸ்மிருதியில் சொல்லப் பட்டிருப்பது பாதிக்கப்பட்டுவிடும். மேலும் தர்மம் அதர்மம் இவற்றின் ஸ்வரூபம், பலன், ஸாதனம் முதலியவற்றை அறிவதில் சாஸ்திரத்தைத் தவிர்த்து வேறு காரண மிருப்பதாக ஊஹிக்கவும் முடியாது. மேலும், திருஷ்டமான பலனையுடைய காரீரி (மழையுண்டாவதற்குவேண்டி செய்யப்படும் யாகம்) முதலிய கர்மத்துக்கு அபிவ்யஞ்ஜகமாக மரணமாகமாட்டாது என்பதுபற்றி மரணமானது எல்லாக் கர்மத்துக்கும் அபிவ்யஞ்ஜகம் என்ற இந்தக்கல்பனை பொதுவாய் எல்லாக்கர்மத்தி லும் ஸம்பவிக்கக் கூடாததாகவு மிருக்கிறது. தீபத்தை (விளக்கை) த்திருஷ்டாந் தமாகக் காட்டினதும் கர்மங்களின் வலு அஃதின்மை இவற்றைக் காட்டியதி லிருந்து மறுக்கப்பட்டதாக வாகிவிடுகிறது. (விளக்கானது) ஸ்தூலமான ரூபத் தை ப்ரகாசப்படுத்துவதும் ஸூக்ஷ்மமானரூபத்தை ப்ரகாசப்படுத்தாததும் எவ் விதமோ அவ்விதமே இங்கும் காண்க. அதாவது:—விளக்கானது வஸ்துவின் ஸன்னிதி பொதுவாக விருந்தபோதிலுங்கூட ஸ்தூலமான ரூபத்தைப் பிரகாசப் படுத்துகிறதே யொழிய ஸூக்ஷ்மமான ரூபத்தைப் பிரகாசப்படுத்துவதில்லை யென்பது எவ்விதமோ இவ்விதமே அநாரப்தமான பலனையுடைய கர்மஸமூஹத்துக் குப் பிரகாசத்தையடையக்கூடிய காலப்பிராப்தி ஸமானமாகவிருந்தபோதிலுங் கூட வலுவுள்ள கர்மத்துக்கு ஸ்வரூப லாபத்தை மரணம் செய்கிறதே யொழிய துர்ப்பலமான கர்மஸமூஹத்துக்குச் செய்வதில்லை. ஆகவே ஶ்ருதி ஸ்மிருதி யுக்தி இவற்றுக்கு ஒத்துவராதிருப்பதால் எல்லாக்கர்மங்களும் மரணஸமயத்தில் பிரகா சத்தைபடைவதாகக் கொள்வது பொருத்தமற்றதேயாகிறது. மீதமான கர்மமிருந் தால் மோக்ஷமில்லாமை வரத்தெரியும் என்பதும் வீண்மயக்கமேயாகும். ஸம்யக் தர்சனத்தினால் எல்லாக் கர்மங்களும் தேய்ந்துவிடுவதாகக்கூறும் ஶ்ருதியிருப்பதே அதன் காரணமாகும். ஆனதுபற்றி அநுஶயமுள்ளவர்களாகவே இரங்குகின்ற

---

நாத்ச ப்ராம்ஹஹாயோநிம்ருச்சதி. ப்ரம்ஹஹத்திசெய்தவன் நாய், பன்றி, கழுதை, ஒட்டகை, பசு, செம்மறியாடு, வெள்ளாடு, மான், பக்ஷி, சண்டாளன், புல்கஸன் முதலிய பிறவியை யடைகிறான். என ஸ்மிருதியிலுபதேசிக்கப் பட்டிருக்கிறது.

तमनेवं चावरोहन्ति । यथेतमिति यथागतमित्यर्थः । अनेवमिति तद्विपर्ययेणेत्यर्थः । धूमाकाशयोः पितृयाणेऽध्वन्युपात्तयोरवरोहे सङ्कीर्तनाद्यथेतंशब्दाच्च यथागतमिति प्रतीयते । रात्र्याद्यसङ्कीर्तना दभ्राद्युपसङ्ख्यानाच्च विपर्ययोऽपि प्रतीयते ॥ ८ ॥

## चरणादिति चेन्नोपलक्षणार्थेति कार्ष्णाजिनिः ॥ ९ ॥

अथापि स्यात् । या श्रुतिरनुशयसद्भावप्रतिपादनायोदाहृता—'तद्य इह रमणीयचरणाः' (छां० ५ । १० । ७) इति । सा खलु चरणाद्योन्यापत्तिं दर्शयति नानुशयात् । अन्यच्चरणमन्योऽनुशयः । चरणं चारित्रमाचारः शीलमित्यनर्थान्तरम् । अनुशयस्तु

---

னர். ஸூத்திரத்திலுள்ள "யதேதம்" என்றதற்கு போனமுறையை யொட்டி என்று பொருள். "அநேவம்" என்றதற்கு அதற்குமாருகவும் என்று பொருள். பித்ருயானம் என்ற மார்க்கத்தில் தூமம், ஆகாசம் இவற்றை குறிப்பிட்டிருப்பதாலும், யதேதம் (சென்றபடியே திரும்புகிறான்) என்று ஸ்ருதி கூறுவதாலும் சென்றமுறைப்படியே திரும்புகிறானென அறியப்படுகின்றது. (திரும்பும் பாதையில் ஏறும் பாதையிலுள்ள) ராத்திரி முதலியன குறிக்கப்படாததாலும் மேகம் முதலியன புதிதாக கூறப்படுவதாலும் சென்ற மார்க்கத்துக்கு மாறுதலும் அறியப்படுகின்றது. (8) (எ—று)

## (ஸூ) சரணாதிதிசேத் நோபலக்ஷணார்த்தேதி கார்ஷ்ணாஜிநி:

(ப—ரை) **चरणादितिचेत्**(சரணாதிதிசேத்)=தத் ய இஹ ரமணீய சரணா: என்ற ஸ்ருதியில் சரண சப்தப்ரயோகமிருப்பதுபற்றி ஆசாரத்தினாலேயே ப்ராம்ஹணாதி யோநியை அடைகிறான். அனுபவிக்கப்பட்ட பலனையுடைய கர்மத்தைக்காட்டிலும் வேறான கர்மத்தினாலன்று என்று சொல்வாயேல் **न** (ந)=அவ்விதம் சொல்வது பொருந்தாது. **कार्ष्णाजिनिः** (கார்ஷ்ணாஜிநி:)=கார்ஷ்ணாஜிநி என்ற ஆசிரியர் **उपलक्षणार्था** (உபலக்ஷணார்த்தா)=சரண ஸ்ருதியானது அனுசயத்தை லக்ஷணமுறையால் ஸூசிப்பிக்கின்றதாகின்றது என்று கூறுவதுபற்றியே என்க. (9)

பாஷ்யம்.—ஆயினும் (பின்வருமாறு) ஆக்ஷேபிக்கக்கூடும். அதாவது:—தத் ய இஹ ரமணீயசரணா: என்ற எந்த ஸ்ருதியானது அனுசயத்தின் (கர்மவாஸனையின்) இருப்பைத் தெரிவிப்பதற்சாக எடுத்துக் கூறப்பட்டதோ, அந்த ஸ்ருதியானது சரணத்தினின்றும் (ப்ராம்ஹணாதி) யோநியில் பிறவியைத் தெரிவிக்கின்றதேயல்லாது அனுசயத்தாலுண்டாவதாகக் கூறவில்லை. சரணம் வேறு, அனுஶயம் வேறு. *சரணம், சாரித்ரம், ஆசாரம், சீலம் என்ற பதங்கள் ஒரே பொருளுள்ளனவாகும். அநுஶயமோ அனுபவிக்கப்பட்ட பலனையுடைய கர்மத்தைக்

---

* அத்ரோஹ: ஸர்வபூதேஷு கர்மணா மநஸா கிரா, அநுக்ரஹச்ச ஜ்ஞாநம் ச சீலமேதத் விதுர்ப்புதா:. மனது, வாக், கர்மம் இவற்றால் எல்லாப் பிராணிகளுக்கும் துரோஹம் செய்யாமையும், அனுக்கிரஹமும், சாஸ்திரார்த்த ஜ்ஞானமும் சீலமெனப்படும் என்று ஸ்மிருதியில் கூறப்பட்டிருக்கிறது,

भुक्तफलात्कर्मणोऽतिरिक्तं कर्माभिप्रेतम् । श्रुतिश्च कर्मचरणे भेदेन व्यपदिशति—'यथाकारी यथाचारी तथा भवति' (बृ० ४ । ४ । ५) इति, 'यान्यनवद्यानि कर्माणि तानि सेवितव्यानि नो इतराणि, यान्यस्माकꣳ सुचरितानि तानि त्वयोपास्यानि' (तै० १।११।२) इति च । तस्माच्चरणाद्योन्यापत्तिश्रुतेर्नानुशयसिद्धिरितिचेत् । नैष दोषः । यतोऽनुशयोपलक्षणार्थैवैषा चरणश्रुतिरिति कार्ष्णाजिनिराचार्यो मन्यते ॥ ९ ॥

आनर्थक्यमिति चेन्न तदपेक्षत्वात् ॥ १० ॥

स्यादेतत् । कस्मात्पुनश्चरणशब्देन श्रौतं शीलं विहाय लाक्षणिकोऽनुशयः प्रत्याय्यते । ननु शीलस्यैव श्रौतस्य विहितप्रतिषिद्धस्य साध्वसाधुरूपस्य शुभाशुभयोन्यापत्तिः फलं भविष्यति । अवश्यं च शीलस्यापि किञ्चित्फलमभ्युपगन्तव्यम् । अन्यथा

---

காட்டிலும் வேறான கர்மமாக எண்ணப்படுகிறது. "எத்தகைய கர்மத்தைச் செய்பவனாகவும், எத்தகைய ஆசாரமுள்ளவனாகவும் (இப்பிறவியில்) ஆகின்றானோ, அவ்விதமே மறுபிறவியிலாகின்றான்" என்றும், "நிஷேதிக்கப்படாத கர்மங்கள் எவையுண்டோ அவை அனுஷ்டிக்கத்தக்கன. மற்றவை அனுஷ்டிக்கத்தகாதன. எங்களுடைய எந்த ஸுசரிதங்கள் (நந்நடத்தைகள்) உண்டோ அவை உன்னால் அநுஷ்டிக்கத்தக்கன" என்றுமான ஶ்ருதியும் கர்மம் சரணம் இவைகளை (ஒன்றுக்கொன்று) வேறுபட்டனவாகவே குறிக்கின்றது. ஆகையால் சரணத்தினின்றும் யோநிலாபம் ஶ்ருதியில் கூறப்படுவதால் அனுசயம் (கர்மசேஷம்) ஸித்திபெறாதே எனின்? இது தோஷமாகாது. கார்ஷ்ணாஜிநி என்ற ஆசிரியர் **ரமணீயசரணா:** என்ற ஶ்ருதியானது அனுசயத்தை லக்ஷணைமுறையால் குறிக்கிறதாகவாகின்றது என்று கருதுவதுபற்றியே என்க. (9) (எ—று)

## (ஸூ) ஆநர்த்தக்யமிதிசேத் ந ததபேக்ஷத்வாத் (10)

(ப—ரை) **आनर्थक्यम्** (ஆநர்த்தக்யம்)=சரணசப்தத்தின் பொருளான ஆசாரத்திற்கே நல்லது கெட்டதான யோநிலாப காரணத்வம் சொல்லாவிடில் சரணத்துக்குப் பயனற்றிருத்தல் ஸம்பவிக்கும் எனின்? **न** (ந)=அது பொருந்தாது. **तदपेक्षत्वात्** (ததபேக்ஷத்வாத்)=யாகாதிகர்மம் ஆசாரத்தை அபேக்ஷித்ததாகவிருப்பதுபற்றியே என்க. (10) (எ—று)

**பாஷ்யம்.**—சங்கை—இஃதிருக்கட்டும். (**ரமணீயசரணா:** என்ற ஶ்ருதியில்) சரணம் என்ற சப்தத்தால் சக்திமுறையால் போதிக்கப்படும் சீலம் என்ற பொருளை விடுத்து லக்ஷணை முறையாலறியப்படும் அனுசயம் எக்காரணம் பற்றி கொள்ளப்படுகிறது. சக்திமுறையாலறியப் படுவதும், விதிக்கப்பட்டதும் விலக்கப்பட்டது மானதும், நல்லது கெட்டது தூருபமானதுமான சீலத்திற்கே நல்லது கெட்டதான யோனி (பிறவி) லாபம் பயனாகவாகலாம். சீலத்துக்கும் அவஶ்யமாய் யாதானுமொருபலனை அங்கீகரித்தே தீரவேண்டும். இவ்விதமங்கீகரிக்காவிடில் சீலத்துக்குப் பயனற்றிருத்தலே பிரஸங்கிக்கும் எனின்?

ह्यानर्थक्यमेव शीलस्य प्रसज्येतेति चेत् । नैष दोषः । कुतः—तदपेक्षत्वात् । इष्टादि हि कर्मजातं चरणापेक्षम् । नहि सदाचारहीनः कश्चिदधिकृतः स्यात्—'आचारहीनं न पुनन्ति वेदाः' इत्यादिस्मृतिभ्यः । पुरुषार्थत्वेऽप्याचारस्य नानर्थक्यम् । इष्टादौ हि कर्मजाते फलमारभमाणे तदपेक्ष एवाचारस्तत्रैव कञ्चिदतिशयमारप्स्यते । कर्म च सर्वार्थकारीति श्रुतिस्मृतिप्रसिद्धिः । तस्मात्कर्मैव शीलोपलक्षितमनुशयभूतं योन्यापत्तौ कारणमिति कार्ष्णाजिनेर्मतम् । नहि कर्मणि संभवति शीलाद्योन्यापत्तिर्युक्ता । नहि पद्भ्यां पलायितुं पारयमाणो जानुभ्यां रंहितुमर्हतीति ॥ १० ॥

**सुकृतदुष्कृते एवेति तु बादरिः ॥ ११ ॥**

बादरिस्त्वाचार्यः सुकृतदुष्कृते एव चरणशब्देन प्रत्याय्येते इति मन्यते । चरणमनु-

---

உத்தரம்—இது தோஷமாகாது. ஏன்? சீலத்தை அபேக்ஷித்ததாக விருப்பது பற்றியே என்ற. அதாவது:—யாகம் முதலிய கர்மஸமூஹமானது ஆசாரத்தை அபேக்ஷித்ததாகின்றது. "ஆசாரமற்றவனுக்கு வேதத்திற் கூறியகர்மங்கள் பயனைக்கொடுப்பதில்லை" என்றது முதலாய ஸ்மிருதிகளிருப்பதால் ஆசாரமற்ற ஒருவனும் (கர்மங்களில்) அதிகாரம் பெறமாட்டானன்றோ? * என்பதாம். மேலும், ஆசாரத்துக்குப் புருஷ ஸம்ஸ்காரகத்வத்தை அங்கீகரித்தாலும், பயனற்றிருத்தல் ஸம்பவியாது. அதாவது:—யாகம் முதலிய கர்மஸமூஹம் பலனைக்கொடுக்குங்கால் யாகாதிகர்மத்தை அபேக்ஷித்தே ஆசாரமானது கர்மபலத்திலேயே ஏதோ ஒருவிசேஷத்தை உண்டுபண்ணுகின்றது. கர்மமோ எல்லாவிதமான பலனையு முண்டுபண்ணுகின்றதென்ற பிரஸித்தி ஶ்ருதி ஸ்மிருதிகளிலிருக்கின்றது. ஆகையால் சீலத்தால் ஞாபிக்கப்பட்டதும், அநுஶயமாகவானதுமான கர்மமே யோனிலாபத்துக்குக் காரணமாகின்றதென்பது கார்ஷ்ணாஜினீ என்ற ஆசிரியரின் மதமாகும். (பிரதானமான) கர்மம் ஸம்பவிக்குங்கால் ஆசாரத்தினின்றும் யோனிலாபம் கூறுவது பொருந்தாதன்றோ? கால்களால் ஓடுவதற்குச் சக்தியுள்ளவன் முழந்தாள்களாலோடுவது பொருந்தாதன்றோ? (10) (எ-று)

**(ஸூ) ஸுக்ருததுஷ்க்ருதே ஏவேதிது பாதரி: (11)**

(ப-ரை) **बादरिः** (பாதரி:)=பாதரி என்ற ஆசிரியர். **सुकृतदुष्कृते एव** (ஸுக்ருதது ஷ்க்ருதே ஏவ)=புண்யம் பாபம் இவைகளே [**चरणशब्देन प्रत्याय्येते** (சரணஶப்தேந ப்ரத்யாய்யேதே)=சரணசப்தத்தால் போதிக்கப்படுகின்றன என்று கருதுகிறார்.]

பாஷ்யம்.—பாதரி என்ற ஆசிரியரோ புண்யம் பாபம் இவைகள்தான் சரண

---

* இதுவரை ப்ரயாஜாதிகளைப்போல் கர்மாங்கத்வமங்கீகரித்துப் பதில் கூறப்பட்டது. இனி ஸ்நானாதிகளைப்போன்று ஆசாரத்தைப் புருஷ ஸம்ஸ்காரமாக வங்கீகரித்துப் பதில் கூறப்படுகின்றது.

ष्ठानं कर्मेत्यनर्थान्तरम् । तथाहि—अविशेषेण कर्ममात्रे चरतिः प्रयुज्यमानो दृश्यते । यो हीष्टादिलक्षणं पुण्यं कर्म करोति तं लौकिका आचक्षते धर्मं चरत्येष महात्मेति । आचारोऽपि च धर्मविशेष एव । भेदव्यपदेशस्तु कर्मचरणयोर्ब्राह्मणपरिव्राजकन्यायेनाप्युपपद्यते । तस्माद्रमणीयचरणाः प्रशस्तकर्माणः कपूयचरणा निन्दितकर्माण इति निर्णयः ॥

## ३ अनिष्टादिकार्यधिकरणम् । सू० १२–२१

## अनिष्टादिकारिणामपि च श्रुतम् ॥ १२ ॥

चन्द्रं याति नवा पापी ते सर्वे इति वाक्यतः । पञ्चमाहुतिलाभार्थं भोगाभावेऽपि यात्यसौ ॥ १ ॥
भोगार्थमेव गमनमाहुतिर्व्यभिचारिणी । सर्वश्रुतिः सुकृतिनां याम्ये पापिगतिः श्रुता ॥ २ ॥

---

சப்தத்தால் போதிக்கப்படுகின்றனவென்று கருதுகிருர். சரணம், அநுஷ்டானம், கர்ம என்ற வார்த்தைகள் ஒரே பொருளுள்ளனவாகும். அதாவது: சர் என்ற தாதுவானது விசேஷமின்றியே எல்லாக் கர்மத்திலும் ப்ரயோகிக்கப்படுவதாய் காணப்படுகின்றது. எவன் யாகம் முதலியனவான புண்யமான கர்மத்தைச் செய்கின்ருனே அவனை லௌகிகர் "இந்த மஹான் தர்மத்தைச் செய்கிருன்" எனச் சொல்லுகின்றனர். ஆசாரமும் தர்மத்தின் ஓர் விசேஷமேதான். கர்மம் சரணம் இவற்றைப் பிரிவுபடுத்திக் கூறலானது *ப்ராம்ஹண பரிவ்ராஜக நியாயத்தாலும் பொருந்தக்கூடியதே. அதையால் **ரமணீயசரணா:**=சிறந்த கர்மமுள்ளவர்கள். **கபூயசரணா:**=வெறுக்கப்பட்ட கர்மமுள்ளவர்கள் என்பது நிர்ணயமான பொருளாகும். (11) (எ—று)

இரண்டாவது க்ருதாத்யயாதிகரணம் முற்றிற்று.



### அநிஷ்டாதிகார்யதிகரணம் 3.

(அ—கை) 10 ஸூத்திரங்கள் கொண்ட இவ்வதிகரணத்தால் அநிஷ்டாதிகாரிகளுக்கு சந்திரலோக கமனம் உண்டா? இல்லையா என்பது விசாரிக்கப் படுகின்றது. அவற்றுள் அநிஷ்டாதிகாரிகளுக்கும் சந்திரலோக கமனத்தை நிரூபிக்கும் பூர்வபக்ஷ ஸூத்திரம் பின்வருமாறு:—

### (ஸூ) அநிஷ்டாதிகாரிணமபிச ச்ருதம் (12)

(ப—ரை) **अनिष्टादिकारिणामपिच** (அநிஷ்டாதிகாரிணமபிச) = பாபகர்மங்கள் முதலியவற்றைச் செய்தவர்களுக்கும் **श्रुतम्** (ஶ்ருதம்)=சந்திரலோகப்ராப்தியானது ஶ்ருதியில் கூறப்பட்டிருக்கிறது. (12) (எ—று)

---

* "ப்ராம்ஹணர்களும், ஸன்யாஸிகளும் வந்தனர்" என்று கூறுமிடத்தில் ஸன்யாஸிகள் ப்ராம்ஹணர்களாயினும் அவர்களைத் தனித்துக் கூறல் விசேஷத்தில் கருத்துக் கொண்டு ஏற்பட்டதா யங்கீகரிக்கிறோம். இதுவே ப்ராம்ஹண பரிவ்ராஜக நியாயமாகும்.

इष्टादिकारिणश्चन्द्रमसं गच्छन्तीत्युक्तम्। ये त्वितरेऽनिष्टादिकारिणस्तेऽपि किं चन्द्रमसं गच्छन्त्युत न गच्छन्तीति चिन्त्यते । तत्र तावदाहुः—इष्टादिकारिण एव चन्द्रमसं गच्छन्तीत्येतन्न। कस्मात्। यतोऽनिष्टादिकारिणामपि चन्द्रमण्डलं गन्तव्यत्वेन श्रुतम्। तथाह्यविशेषेण कौषीतकिनः समामनन्ति—'ये वै के चास्माल्लोकात्प्रयन्ति चन्द्रमसमेव ते सर्वे गच्छन्ति' (कौषी० १।२) इति। देहारम्भोऽपि च पुनर्जायमानानां नान्तरेण चन्द्रप्राप्तिमवकल्पते। पञ्चम्यामाहुतावित्याहुति सङ्ख्यानियमात्। तस्मात्सर्व एव चन्द्रम-

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) பாபம் செய்தவன் சந்திரமண்டலத்தை அடைகின்றானா? அடைவதில்லையா? என்பது ஸந்தேஹம். யேவைகே சாஸ்மாத் லோகாத்ப்ரயந்தி சந்திரமஸமேவ தே ஸர்வே கச்சந்தி என்றஸ்ருதியில் "அவர் யாவரும்" என்று கூறப்படுவதாலும், சரீராரம்பகமான ஐந்தாவது ஆஹுதிலாபம்ஏற்படுவதற்காகவும்,போகலாபமில்லாவிடினும் பாபம்செய்தவனும் சந்திரமண்டலத்தையடைகிறான் என்பது பூர்வபக்ஷம். போகத்துக்காகவே சந்திரமண்டல கமனம் சொல்லப்படுவதாலும், 5-வது ஆஹுதிதான் சரீராரம்பகம் என்பது சிலவிடத்தில் வியபிசரிப்பதாலும், "அவர் யாவரும்" என்றுஸ்ருதியில் கூறினது புண்யசாலிகளைப்பற்றியதாவதாலும், பாபம் செய்தவர்களுக்கு யமலோக கமனம் வேறு ஸ்ருதியாலுபதேசிக்கப்படுவதாலும், பாபம் செய்தவன் சந்திரமண்டலத்தையடைவதில்லை என்பது **ஸித்தாந்தம்.**

பாஷ்யம்.—இஷ்டாதிகாரிகள் சந்திரமண்டலத்தை அடைகின்றனர் என்று சொல்லப்பட்டது. அவர்களைக் காட்டிலும் வேறுபட்ட அனிஷ்டாதிகாரிகள் (பாபகர்மத்தைச் செய்தவர்கள்) எவர்களுண்டோ அவர்களும் சந்திரமண்டலத்தை அடைகின்றனரா? அல்லது அடையவில்லையா? என்பது விசாரிக்கப்படுகின்றது. அவ்விஷயத்தில் பூர்வபக்ஷிகள் சொல்லுவதாவது:—இஷ்டாதிகாரிகள்தான் சந்திரனை அடைகின்றனர் என்பது இல்லை. ஏன்? அநிஷ்டாதிகாரிகளுக்கும் சந்திர மண்டலமடையத்தக்கதாக ஸ்ருதியிலுபதேசிக்கப்படுவதுபற்றியே என்க. அவ்விதமேயன்றோ விசேஷமின்றியே கௌஷீதகிசாகாத்யாயிகள் "எவரெவர்கள் இவ்வுலகினின்றும் செல்லுகின்றனரோ அவர் யாவரும் சந்திரனையே அடைகின்றனர்" என்று படிக்கின்றனர். மேலும், உண்டாகும் பிராணிகளுக்கு தேஹோத்பத்தியும் சந்திரனை யடையாவிடில் ஸம்பவிக்காது. "ஐந்தாவது ஆஹுதி ஏற்பட்ட பிறகு(பூதசூக்ஷ்மங்கள் புருஷன் என்ற பெயரை அடைகின்றன)"என்றதால் ஆஹுதியில் ஐந்து என்ற எண்ணுக்கு நியமமிருப்பதுபற்றியே என்க. * ஆகையினால் யாவருமே சந்திரனை யடைகின்றனர். இஷ்டாதி

* த்யுலோகம், பர்ஜன்யம், பிருதிவீ, புருஷன், ஸ்திரீ என்ற ஐந்து அக்கினிகளில் பூதசூக்ஷ்மங்கள் முறையேசிரத்தை,ஸோமம்,விருஷ்டி,அன்னம்,ரேதஸ் என்ற மாறுதலை அனுஸரித்து ஹோமம் செய்யப்பட்ட பிறகே அவை புருஷவடிவமாயாவதாய் சுருதியில் கூறப்படுவதால் அநிஷ்டாதிகாரிகளுக்கும் சரீர லாபத்திற்குவேண்டியே சந்திரமண்டல கமனமவச்யமாகின்றது என்று கருத்து.

समासीदेयुः । इष्टादिकारिणामितरेषां च समानगतित्वं न युक्तमिति चेत् । न । इतरेषां चन्द्रमण्डले भोगाभावात् ॥ १२ ॥

**संयमने त्वनुभूयेतरेषामारोहावरोहौ तद्गतिदर्शनात् ॥ १३ ॥**

तुशब्दः पक्षं व्यावर्तयति । नैतदस्ति सर्वे चन्द्रमसं गच्छन्तीति । एतत्कस्मात् । यतो भोगायैव चन्द्रारोहणं न निष्प्रयोजनम् । नापि प्रत्यवरोहायैव । यथा कश्चिद्वृक्षमारोहति पुष्पफलोपादानायैव न निष्प्रयोजनं नापि पतनायैव । भोगश्चानिष्टादिकारिणां चन्द्रमसि नास्तीत्युक्तम् । तस्मादिष्टादिकारिण एव चन्द्रमसमारोहन्ति नेतरे । ते तु संयमनं यमालयमवगाह्य स्वदुष्कृतानुरूपा यामीर्यातना अनुभूय पुनरेवेमं लोकं प्रत्यवरोहन्ति ।

---

காரிகளுக்கும் மற்றவர்களுக்கும் செல்லவேண்டிய இடம் ஒன்றாகவிருப்பது பொருந்தாதெனின்? அவ்விதமில்லை. அநிஷ்டாதிகாரிகளுக்கு சந்திரமண்டலத்தில் போகமில்லாமைபற்றியே என்க. (இஷ்டாதிகாரிகளுக்கும், அநிஷ்டாதிகாரிகளுக்கும் அடையவேண்டிய இடம் ஒன்றாயினும், இஷ்டாதிகாரிகளுக்கு சந்திரமண்டலத்தில் போகமுண்டு, மற்றவர்களுக்கு அஃதில்லை என்ற வேற்றுமை இருப்பதால் பாதகம் எதவும் வராதென்று கருத்து.) (12) (எ-று)

**(ஸூ) ஸம்யமநே த்வநுபூயேதரேஷமாரோஹா வரோஹௌ தத்கதிதர்சனத். (13)**

(ப-ரை) **तु** (து)=முற்கூறியபடிக்கில்லை. **संयमने** (ஸம்யமநே)=யமலோகத்தில் **अनुभूय** (அநுபூய)=அநிஷ்டாதிகாரிகள் தமது பாபகர்மத்துக்குத் தக்கபடி யமலோகத்திலுள்ள துக்கங்களை அனுபவித்து கீழ் இறங்குகின்றனர். **इतरेषाम्** **(இதரேஷாம்)**=அந்த அநிஷ்டாதிகாரிகளுடைய **आरोहावरोहौ** **(ஆரோஹாவரோஹௌ)**=ஏறுதல் இறங்குதல் இவைகள் இவ்விதமேற்படுகின்றன. **तद्गतिदर्शनात्** **(தத்கதிதர்ஶநாத்)**=அநிஷ்டாதிகாரிகளுக்கு யமலோக கமனம் ஶ்ருதியில் காணப்படுவதுபற்றியே என்க. (13) (எ-று)

பாஷ்யம்.—**து** என்ற சப்தம் பூர்வபக்ஷத்தைவிலக்குகின்றது. யாவரும் சந்திரனை அடைகின்றனர் என்பதில்லை. இது எக்காரணம்பற்றி எனின்? சந்திரமண்டலத்தை அடைதல் போகத்துக்குவேண்டியேயல்லாது பிரயோஜனமின்றி இல்லை என்பதுபற்றியே என்க. இரங்குவதற்காகவே சந்திரமண்டலத்தை அடைகிறான் என்பதும் பொருந்தாது. ஒருவன் புஷ்பம்,பழம் இவற்றைப்பறிப்பதற்காகவே மரத்தில் ஏறுவானே அல்லாது பயனில்லாமலோ,கீழ்விழுவதற்காகவோ ஏறமாட்டான் என்பது போலவாம். அநிஷ்டாதிகாரிகளுக்கோ சந்திர மண்டலத்தில் போகம் கிடையாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இஷ்டாதிகாரிகள்தான் சந்திரமண்டலத்தை அடைகின்றனரேயன்றி மற்றவரடைவதில்லை. அவர்களோ (பாபிகளோ) வெனில் ஸம்யமனத்தை=யமலோகத்தை அடைந்து தமது பாபகர்மங்களுக்குத் தகுந்ததான யமலோகத்தில் நிகழும் துக்கங்களை அனுபவித்து மறுபடியும் இதே லோகத்தை அடைகின்றனர். அநிஷ்டாதிகாரிகளுடைய லோகாந்தர ப்ராப்தியும்

एवंभूतौ तेषामारोहावरोहौ भवतः। कुतः—तद्गतिदर्शनात्। तथाहि यमवचनसरूपा श्रुतिः प्रयतामनिष्टादिकारिणां यमवश्यतां दर्शयति—'न सांपरायः प्रतिभाति बालं प्रमाद्यन्तं वित्तमोहेन मूढम्। अयं लोको नास्ति पर इति मानी पुनः पुनर्वशमापद्यते मे' (कठ० २। ६) इति। 'वैवस्वतं सङ्गमनं जनानाम्' इत्येवञ्जातीयकं च बह्वेव यमवश्यताप्राप्तिलिङ्गं भवति ॥ १३ ॥

**स्मरन्ति च ॥ १४ ॥**

अपिच मनुव्यासप्रभृतयः शिष्टाः संयमने पुरे यमायत्तं कपूयकर्मविपाकं स्मरन्ति नाचिकेतोपाख्यानादिषु ॥ १४ ॥

**अपिच सप्त ॥ १५ ॥**

अपि च सप्त नरका रौरवप्रमुखा दुष्कृतफलोपभोगभूमित्वेन स्मर्यन्ते पौराणिकैः।ताननिष्टादिकारिणः प्राप्नुवन्ति। कुतस्ते चन्द्रं प्राप्नुयुरित्यभिप्रायः ॥ १५ ॥

---

அங்கிருந்து திரும்புதலுமித்தகையதாகின்றன. என்? அங்கு செல்லுதல் காணப்படுவதுபற்றியே என்க. அதாவது:— *யமனுடைய வார்த்தைக்கு ஒப்பான ஶ்ருதியானது மரணமடைகின்ற அநிஷ்டாதிகாரிகளுக்கு யமனுக்கு அதீனமாகுதலே உபதேசிக்கின்றது. அதாவது:—"விவேகமற்றவனும், தவருன காரியங்களைச் செய்கின்றவனும், பணத்திலுள்ள ஆசையால் மறைக்கப்பட்ட அறிவையுடையவனுமான மனிதனுக்கு பரலோகோபாயம் புலப்படாது. இதுவே (அதாவது:—பெண், பொன் இவை நிறைந்த கண்கூடாகக் காணப்படுமிவ்வுலகமே என்பதாம்.) லோகமாகும். பரலோகமில்லை என்று எண்ணுபவன் அடிக்கடி எனது வசத்தையடைகிருன்" என்பதாம். "பாபியான ஜனங்களால் நன்கு அடையத்தக்க யமனை ஹவிஸ்ஸினுல் திருப்தி செய்யுங்கள்" என்பது போன்ற யமனுக்கு வசப்படுதலைத் தெரிவிக்கின்ற அறிகுறிகள் பலவிருக்கின்றன. (எ—று) (13)

**(ஸூ) ஸ்மரந்தி ச (14)**

(ப—ரை) **स्मरन्ति च** (ஸ்மரந்தி ச)=மனுவ்யாஸர் முதலிய சிஷ்டர்கள் யமலோகத்தில் பாபிகளுக்குப் பாபகர்மங்களின் பலானுபவத்தை உபதேசிக்கின்றனர்.

பாஷ்யம்.—மனுவ்யாஸர் முதலிய சிஷ்டர்கள் யமலோகத்தில் யமனுல் கொடுக்கப்படுகின்ற பாபகர்மங்களின் பயனை நாசிகேதோபாக்யானம் முதலியவற்றில் உபதேசிக்கின்றனர். (14)

**(ஸூ) அபி ச ஸப்த (15)**

(ப—ரை) **अपि च** (அபி ச)=மேலும் **सप्त** (ஸப்த)=7 நரகங்களும் பௌராணிகர்களாலுபதேசிக்கப்படுகின்றன. (எ—று) (15)

பாஷ்யம்.—மேலும் ரௌரவம் முதலிய 7 நரகங்கள் பாபபலனையனுபவிப்

---

* யமன் உபதேசிப்பதாய் கூறுகின்ற சுருதியானது என்பது கருத்து,

ननु विरुद्धमिदं यमायत्ता यातनाः पापकर्माणोऽनुभवन्तीति । यावता तेषु रौरवादिष्वन्ये चित्रगुप्तादयो नानाधिष्ठातारः स्मर्यन्त इति । नेत्याह—

**तत्रापि च तद्व्यापारादविरोधः ॥ १६ ॥**

तेष्वपि सप्तसु नरकेषु तस्यैव यमस्याधिष्ठातृत्वव्यापाराभ्युपगमादविरोधः । यमप्रयुक्ता एव हि ते चित्रगुप्तादयोऽधिष्ठातारः स्मर्यन्ते ॥ १६ ॥

**विद्याकर्मणोरिति तु प्रकृतत्वात् ॥ १७ ॥**

पञ्चाग्निविद्यायाम् 'वेत्थ यथासौ लोको न संपूर्यते' (छा० ५ । ३ । ३) इत्यस्य प्रश्नस्य प्रतिवचनावसरे श्रूयते—'अथैतयोः पथोर्न कतरेणचन तानीमानि क्षुद्राण्यसकृ-

---

பதற்குரிய பூமியாக (தேசமாக) பௌராணிகர்களாலுபதேசிக்கப்படுகின்றன. அந்த நரகங்களை அதிஷ்டாதிகாரிகள் அடைகின்றனர். (இவ்விதபவர்கள் நரகங்களையடைடவேண்டியவர்களாயிருப்பதால்) எங்ஙனம் சந்திரனை அடைவர் என்பது கருத்து. (எ—று) (15)

அவதாரிகா பாஷ்யம்.—அந்த ரௌரவம் முதலிய நரகங்களில் சித்திரகுப்தன் முதலியோர் யஜமானர்களாகப் புராணங்களிலுபதேசிக்கப்படுவதால் பாபம் செய்தவர்கள் யமனால் கொடுக்கப்படுகின்ற நரகங்களை அனுபவிக்கின்றனர் என்ற இது விருத்தமாக இருக்கின்றது எனின்? அவ்விதமில்லை எனப் பதில் சொல்லுகிறார்—

**(ஸூ) தத்ராபி ச தத்வ்யாபாராதவிரோத: (16)**

(ப—ரை) **तत्रापि च** (தத்ராபி ச)=ரௌரவம் முதலிய நரகங்களிலும் **तद्व्यापारात्** (தத்வ்யாபாராத்)=யமனுக்கே யஜமானனாகயிருத்தல் அங்கீகரிக்கப்படுவதால் **अविरोधः** (அவிரோத:)=புராணத்திற் கூறியதுடன் விரோதமில்லை. (16) (எ—று)

பாஷ்யம்.—அந்த 7 நரகங்களிலும் யமனுக்கே தலைவன் தொழிலங்கீகரிக்கப்படுவதால் விரோதமில்லை. சித்திரகுப்தன் முதலியோர் யமனால் தூண்டப்பட்டவர்களாய்க் கொண்டல்லவோ யஜமானர்களாக உபதேசிக்கப்படுகின்றனர். (16)

**(ஸூ) வித்யாகர்மணோரிதி து ப்ரக்ருதத்வாத் (17)**

(ப—ரை) ஏதயோ: பதோர்ந கதரேணசன என்ற ஶ்ருதியில் ஏதயோ: என்றதால் **विद्याकर्मणोरिति तु** (வித்யாகர்மணோரிதி து)=வித்யை (உபாஸனம்) கர்மம் இவைகளே **प्रकृतत्वात्** (ப்ரக்ருதத்வாத்)=தொடர்ச்சியையனுசரித்துக் கொள்ளப்படுவதாலும் அதிஷ்டாதிகாரிகளுக்குச் சந்திரலோக ப்ராப்திகிடையாது. (17) (எ—று)

பாஷ்யம்.—பஞ்சாக்நி வித்யையை உபதேசிக்குமிடத்தில் "இந்தச் சந்திர மண்டலமானது (மறித்த பிறகு வந்து சேருகின்ற பிராணிகளால்) எவ்விதம் நிறப்பப்படாததாகவாகின்றது" என்ற கேள்விக்குப் பதில் சொல்லுமிடத்துப் பின்வரு

द्यावतीनि भूतानि भवन्ति । जायस्व म्रियस्वेत्येतत्तृतीयं स्थानं तेनासौ लोको न संपूर्यते' (छा० ५ । १० । ८) इति । तत्रैतयोः पथोरिति विद्याकर्मणोरित्येतत् । कस्मात् । प्रकृतत्वात् । विद्याकर्मणी हि देवयानपितृयाणयोः पथोः प्रतिपत्तौ प्रकृते । 'तद्य इत्थं विदुः' इति विद्या तया प्रतिपत्तव्यो देवयानः पन्थाः प्रकीर्तितः । 'इष्टापूर्ते दत्तम्' (छा० ५ । १० । १, ३) इति कर्म तेन प्रतिपत्तव्यः पितृयाणः पन्थाः प्रकीर्तितः । तत्प्रक्रियायाम्—'अथैतयोः पथोर्न कतरेणचन' इति श्रुतम् । एतदुक्तं भवति—ये न विद्यासाधनेन देवयाने पथ्यधिकृता नापि कर्मणा पितृयाणे तेषामेष क्षुद्रजन्तुलक्षणोऽसकृदावर्ती तृतीयः पन्था भवतीति । तस्मादपि नानिष्टादिकारिभिश्चन्द्रमाः प्राप्यते । स्यादेतत् । तेऽपि चन्द्रबिम्बमारुह्य ततोऽवरुह्य क्षुद्रजन्तुत्वं प्रतिपत्स्यन्त इति । तदपि नास्ति । आरोहानर्थक्यात् । अपि च सर्वेषु प्रयत्सु चन्द्रलोकं प्राप्नुवत्स्वसौ लोकः प्रयद्भिः संपू-

---

மாறு படிக்கப்படுகின்றது. அதாவது:—(எவர்கள்) தேவயான பிதருயாண ஸாதனமான வித்யா கர்மங்களில் அதிகாரம் பெறவில்லையோ அவர்கள் தேவயானம், பிதிருயாணம் என்ற மார்க்கங்களுள் ஒன்றினுலும் செல்லுவதில்லை. அவர்கள் அடிக்கடி ஜனனமரணங்களை யடைகின்ற க்ஷுத்திரமான (கொசு, புழு முதலிய) பிராணிகளாகின்றனர். அதாவது: பிறப்பதும் இறப்பதுமாயுள்ள மூன்ருவது ஸ்தானத்தையடைந்தவராகவாகின்றனர்" என்பதாம். இந்த ஶ்ருதியிலுள்ள ஏதயோ: பதோ: என்றதற்கு வித்யை, கர்மம் என்று பொருள். ஏன்? தொடர்பு இருப்பது பற்றியே என்க. வித்யைகர்மம் இவைகள்தான் (முறையே) தேவயானம் பிதருயாணம் என்ற மார்க்கங்களையடைவதில் ஸாதனமாய் (முன்பு) தொடங்கப்பட்டிருக்கிறது. அதாவது:—"எவர்கள் இவ்விதமுபாஸிக்கின்றனரோ" என்று தொடங்கி வித்யையும், அதனுல் அடையத்தகுந்த தேவயானம் என்ற மார்க்கமும் சொல்லப்பட்டிருக்கிறது. "யாகம், குளம் வெட்டல் முதலியன, தானம்" என்று தொடங்கி கர்மமும், அதனுல் அடையத்தக்க பிதிருயாணம் என்ற மார்க்கமும் சொல்லப்பட்டிருக்கின்றன என்பதாம். அந்தப் பிரகரணத்தில் "ஏதயோ: பதோ: நகதரேணசந" என்று படிக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஶ்ருதியால் இவ்விதம் (பின்வருமாறு) கூறப்பட்டதாகின்றது. எவர்கள் வித்யை என்ற ஸாதனத்தினுல் (அடையத்தக்க) தேவயானம் என்ற மார்க்கத்தில் அதிகாரம் பெறவில்லையோ, கர்மத்தினுல் (அடையத்தக்க) பிதிருயாணம் என்ற மார்க்கத்திலும் அதிகாரம் பெறவில்லையோ அவர்களுக்கு (கொசு, புழு முதலிய) க்ஷுத்திர ஜந்துரூபமானதும், அடிக்கடி ஜனனமரணங்களை அடைகின்றதுமான இந்த மூன்ருவதுமார்க்கம் ஏற்படுகின்றது என்பதாம் என இவ்விதம் கூறப்பட்டிருப்பதாலும் அநிஷ்டாதிகாரிகளால் சந்திரன் அடையப்படுவதில்லை.

சங்கை — இஃதிருக்கட்டும், அநிஷ்டாதிகாரிகளும் சந்திரமண்டலத்தை யடைந்து, அதனின்றும் இறங்கி க்ஷுத்திரப்பிராணியாயிருத்தலை அடையக்கூடாதோ எனின்?

உத்தரம்—அதுவுமில்லை. (சந்திரமண்டலத்தில்) ஏறினது பயனற்றுவிடுவது

येतेत्यतः प्रश्नविरुद्धं प्रतिवचनं प्रसज्येत । तथाहि प्रतिवचनं दातव्यं यथाऽसौ लोको न संपूर्यते । अवरोहाभ्युपगमादसंपूर्णोपपत्तिरिति चेत् । न । अश्रुतत्वात् । सत्यमवरोहादप्यसंपूरणमुपपद्यते । श्रुतिस्तु तृतीयस्थानसङ्कीर्तनेनासंपूरणं दर्शयति—'एतत्तृतीयं स्थानं तेनासौ लोको न संपूर्यते' (छा० ५ । १० । ८) इति । तेनानारोहादेवासंपूरणमिति युक्तम् । अवरोहस्येष्टादिकारिष्वप्यविशिष्टत्वे सति तृतीयस्थानोक्त्यानर्थक्यप्रसङ्गात् । तुशब्दस्तु शाखान्तरीयवाक्यप्रभवामशेषगमनाशङ्कामुच्छिनत्ति । एवं सत्यधिकृतापेक्षः शाखान्तरीये वाक्ये सर्वशब्दोऽवतिष्ठते । ये वै केचिदधिकृता अस्माल्लोकात्प्रयन्ति चन्द्रमसमेव ते सर्वे गच्छन्तीति ॥ १७ ॥

यत्पुनरुक्तं देहलाभोपपत्तये सर्वे चन्द्रमसं गन्तुमर्हन्ति, पञ्चम्यामाहुतावित्यश्रुतिसङ्ख्यानियमादिति । तत्प्रत्युच्यते—

---

பற்றியே என்க. இறந்த யாவரும் சந்திர லோகத்தையடைந்தால் அந்த லோகம் இறந்தவர்களால் நிரப்பப்பட்டுவிடுமாதலால் பதிலானது கேள்விக்கு முறண்பட்டதாகவாகிவிடும். (அந்த சந்திரலோகம் இறப்பவர்களால் ஏன் நிரப்பப்படவில்லை என்ற கேள்விக்கு) எவ்விதம் அந்தலோகம் நிறைவுபெறுதோ அவ்விதமல்லவோ பதில் கொடுக்கவேண்டும்.

சங்கை—(சந்திர லோகம் சென்றவர்களுக்கு அங்கிருந்து) கீழ்வருதலங்கிகரிக்கப்படுவதால் நிறைவு பெறுமை பொருந்தலாம் எனின்?

உத்தரம்—இல்லை அது ஸ்ருதியால் அறியப்படாமைபற்றியே என்க. அதாவது:—(கீழ்) இரங்குவதால் (சந்திரமண்டலத்துக்கு) நிறைவுபெறுமை உண்மையில் ஸம்பவிக்கலாந்தான். (ஆயினும்) "இது மூன்றாவது ஸ்தானமாகும். அதனல் அந்தலோகம் நிறப்பப்படுவதில்லை" என்ற ஸ்ருதியோவெனில் 3-வது ஸ்தானத்தைச் சொல்லி நிறப்பப்படாமையை காண்பிக்கின்றது. ஆகையினால் (பாபிகள் சந்திரனை) அடையாமையாலேயே நிறைவுபெறுமை ஸம்பவிப்பதென்பது பொருந்துவதாகின்றது. இஷ்டாதிகாரிகளுக்குக்கீழ் இரங்குதல் பொதுவாயிருப்பதிலிருந்தே (அநிஷ்டாதிகாரிகளுக்கும் இரங்குதல் அர்த்தஸித்தமாவதால் அவர்களுக்கு) மூன்றாவது மார்க்கங்கூறினது பயனற்றதாகவே பிரஸக்தமாகும். ஸூத்திரத்திலுள்ள து என்ற பதமானது வேறு சாகையைச்சேர்ந்த வாக்கியத்தினின்றுமுண்டான எல்லோரும் சந்திரனை அடைகின்றனர் என்ற ஆசங்கையை விலக்குகின்றது. முற்கூறியபடி தீர்மானிக்கப்பட்டுவிட்டபடியால் வேறுசாகையில் படித்த வாக்கியத்திலுள்ள எல்லோரும் என்றபதமானது சந்திரனை அடைய அதிகாரம்பெற்றவர்களை அபேக்ஷித்ததாகவாகின்றது. அதாவது:—சந்திரனை அடைய அதிகாரம் பெற்ற எந்தச்சிலர் இவ்வுலகினின்றும் செல்லுகின்றனரோ அவர்யாவரும் சந்திரனையே அடைகின்றனர் என்பதாம். (17) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—"ஐந்தாவது ஆஹுதியில்" என்றவிடத்தில் ஐந்தாம் ஸங்கியையில் நியமமிருப்பதால் தேஹலாபம் பொருந்துவதற்காக எல்லோரும்

## न तृतीये तथोपलब्धेः ॥ १८ ॥

**न तृतीये स्थाने देहलाभाय पञ्चसङ्ख्यानियम आहुतीनामादर्तव्यः। कुतः—तथोपलब्धेः। तथाह्यन्तरेणैवाहुतिसङ्ख्यानियमं वर्णितेन प्रकारेण तृतीयस्थानप्राप्तिरुपलभ्यते 'जायस्व म्रियस्वेत्येतत्तृतीयं स्थानम्' (छा० ५। १०। ८) इति। अपिच 'पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति' (छा० ५। ३। ३) इति मनुष्यशरीरहेतुत्वेनाहुतिसङ्ख्या सङ्कीर्त्यते न कीटपतङ्गादिशरीरहेतुत्वेन, पुरुषशब्दस्य मनुष्यजातिवचनत्वात्। अपिच पञ्चम्यामाहुतावपां पुरुषवचस्त्वमुपदिश्यते नापञ्चम्यामाहुतौ पुरुषवचस्त्वं प्रतिषिध्यते, वाक्यस्य द्व्यर्थतादोषात्। तत्र येषामारोहावरोहौ संभवतस्तेषां पञ्चम्यामाहुतौ देह उद्भविष्यति। अन्येषां तु विनैवाहुतिसङ्ख्यया भूतान्तरोपसृष्टाभिरद्भिर्देह आरप्स्यते ॥**

---

சந்திரனை அடையத் தகுதியுள்ளவர்களாகின்றனர் என யாதொன்று சொல்லப்பட்டதோ அதற்குப் பதில் கூறப்படுகின்றது.

### (ஸூ) ந த்ருதீயே ததோபலப்த்தே: (18)

(ப—ரை) **तृतीये** (த்ருதீயே)=மூன்றாவது மார்க்கத்தில் **न** (ந)=ஆஹுதிகளில் 5 என்ற எண்ணின் நியமம் (ஆவஶ்யகதை) ஆதரிக்கத்தக்கதல்ல. **तथोपलब्धेः** (ததோபலப்த்தே:)=5 என்ற ஆஹுதி ஸங்க்யா நியமமின்றியே மூன்றாவது ஸ்தான லாபம் காணப்படுவதுபற்றியே என்க. (18) (எ—று)

பாஷ்யம்.—மூன்றாவது மார்க்கத்தில் சரீரலாபத்துக்கு வேண்டி ஆஹுதிகளில் 5 என்ற எண்ணின் நியமம் ஆதரிக்கத்தகுந்ததன்று. ஏன்? அவ்விதம்காணப்படுவதுபற்றியே என்க. அதாவது: "பிறப்பதும் இறப்பதுமாயுள்ள இந்தப்பிறவி மூன்றாவது ஸ்தானமாகும்" என்றதால் அவ்விதமே யன்றோ ஆஹுதியின் எண்ணில் நியமமின்றியே முற்கூறிய முறைப்படி மூன்றாவது ஸ்தான லாபமானது அறியப்படுகின்றது என்பதாம். "ஐந்தாவது ஆஹுதியில் அப்புகள் (பூதஸூக்ஷ்மங்கள்) புருஷன் என்ற பெயருள்ளனவாகவாகின்றன" என்றதால் மனுஷ்யசரீரத்துக்குக் காரணமாய் ஹோமசங்கிபை சொல்லப்படுகின்றதேயல்லாது புழு, பறவை முதலியவற்றின் சரீரத்துக்கும் காரணமாய்ச் சொல்லப்படவில்லை. புருஷ என்ற வார்த்தை மனிதஜாதியைக் குறிப்பதாக விருப்பதுபற்றியே என்க. மேலும், ஐந்தாவது ஆஹுதி ஏற்பட்டபிறகு அப்புக்களுக்குப் புருஷன் என்ற பெயர் உபதேசிக்கப்படுகின்றதேயல்லாது ஐந்தாவது ஆஹுதி ஏற்படாவிடில் (அவற்றுக்கு) புருஷன் என்ற பெயரால் குறிக்கப்படுதல் தடுக்கப்படுவதில்லை. (அங்ஙனமாயின் ஒரு வாக்கியத்துக்கு) இரண்டு பொருளுள்ளதாயிருத்தல் என்ற தோஷம் வருவதுபற்றியே என்க. (அதாவது: வாக்யபேதம் வரும் என்பது கருத்து) எவர்களுக்கு ஏறுதல் இறங்குதல் இவைகள் ஸம்பவிக்கின்றனவோ அவர்களுக்கு ஐந்தாவது ஆஹுதி ஏற்பட்ட பிறகு தேஹம் உண்டாகின்றது. மற்றவர்களுக்கோவெனில் ஹோமஸங்கியையின்றியே மற்ற பூதஸூக்ஷ்மங்களுடன் சேர்ந்த ஜலங்களால் சரீரம் உண்டுபண்ணப்படுகின்றது. (18) (எ—று)

**स्मर्यतेऽपि च लोके ॥ १९ ॥**

अपिच स्मर्यते लोके । द्रोण धृष्टद्युम्न प्रभृतीनां सीता द्रौपदी प्रभृतीनां चायोनिजत्वम् । तत्र द्रोणादीनां योषिद्विषयैकाहुतिर्नास्ति । धृष्टद्युम्नादीनां तु योषित्पुरुषविषये द्वे अप्याहुती न स्तः । यथा च तत्राहुतिसङ्ख्यानादरो भवत्येवमन्यत्रापि भविष्यति । बलाकाप्यन्तरेणैव रेतःसेकं गर्भं धत्त इति लोकरूढिः ॥ १९ ॥

**दर्शनाच्च ॥ २० ॥**

---

**(ஸூ) ஸ்மர்யதேபிச லோகே (19)**

(ப—ரை) **अपिच** (அபிச) = மேலும், **लोके** (லோகே)=மஹாபாரதாதிகளில் **स्मर्यते** (ஸ்மர்யதே)=த்ரோணர், திருஷ்டதுய்ம்னன் முதலியோருக்கு அயோனிஜத்வமானது சொல்லப்படுகின்றது. இதனாலும் 5-வது ஆஹுதிதான் சரீராம்பத்தைச் செய்கின்றதென்ற நியமமில்லை என்பது பெறப்படுகின்றது. (19) (எ—று)

பாஷ்யம்.—மேலும் மஹாபாரதாதிகளில் * தரோணர் திருஷ்டத்யும்னன் முதலியவர்களுக்கும், ஸீதை, திரௌபதீ முதலியவர்களுக்கும் அயோனிஜத்வமானது (மாதாவின் கர்ப்பவாஸமின்மையானது) உபதேசிக்கப்படுகின்றது. அவர்களுள் துரோணர் முதலியவர்களுக்கு ஸ்திரீயாகிற அக்னியில் ஹோமமானது கிடையாது. திருஷ்டத்யும்னாதிகளுக்கோவெனில் ஸ்திரீ, புருஷன் இவ்விருவர் விஷயமான இரண்டுஹோமங்களுமில்லை. அங்கு எவ்விதம் ஹோமத்தின் எண்ணில் ஆதரவு கிடையாதோ இவ்விதமே மற்றவிடத்திலும் ஸம்பவிக்கலாம். பெண்கொக்கும் வீர்யஸம்பந்தமில்லாமலே கர்ப்பத்தைத்தரிக்கின்றதென்ற லோக பிரஸித்தியு மிருக்கின்றது. (19)

**(ஸூ) தர்சநாத் ச (20)**

(ப—ரை) **दर्शनात् च** (தர்ஸநாத் ச)=நான்குவிதமான பிராணி ஸமூஹங்களில் வியர்வையினின்றுமுண்டாகின்றவை, பூமியைப் பிளந்து உண்டாகின்ற மரம் கொடி முதலியவை இவற்றிற்கு ஸ்திரீ புருஷர்களின் சேர்க்கையின்றியே உத்பத்தி ஏற்படுவதைக் காண்பதாலும் 5-வது ஆஹுதிதான் சரீராரம்பத்தைச் செய்கின்றதென்ற நியமம் ஸம்பவிக்காது. (20) (எ—று)

---

* பரத்வாஜர் என்ற மஹர்ஷியானவர் கிருதாசீ என்ற தேவதாஸியைக் கண்டு மோஹமடையுங்கால் அவரது வீர்யம் வெளிவரவே அதைத்துரோணம் என்ற கமண்டலுவில் போட்டு வைத்ததாகவும், அதனின்றும் துரோணாசார்யர் உண்டானதாகவும், துருபதன் யாகம் செய்யும் பொழுது யாககுண்டத்தினின்றும் த்ருஷ்டத்யும்னனும், யாகவேதியினின்றும் திரௌபதியு முண்டானதாகவும், ஜனகன் யாகம் செய்வதற்காகப் பூமியைக் கலப்பை கொண்டு உழும்பொழுது ஒருபெட்டி கிடைத்ததாகவும், அதற்குள் இருந்த பெண்குழந்தையே ஸீதை என்றும் மஹாபாரதம் முதலியவற்றில் உபதேசிக்கப் பட்டிருக்கிறது.

अपिच चतुर्विधे भूतग्रामे जरायुजाण्डजस्वेदजोद्भिज्जलक्षणे स्वेदजोद्भिज्जयोरन्तरेणैव ग्राम्यधर्ममुत्पत्तिदर्शनादाहुतिसङ्ख्यानादरो भवति। एवमन्यत्रापि भविष्यति ॥ २० ॥

ननु 'तेषां खल्वेषां भूतानां त्रीण्येव बीजानि भवन्ति आण्डजं जीवजमुद्भिज्जम्' (छा० ६।३।१) इति। अत्र त्रिविध एव भूतग्रामः श्रूयते कथं चतुर्विधत्वं भूतग्रामस्य प्रतिज्ञातमिति। अत्रोच्यते—

**तृतीयशब्दावरोधः संशोकजस्य ॥ २१ ॥**

'आण्डजं जीवजमुद्भिज्जम्' (छा० ६।३।१) इत्यत्र तृतीयेनोद्भिज्जशब्देनैव स्वेदजोपसङ्ग्रहः कृतः प्रत्येतव्यः। उभयोरपि स्वेदजोद्भिज्जयोर्भूम्युदकोद्भेदप्रभवत्वस्य तुल्यत्वात्। स्थावरोद्भेदात्तु विलक्षणो जङ्गमोद्भेद इत्यन्यत्र स्वेदजोद्भिज्जयोर्भेदवाद इत्यविरोधः॥

---

பாஷ்யம்.—மேலும் ஜராயுஜம் (கர்ப்பப்பையினின்றும் வெளிவருவது) ஆண்டஜம் (முட்டையினுள்ளினின்றும் வெளிவருவது) ஸ்வேதஜம் (வியர்வையினின்றும் வெளிவருவது) உத்பிஜ்ஜம் (பூமியைப்பிளந்து வெளிவருவது) என்ற நான்கு விதமான பிராணி ஸமூஹத்தில் ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் இவற்றுக்கு ஸ்திரீ புருஷர்களின் சேர்க்கையின்றியும் உத்பத்தி காணப்படுவதால் ஹோமத்தின் எண்ணில் ஆதரவின்மை ஏற்படுகின்றது. இவ்விதமே மற்றவிடத்திலும் ஸம்பவிக்கலாம்.

அவதாரிகா பாஷ்யம்.—"அந்த இந்தப்பிராணிகளுக்கு மூன்றேகாரணங்களாகின்றன. ஆகவே அவைகள் ஆண்டஜம், ஜராயுஜம், உத்பிஜ்ஜம் என மூன்றுவிதமாகும்" என்றவிடத்தில் மூன்றுவிதமாகவே பூதஸமூஹம் உபதேசிக்கப்படுகின்றன. (ஆதலால்) பூதஸமூஹத்துக்கு நான்குவிதமாகவிருத்தல் எங்ஙனம் பிரதிக்ஞை செய்யப்பட்டதெனின்? இவ்விஷயத்தில் பதில் சொல்லப்படுகின்றது—

**(ஸூ) த்ருதீயசப்தாவரோத: ஸம்சோகஜஸ்ய (21)**

(ப-ரை) संशोकजस्य (ஸம்சோகஜஸ்ய)=ஸ்வேதஜத்துக்கு तृतीयशब्दावरोधः (த்ருதீயஶப்தாவரோத:)=तृतीय (த்ருதீய)=(ஆண்டஜம், ஜீவஜம், உத்பிஜ்ஜம் என்றவிடத்திலுள்ள शब्द (ஶப்த)=உத்பிஜ்ஜம் என்ற பதத்தினாலேயே अवरोधः (அவரோத:)=கிரஹணமானது [प्रत्येतव्यः (ப்ரத்யேதவ்ய:)=காணத்தகுந்தது.] (21)

பாஷ்யம்.—ஆண்டஜம், ஜீவஜம், உத்பிஜ்ஜம் என்றவிடத்திலுள்ள மூன்றாவதான உத்பிஜ்ஜம் என்ற பதத்தினாலேயே ஸ்வேதஜத்தையும் சேர்த்துக்கொண்டதாய் அறியவேண்டும். ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் இரண்டிற்கும் (அவ்வவற்றிற்குத் தக்கபடி) பூமி, ஜலம் இவற்றைப்பிளந்து உண்டாகுதல் ஒற்றிருப்பதுபற்றியே என்க. ஜங்கமோத்பேதமானது (புழு முதலியவற்றின் உத்பத்தியானது) ஸ்தாவரோத்பேதத்தைக் காட்டிலும் (மரம் முதலியவற்றின் உத்பத்தியைக் காட்டிலும்) விசேஷமுள்ளதாயிருத்தல்பற்றி மற்றவிடங்களில் வேறுபடுத்திக் கூறல் ஏற்படுவதால் விரோதமில்லை. (21) (எ-று)

மூன்றாவது அநிஷ்டாதிகாரி அதிகரணம் முற்றிற்று.

# ४ साभाव्यापत्त्यधिकरणम्। सू० २२

## साभाव्यापत्तिरुपपत्तेः ॥ २२ ॥

वियदादिस्वरूपत्वं तत्साम्यं वावरोहिणः। वायुर्भूत्वेत्यादिवाक्यात्तत्तद्भावं प्रपद्यते ॥ १ ॥

खवत्सूक्ष्मो वायुवशो युक्तो धूमादिभिर्भवेत्। अन्यस्यान्यस्वरूपत्वं न मुख्यमुपपद्यते ॥ २ ॥

इष्टादिकारिणश्चन्द्रमसमारुह्य तस्मिन्यावत्संपातमुषित्वा ततः सानुशया अवरोहन्तीत्युक्तम्। अथावरोहप्रकारः परीक्ष्यते। तत्रेयमवरोहश्रुतिर्भवति—"अथैतमेवाध्वानं पुनर्निवर्तन्ते यथेतमाकाशमाकाशाद्वायुं वायुर्भूत्वा धूमो भवति धूमो भूत्वाऽभ्रं भवत्यभ्रं भूत्वा मेघो भवति मेघो भूत्वा प्रवर्षति' (छा० ५। १०। ५) इति। तत्र संशयः—किमाका-

---

## ஸாபாவ்யாபத்யதிகரணம் 4.

(அ-கை) இந்த அதிகரணத்தால் சந்திரமண்டலத்தினின்றும் இரங்கும் முறை விசாரிக்கப்படுகிறது.

### (ஸூ) ஸாபாவ்யாபத்திருபபத்தே: (22)

(ப-ரை) [चन्द्रमण्डलादवरोहिणाम् (சந்திரமண்டலாதவரோஹிணாம்)=சந்திரமண்டலத்தினின்றும் இரங்குகின்றவர்கட்கு] साभाव्यापत्तिः (ஸாபாவ்யாபத்திः)= ஆகாசாதிகளின் ஸாம்ய ப்ராப்தியானது भवति (பவதி)=ஏற்படுகிறது. ஏன்? उपपत्तेः (உபபத்தே:)=அதற்குப்போதிய யுக்தியிருப்பதே அதன் காரணமாகும்:

வையாஸிக நியாயமாலா.

(க-ரை) சந்திரமண்டலத்தினின்றும் இரங்குகின்றவர்க்கு ஆகாசாதிகளின் ஸ்வரூபப்ராப்தியா? அல்லது அவற்றின் ஸாம்யப்ராப்தியா? என்பது ஸந்தேஹம். "வாயுவாகவாகி" என்றதாதியான வாக்கியத்தினின்றும் அந்தந்தப் பொருளின் தன்மையை யடைகின்றான் என்பதுதான் பொருத்தமுள்ளது என்பது பூர்வபக்ஷம். ஆகாசம்போன்று ஸூக்ஷ்மமாகவாகி வாயுவின் வசத்தையடைந்து தூமம் முதலியவற்றுடன் கூடினவனாகவாகிறான். ஒன்றுக்கு மற்றொன்றின் ஸ்வரூப ப்ராப்த்தியானது முக்கியமாகப் பொருந்தமாட்டாது என்பது ஸித்தாந்தம்.

பாஷ்யம்.—யாகாதிகளைச் செய்தவர் சந்திரமண்டலத்தையடைந்து அதில் கர்மமுள்ளவரை இருந்து அங்கிருந்து அநுசயத்துடன் கூடினவர்களாக இரங்குகின்றனர் என்று சொல்லப்பட்டது. இதுபோழ்து இரங்கும்முறை பரீக்ஷிக்கப்படுகிறது. அவ்விடத்தில் இரக்கத்தைக்கூறும் பின்வரும் ஶ்ருதி காணப்படுகிறது. அதாவது: "எவ்விதம் செல்லப்பட்டதோ பின்னர் இதேமார்க்கத்தைத்திரும்பவும் அடைகின்றனர். (முதலில்) ஆகாசத்தையும், ஆகாசத்தினின்றும் வாயுவையும், வாயுவாகவாகி தூமத்தையும் அடைகிறான். தூமமாகவாகி *அப்ரமாகவாகிறான். அப்ரமாகவாகி மேகத்தையடைகிறான். மேகமாகவாகி வர்ஷிக்கிறான்" என்பதாம்.

---

* சுருதியில் "அப்ர" என்றதால் மழைபொழிவதற்கு முன்னிலையிலுள்ளதும், "மேக" என்றதால் மழைபொழியும் நிலையிலுள்ளதும் சொல்லப்படுகிறது.

शादिस्वरूपमेवावरोहन्त: प्रतिपद्यन्ते किं वाकाशादिसाम्यमिति। तत्र प्राप्तं तावदाकाशादिस्वरूपमेव प्रतिपद्यन्त इति। कुत:—एवं हि श्रुतिर्भवति। इतरथा लक्षणा स्यात्। श्रुतिलक्षणाविशये च श्रुतिर्न्याय्या न लक्षणा। तथा च वायुर्भूत्वा धूमो भवतीत्येवमादीन्यक्षराणि तत्तत्स्वरूपोपपत्तावाञ्जस्येनावकल्पन्ते। तस्मादाकाशादिस्वरूपप्रतिपत्तिरिति। एवं प्राप्ते ब्रम:—आकाशादिसाम्यं प्रतिपद्यन्त इति। चन्द्रमण्डले यदम्मयं शरीरमुपभोगार्थमारब्धं तदुपभोगक्षये सति प्रविलीयमानं सूक्ष्ममाकाशसमं भवति ततो वायोर्वशमेति ततो धूमादिभि: संपृच्यत इति। तदेतदुच्यते—'यथेतमाकाशमाकाशाद्वायुम्' (छा० ५। १०। ५) इत्येवमादिना। कुत एतत्। उपपत्ते:। एवं ह्येतदुपपद्यते। नह्यन्यस्यान्यभावो मुख्य उपपद्यते। आकाशस्वरूपप्रतिपत्तौ च वाय्वादिक्रमेणावरोहो नोपपद्यते। विभुत्वाच्चाकाशेन नित्यसंबन्धवत्त्वान्न तत्सादृश्यापत्तेरन्यस्तत्संबन्धो घटते। श्रुत्यसंभवे च लक्षणाश्रयणं न्याय्यमेव। अत आकाशादितुल्यतापत्तिरेवात्राकाशादिभाव इत्युपचर्यते ॥२२॥

---

அதில் ஸம்சயமுதயமாகிறது. அதாவது:—இரங்குகின்றவர் ஆகாசாதிகளின் ஸ்வரூபத்தையேயடைகின்றனரா? அல்லது ஆகாசாதிகளின் ஸாம்யத்தையடைகின்றனரா? என்பதாம். இவ்விடத்தில் ஆகாசாதிகளின் ஸ்வரூபத்தையேயடைகின்றனர் என முதன்முதலில் தோற்றுகின்றது. ஏன்? இவ்விதமேயன்றோ ஶ்ருதி (சக்யார்த்தம்) யிருக்கிறது. இதற்கு மாறுனல் லக்ஷணையைக் கற்பிக்கவேண்டிவரும். ஶ்ருதி (சக்யார்த்தம்) லக்ஷணை இவ்விரண்டனுள் சக்யார்த்தம் கொள்வது நியாயமாகவாகுமேயொழிய லாக்ஷணிகமான பொருள் கொள்ளுவது நியாயமாகவாகாது. ஆகவே வாயுவாகவாகி தூமமாகவாகிறுன் என்ற இம்மாதிரியான பதங்கள் அவ்வவற்றின் ஸ்வரூபப்ராப்தியைச் சொல்லுங்கால் ருஜுவாகப் பொருந்திவிடுகின்றன. ஆனதுபற்றி ஆகாசாதிகளின் ஸ்வரூபப்ராப்தியேற்படுகிறது என்று தானேற்படுகிறது என இவ்விதம் (பூர்வபக்ஷம்) ப்ராப்தமாகவே ஆகாசாதிகளின் ஸாம்யத்தையடைகிறுன் எனச் சொல்லுகிறோம். சந்திரமண்டலத்தில் உபபோகத்துக்கு வேண்டி ஆரம்பித்த ஜலமயமான சரீரம் யாதுண்டோ அதனுடைய உபபோகம் (அநுபவம்) தேய்ந்ததும் ஒடுங்கவாரம்பித்ததாய் ஸூக்ஷ்மமாகவாகி ஆகாசஸாம்யத்தை யடைகிறது. அதன் பின்னர் வாயுவின் வசத்தை யடைகிறுன். அதன் பின்னர் தூமாதிகளுடன் சேர்க்கையையடைகிறுன் என்பதாம். அந்த இதுவே "சென்றதையொட்டி ஆகாசத்தையும் ஆகாசத்தினின்றும் வாயுவையும் அடைகிறுன்" என்றதாதியாற் சொல்லப்படுகிறது. இது எதனுலென்றுல்? உபபத்தி (யுக்தி) யிருப்பதே அதன் காரணமாகும். இவ்விதஞ் சொன்னுலன்றோ இது பொருந்தும். ஒன்றுக்குப் பிறவற்றின் தன்மை முக்கியமாக ஏற்படாதல்லவா. ஆகாசஸ்வரூப ப்ராப்த்தி சொன்னுலோ வாய்வாதி முறையாக இரங்குதல் பொருந்தாதன்றோ? (ஆகாசம்) விபுவாகையாலும், ஆகாசத்துடன் நித்திய ஸம்பந்தமுள்ளதாயிருப்பதுபற்றியும் ஆகாச ஸாம்யாபத்தியைத் தவிர்த்து வேறுபட்ட அதன் ஸம்பந்தம் பொருந்தவும் மாட்டாது. சக்யார்த்தம் ஸம்பவிக்காவிடில் லக்ஷணை முறையை ஆஶ்ரயிப்பது நியாயமானதேயாகும். ஆனதுபற்றி ஆகாசாதிகளுக்குத்

## ५ नातिचिराधिकरणम्। सू० २३

## नातिचिरेण विशेषात् ॥ २३ ॥

व्रीह्यादेः प्राग्विलंबेन त्वरया वाऽवरोहति। तत्रानियम एव स्यान्नियामकविवर्जनात् ॥ १ ॥

दुःखं व्रीह्यादिनिर्याणमिति तत्र विशेषितः। विलंबस्तेन पूर्वत्र त्वरार्थादवसीयते ॥ २ ॥

**तत्राकाशादिप्रतिपत्तौ प्राग्व्रीह्यादिप्रतिपत्तेर्भवति विशयः। किं दीर्घं दीर्घं कालं पूर्व पूर्वसादृश्येनावस्थायोत्तरोत्तरसादृश्यं गच्छन्त्युताल्पमिति। तत्रानियमो नियमकारिणः शास्त्रस्याभावादिति। एवं प्राप्त इदमाह—नातिचिरेणेति। अल्पमल्पं कालमाकाशादिभावे**

---

துல்லியமாக இருத்தலேதான் இவ்விடத்தில் ஆகாசாதிபாவம் என உபசாரமுறையாற் கூறப்படுகிறது. (22) (எ—று)

நான்காவது ஸாபாவ்யாபத்யதிகரணம் முற்றிற்று.

—◆—

### நாதிசிராதிகரணம் 5.

### (ஸூ) நாதிசிரேண விசேஷாத் (23)

(ப—ரை) **नातिचिरेण** (நாதிசிரேண) = ஆகாசஸாம்யத்தை யடைந்தபின்னர் அதிகதாமதமின்றியே இந்தப்புருஷன் வர்ஷதாரைகளுடன் ஸம்பந்தத்தை அடைகிறான். ஏன்? **विशेषात्** (விசேஷாத்)=ஶ்ருதியில் அவ்விதவிசேஷம்கூறியிருப்பதே அதன் காரணமாகும். (23) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) வ்ரீஹிமுதலியவற்றை யடைவதற்குமுன்னர் வெகுதாமதத்துடன் இறங்குகின்றனரா? அல்லது வேகமாக இறங்குகின்றனரா? என்பது ஸந்தேஹம். அவ்விஷயத்தில் இன்னவிதந்தானென நியமஞ்செய்யக்கூடிய தொன்றுமில்லாதது பற்றித் தாமதித்தென்றோ, சீக்கிரமாகவென்றோ நியமமொதுவுமில்லை என்பது பூர்வபக்ஷம். அவ்விடத்திலுள்ள ஶ்ருதியில் வ்ரீஹ்யாதிகளினின்றும் வெளிவருதல் வெகுகஷ்டமானது எனத் தனித்துக் கூறியிருப்பதிலிருந்து வ்ரீஹ்யாதிப்ராப்த்திக்குப் பிந்திவிளம்பத்துடனும் அதற்கு முன்னர் விளம்பமின்றியும் இறங்குகின்றனர் என்றேற்படுகிறது என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—அங்கு ஆகாசாதிப் பிராப்த்தியேற்பட்டதும் வ்ரீஹ்யாதிப்ராப்த்திக்கு முன்னர் நீண்ட நீண்டகாலம் முன்முன்னுள்ளவற்றின் ஸாம்யத்துடனிருந்து பின்பின்னுள்ளவற்றின் ஸாம்யத்தை யடைகின்றனரா? அல்லது அற்பகால மிருந்து ஸாம்யத்தை யடைகின்றனரா? என ஸம்ஶயமுண்டாகிறது. நியமகாரியான ஶாஸ்திரமில்லாமைபற்றி அவ்விஷயத்தில் நியமமொதுவுமில்லை என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்த்தமாகவே "நாதிசிரேண" என்றதால் பதில்சொல்லு

नावस्थाय वर्षधाराभिः सहेमां भुवमापतन्ति । कुत एतत् । विशेषदर्शनात् । तथाहि व्रीह्यादिभावापत्तेरनन्तरं विशिनष्टि—'अतो वै खलु दुर्निष्प्रपतरम्' (छा० ५ । १० । ६) इति । तकार एकश्छान्दस्यां प्रक्रियायां लुप्तो मन्तव्यः। दुर्निष्प्रपततरं दुर्निष्क्रमतरं दुःखतरमस्माद्व्रीह्यादिभावान्निस्सरणं भवतीत्यर्थः । तदत्र दुःखं निष्प्रपतनं प्रदर्शयन्पूर्वेषु सुखं निष्प्रपतनं दर्शयति । सुखदुःखत विशेषश्चायं निष्प्रपतनस्य कालाल्पत्वदीर्घत्वनिमित्तः । तस्मिन्नवधौ शरीरानिष्पत्तेरुपभोगासंभवात् । तस्माद्व्रीह्यादिभावापत्तेः प्रागल्पेनैव कालेनावरोहः स्यादिति ॥ २३ ॥

---

கிறார். அற்பமற்பம் காலம் ஆகாசாதிபாவத்துடனிருந்து வர்ஷதாரைகளுடன் கூட இந்தப் பூமியை அடைகின்றனர். இது எவ்விதமெனில்? விசேஷதர்சனமிருப்பதே அதன்காரணமாகும். அதாவது:—வ்ரீஹ்யாதிபாவப்ராப்திக்குப் பிறகு "இதற்குப்பிறகு வெகுகஷ்டப்பட்டு வெளிவரத்தக்கபிறவியை (அதாவது: வ்ரீஹ்யாதிபாவத்தை) அடைகிறான்." எனச் ஸ்ருதியில் விசேஷம் காணப்படுகிறது. இங்கு ஸ்ருதியிலுள்ள "துர்நிஷ்ப்ரபதரம்" என்றவிடத்தில்(துர்நிஷ்ப்ரபததரம் என்றிருக்கவேண்டியதில்) வேதமுறையில் ஒரு த என்ற எழுத்து இல்லாதிருக்கிறது என்று கண்டுகொள்ளவேண்டும். துர்நிஷ்ப்ரபததரம்=வெளிவருதலரிதானது. அதாவது: இந்த வ்ரீஹ்யாதிபாவத்தினின்றும் வெளிவருதலானது மிக்கதுக்ககரமானது என்பது அதன் பொருள். ஆகவே இவ்விடத்தில் கஷ்டப்பட்டு வெளிவருதலைக் காண்பிக்கின்ற வேதமானது அதற்கு முன்னுள்ள வற்றினின்றும் சுகமாக வெளிவருதலைக் காண்பிக்கிறது. வெளிவருதலைப் பற்றிய இந்தச்சுகதுக்கத்தன்மையின் விசேஷமானது காலத்தின் குறைவையும், நீளத்தைதையும் நிமித்தமாகக்கொண்டது. அந்த எல்லையில் சரீரமுண்டாகாமைபற்றி உபபோகம் (சுகதுக்காநுபவம்) இல்லாதிருப்பதே அதன்காரணமாகும். ஆகவே வ்ரீஹ்யாதிபாவத்தை யடைவதற்கு முன்னர் அற்பமான காலத்தினாலேயே இரங்குதல் ஏற்படுகிறது என்றேற்பட்டது. (23) (எ—று)

ஐந்தாவது நாதிசிராதிகரணம் முற்றிற்று.



## அங்யாதிஷ்டிதாதிகரணம் 6.

(அ—கை) ஜீவன் சந்திரமண்டலத்தினின்றும் இரங்குங்கால் வ்ரீஹ்யாதிபாவத்தை யடைவதாகச் சொல்லப்பட்டது. வ்ரீஹ்யாதிபாவத்தை யடைவதென்பதற்கு வ்ரீஹ்யாதிசரீரத்தை யடைகின்றான் என்று பொருளா? அல்லது வ்ரீஹ்யாதிசரீரத்தை யடைந்த ஜீவனைவிடத் தனியாக முற்கூறிய ஜீவன் அவற்றில் இரங்குங்கால் ஸம்பந்தத்தைமட்டும் அடைகின்றான் என்று பொருளா? என ஸந்தேஹப்வர வ்ரீஹ்யாதி சரீரத்தையடைந்த ஜீவனை விடவேறாக அவற்றுடன் இவன் ஸம்பந்தத்தை மட்டும் அடைகிறான் என 4சூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணத்தால் நிஸ்சயிக்கப்படுகிறது. அவற்றின் முதல் சூத்திரம் பின்வருமாறு—

## ६ अन्याधिष्ठिताधिकरणम् । सू-२४-२७

## अन्याधिष्ठितेषु पूर्ववदभिलापात् ॥ २४ ॥

व्रीह्यादौ जन्मतेषांस्यात्संश्लेषो वा जनिर्भवेत् । जायन्त इति मुख्यत्वात् पशुहिंसादिपापतः ॥ १ ॥

वैधान्न पापसंश्लेषः कर्मव्यापृत्यनुक्तितः । श्वविप्रादौ मुख्यजनौ चरणव्यापृतिः श्रुता ॥ २ ॥

**तस्मिन्नेवावरोहे प्रवर्षणानन्तरं पठ्यते—'त इह व्रीहियवा ओषधिवनस्पतयस्तिलमाषा इति जायन्ते' (छा० ५ । १० । ६) इति । तत्र संशयः—किमस्मिन्नवधौ स्थावरजात्यापन्नाः स्थावरसुखदुःखभाजोऽनुशयिनो भवन्त्याहोस्वित्क्षेत्रज्ञान्तराधिष्ठितेषु स्थावरशरीरेषु संश्लेषमात्रं गच्छन्तीति । किं तावत्प्राप्तम् । स्थावरजात्यापन्नास्तत्सुखदुःख-**

---

(ஸூ) அந்யாதிஷ்டிதேஷு பூர்வவதபிலாபாத் (24)

(ப-ரை) **अन्याधिष्ठितेषु** (அந்யாதிஷ்டிதேஷு)=வேறு ஜீவர்களால் அடையப்பட்ட வ்ரீஹ்யாதிகளில் **पूर्ववत्** (பூர்வவத்)=முன்னருள்ள வாயுவாதிகளில் போலவே [**संसर्गमात्रम्** (ஸம்ஸர்க்கமாத்ரம்)=ஸம்பந்தத்தை மட்டும் அநுஸயிகளான ஜீவர்களடைகின்றனர். **कुतः** (குத:)=என்?] **अभिलापात्** (அபிலாபாத்)=கர்மத்தின் வியாரம் எதவுமில்லாமலே வ்ரீஹ்யாதிபாவாபத்தியானது ஸ்ருதியிற் சொல்லப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். (24) (எ-று)

வையாஸிக நியாயமாலை.

(க-ரை) அநுஸயிகளுக்கு வ்ரீஹ்யாதியில் பிறவியா? அல்லது அவற்றுடன் ஸம்பந்தம் மட்டுமா? என்பது ஸந்தேஹம். ஸ்ருதில் "ஜநிக்கின்றனர்" என்று ஜந்மாவை முக்கியமாகக் கூறியிருப்பதாலும், ஸ்வர்க்காதி லோகஞ்சென்று திரும்புகின்றவர்க்கு ஸ்வர்க்கலோகஸாதனமான யாகாதிகளைச் செய்யுங்கால் பசுஹிம்ஸை முதலிய பாபஸம்பந்தமிருப்பதாலும். வ்ரீஹ்யாதிப்பிறவியை யடைகின்றனர் என்றுதான் சொல்லவேண்டும் என்பது பூர்வபக்ஷம். ஸாஸ்திரவிஹிதமான யாகாதிகளில் எவ்விதபாபமும் ஸம்பவிக்க இடமில்லை யாதலாலும், கர்மவியாபாரத்தை யொட்டி வ்ரீஹ்யாதி ப்ராப்தியை ஸ்ருதி இங்கு சொல்லாததாலும், நாய் ப்ராம்ஹணன் முதலிய முக்கியப்பிறவியில் சரண (கர்ம) வியாபாரம் சொல்லப்பட்டிருப்பதாலும் வ்ரீஹ்யாதிகளில் ஸம்பந்தம் மட்டுமேதான் இவர்களுக்கேற்படுகிறது என்பது ஸித்தாந்தம். (எ-று)

**பாஷ்யம்.—அதே அவரோஹம் (இரங்குதல்) சொல்லுமிடத்து ப்ரவர்ஷணம் சொன்னபிறகு ஸ்ருதியில் " அவர்கள் (அநுஸயிகள்) இவ்வழியில் வ்ரீஹியவங்களாகவோ, ஓஷதிவநஸ்பதிகளாகவோ, எள்ளு உளுந்து இவைகளாகவோ இவ்விதம் ஜநிக்கின்றனர்" எனப் படிக்கப்படுகிறது. அதில் ஸம்ஸயமேற்படுகிறது. அதாவது:—இந்த எல்லையில் (வர்ஷணம் சொன்னபிறகு) ஸ்தாவரவகுப்பை யடைந்த அநுஸயிகள் ஸ்தாவரத்தினது சுகதுக்கங்களை யடைந்தவர்களாக ஆகின்றனரா? அல்லது வேறு ஜீவனால் அடையப்பட்ட ஸ்தாவரசரீரங்களில் ஸம்ஶ்லே**

भाजोऽनुशयिनो भवन्तीति । कुत एतत् । जनेर्मुख्यार्थत्वोपपत्तेः, स्थावरभावस्य च श्रुतिस्मृत्योरुपभोगस्थानत्वप्रसिद्धेः । पशुहिंसादियोगाच्चेष्टादेः कर्मजातस्यानिष्टफलत्वोपपत्तेः । तस्मान्मुख्यमेवेदमनुशयिनां व्रीह्यादिजन्म । श्वादिजन्मवत् । यथा श्वयोनिं वा सूकरयोनिं वा चण्डालयोनिं वेति मुख्यमेवानुशयिनां श्वादिजन्म तत्सुखदुःखान्वितं भवति । एवं व्रीह्यादिजन्मापीति । एवं प्राप्ते—

ब्रूमः, अन्यैर्जीवैरधिष्ठितेषु व्रीह्यादिषु संसर्गमात्रमनुशयिनः प्रतिपद्यन्ते न तत्सुखदुःखभाजो भवन्ति पूर्ववत् । यथा वायुधूमादिभावोऽनुशयिनां तत्संश्लेषमात्रम् । एवं व्रीह्यादिभावोऽपि जातिस्थावरैः संश्लेषमात्रम् । कुत एतत् । तद्वदेवेहाप्यभिलापात् । कोऽभिलापस्य तद्वद्भावः । कर्मव्यापारमन्तरेण सङ्कीर्तनम् । यथाकाशादिषु प्रवर्षणान्तेषु न कञ्चित्कर्मव्यापारं परामृशत्येवं व्रीह्यादिजन्मन्यपि । तस्मान्नास्त्यत्र सुखदुःखभाक्त्व-

---

ஷத்தை (ஒட்டுதலை) மட்டும் அடைகின்றனரா? என்பதாம். முதலில் கிடைப்பது யாதெனில் ஸ்தாவரவகுப்பை யடைந்த அநுஶயிகள் அதற்குரிய சுகதுக்கங்களை யடைந்தவர்களாக ஆகின்றனர் என்றாம். இது எதனாலென்றால் (ஶ்ருதியில் "ஜாயந்தே" என்று கூறிய) உத்பத்திக்கு முக்கியமான பொருளுள்ள தன்மை யேற்படுவதும், ஶ்ருதிஸ்மிருதிகளில் ஸ்தாவரபாவத்தை உபபோகஸ்தானமாகச் சொல்லும் பிரஸித்தியிருப்பதும், பசுஹிம்ஸையிருப்பதுபற்றி யாகம் முதலிய கர்மஸமூஹத்துக்கு அநிஷ்டபலத்தன்மை பொருந்தக்கூடியதாக இருப்பதுமே அதன் காரணமாகும். ஆனதுபற்றி அநுஶயிகளுடைய இந்த வ்ரீஹ்யாதி ஜநநமானது முக்கியமானதே யாகும். நாய் முதலியவற்றின் பிறவி போலவாம் 'நாயின் யோநியையோ, பன்றியின் யோநியையோ, சண்டாள யோநியையோ," என்று கூறியிருப்பதிலிருந்து அநுஶயிகளுக்கு நாய் முதலிய பிறவியானது அதற்குரிய சுகதுக்கங்களுடன் கூடியதாய் முக்கியமானதாகவே ஆகிறது. வ்ரீஹ்யாதிஜநநமும் இவ்விதமேதானாகும் என்றேற்படுகிறது. இவ்விதம் (பூர்வபக்ஷம்) ப்ராப்த்தமாகவே (ஸித்தாந்தம்) சொல்லுகிறோம்.

வேறு ஜீவர்களால் அதிஷ்டிதங்களான வ்ரீஹ்யாதிகளில் அநுஶயிகள் ஸம்ஸர்க்கத்தை மட்டும் அடைகின்றனரே யொழிய அவற்றுக்குரிய சுகதுக்கங்களை யடைவதில்லை. முன்னர் சொல்லியதுபோலவேயாம். அதாவது:—அநுஶயிகளுக்குச் சொல்லிய வாயுதூமாதிபாவமானது அவற்றுடன் ஸம்ஶ்லேஷ (ஸம்பந்த) மாத்திரமாகவாவது எவ்விதமோ, இவ்விதமே வ்ரீஹ்யாதிபாவமும் ஜாதிஸ்தாவரங்களுடன் (ஸ்தாவரஜன்மாவையடைந்தவைகளுடன்) ஸம்பந்தம் மட்டுமே தானாகும். இது எவ்விதமெனில்? அதுபோலவே இங்கும் சொல்லப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். அபிலாபத்துக்கு (உபதேசத்துக்கு) அதுபோலிருத்தல் என்பது எத்தகையது எனின்? கர்மங்களின் வியாபாரமில்லாமலே உபதேசம் காணப்படுவதேயாம். ஆகாசம் தொடங்கி ப்ரவர்ஷணமீறாகவுள்ள விடங்களில் ஒருவித கர்மவியாபாரத்தையும் ஶ்ருதி எவ்விதம் கூறவில்லையோ வ்ரீஹ்யாதிப்பிறவியிலும் இவ்

मनुशयिनाम्। यत्र तु सुखदुःखभाक्त्वमभिप्रैति परामृशति तत्र कर्मव्यापारं रमणीयचरणाः कपूयचरणा इति च। अपिच, मुख्येऽनुशयिनां व्रीह्यादिजन्मनि व्रीह्यादिषु लूयमानेषु कण्ड्यमानेषु पच्यमानेषु भक्ष्यमाणेषु च तदभिमानिनोऽनुशयिनः प्रवसेयुः। यो हि जीवो यच्छरीरमभिमन्यते स तस्मिन्पीड्यमाने प्रवसतीति प्रसिद्धम्। तत्र व्रीह्यादिभावाद्रेतःसिग्भावोऽनुशयिनां नाभिलप्येत। अतः संसर्गमात्रमनुशयिनामन्याधिष्ठितेषु व्रीह्यादिषु भवति। एतेन जनेर्मुख्यार्थत्वं प्रतिब्रूयादुपभोगस्थानत्वं च स्थावरभावस्य। नच वयमुपभोगस्थानत्वं स्थावरभावस्यावजानीमहे। भवत्वन्येषां जन्तूनामपुण्यसामर्थ्येन स्थावरभावमुपगतानामेतदुपभोगस्थानम्। चन्द्रमसस्त्ववरोहन्तोऽनुशयिनो न स्थावरभावमुपभुञ्जत इत्याचक्ष्महे॥ २४॥

## अशुद्धमिति चेन्न शब्दात्॥ २५॥

---

விதமே கூறவில்லை. ஆகவே அநுபயிகளுக்கு இவ்விடத்தில் (ஸ்தாவராதிகளில் அவற்றுக்குரிய) சுகதுக்கங்களை யடையும் தன்மைகிடையாது. ஶ்ருதியானது எங்கு சுகதுக்கங்களை யடையும் தன்மையை அபிப்பிராயப்படுகிறதோ அவ்விடத்தில் "ரமணீயசரணா:, கபூயசரணா:" என்றதால் கர்பவியாபாரத்தைச் சொல்லியே இருக்கிறது. மேலும், அநுஶயிகளுக்கு வ்ரீஹ்யாதிஜந்மம் முக்கியமாக இருக்குமானால் வ்ரீஹி முதலியன அறுக்கப்பட்டாலும், வெட்டப்பட்டாலும் பாகம் செய்யப்பட்டாலும், உண்ணப்பட்டாலும் அவற்றில் அபிமானத்தையடைந்த அநுஶயிகள் அவற்றைவிட்டு விலகவேண்டிவரும். எந்த ஜீவன் எந்தச் சரீரத்தில் அபிமானத்தையடைகின்றானோ அச்சரீரம் பீடிக்கப்படுங்கால் அதைவிட்டுவிலகி விடுகிறான் என்பது பிரசித்தமாகவே யிருக்கிறது. அவ்விதமாயின் வ்ரீஹ்யாதி பாவத்தினின்றும் ரேதஸ்ஸேசனம் செய்பவற்றின்ஸம்பந்தம் அநுஶயிகளுக்குச் சொல்லப்படமாட்டாது. ஆகவே அநுஶயிகளுக்கு வேறுஜீவாதிஷ்டிதங்களான வ்ரீஹ்யாதிகளில் ஸம்பந்தப்பட்டுமேதான் என்றேற்படுகிறது. இவ்விதம் சொன்னதைக்கொண்டு (ஜாயந்தே என ஶ்ருதியிற் சொல்லிய) ஜநிக்கு (உத்பத்திக்கு) முக்கியார்த்தத்துவமும், ஸ்தாவரபாவம் சுகதுக்காநுபவஸ்தானமென்பதும் மறுக்கப்பட்டதாகவாகிவிடுகிறது. ஆனால் நாம் ஸ்தாவராதிப்பிராப்தியானது சுகதுக்காதியநுபவஸ்தானமென்பதை முற்றிலும் மறுக்கின்றோமில்லை. தமது பாபகர்மத்தின் சக்தியினால் ஸ்தாவராதிபாவத்தையடைந்த வேறுஜீவர்களுக்கு அது சுகதுக்காநுபவஸ்தானமாகவாகட்டும். சந்திரமண்டலத்தினின்றும் இரங்குகின்ற ஜீவர்கள் ஸ்தாவரபாவத்தை அநுபவிப்பதில்லை என்றுமட்டுமே சொல்லுகிறோம். (24)

## (ஸூ) அசுத்தமிதிசேத் ந சப்தாத் (25)

(ப-ரை) **अशुद्धमितिचेत्** (அசுத்தமிதிசேத்)=பசுஹிம்ஸாதிகளின் ஸம்பந்தமிருப்பதுபற்றி வைதிகமானயாகாதிகள் அசுத்தமாகின்றன என்றாலோ **न** (ந)= அது பொருந்தாது. **शब्दात्** (சப்தாத்)=வைதிகசாஸ்திரமூலம் அது ஏற்படுவதாயிருப்பதே அதன் காரணமாகும். (25) (எ-று)

यत्पुनरुक्तं पशुहिंसादियोगादशुद्धमाध्वरिकं कर्म तस्यानिष्टमपि फलमवकल्पत इत्यतो मुख्यमेवानुशयिनां व्रीह्यादिजन्मास्तु तत्र गौणी कल्पनानर्थिकेति तत्परिहियते । न, शास्त्रहेतुत्वाद्धर्माधर्मविज्ञानस्य । अयं धर्मोऽयमधर्म इति शास्त्रमेव विज्ञाने कारणम् । अतीन्द्रियत्वात्तयोः, अनियतदेशकालनिमित्तत्वाच्च । यस्मिन्देशे काले निमित्ते च यो धर्मोऽनुष्ठीयते स एव देशकालनिमित्तान्तरेष्वधर्मो भवति । तेन शास्त्रादृते धर्माधर्मविषयं विज्ञानं न कस्यचिदस्ति । शास्त्राच्च हिंसानुग्रहाद्यात्मको ज्योतिष्टोमो धर्म इत्यवधारितः स कथमशुद्ध इति शक्यते वक्तुम् । ननु 'न हिंस्यात्सर्वा भूतानि' इति शास्त्रमेव भूतविषयां हिंसामधर्म इत्यवगमयति । बाढम् । उत्सर्गस्तु सः । अपवादः 'अग्नीषोमीयं पशुमालभेत' इति । उत्सर्गापवादयोश्च व्यवस्थितविषयत्वम् । तस्माद्विशुद्धं कर्म वैदिकं, शिष्टैरनुष्ठीयमानत्वादनिन्द्यमानत्वाच्च । तेन न तस्य प्रतिरूपं फलं जातिस्थावर-

---

பாஷ்யம்.—'பசுஹிம்ஸாதிகளின் ஸம்பந்தமிருப்பதிலிருந்து யாகாதியான கர்மமானது அசுத்தமாகிறது, அதற்கு அநிஷ்டமானபலனும் ஏற்படலாம் என்ற இக்காரணத்தால் அநுசயிகளுக்கு வ்ரீஹ்யாதி ஜன்மமானது முக்கியமாகவே இருக்கட்டும், அவ்விஷயத்தில் (ஜாயந்தே என்றுகூறிய ஜநிக்குக்) கௌணார்த்தகல்பனை செய்வது பயனற்றது' எனயாதேன்று சொல்லப்பட்டதோ அதற்குப்பதில்சொல்லப்படுகிறது. தர்மாதர்மத்தைப்பற்றிய அறிவானது சாஸ்திரமூலமேற்படுவது பற்றி (முன்சொன்ன ஆக்ஷேபமானது) பொருந்தாது. இது தர்மம், இது அதர்மம் என்றவிஷயத்தில் சாஸ்திரமேதான் காரணமாகவாகிறது. தர்மாதர்மங்கள் இந்திரியங்களுக்குப் புலனாகாதிருப்பதும், மாறுபட்டதேசகால நிமித்தமுள்ளதாகவிருப்பதுமே அதன் காரணமாகும். அதாவது:—எந்தத்தேசத்தில் எந்தக்காலத்தில் எந்தநிமித்தத்தில் எதுதர்மாக அநுஷ்டிக்கப்படுகிறதோ அதுவே வேறுதேசம், காலம், நிமித்தம் இவற்றில் அதர்மமாக மாறிவிடுகிறது. அதனால் சாஸ்திரத்தைவிடுத்து தர்மாதர்மவிஷயமான அறிவானது ஒருவனுக்கும் உண்டாவதில்லை. ஹிம்ஸாநுக்கிரஹரூபமான ஜ்யோதிஷ்டோமமானது சாஸ்திரத்தினின்றும் தர்மமாக நிஸ்சயிக்கப்படுங்கால் அது அசுத்தமானதென எவ்விதஞ் சொல்லமுடியும்.

சங்கை—"எல்லாவுயிர்களையும் ஹிம்ஸிக்கலாகாது" எனச் சாஸ்திரமே உயிர்களைப்பற்றிய ஹிம்ஸையை அதர்மமெனத் தெரிவிக்கிறது எனின்?

உத்தரம்—ஆம். அது பொதுவிதியாகும். "அக்நீஷோமதேவதையைக் குறித்து பசுவை ஆலம்பநம் செய்தல்வேண்டும்" என்பது விலக்குவிதியாகும். பொதுவிதிவிலக்குவிதி இவற்றுக்கு விஷயவேறுபாடு நிஸ்சிதமாயிருக்கிறது. ஆனதுபற்றி வைதிக (யாகாதி) கர்ம்மானது விசுத்தமாக (எவ்விததோஷமுமற்றதாக) வேயாகிறது. ஸிஷ்டர்களால் அநுஷ்டிக்கப்படுவதும், வெறுக்கத்தகாததாகவிருப்பதுமே அதன் காரணமாகும். அதனால் அந்த வைதிககர்மத்துக்கு ஸ்தாவரப்பிறவியானது முறணபட்ட பலனேயாகும். மேலும் நாய் முதலியவற்றின் பிறவிபோலக்கூட வ்ரீஹ்யாதிப்பிறவி ஆவது பொருந்தாது. அதுவோ கெட்டகர்

त्वम् । नच श्वादिजन्मवदपि व्रीह्यादिजन्म भवितुमर्हति । तद्धि कपूयचरणानधिकृत्योच्यते नैवमिह वैशेषिकः कश्चिदधिकारोऽस्ति । अतश्चन्द्रमण्डलस्खलितानामनुशयिनां व्रीह्यादिसंश्लेषनात्रं तद्भाव इत्युपचर्यते ॥ २५ ॥

रेतःसिग्योगोऽथ ॥ २६ ॥

इतश्च व्रीह्यादिसंश्लेषमात्रं तद्भावो यत्कारणं व्रीह्यादिभावस्यानन्तरमनुशयिनां रेतःसिग्भाव आम्नायते—'यो यो ह्यन्नमत्ति यो रेतः सिञ्चति तद्भूय एव भवति' (छा० ५। १०। ६) इति । नचात्र मुख्यो रेतःसिग्भावः संभवति । चिरजातो हि प्राप्तयौवनो रेतःसिग्भवति । कथमिवानुपचरितं तद्भावमद्यमानान्नानुगतोऽनुशयी प्रतिपद्यते । तत्र तावदवश्यं रेतःसिग्योग एव रेतःसिग्भावोऽभ्युपगन्तव्यः । तद्वद्व्रीह्यादिभावोऽपि व्रीह्यादियोग एवेत्यविरोधः ॥ २६ ॥

---

மஞ்செய்தவர்களைச் சொல்லத்தொடங்கியவிடத்தில் படிக்கப்படுகிறது. இவ்விடத்திலோ தனிப்பட்டதொரு அதிகாரம் (தொடர்பு) காணப்படவில்லை. ஆகவே சந்திரமண்டலத்தினின்றும் நழுவின அநுசயிகளுக்கு வ்ரீஹ்யாதிகளுடன் ஸம்ஶ்லேஷம் (ஒட்டுதல்) மட்டுமேதான் வ்ரீஹ்யாதிபாவமாக உபசாரமுறையாற் சொல்லப்படுகிறது. (25) (எ-று)

(ஸூ) ரேதஸ்ஸிக்யோகோத (26)

(ப-ரை) अथ (அத)=வ்ரீஹ்யாதிபாவத்துக்குப் பின்னர் रेतस्सिग्योगः (ரேதஸ்ஸிக்யோக:)=இந்திரியஸேசனம் செய்யும் ஜீவனுடன் சேர்க்கை சொல்லப்படுகிறது. ஆனதுபற்றியும் வ்ரீஹ்யாதிஸம்ஶ்லேஷம் மட்டும் சொல்லுவதுதான் பொருந்தும். (26) (எ-று)

பாஷ்யம்.—இதனாலும் வ்ரீஹ்யாதிஸம்ஶ்லேஷம் மட்டுமேதான் வ்ரீஹ்யாதிபாவமாக வேற்படும். "எவனெவன் அன்னத்தைச் சாப்பிடுகின்றானோ, எவனெவன் ரேதஸ்ஸேசனத்தைச் செய்கின்றானோ அவன் வடிவமாகவே ஆகிவிடுகிறான்" என ஶ்ருதியானது வ்ரீஹ்யாதிபாவத்துக்குப்பிறகு அநுசயிகளுக்கு ரேதஸ்ஸேசனம் செய்பவற்றுடன் ஸம்ஶ்லேஷத்தைமட்டும் எக்காரணம்பற்றிச் சொல்லுகிறதோ அக்காரணம்பற்றியே என்க. இவ்விடத்தில் ரேதஸ்ஸேசனம் செய்பவற்றின் தன்மை முக்கியமாக ஸம்பவிக்கமுடியாது. ரேதஸ்ஸேசனஞ்செய்பவன் முன்னருண்டானவனாகவும், யௌவப்பருவத்தையடைந்தவனாகவுமன்றோ ஆகிறான். அவனாலுட்கொள்ளப்படும் ஆகாரத்துடன்கலந்த அநுசயியானவன் உபசாரமுறையாற் கூறப்படாத (அதாவது: முக்கியமான) ரேதஸ்ஸேசநம் செய்கின்றவற்றின் தன்மையை எவ்விதமடையமுடியும். அவ்விடத்தில் ரேதஸ்ஸேசநம் செய்பவற்றுடன் சேர்க்கையேதான் ரேதஸ்ஸேசனம் செய்பவற்றின் தன்மையென அவஶ்யம் அங்கீகரிக்கவேண்டும். ஆகவே வ்ரீஹ்யாதிபாவமும் வ்ரீஹ்யாதியுடன் சேர்க்கையேயாவதுபற்றி விரோதமேதுமில்லை. (26) (எ-று)

## योनेः शरीरम् ॥ २७ ॥

अथ रेतःसिग्भावस्यानन्तरं योनौ निषिक्ते रेतसि योनेरधिशरीरमनुशयिनामनुशय फलोपभोगाय जायत इत्याह शास्त्रम्—'तद्य इह रमणीयचरणाः' (छ० ५।१०।७) इत्यादि। तस्मादप्यवगम्यते नावरोहे व्रीह्यादिभावावसरे तच्छरीरमेव सुखदुःखान्वितं भवतीति। तस्माद्व्रीह्यादिसंश्लेषमात्रमनुशयिनां तज्जन्मेति सिद्धम् ॥ २७ ॥

इति श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्य श्रीमच्छङ्करभगवत्पूज्यपादकृतौ शारीरकमीमांसाभाष्ये तृतीयाध्यायस्य प्रथमः पादः ॥ १ ॥



---

## (ஸூ) யோநே: சரீரம் (27)

(ப—ரை) योनेः (யோநே:)=யோநியில் சேர்க்கையேற்பட்டதினின்றும் அநுஶயிகளுக்கு शरीरम् (சரீரம்)=சரீரம் வருவதாகச் சாஸ்திரங்கூறுகிறது. (27)

பாஷ்யம்.—ரேதஸ்ஸேசனம் செய்பவற்றின் தன்மையேற்பட்ட பின்னர் ரேதஸ்ஸானது யோநியில் நிஷிக்தமானபின்னர் யோநியினின்றும் அநுஶயத்தின் பலனை யநுபவிப்பதற்குவேண்டி அநுஶயிகளுக்குச் சரீரம் உண்டாவதாகச் சாஸ்திரமுபதேசிக்கிறது. அதாவது:—"அவர்களுள் எவர் ரமணீய சரணர்களோ" என்றதாதியாம். அதனின்றும் இரங்குங்கால் வ்ரீஹ்யாதிபாவம் சொல்லுங்கால் அந்தச் சரீரமே சுகதுக்கங்களுடன் கூடினதாக ஆவதில்லை என அறியக்கிடக்கிறது. ஆனதுபற்றி அநுஶயிகளுக்கு வ்ரீஹ்யாதிஸம்ஶ்லேஷம் மட்டுமே அத்தகைய பிறவியாகக் கூறப்படுகிறது என்பது ஸித்திக்கிறது. (27) (எ—று)

ஆறுவது அந்யாதிஷ்டிதாதிகரணம் முற்றிற்று.

ஸ்ரீமத் கோவிந்தபகவத்பூஜ்யபாத ரவர்களின் சிஷ்யர்களான ஸ்ரீமத் சங்கர பகவத்பூஜ்யபாத ரவர்களின் கிருதியான சாரீரகமீமாம்ஸா பாஷ்யத்தில் மூன்றாவது அத்தியாயத்தின்

முதலாவது பாதம் முற்றிற்று.



## तृतीयाध्याये द्वितीयः पादः ।

[अत्रपादे तत्त्वंपदार्थपरिशोधनविचारः]

### १ संध्याधिकरणम् । सू-१-६

### संध्ये सृष्टिराह हि ॥ १ ॥

सत्या मिथ्याऽथवा स्वप्नसृष्टिः सत्या श्रुतीरणात् । जाग्रद्देशाविशिष्टत्वादीश्वरेणैव निर्मिता ॥ १ ॥

देशकालाद्यनौचित्याद्बाधितत्वाच्च सा मृषा । अभावोक्तेर्द्वैतमात्रसाम्याज्जीवानुवादतः ॥ २ ॥

---

ओं नमो भगवते वासुदेवाय ॥

## மூன்றுவது அத்தியாயத்தின் இரண்டாவது பாதம்.

### ஸந்த்யாதிகரணம் 1.

(அ-கை) சென்ற முதலாவது பாதத்தில் ப்ரம்ஹாத்மைக்ய க்ஞானமில்லாதவர் இந்த ஸ்தூலதேஹம் விட்டு ஸூக்ஷ்ம தேஹத்துடன் பரலோகஞ் செல்லும் முறையும், அங்கு அவர்களுக்குநேரும் கர்மபலாநுபவமுறையும், பின்னர் அங்கிருந்து திரும்பும் முறையும், திரும்புங்கால் அவர்களுக்குண்டாகும் கஷ்டமுறையும் விளக்கப்பட்டது. இதனின்றும் இம்மைமறுமைப் பயனில் வெறுப்புக் கொண்டு குருமுகாதீன வேதாந்தவிசாரஞ் செய்து அதன் வாயிலாகவுண்டாகும் ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரத்தை யடைதலே எல்லாவற்றுள்ளும் மேலானது என்றும் பெறப்பட்டது. இதுபோழ்து ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரத்துக்கின்றியமையாத தத்பதார்த்தம், த்வம் பதார்த்தம் இவற்றைப் பரிசோதிக்கவேண்டி 41 ஸூத்திரங்களும், 8 அதிகரணங்களுங் கொண்ட இந்த இரண்டாவது பாதமாரம்பிக்கப்படுகிறது. அவற்றுள் 6 ஸூத்திரங்கள் கொண்ட முதலாவது ஸந்த்யாதிகரணத்தில் முதலிலுள்ள பூர்வபக்ஷ ஸூத்திரங்கள் இரண்டில் முதலாவது ஸூத்திரம் பின்வருமாறு—

### (ஸூ) ஸந்த்யே ஸ்ருஷ்டிராஹஹி (1)

(ப-ரை) **सन्ध्ये** (ஸந்த்யே)=ப்ரபோதம் ஸுஷுப்தி இவ்விரண்டுஸ்தானங்களுடையவோ, இஹலோக பரலோக ஸ்தானங்களுடையவோ இடையிலுள்ளது ஸந்த்யம் எனப்படும். அத்தகைய ஸந்த்யமான ஸ்தானத்திலுள்ள **सृष्टिः** (ஸ்ருஷ்டி:)=ஸ்ருஷ்டியானது உண்மையானதேயாகும். **आहहि** (ஆஹஹி)=அவ்விதமே ஸ்ருதி உபதேசிப்பதே அதன் காரணமாகும். (1) (எ-று)

#### வையாஸிக நியாயமாலை.

(க-ரை) ஸ்வப்நத்திலுள்ள ஸ்ருஷ்டியானது உண்மையானதா? அல்லது

अतिक्रान्ते पादे पञ्चाग्निविद्यामुदाहृत्य जीवस्य संसारगतिप्रभेदः प्रपञ्चितः। इदानीं तु तस्यैवावस्थाभेदः प्रपञ्च्यते। इदमामनन्ति—'स यत्र प्रस्वपिति' (बृ० ४।३।९) इत्युपक्रम्य 'न तत्र रथा न रथयोगा न पन्थानो भवन्त्यथ रथान्रथयोगान्पथः सृजते' (बृ० ४।३।१०) इत्यादि। तत्र संशयः—किं प्रबोध इव स्वप्नेऽपि पारमार्थिकी सृष्टिराहोस्विन्मायामयीति। तत्र तावत्प्रतिपद्यते संध्ये तथ्यरूपा सृष्टिरिति। संध्यमिति स्वप्नस्थानमाचष्टे, वेदे प्रयोगदर्शनात् 'संध्यं तृतीयं स्वप्नस्थानम्' (बृ० ४।३।९) इति। द्वयोर्लोकस्थानयोः प्रबोधसंप्रसादस्थानयोर्वा सन्धौ भवतीति संध्यम्। तस्मिन्संध्ये स्थाने तथ्यरूपैव सृष्टिर्भवितुमर्हति। कुतः—यतः प्रमाणभूता श्रुतिरेवमाह 'अथ रथान् रथयोगान्पथः सृजते' (बृ० ४।३।१०) इत्यादि। स हि कर्तेति चोपसंहारादेवमेवावगम्यते ॥ १ ॥

---

பொய்யானதா? என்பது ஸந்தேஹம். ஶ்ருதி சொல்லுவதாலும், ஜாக்கிரத் தேசமானது பொதுவாக விருப்பதாலும், ஈஶ்வரனுலேயே நிர்மாணஞ் செய்யப்பட்டிருப்பதாலும், அது உண்மையானதேயாகும் என்பது பூர்வபக்ஷம். ஸிருஷ்டிக்குரிய தேசகாலாதிகள் உசிதமாக இல்லாததாலும், விழித்தெழுந்ததும் பாதிக்கப்பட்டு விடுவதாலும் அதுபொய்யானதேயாகும். ஸ்வப்நாதிகளுக்கு உண்மையான நிலையில் இல்லாமை சொல்லியிருப்பதும், எல்லாத்வைத பதார்த்தத்துடனும் ஸம்மாக்கி ஜீவனை ஶ்ருதி அநுவாதமுறையிற் கூறியிருப்பதும் மற்றொரு காரணமாகும். (எ—று)

பாஷ்யம்.—சென்ற பாதத்தில் பஞ்சாக்நிவித்தையை உதாஹரித்து ஜீவனுடைய ஸம்ஸாரகதிபேதமானது விரிவாகக் கூறப்பட்டது. இப்பொழுதோ அவனதாகவேயுள்ள அவஸ்தாபேதமானது விரித்துக் கூறப்படுகிறது. "அவன் எப்பொழுது தூங்குகின்றானே" என்றுதொடங்கி "அப்பொழுது தேர்களில்லை, தேரில் கட்டும் மாடுமுதலியன கிடையா. வழிகளில்லை. ஆயினும் பின்னர் தேர்களையும், தேரில்கட்டும் மாடுமுதலியவற்றையும், வழிகளையும் படைத்துக் கொள்ளுகிறான்" என்றது முதலான இதை உபநிடதங்கள் உபதேசிக்கின்றன. அதில் ஸம்சயமுண்டாகிறது. அதாவது:—விழிப்பிற் போலவே ஸ்வப்பினத்திலும் ஸிருஷ்டியானது பாரமார்த்திகமேயா? (உண்மையானதேயா?) அல்லது மாயாமயமானதா? (பொய்யானதா?) என்பதாம். அவற்றுள் முதலிற் கொள்ளப்படுவது யாதெனில்? ஸிருஷ்டியானது உண்மையானதென்பதே யாம். "ஸந்த்யமானது மூன்றாவதான ஸ்வப்னஸ்தானமாகும்" என வேதத்தில் பிரயோகம் காணப்படுவதுபற்றி ஸந்த்யம் என்றபதம் ஸ்வப்னஸ்தானத்தைச் சொல்லுகிறது. இஹலோகபரலோகஸ்தானங்களுடையவோ, அல்லது விழிப்பு ஸுஷுப்தி இவ்விருஸ்தானங்களுடையவுமோ ஸந்தியில் (இடையில்) இருப்பதுபற்றி (ஸ்வப்நம்) ஸந்த்யமாக வாகிறது. அத்தகைய ஸந்த்யமான ஸ்தானத்தில் உள்ள ஸிருஷ்டியானது உண்மையானதாகவாவதுதான் பொருந்தக்கூடியது. ஏன்? எக்காரணம் பற்றி

**निर्मातारं चैके पुत्रादयश्च ॥ २ ॥**

अपिचैके शाखिनोऽस्मिन्नेव संध्ये स्थाने कामानां निर्मातारमात्मानमामनन्ति—'य एष सुप्तेषु जागर्ति कामं कामं पुरुषो निर्मिमाणः' (क० ५ । ८) इति । पुत्रादयश्च तत्र कामा अभिप्रेयन्ते काम्यन्त इति । ननु कामशब्देनेच्छाविशेषा एवोच्येरन् । न । 'शतायुषः पुत्रपौत्रान्वृणीष्व' (क० १ । २३) इति प्रकृत्यान्ते 'कामानां त्वा कामभाजं करोमि' (क० १ । २४) इति प्रकृतेषु तत्र तत्र पुत्रादिषु कामशब्दस्य प्रयुक्तत्वात् । प्राज्ञं चैनं निर्मातारं प्रकरणवाक्यशेषाभ्यां प्रतीमः । प्राज्ञस्य हीदं प्रकरणम् 'अन्यत्र धर्मादन्यत्राधर्मात्' (क० २ । १४) इत्यादि, तद्विषय एव च वाक्यशेषोऽपि—'तदेव शुक्रं तद्ब्रह्म तदेवामृत-

---

ப்ரமாணபூதமான ஸ்ருதியானது "பின்னர் தேர்களையும், தேரில்கட்டப்படுபவனவற்றையும் படைக்கின்றான்" என்றதாதியாலுபதேசிக்கிறதோ அக்காரணம்பற்றியே என்க. "அவனன்றோ கர்த்தா" என முடித்திருப்பதிலிருந்தும் இவ்விதமேதான் அறியக்கிடக்கிறது. (1) (எ—று)

(ஸூ) நிர்மாதாரம்ச ஏகே புத்ராதய: ச (2)

(ப—ரை) **च** (ச)=மேலும், **एके** (ஏகே)=சிலசாகிகள் இதே ஸ்வப்நமான ஸந்தியத்தில் ஆத்மாவை காமங்களை **निर्मातारम्** (நிர்மாதாரம்)=நிர்மாணஞ் செய்பவனுகவும் சொல்லுகின்றனர். அங்கு ஸ்ருதியிலுள்ள "காமம் காமம்" என்பவை **पुत्रादयश्च** (புத்ராதயஸ்ச)=புத்திராதிகளேயாகும். (2) (எ—று)

பாஷ்யம்.—மேலும், சிலசாகைக் காரர்கள் இதே ஸந்த்யமென்ற ஸ்தானத்தில் ஆத்மாவை காமங்களை நிர்மாணஞ்செய்பவனுகச் சொல்லுகின்றனர். அதாவது:—"இந்திரியங்கள் தூங்கினதும் (தமது வேலையைவிட்டு நீங்கினதும்) தனக்கிஷ்டமான அந்தந்தப் பொருளை நிர்மாணஞ் செய்கின்றவனுய் யாதொரு இந்தப் புருஷனிருக்கின்றானே" என்றதாதியாம். விரும்பப்படுவனபற்றி அங்குள்ள **காமம் காமம்** என்றதால் புத்திராதிகளான காமங்களே கொள்ளப்படுகின்றன.

சங்கை— **காம** என்ற சப்தத்தால் இச்சாவிசேஷங்களே அன்றோ சொல்லப்படும். எனின்?

உத்தரம்—அதுபொருந்தாது. "நூறுவயதுள்ள புத்திரபௌத்திரர்களை வரமாகக்கேட்டுக் கொள்" என்று தொடங்கி முடிவில் "உன்னை காமங்களின் (புத்திராதிகளின்) லாபத்தை யடைந்தவனுகச் செய்கிறேன்" என்பதாய் பிரகிருதமான அந்தந்தப் புத்திராதிகளில் காமசப்தமானது பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. ப்ரகரணம் மேலுள்ளவாக்கியம் இவ்விரண்டையுங் கொண்டு இந்தப் ராக்ஞனையே (ஸுஷுப்தாவஸ்தாபன்ன ஜீவஸாக்ஷி ப்ராக்ஞனெனப்படுவன்) நிர்மாதாவாக (ஸிருஷ்டிகர்த்தாவாக) எண்ணுகிறோம். "தர்மத்தை விட வேறுபட்டதும் அதர்மத்தை விடவேறுபட்டதும்" என்றதாதியான இது ப்ராக்ஞனைக் கூறும் ப்ரகரணமல்லவா? "அதுவே சுக்ரமும் (சுத்தமும்) அதுவே ப்ரம்ஹமும்,

मुच्यते । तस्मिल्लोकाः श्रिताः सर्वे तदु नात्येति कश्चन' (क० ५ । ८) इति । प्राज्ञकर्तृका च सृष्टिस्तथ्यरूपा समधिगता जागरिताश्रया तथा स्वप्नाश्रयापि सृष्टिर्भवितुमर्हति । तथाच श्रुतिः—'अथो खल्वाहुर्जागरितदेश एवास्यैष इति यानि ह्येव जाग्रत्पश्यति तानि सुप्तः' (बृ० ४ । ३ । १४) इति स्वप्नजागरितयोः समानन्यायतां श्रावयति । तस्मात्तथ्यरूपैव संध्ये सृष्टिरिति ॥ २ ॥ एवं प्राप्ते प्रत्याह—

मायामात्रं तु कार्त्स्न्येनानभिव्यक्तस्वरूपत्वात् ॥ ३ ॥

तुशब्दः पक्षं व्यावर्तयति । नैतदस्ति यदुक्तं संध्ये सृष्टिः पारमार्थिकीति । मायैव संध्ये सृष्टिर्न परमार्थगन्धोऽप्यस्ति । कुतः—कार्त्स्न्येनानभिव्यक्तस्वरूपत्वात् । नहि का-

---

அதுவே அமிருதமுமாகச் சொல்லப்படுகிறது. எல்லாவுலகங்களும் அதை யாஸ்ரயித்திருக்கின்றன. ஒன்றும் அதைக்கடந்து விடக் கூடியதன்று" என்பதாய் அந்தப் பிராக்ஞவிஷயமாகவே யுள்ள மேலுள்ள வாக்கியமு மிருக்கிறது. ப்ராக்ஞனக்கர்த்தாவாகக் கொண்ட ஜாக்கிரத்தையாஸ்ரயித்த ஸிருஷ்டியானது உண்மையானதாகவாவது எவ்விதமோ அவ்விதமே ஸ்வப்நாஸ்ரயமான ஸிருஷ்டியுமாவது தான் பொருத்தமானது. அவ்விதமே ஶ்ருதியும் (ஸ்வப்நம் என்பது யாதுண்டோ) "இது இவனுடைய ஜாகரிததேசமேதாகுகும் எனச் சிலர் சொல்லுகின்றனர். ஜாகரிததேசத்தில் எவற்றையே பார்க்கின்றானோ அவற்றையே ஸுப்தனும் பார்க்கிறான்" என்றதால் ஸ்வப்ன ஜாகரிதங்கள் ஸமானமான நியாயமுள்ளன என்பதைத் தெரிவிக்கிறது. ஆனதுபற்றி ஸந்த்யத்திலுள்ள ஸிருஷ்டியானது உண்மையான வுருவமுள்ளதே யாகும். (2) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—இவ்விதம் (பூர்வபக்ஷம்) ப்ராப்த்தமாகவே (ஸித்தாந்தம்) சொல்லுகிறார்—

(ஸூ) மாயாமாத்ரந்து கார்த்ஸ்ந்யேந அநபிவ்யக்தஸ்வருபத்வாத் (3)

(ப—ரை) तु (து)=முற்கூறிய பூர்வபக்ஷம் பொருந்தாது. मायामात्रम् (மாயாமாத்ரம்)=ஸந்த்யத்திலுள்ள ஸிருஷ்டியானது மாயையாகமட்டுமே யாகும். ஏன் कार्त्स्न्येन (கார்த்ஸ்ந்யேந)=முற்றிலும் (அதாவது: உண்மைநிலையிலுள்ள வஸ்துக்களின் முழுதர்மங்களுடனும் என்பதாம்.) अनभिव्यक्तस्वरूपत्वात् (அநபிவ்யக்தஸ்வருபத்வாத்)=வெளியான ஸ்வரூபமுள்ளதாக இல்லாதிருப்பதே அதன் காரணமாகும். (3) (எ—று)

பாஷ்யம்.—ஸூத்திரத்திலுள்ள து என்ற சப்தமானது பூர்வபக்ஷத்தை விலக்கிக் காட்டுகிறது. ஸந்த்யத்திலுள்ள ஸிருஷ்டியானது உண்மையானது என யாதொன்று சொல்லப்பட்டதோ இது இல்லை. ஸந்த்யத்திலுள்ள ஸிருஷ்டியானது பொய்யேயொழிய உண்மையின்மணங்கூட அதிலில்லை. ஏன்? முற்றிலும் வெளியான ஸ்வரூபமற்றதாக அது இருப்பதே அதன் காரணமாகும். உண்மை

त्स्न्येन परमार्थवस्तुधर्मेणाभिव्यक्तस्वरूप: स्वप्न:। किं पुनरत्र कार्त्स्न्यमभिप्रेतं देशकालनिमित्तसंपत्तिरबाधश्च। नहि परमार्थवस्तुविषयाणि देशकालनिमित्तान्यबाधश्च स्वप्ने संभाव्यन्ते। न तावत्स्वप्ने रथादीनामुचितो देश: संभवति। नहि संवृते देहदेशे रथादयोऽवकाशं लभेरन्। स्यादेतत्। बहिर्देहात्स्वप्नं द्रक्ष्यति देशान्तरितद्रव्यग्रहणात्। दर्शयति च श्रुतिर्बहिर्देहात्स्वप्नम्—'बहिष्कुलायादमृतश्चरित्वा। स ईयतेऽमृतो यत्र कामम्' (बृ० ४।३।१२) इति स्थितिगतिप्रत्ययभेदश्च नानिष्क्रान्ते जन्तौ सामञ्जस्यमश्नुवीतेति। नेत्युच्यते। नहि सुप्तस्य जन्तो: क्षणमात्रेण योजनशतान्तरितं देशं पर्येतुं विपर्येतुं च तत: सामर्थ्यं संभाव्यते। क्वचिच्च प्रत्यागमनवर्जितं स्वप्नं श्रावयति कुरुष्वहमद्य शयानो निद्रयाऽभिप्लुत: स्वप्ने पञ्चालानभिगतश्चास्मिन्प्रतिबुद्धश्चेति। देहाच्चेदपेयात्पञ्चालेषु प्रतिबुध्येत न तानसावभिगत इति कुरुष्वेव तु प्रतिबुध्यते। येन चायं देहेन देशान्तरमश्नुवानो

---

யான பொருளுக்குள்ள முழுதர்மத்துடனும் அபிவ்யக்தமான (வெளியான) ஸ்வரூபமுள்ளதாக ஸ்வப்நமானது ஆகாதன்றோ? இங்கு ஸூத்திரத்திலுள்ள கார்த்ஸ்ந்யம் (முற்றிலும்) என்றதால் எத்தகைய முழுத்தன்மை விரும்பப்படுகிறது எனின்? தேசம் காலம் நிமித்தம் இவற்றின் நிறைவும், மறுக்கப்படாமையுமேதான் கார்த்ஸ்ந்ய சப்தத்தால் விரும்பப்படுகிறது. உண்மையான பொருளைப்பற்றிய தேசகாலநிமித்தங்களும் பாதமின்மை (மறுப்பின்மை) யும் ஸ்வப்நத்தில் ஸம்பவிக்கமுடியாதன்றோ? ஸ்வப்நத்தில் தேர் முதலியவற்றுக்குப் போதிய தேசமானது முதலில் ஸம்பவிக்கமுடியாது. சுருங்கின தேஹத்துக்குள் தேர் முதலியன இடம் பெறவியலாதனவன்றோ ?

சங்கை—இஃதிருக்கட்டும். வேறு தேசத்திலுள்ள திரவியத்தைப்பற்றிய அநுபவமிருப்பதிலிருந்து தேஹத்துக்கு வெளியிற்றான் ஸ்வப்பினத்தைக் காண்கிறான். ஶ்ருதியும் "அமிருதனான ஆத்மாவானவன் சரீரத்துக்கு வெளியிற்சென்று எதில் இஷ்டமோ அங்கு ஸஞ்சரிக்கிறான்" என்றதால் தேஹத்துக்கு வெளியிலேயே ஸ்வப்பினத்தையுபதேசிக்கிறது. ஸ்திதி, கதி இவற்றைப் பற்றிய அறிவின் மாறுபாடானது ஜந்துவானது வெளியிற் சொல்லாவிடில் பொருத்தமான தன்மையை யடையமாட்டாதன்றோ. எனின் ?

உத்தரம்—அது இல்லையெனச் சொல்லப்படுகிறது. தூங்குகின்ற ஜந்துவுக்கு ஒருக்ஷணத்துக்குள் நூறுயோஜநதூரத்துக்கு மேற்பட்ட தேசத்தை யடையவோ, அங்கிருந்து திரும்பவோ ஸாமர்த்தியம் ஸம்பவிக்கமுடியாதன்றோ? சிலவிடத்தில் "குருதேசத்தில் படுத்துறங்கின நான் நித்திரையினால் கலக்கமுற்று ஸ்வப்நத்தில் பஞ்சாலதேசத்தை யடைந்தவனாய் அதேதேசத்தில் விழித்தெழுந்தேன்" என்பதாய் திருப்புதலற்ற ஸ்வப்பினத்தைச் ஶ்ருதி சொல்லியுமிருக்கிறது. தேஹத்தினின்றும் வெளிப் போந்தானேல் பஞ்சாலதேசத்தில் விழித்தெழுந்திருப்பான். ஆனால் இவன் பஞ்சாலத்தையடையாதவனாய் குருதேசத்திலேயே விழித்தெழுகின்றான். எந்தத் தேஹத்தைக் கொண்டு வேறுதேசத்தை யநுபவிப்பதாக

मन्यते तमन्ये पार्श्वस्थाः शयनदेश एव पश्यन्ति । यथाभूतानि चायं देशान्तराणि स्वप्ने
पश्यति न तानि तथाभूतान्येव भवन्ति । परिधावंश्चेत्पश्येज्जाग्रद्वद्वस्तुभूतमर्थमाकलयेत् ।
दर्शयति च श्रुतिरन्तरेव देहे स्वप्नम्—'स यत्रैतत्स्वप्न्यया चरति' इत्युपक्रम्य 'स्वे शरीरे
यथाकामं परिवर्तते' (बृ० २ । १ । १८) इति । अतश्च श्रुत्युपपत्तिविरोधाद्बहिष्कुलाय-
श्रुतिर्गौणी व्याख्यातव्या बहिरिव कुलायादमृतश्चरित्वेति । यो हि वसन्नपि शरीरे न तेन
प्रयोजनं करोति स बहिरिव शरीराद्भवतीति । स्थितिगतिप्रत्ययभेदोऽप्येवं सति विप्र-
लम्भ एवाभ्युपगन्तव्यः । कालविसंवादोऽपि च स्वप्ने भवति रजन्यां सुप्तो वासरं भारते
वर्षे मन्यते । तथा मुहूर्तमात्रवर्तिनि स्वप्ने कदाचिद्बहुवर्षपूगानतिवाहयति । निमित्तान्यपि च
स्वप्ने न बुद्धये कर्मणे वोचितानि विद्यन्ते । करणोपसंहाराद्धि नास्य रथादिग्रहणाय चक्षु-
रादीनि सन्ति । रथादिनिर्वर्तनेऽपि कुतोऽस्य निमेषमात्रेण सामर्थ्यं दारूणि वा । बाध्यन्ते
चैते रथादयः स्वप्नदृष्टाः प्रबोधे । स्वप्न एव चैते सुलभबाधा भवन्ति । आद्यन्तयोर्व्यभि-

---

எண்ணுகிறானே அவனை அருகிலுள்ள மற்றவர் படுத்த விடத்திலேயே காண்கின்
றனர். இவன் தேசாந்தரங்களை எவ்விதமிருப்பனவாக ஸ்வப்பினத்தில் காண்கின்
றானே அவை அவ்விதங்களாகவே இருப்பதில்லை. ஒரேதாவலாகத்தாவி ஸ்வப்
பினம் காண்பானேல் ஜாக்கிரத்திற்போல பொருள் உண்மையானதென்றே எண்
ணுவான். ஶ்ருதியும் "அவன் எதுபோழ்து ஸ்வப்பினத்திலுள்ளமனோ விருத்தி
யுடன் ஸஞ்சரிக்கின்றானே" என்று தொடங்கி "தனது சரீரத்தில் தனதிஷ்டப்
படி சுற்றுகிறான்" என்றதால் தேஹத்துக்குள்ளேயே ஸ்வப்பினத்தைக் காண்
பிக்கிறது. ஆனதுபற்றியும் ஶ்ருதியுக்தி இவற்றின் விரோதம் வருவதிலிருந்து
'சரீரத்துக்கு வெளியில்' என்று கூறும் ஶ்ருதியானது அமிருதனான ஆத்மா சரீ
ரத்துக்கு வெளியிற் போல ஸஞ்சரித்து என கௌணீ முறையை யொட்டிப் பொ
ருட்படுத்திக் கொள்ளவேண்டுவதாக வாகிறது. எவன் சரீரத்தில் வஸித்தபோ
திலுங்கூட அந்தச் சரீரத்தினால் பயனை யடைவதில்லையோ அவன் சரீரத்துக்கு
வெளியிலுள்ளவன் போலவே ஆகிறான் என்பதாம். இவ்விதமேற்படுங்கால் இருப்
பதாகவும் வெளியில் செல்லுவதாகவுமேற்படும் அறிவின் மாறுபாடானது வெறும்
மயக்கமானதென்றே ஒப்பவேண்டும். காலத்தின் முறன்பாடும் ஸ்வப்பினத்திற்
காணக்கிடக்கிறது. அதாவது: பாரதவர்ஷத்தில் இரவில் தூங்கவாரம்பித்தவன்
பகலாக வெண்ணுகிறான். அதுபோலவே ஒரு முஹூர்த்தம் மட்டுமிருக்கக்கூடிய
ஸ்வப்பினத்தில் வெகு ஆண்டுகளைக் கடக்கிறான். ஸ்வப்பினத்திலுள்ள நிமித்தங்
களுங்கூட ஞானத்துக்கோ, கர்மத்துக்கோ பொருத்தமானவையாக இருப்பதில்லை.
இந்திரியங்களோடுங்கிவிட்டமையின் இவனுக்குந் தேர்முதலியவற்றை யறிவதற்
குப் போதிய கண்முதலியன (அதுபோழ்து) கிடையா. தேர்முதலியவற்றைப்
படைப்பதற்கும் இவனுக்கு ஒருநிமேஷத்துக்குள் ஸாமர்த்தியமோ (திறமையோ)
கட்டைகளோ எங்கிருந்து கிட்டும். ஸ்வப்பினத்திற் காணப்பட்ட இந்தத் தேர்
முதலியன ஜாக்கிரத்தில் பாதிக்கவும் படுகின்றன. மேலும், ஸ்வப்பினத்திலேயே

चारदर्शनात् । रथोऽयमिति हि कदाचित्स्वप्ने निर्धारितः क्षणेन मनुष्यः संपद्यते मनुष्योऽयमिति निर्धारितः क्षणेन वृक्षः। स्पष्टं चाभावं रथादीनां स्वप्ने श्रावयति शास्त्रम्—'न तत्र रथा न रथयोगा न पन्थानो भवन्ति' (बृ० ४। ३। १०) इत्यादि। तस्मान्मायामात्रं स्वप्नदर्शनम् ॥ ३ ॥

**सूचकश्च हि श्रुतेराचक्षते च तद्विदः ॥ ४ ॥**

मायामात्रत्वात्तर्हि न कश्चित्स्वप्ने परमार्थगन्धोऽस्तीति। नेत्युच्यते। सूचकश्च हि स्वप्नो भवति भविष्यतोः साध्वसाधुनोः। तथाहि श्रूयते—'यदा कर्मसु काम्येषु स्त्रियं स्वप्नेषु पश्यति। समृद्धिं तत्र जानीयात्तस्मिन्स्वप्ननिदर्शने' (छा० ५। २। ९) तथा पुरुषं कृष्णं कृष्णदन्तं पश्यति स एनं हन्ति' इत्येवमादिभिः स्वप्नैरचिरजीवित्वमावेद्यत इति श्रावयति। आचक्षते च स्वप्नाध्यायविदः—'कुञ्जरारोहणादीनि स्वप्ने धन்यानि खर-

---

சுளுவில்பாதிக்கவும் படுகின்றன. ஸ்வப்பினகாலத்திலேயே முந்தியும் பிந்தியும் ஒருபொருளுக்குவியபிசாரம் காணப்படுவதே அதன் காரணமாகும். அதாவது:— ஸ்வப்பினத்தில் இது தேர் என வுறுதிசெய்யப்பட்ட பொருள் க்ஷணத்துக்குள் மனிதனாக மாறிவிடுகிறது. மனிதனாகவெண்ணப்பட்டது க்ஷணத்துக்குள் மரமாக மாறிவிடுகிறது. ஸ்வப்பினத்தில் தேர் முதலியவற்றின் இல்லாமையைச் ஶ்ருதி தெளிவாயுபதேசித்து மிருக்கிறது. அதாவது:—"அங்கு தேர்களும் தேரில்கட்டும் காளைமுதலியனவும் வழிகளும் கிடையா" என்றதாதியாம். ஆதல் பற்றி ஸ்வப்பினதர்சனமானது மாயாமாத்திரமே யாகும்.

**(ஸூ) ஸூசக: சஹி ச்ருதே: ஆசக்ஷதே ச தத்வித: (4)**

(ப-ரை) [**स्वप्नः** (ஸ்வப்ன:)=ஸ்வப்பினமானது இனிவரவிருக்கும் நன்மை தீமைகளுக்கு] **सूचकश्चहि** (ஸூசகஶ்சஹி)=அறிகுறியாகவன்றோ இருக்கின்றது. **श्रुतेः** (ஶ்ருதே:)=அத்தகைய ஶ்ருதியிருப்பதும், **तद्विदः** (தத்வித:)=ஸ்வப்பினத்தின் பயனை யறிந்தவர் **आचक्षते च** (ஆசக்ஷதே ச)=அவ்விதம் சொல்லியிருப்பதுமே அதன் காரணமாகும். (4) (எ-று)

பாஷ்யம்.—மாயாமாத்திரமாக (வெறும் மயக்கமாக) மட்டுமிருக்குமானால் அதுபோழ்து ஸ்வப்பினத்தில் உண்மையின் மணமொன்றுமே இருப்பதற்கிடமில்லை எனப் பிராப்தமாகவே அது இல்லையெனச் சொல்லப்படுகிறது. ஸ்வப்பினமானது இனிவரவிருக்கும் நன்மைதீமைகளுக்கு ஸூசகமாக (அறிகுறியாக வன்றோ இருக்கிறது. அவ்விதமே "எதுபோழ்து காம்யகர்மகாலங்களில் ஸ்வப்பினங்களில் ஸ்திரீயைக் காண்கின்றானோ அதுபோழ்து அந்தக் காம்யகர்மத்தின் ஸமிருத்தியை (நிறைவை) அறியவேண்டும்." "அதுபோலவே எவன் கருத்த நிறமுள்ளவனும் கருத்த பல்லுள்ளவனுமான புருஷனைப் பார்க்கின்றானோ அவன் இவனைக் கொல்லுகிறான்" என்ற இம்மாதிரிகளான ஸ்வப்பினங்களால் வெகு காலம் ஜீவித்திருக்கமாட்டான் என்பது அறிவிக்கப்படுவதாகச் ஶ்ருதியும் சொல்

यानादीन्यधन्यानि' इति । मन्त्रदेवताद्रव्यविशेषनिमित्ताश्च केचित्स्वप्नाः सत्यार्थगन्धिनो भवन्तीति मन्यन्ते । तत्रापि भवतु नाम सूच्यमानस्य वस्तुनः सत्यत्वं, सूचकस्य तु स्त्रीदर्शनादेर्भवत्येव वैतथ्यं बाध्यमानत्वादित्यभिप्रायः । तस्मादुपपन्नं स्वप्नस्य मायामात्रत्वम् । यदुक्तम् 'आह हि' इति तदेवं सति भाक्तं व्याख्यातव्यम् । यथा लाङ्गलं गवादीनुद्वहतीति निमित्तमात्रत्वादेवमुच्यते, नतु प्रत्यक्षमेव लाङ्गलं गवादीनुद्वहति । एवं निमित्तमात्रत्वात्सुप्तो रथादीन्सृजते स हि कर्तेति चोच्यते, नतु प्रत्यक्षमेव सुप्तो रथादीन्सृजति । निमित्तत्वं त्वस्य रथादिप्रतिभाननिमित्तमोदत्रासादिदर्शनात्तन्निमित्तभूतयोः सुकृतदुष्कृतयोः कर्तृत्वेनेति वक्तव्यम् ॥

अपिच जागरिते विषयेन्द्रियसंयोगादादित्यादिज्योतिर्व्यतिकराच्चात्मनः स्वयंज्योतिष्ट्वं दुर्विवेचनमितितद्विवेचनाय स्वप्न उपन्यस्तः । तत्र यदि रथादिसृष्टिवचनं श्रुत्या नीयेत तदा स்वयंज्योतिष्ट्वं न निर्णीतं स्यात् । तस्माद्रथाद्यभाववचनं श्रुत्या, रथादिसृष्टि-

---

ஆகிறது. ஸ்வப்பினத்தியாய மறிந்தவர்கள் "ஸ்வப்பினத்தில் யானைமீதேருதல் முதலியன சிறந்ததென்றும் கழுதைமீதேருதல் முதலியன நன்றல்லதென்றும் உபதேசிக்கின்றனர். மந்திரம், தேவதை, திரவியவிசேஷம் இவற்றை நிமித்தமாகக் கொண்டு ஏற்படும் சிலஸ்வப்பினங்கள் உண்மைப் பொருளின் தொடர்புடையன வென்றும் எண்ணுகின்றனர். அவ்விடத்திலுங்கூட ஸூசிப்பிக்கப்படும் பொருள் ஸத்தியமாக (உண்மையிலுள்ளதாக) இருக்கட்டும். அதைக்குறிக்கும் ஸ்திரீதர்சனம் முதலியன பொய்யே யாகும். அவை பாதிக்கப்படுவதே அதன் காரணமுமாகும் என்பது கருத்து. ஆகவே ஸ்வப்பினமானது மாயாமத்திரமென்பது பொருத்தமானதே.

முதல் சூத்திரத்திலுள்ள "ஆஹஹி" என்றதால் எதுசொல்லப்பட்டதோ அது இவ்விதம் பார்க்குங்கால் கௌணமானதென வியாக்கியானஞ்செய்யப்பட்டதாக வாகின்றது. உலகில் கலப்பையானது பசுமுதலியவற்றைச் சுமக்கிறது என்று கூறுமிடத்து நிமித்தமாகமட்டும் இருப்பதுபற்றி இவ்விதம் சொல்லப்படுகிறதே யொழியக் கண்கூடாகக் கலப்பையானது பசுமுதலியவற்றைச் சுமப்பதில்லை என்பது எவ்விதமோ இவ்விதமே நிமித்தமாகமட்டு மிருப்பதுபற்றி ஸுப்தன் தேர்முதலியவற்றைப் படைக்கிறான் என்றும் அவனன்றோ கர்த்தா என்றும் சொல்லப்படுகிறது. ஸுப்தனோ தேர்முதலியவற்றைப் படைப்பதில்லை யென்பது கண்கூடு. இவனுடைய நிமித்தத்தன்மையோ வெனில் தேர்முதலியவற்றின் தோற்றத்தை நிமித்தமாகக் கொண்ட ஸந்தோஷம் பயம் முதலியன காணப்படுதைக் கொண்டு அவற்றுக்கு நிமித்தங்களாக வான புண்ணியபாபங்களுக்குக் கர்த்தாவாக இருப்பது பற்றியே என்று சொல்லவேண்டும். மேலும் ஜாக்கிரத்தில் விஷயங்களுக்கும் இந்திரியங்களுக்கும் சேர்க்கையிருப்பதாலும், சூரியனுதியோரின் ஒளிகலந்து கிடப்பதாலும் ஆத்மாவினது ஸ்வப்ரகாசத்தன்மையானது பகுத்தறியவியலாதது என வெண்ணி அதைப் பாகுபாடுசெய்து காட்டவேண்டி ஸ்வப்பினமானது

वचनं तु भक्त्येति व्याख्येयम्। एतेन निर्माणश्रवणं व्याख्यातम्। यदप्युक्तम्—'प्राज्ञमेनं निर्मातारमामनन्ति' इति। तदप्यसत्। श्रुत्यन्तरे 'स्वयं विहत्य स्वयं निर्माय स्वेन भासा स्वेन ज्योतिषा प्रस्वपिति' (बृ० ४। ३। ९) इति जीवव्यापारश्रवणात्। इहापि 'य एष सुप्तेषु जागर्ति' (क० ५। ८) इति प्रसिद्धानुवादाज्जीव एवायं कामानां निर्माता सङ्कीर्त्यते। तस्य तु वाक्यशेषेण तदेव शुक्रं तद्ब्रह्मेति जीवभावं व्यावर्त्य ब्रह्मभाव उपदिश्यते—'तत्त्वमसि' (छा० ६। ९। ४) इत्यादिवदिति न ब्रह्मप्रकरणं विरुध्यते। नचास्माभिः स्वप्नेऽपि प्राज्ञव्यवहारः प्रतिषिध्यते। तस्य सर्वेश्वरत्वात्सर्वास्ववस्थास्वधिष्ठातृत्वोपपत्तेः। पारमार्थिकस्तु नायं संध्याश्रयः सर्गो वियदादिसर्गवदित्येतावत्प्रतिपाद्यते। नच वियदादिसर्गस्याप्यात्यन्तिकं सत्यत्वमस्ति। प्रतिपादितं हि 'तदनन्यत्वमारम्भणशब्दा-

---

உபந்யஸிக்கப் பட்டது. அவ்விடத்திலுள்ள தேர் முதலியவற்றினுடைய ஸிருஷ்டியாதிவசனமானது முக்கியமாகக் கொள்ளப்படுமாயின், அதுபோழ்து (ஆத்மாவினது)ஸ்வப்ரகாசத்தன்மையானது நிர்ணயிக்கப்படாததாக வாகிவிடும். ஆனதுபற்றித் தேர்முதலியன இல்லை யென்ற வசனமானது முக்கியமானதாகவும், தேர் முதலியவற்றின் ஸிருஷ்டியைச் சொல்லும் வசனமானது கௌணமானதாகவும் உரைசெய்து கொள்ளத்தக்கதாகிறது. இதனால் நிர்மாணஞ் சொல்லும் ஶ்ருதியும் விரிக்கப்பட்டதாக வாகிவிடுகிறது. "ப்ராச்ஞனை இவனை நிர்மாதாவாகச் சொல்லுகின்றனர்" என யாதொன்று சொல்லப்பட்டதோ அதுவும் பயனற்றதேயாகும். வேறுசுருதியில் "தானே விஹத்ய=ஜாக்கிரத்தேஹத்தை எவ்விதவியாபாரமுமற்றதாகச் செய்து, தானே வாஸனையினால் (தேர்முதலியவற்றை) நிர்மாணஞ்செய்து கொண்டு தனது புத்திவிருத்தியினால் ஸ்வரூபசைதன்யத்துடன் தூங்குகிறான்" என்பதாய் ஜீவனது வியாபாரம் காணவும் படுகிறது. இவ்விடத்திலுங் கூட "பிரஸித்தனான யாதொரு இவன் இந்திரியங்கள் தூங்கினதும் விழித்துக்கொண்டிருக்கின்றானோ" என்றதால் ப்ரஸித்தமான பொருளை (ய ஏஷ: என்றதால்) அநுவாதம் செய்திருப்பதிலிருந்து இந்த ஜீவனே காமங்களுக்கு நிர்மாதாவாகச் சொல்லப்படுகிறான். அவனுக்கோ மேலுள்ள வாக்கியத்தினால் "அதுவே சுத்தமானது அது ப்ரம்ஹம்" என்பதாய் ஜீவத்தன்மையை விலக்கி "தத்வமஸி" என்றதாதிபோல ப்ரம்ஹபாவமானது உபதேசிக்கப்படுவதுபற்றி ப்ரம்ஹத்தைச் சொல்லத்தொடங்கிய ப்ரகரணத்துக்கு விரோதம் வருவதற்கு மிடமில்லை. ஸ்வப்நத்தில் ப்ராச்ஞனை பரமாத்மாவினது வியாரமானது நம்மால் மறுக்கப்படுவதுமில்லை. அவர் ஸர்வேஸ்வரனாவது பற்றி எல்லா அவஸ்தைகளிலும் அதிஷ்டாதாவாக (நியந்தாவாக) இருப்பது பொருந்தக்கூடியதாக விருப்பதே அதன் காரணமாகும். ஸந்தியை யாஸ்ரயித்த இந்த ஸிருஷ்டியானது ஆகாசாதி ஸிருஷ்டியானது போல உண்மையானதன்று என்ற இவ்வளவுமட்டுந்தான் கூறப்படுகிறது. மேலும் ஆகாசாதி ஸிருஷ்டிக்கும் ஆத்யந்திகமான (எப்பொழுதும் நிலைத்ததான) ஸத்யத்தன்மையானது கிடையாது "ததநந்யத்வமாரம்பணசப்தாதிப்ய:" என்ற (2 அ. 1

दिभ्यः' (ब्र० सू० २ । १ । १४) इत्यत्र समस्तस्य प्रपञ्चस्य मायामात्रत्वम् । प्राक्तु ब्रह्मात्मत्वदर्शनाद्वियदादिप्रपञ्चो व्यवस्थितरूपो भवति । संध्याश्रयस्तु प्रपञ्चः प्रतिदिनं बाध्यत इति । अतो वैशेषिकमिदं संध्यस्य मायामात्रत्वमुदितम् ॥ ४ ॥

## पराभिध्यानात्तु तिरोहितं ततो ह्यस्य बन्धविपर्ययौ ॥ ५ ॥

अथापि स्यात्परस्यैव तावदात्मनोंऽशो जीवोऽग्नेरिव विस्फुलिङ्गः । तत्रैवं सति यथाग्निविस्फुलिङ्गयोः समाने दहनप्रकाशनशक्ती भवत एवं जीवेश्वरयोरपि ज्ञानैश्वर्यशक्ती, ततश्च जीवस्य ज्ञानैश्वर्यवशात्साङ्कल्पिकी स्वप्ने रथादिसृष्टिर्भविष्यतीति । अत्रोच्यते—सत्यपि जीवेश्वरयोरंशांशिभावे प्रत्यक्षमेव जीवस्येश्वरविपरीतधर्मत्वम् । किं पुनर्जीवस्येश्वरसमानधर्मत्वं नास्त्येव । न नास्त्येव । विद्यमानमपि तत्तिरोहितमविद्यादिव्यवधा-

---

பா. 14 ஸூத்) விடத்தில் எல்லாப்ரபஞ்சமும் மாயாமாத்திரம் என்பது விரிக்கப் பட்டு மிருக்கிறது. ப்ரம்ஹாத்மைகத்வ ஸாக்ஷாத்காரம் வருவதற்கு முன்னரோ ஆகாசாதிப் பிரபஞ்சமானது நிலைத்தவுருவமுள்ளதாக விருக்கிறது. ஸந்தியை யாஸ்ரயித்தப் பிரபஞ்சமோ வெனில் ஒவ்வொருநாளும் பாதிக்கப்படுவதாக விருக் கிறது என்றும். ஆகவே ஸந்தியாஸ்ரயமான பொருளுக்குச் சொல்லிய இந்த மாயாமாத்திரத்தன்மையானது தனிப்படக் கூறியதே யாகும். (4) (எ—று)

## (ஸூ) பராபித்யாநாத்து திரோஹிதம் ததோஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ (5)

(ப—ரை) **तिरोहितम्** (திரோஹிதம்)=அவித்யாதிகளினால் மறைக்கப்பட்ட ஜீவ னுடைய ஈஸ்வரஸமான தர்மத்வமானது **पराभिध्यानात्तु** (பராபித்யாநாத்து)=பரமாத் மாவினது தியானவிஸேஷத்தினால் ஆவிர்ப்பாவத்தையடைகிறது. **ततोहि** (ததோஹி)=அப்பரமேஸ்வரனிடமிருந்தன்றோ **अस्य** (அஸ்ய)=இந்த ஜீவனுக்கு **बन्धविपर्ययौ** (பந்தவிபர்யயௌ)=பந்தமோக்ஷங்கள் ஏற்படுகின்றன. (5) (எ—று)

பாஷ்யம்.—சங்கை—பின்வருமாறு மிருக்கலாம். நெருப்பினது பொறியானது போல ஜீவன் பரமாத்மாவினுடைய அம்சமாகவாகிறான். அது இவ்விதமிருக்குங்கால் நெருப்புக்கும் அதன் பொறிக்கும் தஹநசக்தி பிரகாசநசக்தி இவைகள் எவ்விதம் பொதுவாக விருக்கின்றனவோ இவ்விதமே ஜீவேஸ்வரார்களுக்கும் க்ஞானைஸ்வர்ய சக்திகளாகின்றன. அதனின்றும் ஜீவனுக்குக் ஞானைஸ்வரியவசத்தால் ஸ்வப்நத்தில் ஸங்கல்பமாத்திரத்தால் தேர் முதலியவற்றின் விருஷ்டி உண்டாகலாம். என்கிறோம் எனின்?

உத்தரம்—இவ்விஷயத்தில் பதில் சொல்லப்படுகிறது. ஜீவேஸ்வரார்களுக்கு அம்சாம்சிபாவமானது இருந்தபோதிலும் ஜீவன் ஈஸ்வரனுக்கு மாறான தர்மமுள்ளவனாகவிருப்பது கண்கூடு. ஜீவனுக்கு ஈஸ்வரனுக்கோப்பான தர்மமுள்ளவனாக விருத்தல் கிடையாதோவெனின்? இல்லவே இல்லை என்பதில்லை. இருந்த போதிலுங்கூட அது (ஈஸ்வரனுக்கொப்பான தர்மமுள்ளவனாக விருத்தல்)

नात् । तत्पुनस्तिरोहितं सत्परमेश्वरमभिध्यायतो यतमानस्य जन्तोर्विधूतध्वान्तस्य तिमिरतिरस्कृतेव दृक्शक्तिरौषधवीर्यादीश्वरप्रसादात्संसिद्धस्य कस्यचिदेवाविर्भवति न स्वभावत एव सर्वेषां जन्तूनाम् । कुतः—ततो हीश्वराद्धेतोरस्य जीवस्य बन्धमोक्षौ भवतः। ईश्वरस्वरूपापरिज्ञानाद्बन्धस्तत्स्वरूपपरिज्ञानात्तु मोक्षः । तथा च श्रुतिः—'ज्ञात्वा देवं सर्वपाशापहानिः क्षीणैः क्लेशैर्जन्ममृत्युप्रहाणिः । तस्याभिध्यानात्तृतीयं देहभेदे विश्वैश्वर्यं केवल आप्तकामः' (श्वे० १ । ११) इत्येवमाद्या ॥ ५ ॥

**देहयोगाद्वा सोऽपि ॥ ६ ॥**

कस्मात्पुनर्जीवः परमात्मांश एव संस्तिरस्कृतज्ञानैश्वर्यो भवति । युक्तं तु ज्ञानैश्वर्ययोरतिरस्कृतत्वं विस्फुलिङ्गस्येव दहनप्रकाशनयोरिति । उच्यते । सत्यमेवैतत् । सोऽपि

---

அவித்யாதிகளாகிற பரைவால் மறைக்கப்பட்டிருக்கிறது. அது மறைக்கப்பட்டதா யிருந்துகொண்டு பரமேஸ்வரனுரை த்யானஞ்செய்து முயற்சிக்கின்றவனும் இருள்நீங்கினவனும் ஈஸ்வரப்ரஸாதத்தால் ஸித்திபெறுபவனுமான ஒரு ஜந்துவுக்கே ஓஷதியின் வீரியத்தை முன்னிட்டுத் திமிரமென்ற ரோகத்தால் மறைக்கப்பட்ட பார்க்கும் சக்தியானது போலத்திரும்பவு முதயமாகின்றதே யொழிய இயற்கையாகவே எல்லாஜந்துக்களுக்கும் உண்டாவதில்லை. ஏன்? அந்த ஈஸ்வர நிமித்தமாகவேயன்றோ இந்த ஜீவனுக்குப் பந்தமோக்ஷங்கள் ஏற்படுகின்றன. ஈஸ்வரனுடைய ஸ்வரூபத்தையறியாமையால் பந்தமும், அவரது ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவதால் மோக்ஷமுமோ உண்டாகிறது. அவ்விதமே "ஈஸ்வரனை யறிந்ததும் ஸர்வபாசங்களுக்கும் நாசமுண்டாகிறது. க்லேசங்கள் (அவித்தை, அஸ்மிதா, ராகம், துவேஷம், அபிநிவேசம் இவ்வைந்தும் க்லேஸமெனப்படும்.) தேய்ந்ததும் ஜனன மரணங்களுக்கு ஹானியுண்டாகிறது. பரமேஸ்வரனுடைய அஹங்கிரஹோபாஸனத்தால் மூன்றாவதான (அதாவது: ஸர்வபாசப ஹானியையும், ஜந்மமிருத்யு ஹானியையும்விட மூன்றாவதான என்று கருத்து.) விஸ்வைஸ்வர்யமானது (அணிமாதிஸித்தியானது) ஏற்படுகிறது. இந்த மனித தேஹம் போனதும் த்வைதமற்றதும், ஆப்தகாமமுமான ஆநந்தரூபமாகவாகிறான்" என்ற இம்மாதிரியான ஸ்ருதியுமிருக்கிறது. (5) (எ—று)

## (ஸூ) தேஹயோகாத்வா ஸோபி (6)

(ப—ரை) **सोपि** (ஸோபி)=அந்த க்ஞானைஸ்வர்ய திரோபாவமும். **देहयोगाद्वा** (தேஹயோகாத்வா)=தேஹத்தின் சேர்க்கையாலேயே ஏற்படுகிறது. (6) (எ—று)

**பாஷ்யம்.**—ஜீவன் பரமாத்மாவின் அம்சமாகவே இருந்துகொண்டு மறைக்கப்பட்ட க்ஞானைஸ்வர்யமுள்ளவனக எவ்விதமாகக் கூடும். நெருப்புப்பொறியினுடைய தஹநப்ரகாசன சக்திகளுக்குப்போல(இவனது)க்ஞானைஸ்வர்யங்களுக்கு மறைக்கப்படாதிருத்தல் சொல்லுவது தான் பொருந்தும் எனின்? பதில் சொல்லப்படுகிறது. இஃதுண்மைதான். ஜீவனுடைய அந்த க்ஞானைஸ்வர்யதிரோபாவ

तु जीवस्य ज्ञानैश्वर्यतिरोभावो देहयोगात्=देहेन्द्रियमनोबुद्धिविषयवेदनादियोगाद्भवति । अस्ति चात्रोपमा यथाग्नेर्दहनप्रकाशनसंपन्नस्याप्यरणिगतस्य दहनप्रकाशने तिरोहिते भवतो यथा वा भस्मच्छन्नस्य । एवमविद्याप्रत्युपस्थापितनामरूपकृतदेहाद्युपाधियोगात्तदविवेकभ्रमकृतो जीवस्य ज्ञानैश्वर्यतिरोभावः । वाशब्दो जीवेश्वरयोरन्यत्वाशङ्काव्यावृत्त्यर्थः । नन्वन्य एव जीव ईश्वरादस्तु तिरस्कृतज्ञानैश्वर्यत्वात्किं देहयोगकल्पनया । नेत्युच्यते । नह्यन्यत्वं जीवस्येश्वरादुपपद्यते 'सेयं देवतैक्षत' (छा० ६।३।२) इत्युपक्रम्य 'अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य' (छा० ६।३।२) इत्यात्मशब्देन जीवस्य परामर्शात् । 'तत्सत्यं स आत्मा तत्त्वमसि श्वेतकेतो' (छा० ६।९।४) इति च जीवायोपदिशतीश्वरात्मत्वम् । अतोऽनन्य एवेश्वराज्जीवः सन्देहयोगात्तिरोहितज्ञानैश्वर्यो भवति । अतश्च न साङ्कल्पिकी जीवस्य स्वप्ने रथादिसृष्टिर्घटते । यदि च साङ्कल्पिकी स्वप्ने रथादिसृष्टिः स्यान्नैवानिष्टं

---

மானது (மறைவானது) தேஹயோகத்தால்=தேஹம் இந்திரியம் மனம் புத்தி விஷயாநுபவம் இவைமுதலியவற்றின் சேர்க்கையாலேற்படுகிறது. இவ்விஷயத்தில் திருஷ்டாந்தமுமிருக்கிறது. தஹநப்ரகாசனத்துடன் கூடினதாயினுங் கூட அரணிக் கட்டையையடைந்த நெருப்புக்குத் தஹநப்ரகாசனங்கள் திரோஹிதங்களாக (மறைக்கப்பட்டனவாக) வாவது எவ்விதமோ, சாம்பலில் மறைந்த நெருப்புக்கு எவ்விதமோ, இவ்விதமே ஜீவனுடைய க்ஞானைஸ்வர்ய திரோபாவமானது அவித்தையினால் உண்டுபண்ணப்பட்ட நாமரூபங்களாற் செய்யப்பட்ட தேஹாதியாகிற உபாதியின் சேர்க்கையினின்றும் ஏற்பட்ட அவற்றின் அவிவேகப்ரமத்தாற் செய்யப்பட்டதாக ஏற்படுகிறது. ஸூத்திரத்திலுள்ள வா என்ற சப்தமானது ஜீவேஸ்வரர்கள் வேறுபட்டவர்கள் என்ற ஆசங்கையை மறுத்துக்கூறுகின்றது.

சங்கை—"மறைக்கப்பட்ட க்ஞானைஸ்வர்யமுள்ளவனாக விருப்பதுபற்றி ஈஸ்வரனைக் காட்டிலும் வேறுபட்டவனாகவே (ஜீவன்) இருக்கட்டும். தேஹயோகத்தின் கல்பனை எற்றுக்கு எனின்?

உத்தரம்—அது பொருந்தாதெனச் சொல்லப்படுகிறது. ஜீவனுக்கு ஈஸ்வரனைக் காட்டிலும் வேறுபட்டிருத்தல் பொருந்தமாட்டாது. "அந்த இந்த தேவதை ஆலோசித்தது" என்று தொடங்கி "இந்த ஜீவனாகிற ஆத்மாவினால் (ஸ்வரூபத்தினால்) உள்ளில் பிரவேசித்து" என்றதால் ஆத்மா என்ற சப்தத்தால் ஜீவனைச் சொல்லியிருப்பதே அதன் காரணமாகும். "அது ஸத்யம், அது ஆத்மா, அதாகநீ இருக்கின்றாய் ஸ்வேதகேதோ!" என்றும் ஜீவனையும் பொருட்டு ஈஸ்வராத்மத்வத்தைச் சாஸ்திரம் உபதேசிக்கிறது. ஆனதுபற்றி ஜீவன் ஈஸ்வரனைவிட வேறுபடாதவனாகவே இருந்து கொண்டு தேஹயோகத்தை முன்னிட்டுத் திரோஹிதமான க்ஞானைஸ்வர்ய முள்ளவனாக வாகிறான். அதனாலும் ஜீவனுக்கு ஸ்வப்பனத்தில் ஸங்கல்பமூலம் ஏற்படும் தேர்முதலியவற்றின் ஸிருஷ்டி சொல்லுவது பொருந்தாது. ஸ்வப்பனத்தில் ஸங்கல்பமூலம் தேர் முதலியவற்றின் ஸிருஷ்டியா

कश्चित्स्वप्नं पश्येत् । नहि कश्चिदनिष्टं सङ्कल्पयते । यत्पुनरुक्तं जागरितदेशश्रुतिः स्वप्नस्य सत्यत्वं स्थापयतीति न तत्साम्यवचनं सत्यत्वाभिप्रायं स्वयंज्योतिष्ट्वविरोधात् । श्रुत्यैव च स्वप्ने रथाद्यभावस्य दर्शितत्वात् । जागरितप्रभववासनानिर्मितत्वात्तु स्वप्नस्य तत्तुल्यनिर्भासत्वाभिप्रायं तत् । तस्मादुपपन्नं स्वप्नस्य मायामात्रत्वम् ॥ ६ ॥

## २ तदभावाधिकरणम् । सू० ७-८

## तदभावो नाडीषु तच्छ्रुतेरात्मनि च ॥ ७ ॥

नाडीपुरीतद्ब्रह्माणि विकल्प्यन्ते सुषुप्तये । समुच्चितानि वैकार्थ्याद्विकल्प्यन्ते यवादिवत् ॥ १ ॥

समुचितानि नाडीभिरुपसृप्य पुरीतति । हृत्स्थे ब्रह्मणि यात्यैक्यं विकल्पेत्वष्टदोषता ॥ २ ॥

---

னது இருக்குமாயின் ஒருவனும் அநிஷ்டமான ஸ்வப்பிநத்தைப் பார்க்கமாட்டான். ஒருவனும் அநிஷ்டத்தை ஸங்கல்பிக்கமாட்டானன்றே? ஜாகரித தேச ஶ்ருதியானது ஸ்வப்பிநத்துக்கு ஸத்யத்வத்தை ஸ்தாபிக்கிறது என யாதொன்று சொல்லப்பட்டதோ அந்த ஸாம்யம் கூறும் வசனமானது ஸத்யத்வத்தைக் கருத்திற் கொண்டதன்று. (அங்ஙனமாயின்) ஸ்வயம் ஜ்யோதிஸ் தன்மை சொன்னது விருத்தமாக வாகிவிடும். ஶ்ருதியினுலேயே ஸ்வப்பிநத்தில் தேர் முதலியவற்றினுடைய அபாவமானது காண்பிக்கப்பட்டு மிருக்கிறது. ஸ்வப்பிநமானது ஜாகரிதத்திலுண்டான வாஸனையினு லுண்டுபண்ணப்பட்டிருப்பதால் அதற்கொப்பான தோற்றமுள்ளது என்ற கருத்துக் கொண்டு அவ்வசனமேற்பட்டது. ஆனது பற்றி ஸ்வப்பிநத்துக்கு மாயாமாத்திரத்தன்மையானது பொருத்தமுள்ளதாக வாகிவிடுகிறது. (6) (எ-று)

ஒன்ருவது ஸந்த்யாதிகரணம் முற்றிற்று.



### ததபாவாதிகரணம் 2.

(அ-கை) வெளியிலுள்ள இந்திரியங்களின் உபரமம் (ஓய்வு) ஏற்பட்டதும் மனத்திலுள்ள வாஸனையினுல் வெளிப்போந்த அவித்தையின் விலாஸவடிவமான ஸ்வப்பிநத்தை ஸாக்ஷியான ஆத்மாவுக்கு ஸ்வயம்ஜ்யோதிஷ்ட்வம் சொல்லுவதற்குவேண்டி விசாரித்து ஸ்வப்பிநாவஸ்தையை யடைந்த மனத்தின் லயரூபமான ஸுஷுப்தியை விசாரிக்கவேண்டி இரண்டு சூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணம் ஆரம்பிக்கப் படுகிறது. அதன் முதல் சூத்திரம் பின்வருமாறு—

**(ஸூ) ததபாவோ நாடீஷு தத்சுருதே: ஆத்மநி ச (7)**

(ப-ரை) **तदभावः** (ததபாவ:)=ஸ்வப்பிநதர்சனத்தின் அபாவமானது அதாவது:—ஸுஷுப்தமானது **नाडीषु आत्मनि च** (நாடீஷு ஆத்மநி ச)=நாடிகளிலும் ஆத்மாவிலும் ஸமுச்சிதமாகவே (ஒன்று சேர்ந்ததாகவே) ஏற்படுகிறது. ஏன்? **तच्छ्रुतेः** (தத்சுருதே:)=அவ்விதஸமுச்சயத்தைக் கூறும் சுருதியிருப்பதே அதன் காரணமாகும். (1) (எ-று)

## வையாஸிக நியாயமாலை.

(க-வது) ஸுஷுப்தியின் பொருட்டு ஏனைய நாடிகளும், புரீதத்தும், ப்ரம்ஹமும் விகல்பிக்கப்படுகின்றனவா? ஸமுச்சிதங்களாக வாகின்றனவா? என்பது ஸந்தேஹம். (அதாவது:—நாடிகளிலாவது, புரீதத்திலாவது, ப்ரம்ஹத்திலாவது ஸுஷுப்தி யேற்படுகின்றதா? அல்லது நாடிகள் வழியாகப் புரீதத்தில் சென்று பிறகு ப்ரம்ஹத்தில் ஸுஷுப்தி யேற்படுகிறதா? என்பதாம்.) நாடிகளும், புரீதத்தும், ப்ரம்ஹமும் ஒரேவிதமான ஸுஷுப்தி ரூபமான பயனுள்ளன பற்றி யவம் முதலியது போல விகல்பிதங்களே யாகும் என்பது பூர்வபக்ஷம். நாடிகள் வழியாகச் சென்று புரீதத்திலும் ஹிருதயத்திலுள்ள ப்ரம்ஹத்தினிடத்திலும் ஐக்கியத்தை யடைகிறான். ஆனதுபற்றி நாடிகள், புரீதத், ப்ரம்ஹம் இவைகள் ஸமுச்சிதங்களேயாகும். விகல்பஞ்சொன்னாலோ எட்டு விதங்களான தோஷங்கள் வரத்தெரியும். (எ-று)

குறிப்பு—"வ்ரீஹிபிர்யஜேத, யவைர் யஜேத வ்ரீஹிகளைக் கொண்டாவது, யவங்களைக் கொண்டாவது புரோடாசந்தயார்செய்து யாகஞ்செய்தல் வேண்டும்" என்ற விடத்தில் எட்டு தோஷங்களுள்ள விகல்பமானது வேறுவழியில்லாது அங்கீகரிக்கப் பட்டிருக்கிறது. அவ்வெட்டுதோஷங்களாவன—முதலிலுள்ள வ்ரீஹியைக்கொண்டு புரோடாசந் தயார் செய்யத்தொடங்குங்கால் (1) யவைஃ (யவங்களால்) என்ற சாஸ்திரத்துக்குள்ள ப்ராமாண்யத்தை விடவேண்டிவருகிறது. (2) அதேசாஸ்திரத்துக்கு அப்ராமாண்யத்தைக் கல்பிக்கவேண்டியும் வருகிறது. (3) இரண்டாவதான யவங்களைக் கொண்டு புரோடாசந் தயார் செய்யத் தொடங்குங்கால் வ்ரீஹியின் அநுஷ்டானகாலத்தில் விடப்பட்ட யவசாஸ்திரத்தின் ப்ராமாண்யத்தை யங்கீகரித்தல், (4)யாதொரு அப்ராமாண்யமானது ஒப்பப்பட்டதோ அதை விடுதல் என இவ்விதம் யவசாஸ்திரத்தில் நான்கு தோஷங்கள் நேருகின்றன. இவ்விதமல்லாது முதலில் யவங்களைக் கொண்டு புரோடாசந் தயார்செய்யத் தொடங்கினால் (1) வ்ரீஹிபி: (வ்ரீஹிகளினால்) என்ற சாஸ்திரத்துக்குள்ள தனது பொருளை அநுஷ்டிக்கும்படி செய்தல் என்ற ப்ராமாண்யத்தை விடவேண்டி வருதல், (2) தனதுபொருளை அநுஷ்டிக்கும்படி செய்யாதிருத்தல் என்ற அப்ராமாண்யத்தைக் கல்பித்தல் (3) முதலாவதான வ்ரீஹிகளைக் கொண்டு புரோடாசந் தயார் செய்யுங்கால் யவத்தின் அநுஷ்டானகாலத்தில் விடப்பட்ட ப்ராமாண்யத்தை யங்கீகரித்தல் (4) ஒப்பப்பட்ட அப்ராமாண்யத்தைப் பரித்யாகஞ் செய்தல் என வ்ரீஹிசாஸ்திரத்தில் நான்குதோஷங்கள் நேருகின்றன. ஆகவே சாஸ்திர மூலமேற்படும் விகல்பஸ்தலத்தில் முற்கூறிய 8தோஷங்கள் ஸம்பவிப்பதில் வ்ரீஹியவ சாஸ்திரவிஷயத்தில் வேறுவழியில்லாது மட்டும் அந்த விகல்பம் ஒப்பப்படுவதால் இந்த ஸுஷுப்தி விஷயத்தில் நாடிகளிலோ, புரீதத்திலோ, ப்ரம்ஹத்திலோ என விகல்பத்தையங்கீகரித்தால் முற்கூறிய 8 தோஷங்களும் வருவதாலும் நாடி வழியாகப் புரீதத் என்ற சிறு நாடியில் சென்று அங்கிருந்து ப்ரம்ஹத்தினிடத்தில் ஐக்கியத்தையடைகிறான் என ஸமுச்சயத்தைத்தான் அங்கீகரிக்க வேண்டும். இந்த சமுச்சயத்தில் முற்கூறியபடி எவ்வித தோஷமும் வருவதில்லை. (எ-று)

शुद्धब्रह्मस्वरूपप्रतिपादनाय चेति निरवद्यम्। द्वौ चैतौ प्रतिषेधौ यथासङ्ख्यन्यायेन द्वे अपि मूर्तामूर्ते प्रतिषेधतः। यद्वा पूर्वः प्रतिषेधो भूतराशिं प्रतिषेधत्युत्तरो वासनाराशिम्। अथवा 'नेति नेति' (बृ० २। ३। ६) इति वीप्सेयम्, इतीति यावत्किंचिदुत्प्रेक्ष्यते तत्सर्वं न भवतीत्यर्थः। परिगणितप्रतिषेधे हि क्रियमाणे यदि नैतद्ब्रह्म किमन्यद्ब्रह्म भवेदिति जिज्ञासा स्यात्। वीप्सायां तु सत्यां समस्तस्य विषयजातस्य प्रतिषेधादविषयः प्रत्यगात्मा ब्रह्मेति जिज्ञासा निवर्तते। तस्मात्प्रपञ्चमेव ब्रह्मणि कल्पितं प्रतिषेधति परिशिनष्टि ब्रह्मेति निर्णयः॥

इतश्चैष एव निर्णयः। यतस्ततः प्रतिषेधाद्भूयो ब्रवीति 'अन्यत्परमस्ति' (बृ० २। ३। ६) इति। अभावावसाने हि प्रतिषेधे क्रियमाणे किमन्यत्परमस्तीति ब्रूयात्। तत्रैषाक्षरयोजना—नेति नेतीति ब्रह्मादिश्य तमेवादेशं पुनर्निर्वक्ति। नेति नेतीत्यस्य कोऽर्थः। नह्येतस्माद्ब्रह्मणो व्यतिरिक्तमस्तीत्यतो नेति नेतीत्युच्यते न पुनः स्वयमेव नास्ती-

---

மறுப்புகளும் யதா ஸங்க்யநியாயத்தால் (முறையே பொருள் கொள்ளல் என்ற யுக்தியால்) மூர்த்தா மூர்த்தங்களான இரண்டு ரூபங்களேயுமே மறுக்கின்றன.

அல்லது முதலிலுள்ள (நேதி என்ற) மறுப்பானது பூதக்கூட்டத்தை மறுக்கின்றது. அதற்கடுத்துள்ள (நேதி என்ற) மறுப்பானது வாஸனுராசியை மறுக்கின்றது. அல்லது நேதி நேதி என்ற இது வீப்ஸையாகும். (இரண்டு தடவை கூறப்பட்டதாகவாகும்) ஆகவே இந்த இந்த மாதிரியாக எவ்வளவு பொருள்கள் உத்ப்ரேக்ஷிக்கப்படுகின்றனவோ, அவையாவும் (ப்ரம்ஹத்தினிடத்தில்) இல்லே என்பது அதன் பொருள். குறிப்பான சிலவற்றின் மறுப்புமட்டும் செய்யப்படுமாயின் இது ப்ரம்ஹமாக இல்லாவிடில் வேறு எது ப்ரம்ஹமாகவாகும் என்ற சங்கை நிகழும். வீப்ஸை செய்யப்பட்டாலோ எல்லா விஷயஸமூஹமும் மறுக்கப்படுவதால் எவ்வித விஷயமுமற்ற ப்ரத்யகாத்மாவானது ப்ரம்ஹம் என்று ஆகி முற்கூறிய சங்கை நிவிருத்தியை யடைகின்றது. ஆகையினுல் ப்ரம்ஹத்தினிடத்தில் கற்பிக்கப்பட்ட ப்ரபஞ்சத்தையே மறுத்து ப்ரம்ஹத்தை மிச்சப்படுத்துகின்றது என்ற நிர்ணயமுண்டாகின்றது. எக்காரணம்பற்றி அத்தகைய மறுப்புக்குப் பின்னர் ஶ்ருதியானது "மூர்த்தா மூர்த்தங்களேக் காட்டிலும் வேறுபட்ட பரமான பொருள் இருக்கின்றது" என உபதேசிக்கின்றதோ அக்காரணம்பற்றியும் முற்கூறிய நிர்ணயமே உண்டாகின்றது. அபாவத்தை முடிவிலுள்ளதாக மறுப்புச் செய்யப்படுமானுல் வேறுன பரப்பொருளிருப்பதாக எவ்விதமுபதேசிக்கக்கூடும். நேதி நேதி என்றவிடத்திலுள்ள அக்ஷரங்களேப் பொருத்திப் பொருள் கொள்ளும் முறை பின்வருமாறு—நேதி நேதி (இது இல்லே இது இல்லே) என ப்ரம்ஹத்தை உபதேசித்து அதே உபதேசத்தைத் திரும்பவும் விளக்குகின்றது. நேதி நேதி (இதில்லே இதில்லே) என்ற இதன்பொருள் யாதெனின்? கூறுவாம். இந்த ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட பொருள் இல்லே என்ற இக்காரணத்தால் இது

स्यर्थः । तच्च दर्शयत्यन्यत्परमप्रतिषिद्धं ब्रह्मास्तीति । यदा पुनरेवमक्षराणि योज्यन्ते नह्येतस्मादिति नेति (नेति) नहि प्रपञ्चप्रतिषेधरूपादादेशनादन्यत्परमादेशनं ब्रह्मणोऽस्तीति । तदा 'ततो ब्रवीति च भूय' इत्येतन्नामधेयविषयं योजनितव्यम् । 'अथ नामधेयम् सत्यस्य सत्यमिति प्राणा वै सत्यं तेषामेष सत्यम्' (बृ० २।३।६) इति हि ब्रवीतीति । तच्च ब्रह्मावसाने प्रतिषेधे समञ्जसं भवति । अभावावसाने तु प्रतिषेधे किं सत्यस्य सत्यमित्युच्येत । तस्माद्ब्रह्मावसानोऽयं प्रतिषेधो नाभावावसान इत्यध्यवस्यामः ॥

## तदव्यक्तमाह हि ॥ २३ ॥

यत्प्रतिषिद्धात्प्रपञ्चजातादन्यत्परं ब्रह्म तदस्ति चेत्कस्मान्न गृह्यत इति । उच्यते— तदव्यक्तमनिन्द्रियग्राह्यं सर्वदृश्यसाक्षित्वात् । आह ह्येवं श्रुतिः—'न चक्षुषा गृह्यते नापि

---

இல்லை இது இல்லை என உபதேசிக்கப்படுகிறதேயொழிய ப்ரம்ஹமே இல்லை என்பது அதன் பொருளல்ல. அதையும் சுருதியானது 'வேறுபட்டதும் மறுக்கப்படாததுமான ப்ரம்ஹமிருக்கின்றது' என உபதேசிக்கின்றது. நஹ்யே தஸ்மாதிதி நேதி என்றவிடத்திலுள்ள அக்ஷரங்கள் எதுபோழ்து பின்வருமாறு பொருத்திப் பொருள் கொள்ளப்படுகின்றனவோ அதாவது:—ப்ரபஞ்சத்தை நிஷேதஞ்செய்தல் ரூபமான உபதேசத்தைக்காட்டிலும் வேறுபட்ட மேலான உபதேசமுறை ப்ரம்ஹத்துக்கு இல்லை என்பதாம். அதுபோழ்து ததோப்ரவீதி சபூய: என்ற ஸூத்திரபாகமானது நாயதேயத்தை (பெயரை) விஷயமாகக் கொண்டதெனப் பொருள் கொள்ளவேண்டுவதாகவாகிறது. ஶ்ருதியில் "ஸத்யத்துக்கு ஸத்யமென்பது ப்ரம்ஹத்தின் நாமதேயம் (பெயர்)" என்று தொடங்கி "ப்ராணன்களே ஸத்யமாகும் அந்தப்ராணன்களுக்கு இது ஸத்யமாகும்" என்றல்லவோ உபதேசங்காண்கின்றது. அந்த நாமோபதேசமும் ப்ரம்ஹத்தை முடிவாகக்கொண்ட மறுப்பு சொல்லப்பட்டால் தான் பொருத்தமுள்ளதாகவாகும். அபாவத்தை முடிவில் கொண்ட மறுப்பு சொல்லப்படுமாயின் ஸத்யத்துக்கு ஸத்யம் என எது சொல்லப்படும். ஆகவே இந்த மறுப்பானது ப்ரம்ஹத்தை முடிவில் கொண்டதேயல்லாது அபாவத்தை முடிவிற் கொண்டதன்று என உறுதியாகத் தீர்மானிக்கிறோம். (22)

## (ஸூ) ததவ்யக்த மாஹ ஹி (23)

(ப—ரை) **तत्** **(தத்)**=அந்த ப்ரம்ஹமானது **अव्यक्तम्** (அவ்யக்தம்)=இந்திரியங்களுக்குப் புலப்படாதது. **हि** **(ஹி)**=யாது காரணத்தால் **आह** (ஆஹ)=இவ்விதமே ஶ்ருதியுபதேசிக்கின்றதோ அக்காரணத்தைப்பற்றியே என்க. (23) (எ—று)

பாஷ்யம்.—ப்ரதிஷித்தமான (மறுக்கப்பட்ட) ப்ரபஞ்ச ஸமூஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதான யாதொரு பரம் ப்ரம்ஹமுண்டோ அது இருக்குமாயின் ஏன் அறியப்படுவதில்லை எனின்? (பதில்) சொல்லப்படுகிறது—அது அவ்யக்தமானது=இந்திரியங்களாற் கிரஹிக்கக்கூடியதன்று. எல்லா த்ருஶ்யங்களுக்கும் ஸாக்ஷியாகவிருப்பதே அதன்காரணமாகும். இவ்விதமேயன்றோ "கண்ணினால் கிர

वाचा नान्यैर्देवैस्तपसा कर्मणा वा' (मुण्ड० ३।१।८) 'स एष नेति नेत्यात्माऽगृह्यो नहि गृह्यते' (बृ० ३।९।२६) 'यत्तदद्रेश्यमग्राह्यम्' (मुण्ड० १।१।६) 'यदा ह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयने' (तै० २।७।१) इत्याद्या। स्मृतिरपि—'अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते' (भ० गी० २।२५) इत्याद्या॥ २३॥

**अपि च संराधने प्रत्यक्षानुमानाभ्याम्॥ २४॥**

अपिचैनमात्मानं निरस्तसमस्तप्रपञ्चमव्यक्तं संराधनकाले पश्यन्ति योगिनः। संराधनं च भक्तिध्यानप्रणिधानाद्यनुष्ठानम्। कथं पुनरवगम्यते संराधनकाले पश्यन्तीति। प्रत्यक्षानुमानाभ्यां श्रुतिस्मृतिभ्यामित्यर्थः। तथाहि श्रुतिः—'पराञ्चि खानि व्यतृणत्स्वयंभूस्तस्मात्पराङ् पश्यति नान्तरात्मन्। कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्षदावृत्तचक्षुरमृत-

---

ஹிக்கப்படுவதில்லை. வாக்கினுலும் கிரஹிக்கப்படுவதில்லை. வேறு இந்திரியங்களாலும் தபஸ்ஸினுலும், கர்மத்தினுலும் கிரஹிக்கப்படுவதில்லை." "இதில்லை இதில்லையென வுபதேசிக்கப்படும் அந்த ஆத்மா எதனுலும் அறியக்கூடாதவனுயிருப்பதுபற்றி எதனுலும் அறியப்படுகிருனில்லை" "யாதொரு அந்த ப்ரம்ஹமுண்டோ அது கண்ணுற் பார்க்கக்கூடாததாகவும், வேறு இந்திரியங்களாற் கிரஹிக்கக்கூடாததாகவுமிருக்கிறது" "எதுபோழ்து இவன் அதிருஸ்யமும், அநாத்மியமும், அநிருக்தமும், அநிலயனமும் [ஆன பொருளில் பயமற்று (பயஹேதுவான த்வைதப் பொருளற்று) நிலைபெறுகிருனே"] என்றதாதியான ஸ்ருதியானது உபதேசிக்கிறது. "இந்த ஆத்மா அவ்யக்தனும், அசிந்த்யனும், அவிகார்யனுமாகச் சொல்லப்படுகிருன்" என்றதாதியான ஸ்மிருதியுமிருக்கிறது. (23) (எ-று)

(அ-கை) அவ்விதமாயின் எப்பொழுது கிரஹிக்கக் கூடியதாகவாகும் என்ற சங்கைக்குப்பதில் சொல்லவேண்டிப் பின்வரும் ஸூத்திரம் தொடங்கப்படுகிறது—

**(ஸூ) அபி ச ஸம்ராதநே ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம் (24)**

(ப-ரை) **अपि च** (அபி ச)=ஆத்மா அவ்யக்தனுயினுங்கூட இவனை **संराधने** (ஸம்ராதநே)=சாஸ்திர ஸம்ஸ்காரம் பெற்றமனத்தில் [**पश्यन्ति योगिनः** (பஶ்யந்தி யோகிந:)=யோகிகள் பார்க்கின்றனர்.] **प्रत्यक्षानुमानाभ्याम्** (ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம்)=ஸ்ருதி ஸ்மிருதிகள் அவ்விதமிருப்பதே அதன் காரணமாகும். (24) (எ-று)

**பாஷ்யம்.**—எல்லாவிதமான ப்ரபஞ்ச ஸம்பந்தமற்றதும் அவ்யக்தமுமான இந்த ஆத்மாவை ஸம்ராதன காலத்தில் யோகிகள் பார்க்கின்றனர். பக்தி, தியானம், ப்ரணிதானம் முதலியவற்றின் அநுஷ்டானம் ஸம்ராதனமெனப்படும். ஸம்ராதனகாலத்தில் பார்க்கின்றனர் என்பது எவ்விதமறியப்படுகிறது எனின்? ப்ரத்யக்ஷாநுமானங்களாலென்கிறோம். ஸ்ருதி ஸ்மிருதிகளால் என்பது அதன் பொருள். அதாவது:—"ஈஸ்வரன் இந்திரியங்களை வெளிநோக்குள்ளனவாகச்செய்து நாசப்படுத்தினர். ஆனதுபற்றியே வெளிநோக்கையடைகின்ருனேயொழிய அந்தராத்மாவை (ப்ரத்யகாத்மாவை) ப்பார்ப்பதில்லை. ஆயினும் ஒரு தீரன் (புத்தி

त्वमिच्छन्' (क० ४ । १) इति । 'ज्ञानप्रसादेन विशुद्धसत्त्वस्ततस्तु तं पश्यते निष्कलं ध्यायमानः' (मु० ३ । १ । ८) इति चैवमाद्या । स्मृतिरपि—'यं विनिद्रा जितश्वासाः संतुष्टाः संयतेन्द्रियाः । ज्योतिः पश्यन्ति युञ्जानास्तस्मै योगात्मने नमः ॥ योगिनस्तं प्रपश्यन्ति भगवन्तं सनातनम्' इति चैवमाद्या ॥ २४ ॥

ननु संराध्यसंराधकभावाभ्युपगमात्परेतरात्मनोरन्यत्वं स्यादिति । नेत्युच्यते—

**प्रकाशादिवच्चावैशेष्यं प्रकाशश्च कर्मण्यभ्यासात् ॥ २५ ॥**

यथा प्रकाशाकाशसवितृप्रभृतयोऽङ्गुलिकरकोदकप्रभृतिषु कर्मसूपाधिभूतेषु सविशेषा इवावभासन्ते, न च स्वाभाविकीमविशेषात्मतां जहति, एवमुपाधिनिमित्त एवायमात्मभेदः स्वतस्त्वैकात्म्यमेव । तथाहि—वेदान्तेष्वभ्यासेनासकृज्जीवप्राज्ञयोरभेदः प्रतिपाद्यते ॥

---

யைத் தன்வசமாக்கினவன்) அமிருதத்வத்தை விரும்பினவனுய் இந்திரியங்களை உள்ளில் திருப்பினவனுய் ப்ரத்யகாத்மாவைப் பார்க்கிறுன்" என்றும், "கர்மத்தினுல் சுத்த சித்தமுள்ளவனுய் க்ஞானமென்ற சித்தத்தெளிவினுல் தியானிப்பவனுய்க் கொண்டு அந்த நிஷ்களனுன பரமாத்மாவைப் பார்க்கிறுன்" என்றதாதியுமான ஶ்ருதி சொல்லுகிறது. ஸ்மிருதியும் "விநித்ரர்களும், ஶ்வாஸஜய மடைந்தவர்களும், ஸந்துஷ்டர்களும் (வைராக்கியமுள்ளவர்களும்) இந்திரிய ஜயமுள்ளவர்களுமான யோகிகள் எந்த ஜ்யோதிர் வடிவனுன ஆத்மாவைப் பார்க்கின்றனரோ அந்த யோகாத்மாவுக்கு (யோகத்தாலடையத்தக்க ஆத்மாவுக்கு) நமஸ்காரம்" "யோகிகள் ஸநாதநனுன அந்தப் பகவானைப் பார்க்கின்றனர்" என்றதாதியாலுபதேசிக்கிறது. (24) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—ஆராத்யனுகவிருக்குந் தன்மையையும், ஆராதனஞ் செய்பவனுகவிருக்குந் தன்மையையும் ஒப்புவதிலிருந்து பரமாத்ம ஜீவாத்மாக்களுக்குப் பேதம் வரக்கூடுமன்ருே எனின்? இல்லையெனச் சொல்லப்படுகிறது—

**(ஸூ) ப்ரகாசாதிவத்ச அவைசேஷ்யம் ப்ரகாச:ச கர்மணி அப்யாஸாத் (25)**

(ப—ரை) **प्रकाशादिवच्च** (ப்ரகாஶாதிவத்ச)=ப்ரகாசம் முதலியவைபோல **प्रकाशश्च** (ப்ரகாஶஶ்ச)=சிதாத்மாவும், **कर्मणि** (கர்மணி)=த்யானம் முதலிய கர்மாவில் பேதத்தையடைகிறது. இயற்கையிலோ **अवैशेष्यम्** (அவைஶேஷ்யம்)=மாறுபாடற்றிருத்தல் ஏற்படுகிறது. ஏன்? **अभ्यासात्** (அப்யாஸாத்)=ஶ்ருதியானது தத்த்வமஸி என ஒன்பதுதடவை அபேதத்தையுபதேசஞ் செய்திருப்பதே அதன் காரணமாகும். (25) (எ—று)

பாஷ்யம்.—ஒளி, ஆகாசம், சூரியன் முதலியன முறையே விரல், கரகம் (ஓர்வகை குடம்) ஜலம் முதலிய உபாதியாகவான கர்மங்களில் (பொருள்களில்) ஸவிஶேஷங்கள் போல (மாறுபாடுள்ளனபோன்று) தோற்றுகின்றனவேயொழிய இயற்கையிலமைந்துள்ள எவ்விதமாறுபாடுமற்ற நிலையைவிட்டு நீங்குவதில்லை என்

अतोऽनन्तेन तथाहि लिङ्गम् ॥ २६ ॥

अतश्च स्वाभाविकत्वादभेदस्याविद्याकृतत्वाच्च भेदस्य विद्ययाऽविद्यां विधूय जीवः परेणानन्तेन प्राज्ञेनात्मनैकतां गच्छति। तथाहि लिङ्गम्—'स यो ह वै तत्परमं ब्रह्म वेद ब्रह्मैव भवति' (मु० ३।२।९) 'ब्रह्मैव सन्ब्रह्माप्येति' (बृ० ४।४।६) इत्यादि ॥२६॥

उभयव्यपदेशात्त्वहिकुण्डलवत् ॥ २७ ॥

तस्मिन्नेव संराध्यसंराधकभावे मतान्तरमुपन्यस्यति स्वमतविशुद्धये। क्वचिज्जी-

---

பது எவ்விதமோ இவ்விதமே இந்த ஆத்மபேதமும் உபாதிநிமித்தமாகவே ஏற்படு கிறது. இயற்கையில் ஐகாத்மியமேதான் உள்ளது. அதாவது:—வேதாந்தங்களில் அப்யாஸத்தினுல் (பலதடவை யுபதேசத்தினுல்) அடிக்கடி ஜீவபரமாத்மாக்களின் அபேதமே உபதேசிக்கப்பட்டிருக்கிறது. (25) (எ—று)

(ஸூ) அதோ அநந்தேந ததாஹி லிங்கம் (26)

(ப—ரை) अतः (அத:)=இதனுல் ஜீவன் अनन्तेन (அநந்தேந)=தேசகாலவஸ்து பரிச்சேதமற்ற ப்ராக்ஞாத்மாவுடன் ஏகத்வத்தை யடைகிருன். तथाहि लिङ्गम् (ததாஹி லிங்கம்)=அவ்விதமேயன்றே ஶ்ருதியில் ஜீவனுக்கு ப்ரஹ்மத்வபல ரூபமான லிங்கம் காணவும் படுகிறது. (26) (எ—று)

பாஷ்யம்.—இதனுல் அதாவது:—அபேதம் இயற்கையிலமைந்துள்ளதாகவும், பேதம் அவித்யை மூலமேற்பட்டதாகவு மிருப்பதால் ஜீவன் வித்யையினுல் அவித்யையைப்போக்கிப் பரனும் அநந்தனுமான ப்ராக்ஞாத்மாவுடன் ஏகத்வத்தையடைகிருன். அவ்விதமேயன்றே "எவனெருவன் அந்தப் பரப்ப்ரம்ஹத்தை யறிவானே அவன் ப்ரம்ஹமாகவே ஆகிருன்" "ப்ரம்ஹமாகவே இருந்து கொண்டு ப்ரம்ஹத்தையடைகிருன்" என்றதாதியான லிங்கமுமிருக்கிறது. (26) (எ—று)

(அ—கை) ஶ்ருதியில் பரமாத்மாவைக்கர்மாவாகவும், ஜீவனைக்கர்த்தாவாகவும் சொல்லியிருப்பதிலிருந்து பேதம் அபேதம் இரண்டுமே வாஸ்தவமாகும் என 27, 28, இந்த இரண்டு ஸூத்திரங்களால் பூர்வபக்ஷம் செய்து 29-வது ஸூத்திரத்தால் பேதம் உபாதி மூலமேற்படுகிறதென்றும், அபேதம் இயற்கையிலுள்ளதென்றும் சொல்லவேண்ணங்கொண்டு ஸூத்திரக்காரர் பேதம் அபேதம் இரண்டும் உண்மையாகவுள்ளது என்று கூறும் பூர்வபக்ஷத்தை இரண்டு ஸூத்திரங்களாற் சொல்லத் தொடங்குகிருர். அதன் முதல்ஸூத்திரம் பின்வருமாறு—

(ஸூ) உபயவ்யபதேசாத்து அஹிகுண்டலவத் (27)

(ப—ரை) उभयव्यपदेशात्तु (உபயவ்யபதேசாத்து)=சிலவிடத்தில் பேதமும், சிலவிடத்தில் அபேதமும் ஶ்ருதியில் சொல்லியிருப்பதால் अहिकुण्डलवत् (அஹி குண்டலவத்)=பாம்பும், அதன் குண்டலமும் (சுருண்டநிலையும்) போல தத்துவமிருக்கலாம். (27) (எ—று)

பாஷ்யம்.—அதேஸம்ராத்ய ஸம்ராதகத்தன்மையில் சொந்தமான மதம் சுத்

वप्राज्ञयोर्भेदो व्यपदिश्यते 'ततस्तु तं पश्यते निष्कलं ध्यायमानः' (मुण्ड० ३।१।८) इति ध्यातृध्यातव्यत्वेन द्रष्टृद्रष्टव्यत्वेन च। 'परात्परं पुरुषमुपैति दिव्यम्' (मु० ३।२।८) इति गन्तृगन्तव्यत्वेन। 'यः सर्वाणि भूतान्यन्तरो यमयति' इति नियन्तृनियन्तव्यत्वेन। क्वचित्तु तयोरेवाभेदो व्यपदिश्यते 'तत्त्वमसि' (छा० ६।८।७) 'अहं ब्रह्मास्मि' (बृ० १।४।१०) 'एष त आत्मा सर्वान्तरः' (बृ० ३।४।१) 'एष त आत्मान्तर्याम्यमृतः' (बृ० ३।७।३) इति। तत्रैवमुभयव्यपदेशे सति यद्यभेद एवैकान्ततो गृह्यते भेदव्यपदेशो निरालम्बन एव स्यात्। अत उभयव्यपदेशदर्शनादहिकुण्डलवदत्र तत्त्वं भवितुमर्हति। यथाहिरित्यभेदः कुण्डलाभोगप्रांशुत्वादीनीति तु भेद एवमिहापीति ॥२७॥

**प्रकाशाश्रयवद्वा तेजस्त्वात् ॥ २८ ॥**

---

தப்படுவதற்கு வேண்டி வேறுமதத்தைச் சொல்லுகிறார். ஶ்ருதியில் சிலவிடத்தில் "பிறகு தியானிப்பவனைக் கொண்டு அந்த நிஷ்களரூபத்தைப் பார்க்கிறான்" என்றதால் தியானிப்பவனாக விருத்தல் தியானஞ் செய்யப்படுவதாகவிருத்தல் இவற்றாலும், பார்ப்பவனாகவிருத்தல் பார்க்கப்படுவதாக விருத்தல் இவற்றாலும் ஜீவபரமாத்மாக்களின் பேதமானது உபதேசிக்கப்படுகிறது. "காரியவர்க்கத்தை விடமேலான மாயையைக் காட்டிலும் வேறுபட்டவரும் திவ்யரும் (ஸ்வப்ரகாசரும்) ஆன புருஷனை அடைகிறான்" என்றதால் அடைபவன், அடையப்படுவது இவற்றாலும், "எவர் எல்லாப் பூதங்களையும் உள்நின்று நியமனஞ் செய்கின்றாரோ" என்றதால் நியந்தாவாக விருத்தல், நியந்தவ்யமாக (நியமனஞ்செய்யக்கூடியதாக) விருத்தல் இவற்றாலும் பேதமானது உபதேசிக்கப்படுகிறது. சிலவிடத்திலோ "அதாக நீ இருக்கிறாய்" "நான் ப்ரம்ஹமாகவிருக்கிறேன்" "இந்த உனது ஆத்மா ஸர்வாந்தரமானது" "இந்த உனது ஆத்மா அந்தர்யாமியும் அமிருதமுமாகும்" என்றதால் ஜீவபரமாத்மாக்களுக்கே அபேதமானது உபதேசிக்கப்படுகிறது. ஆகவே இவ்விதம் பேதம் அபேதம் என்ற இரண்டையும் விஷயமாகக்கொண்ட உபதேசமிருக்குங்கால் அபேதமே முக்கியமாகக் கொள்ளப்படுமானால் பேதத்தை யுபதேசித்தது பயனற்றதேயாகிவிடும். ஆனதுபற்றி உபயவ்யபதேசம் (பேதாபேதவுபதேசம்) காணப்படுவதிலிருந்து இங்கு தத்துவமானது பாம்பும், அதன் குண்டலமும்போல வாவதுதான் பொருத்தமுடையதாகவாகிறது. பாம்பென்றதால் அபேதமும், வட்டமாக விருத்தல், வக்கிரமாகவிருத்தல், நீண்ட கொம்புபோலிருத்தல் முதலியவற்றால் பேதமும் எவ்விதமோ இவ்விதமே இங்கும் இருக்கலாம். (27)

(ஸூ) ப்ரகாசாச்ரயவத்வா தேஜஸ்த்வாத் (28)

(ப—ரை) ஜீவபரமாத்மாக்களுக்கு **तेजस्त्वात्** (தேஜஸ்த்வாத்)=சைதன்யவடிவமாகவிருத்தல் பொதுவாகவிருப்பதுபற்றி **प्रकाशाश्रयवद्वा** (ப்ரகாஶாஶ்ரயவத்வா)=ப்ரகாசத்துக்கும் (ஒளிக்கும்) ஆஶ்ரயத்துக்கும் (சூரியாதிகளுக்கும்) போல பேதாபேத வ்யபதேசம் பொருந்தலாம். (28) (எ—று)

अथवा प्रकाशाश्रयवदेतत्प्रतिपत्तव्यम्। यथा प्रकाशः सावित्रस्तदाश्रयश्च सविता नात्यन्तभिन्नावुभयोरपि तेजस्त्वाविशेषात्। अथ च भेदव्यपदेशभाजौ भवत एवमिहापीति ॥ २८ ॥

पूर्ववद्वा ॥ २९ ॥

यथा वा पूर्वमुपन्यस्तं प्रकाशादिवच्चावैशेष्यमिति तथैवैतद्भवितुमर्हति। तथाह्यविद्याकृतत्वाद्बन्धस्य विद्यया मोक्ष उपपद्यते। यदि पुनः परमार्थत एव बद्धः कश्चिदात्माहिकुण्डलन्यायेन परस्यात्मनः संस्थानभूतः प्रकाशाश्रयन्यायेन चैकदेशभूतोऽभ्युपगम्येत ततः पारमार्थिकस्य बन्धस्य तिरस्कर्तुमशक्यत्वान्मोक्षशास्त्रवैयर्थ्यं प्रसज्येत, नचात्रोभावपि भेदाभेदौ श्रुतिस्तुल्यवद्व्यपदिशति। अभेदमेव हि प्रतिपाद्यत्वेन निर्दिशति भेदं तु पूर्वप्रसिद्धमेवानुवदत्यर्थान्तरविवक्षया। तस्मात्प्रकाशादिवच्चावैशेष्यमित्येष एव सिद्धान्तः ॥ २९ ॥

---

பாஷ்யம்.—அல்லது ப்ரகாசமும் அதன் ஆஶ்ரயமும் போல இதையறிந்து கொள்ளவேண்டும். ஸூரியனுடையதான ப்ரகாசமும், அதற்கு ஆஶ்ரயமான சூரியனும் ஆகிய இரண்டும் தேஜோரூபமாகவிருப்பதுபற்றி முற்றிலும் வேறுபட்டதாக எவ்விதமாகாதோ பேதாபேத வியபதேசத்தை யடைகின்றனவாகவுமாகுமோ, இவ்விதமே இங்கும் (ஜீவபரமாத்மாக்கள் ஆகலாம்) என்று. (28) (எ—று)

(அ—கை) இவ்விதம் இரண்டு ஸூத்திரங்களால் பேதம் அபேதம் இரண்டுமே உண்மையாக ஸம்பவிக்கலாமெனப் பூர்வபக்ஷம் செய்து அதற்குப் பதில் சொல்ல வேண்டி இந்த ஸூத்திரமாரம்பிக்கப்படுகிறது—

## (ஸூ) பூர்வவத்வா (29)

(ப—ரை) पूर्ववत् (பூர்வவத்) वा (வா)="ப்ரகாசாதிவத்ச அவைசேஷ்யம்" என்ற 25-வது ஸூத்திரத்தில் எவ்விதம் சொல்லப்பட்டதோ அவ்விதமேதான் இவ்விஷயத்தில் பொருள் காணவேண்டும். (29) (எ—று)

பாஷ்யம்.—"ப்ரகாசாதிவத்ச அவைஶேஷ்யம்" என்றதால் எவ்விதஞ்சொல்லப்பட்டதோ அவ்விதம் இது இருப்பதுதான் பொருந்தக்கூடியதாகவாகும். அதாவது:—பந்தமானது அவித்யையினால்செய்யப்பட்டதாகவிருப்பதால்வித்யையினால் மோக்ஷமேற்படுவது பொருத்தமுள்ளதாகவாகிறது என்றும். உண்மையிலேயே பந்தத்தையடைந்தவனைவொரு ஆத்மா, பாம்பும் அதன் குண்டலமும் என்ற யுக்தியையொட்டிப் பரமாத்மாவினது வேறுவிதமான நிலையிலுள்ளவனாகவும், ப்ரகாசமும் அதன் ஆஶ்ரயமும் என்ற யுக்தியையொட்டி ஏகதேச (அவயவ) பூதனாகவும் வொப்பப்படுவானாயின் அதுபோழ்து உண்மையாகவமைந்துள்ள பந்தம் விலக்க வியலாததுபற்றி மோக்ஷ சாஸ்திரமானது பயனற்றதாகவே ஆகிவிடும். இங்கு ஶ்ருதியானது பேதம் அபேதம் இரண்டையுமே ஒன்றுபோல வுபதேசிக்கவுமில்லை. அபேதத்தையே சாஸ்திர தாத்பரிய விஷயமாகவுபதேசித்து

## प्रतिषेधाच्च ॥ ३० ॥

इतश्चैष एव सिद्धान्तः । यत्कारणं परस्मादात्मनोऽन्यं चेतनं प्रतिषेधति शास्त्रम्—'नान्योऽतोऽस्ति द्रष्टा' (बृ० ३ । ७ । २३) इत्येवमादि । 'अथात आदेशो नेति नेति' (बृ० २ । ३ । ६), 'तदेतद्ब्रह्मापूर्वमनपरमनन्तरमबाह्यम्' (बृ० २ । ५ । १९) इति च ब्रह्मव्यतिरिक्तप्रपञ्चनिराकरणाद्ब्रह्ममात्रपरिशेषाच्चैष एव सिद्धान्त इति गम्यते ॥ ३० ॥

## ७ पराधिकरणम् ॥ सू० ३१—३७

## परमतः सेतून्मानसंबन्धभेदव्यपदेशेभ्यः ॥ ३१ ॥

---

முன்னரே (அவித்யா மூலம்) கிடைத்த பேதத்தைத் தானும் அநுவதிக்கிறது. (திருப்பிக்கூறுகிறது) ஆனதுபற்றி "ப்ரகாசாதிவத்ச அவைசேஷ்யம்" என்ற இதுவே ஸித்தாந்தமாகவாகும். (29) (எ—று)

### (ஸூ) ப்ரதிஷேதாத்ச (30)

(ப—ரை) प्रतिषेधाच्च (ப்ரதிஷேதாத்ச)=பரமாத்மாவைக் காட்டிலும் வேறு சேதனனைச் சாஸ்திரம் மறுத்திருப்பதுமே மற்றொரு காரணமாகும். (30)(எ—று)

பாஷ்யம்.—இதனாலும் இதுவே ஸித்தாந்தமான பொருளாகவாகும். எக்காரணம்பற்றி ஶ்ருதியானது "த்ரஷ்டாவாகவுள்ளவன் இந்தப் பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபட்டவனல்லன்" என்றதாதியால் பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபட்ட சேதனனை மறுத்துக்கூறுகிறதோ அக்காரணம்பற்றியே என்க. "பிறகு ஆனதுபற்றி இதில்லைஇதில்லை என்பதே (ப்ரம்ஹத்தின்) உபதேசமாகும்" "அந்த இந்த ப்ரம்ஹம் தனக்குமுன் (காரணம்) அற்றதும், பின் (காரியம்) அற்றதும்,உள்ளற்றதும்,வெளியற்றதும் ஆகும்" என்றும் ப்ரம்ஹத்தைவிட வேறுபட்ட ப்ரபஞ்சத்தை மறுத்துக் கூறுவதாலும், ப்ரம்ஹத்தைமட்டுமே மிச்சப்படுத்தியிருப்பதாலுமே இதுவேதான் ஸித்தாந்தமான பொருளெனவறியக்கிடக்கிறது. (30) (எ—று)

ஆறுவது ப்ரகிருதைதாவத்த்வாதிகரணம் முற்றிற்று.



### பராதிகரணம் 7.

(அ—கை) வெகு ஶ்ருதிகளிருப்பதன்மூலம் ப்ரம்ஹத்தை விடவேறுபட்ட தத்துவமில்லை என நிலைநாட்டப் பட்டது. ஆயினும் "யாதொரு ஆத்மாவுண்டோ இது விதாரகமான ஸேதுவாக (அணையாக) வாகும்" என்றதாதிகளான ஶ்ருதிகள் மூலம் முற்கூறிய ஸித்தாந்தத்தில் மேலெழுந்தவாரியாக விரோதம் காணப்படுவதால் அந்த விரோதத்தைப் போக்கவேண்டி 7ஸூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணமானது தொடங்கப்படுகிறது. அதன் முதலிலுள்ள பூர்வபக்ஷ ஸூத்திரம் பின்வருமாறு—

अस्त्यन्यद्ब्रह्मणो नो वा विद्यते ब्रह्मणोऽधिकम् । सेतुत्वोन्मानवत्वाच्च संबन्धाद्भेदवत्त्वतः ॥ १ ॥
धारणात् सेतुतोन्मानमुपास्त्यै भेदसंगती । उपाध्युद्भवनाशाभ्यां नान्यदन्यनिषेधतः ॥ २ ॥

**यदेतन्निरस्तसमस्तप्रपञ्चं ब्रह्म निर्धारितमस्मात्परमन्यत्तत्त्वमस्ति नास्तीति श्रुतिविप्रतिपत्तेः संशयः । कानिचिद्धि वाक्यान्यापातेनैव प्रतिभासमानानि ब्रह्मणोऽपि परमन्यत्तत्त्वं प्रतिपादयन्तीव तेषां हि परिहारमभिधातुमयमुपक्रमः क्रियते । परमतो ब्रह्म-**

---

(ஸூ) பரம் அத: ஸேத்தூந்மான ஸம்பந்தபேதவ்யபதேசேப்ய: (31)

(ப—ரை) **अतः** (அதஃ)=இந்த ப்ரம்ஹத்தைக் காட்டிலும் **परम्** (பரம்)=வேறான தத்த்வமானது இருக்கவேண்டுவது அவஶ்யமாகவாகிறது. ஏன்? **सेतून्मानसंबन्धभेदव्यपदेशेभ्यः** (ஸேதூந்மானஸம்பந்தபேதவ்யபதேசேப்யஃ) = **सेतुव्यपदेश** (ஸேதுவ்யபதேஶ)="யாதொரு ஆத்மாவுண்டோ அது விதாரகமான ஸேதுவாக வாகும்" என்றதால் ஆத்மாவை ஸேதுவாக (அணையாகச்) சொல்லியிருப்பதும், **उन्मानव्यपदेश** (உந்மாநவ்யபதேஶ)=அந்த இந்த ப்ரம்ஹம் "நான்கு காலுள்ளதும் எட்டுக்குளம்புள்ளதும், பதினாறு கலைகளுள்ளதுமாகும்" என்றதால் நிறையளவு சொல்லியிருப்பதும், **संबन्धव्यपदेश** (ஸம்பந்தவ்யபதேஶ)="ப்ராக்ஞனை ஆத்மாவுடன் நன்கு கலந்தவனாய்" என்றதால் ஸம்பந்தம் சொல்லியிருப்பதும், **भेदव्यपदेश** (பேதவ்யபதேஶ)="ஸூரியமண்டலத்தில் யாதொரு புருஷனுண்டோ சரீரத்தில் கருவிழியில் யாதொரு புருஷனுண்டோ" என்றதால் பேதம் சொல்லியிருப்பதுமே அதன் காரணமாகும். (31) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறான பொருளுண்டா? அல்லது இல்லையா? என்பது ஸந்தேஹம். ஸேதுத்தன்மையும், நிறையளவுள்ள தன்மையும், ஸம்பந்தமும், பேதமும் சொல்லியிருப்பதிலிருந்து ப்ரம்ஹத்தைக்காட்டிலும், வேறான பொருளிருப்பதாகத்தான் சொல்லவேண்டும் என்பது **பூர்வபக்ஷம்**. ப்ரம்ஹமானது ஸர்வத்துக்கும் ஆதாரமாகவிருப்பதுபற்றி ஸேதுத்தன்மையும்,உபாஸ்திக்குவேண்டி நிறையளவும், பேதமும், உபாதியின் உத்பத்தி அதன் நாசம் இவற்றைக்கொண்டு ஸம்பந்தமும் சொல்லப்படுகிறதேயொழிய வேறு பொருளிருப்பதாகக் கொண்டன்று. வேறு பொருளைச் சாஸ்திரம் நிஷேதித்திருப்பதே அதன் காரணமாகும் என்பது **ஸித்தாந்தம்**. (எ—று)

பாஷ்யம்.—ப்ரம்ஹமானது எவ்வித ப்ரபஞ்ச ஸம்பந்தமுமற்றதென யாதொன்று உறுதி செய்யப்பட்டதோ அந்த ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறு தத்வமுண்டா? அல்லது இல்லையா? என ஶ்ருதிகளுக்கு முரண்பாடு காணப்படுவதைக்கொண்டு ஸந்தேஹமுதயமாகிறது. சில வேதாந்த வாக்கியங்கள் மேலெழுந்தவாக்காகப் பொருள் கொள்ளப்படுகின்றனவாய் ப்ரம்ஹத்தைக் காட்டிலுங்கூட

णोऽन्यत्तत्त्वं भवितुमर्हति। कुतः—सेतुव्यपदेशादुन्मानव्यपदेशात्संबन्धव्यपदेशाद्भेदव्यपदेशाच्चेति। सेतुव्यपदेशस्तावत्—'अथ य आत्मा स सेतुर्विधृतिः' (छा० ८। ४। १) इत्यात्मशब्दाभिहितस्य ब्रह्मणः सेतुत्वं सङ्कीर्तयति। सेतुशब्दश्च हि लोके जलसन्तानविच्छेदकरे मृद्दार्वादिप्रचये प्रसिद्धः। इह तु सेतुशब्द आत्मनि प्रयुक्त इति लौकिकसेतोरिवात्मसेतोरन्यस्य वस्तुनोऽस्तित्वं गमयति। 'सेतुं तीर्त्वा' (छा० ८। ४। २) इति च तरतिशब्दप्रयोगात्। यथा लौकिकं सेतुं तीर्त्वा जाङ्गलमसेतुं प्राप्नोत्येवमात्मानं सेतुं तीर्त्वाऽनात्मानमसेतुं प्राप्नोतीति गम्यते। उन्मानव्यपदेशश्च भवति 'तदेतद्ब्रह्म चतुष्पादष्टाशफं षोडशकलमिति।

---

வேறானதொரு தத்த்வமிருப்பதாக விளக்குகின்றனபோன்று தோற்றத்தையடைகின்றன. அந்த வாக்கியங்களுக்குப்பரிஹாரம் தேடவேண்டி இந்த ஆரம்பஞ் செய்யப்படுகின்றது. இந்த ப்ரம்ஹத்தைக் காட்டிலுங்கூட வேறுபட்டதொரு தத்வமிருக்கவேண்டுவது அவஶ்யமாகவாகிறது. ஏன்? ஸேதுவாகச் சொல்லியிருப்பதும், உந்மானம் (நிறையளவு) சொல்லியிருப்பதும், ஸம்பந்தம் சொல்லியிருப்பதும், பேதம் சொல்லியிருப்பதுமே அதன் காரணமாகும். அவற்றுள் முதலாவதான ஸேது வ்யபதேசமாவது:—"பின்னர் யாதொரு ஆத்மாவுண்டோ அது ஸேதுவாகவும், விதாரகமாகவுமாகும்" என்றதல் ஆத்ம சப்தத்தாற் சொல்லப்படும் ப்ரம்ஹத்துக்கு ஸேதுத்தன்மையைச் சொல்லுகிறது. உலகில் ஸேது (அணை) சப்தமோ ஜலத்தொடர்பைத் தடைசெய்கின்ற மண் மரம் இவற்றின் ஸமூஹத்தில் பிரஸித்தமாகவிருக்கிறது. இவ்விடத்திலோ ஸேது என்ற சப்தமானது ஆத்மாவினிடத்தில் பிரயோகிக்கப்பட்டிருப்பதுபற்றி உலகிலுள்ள ஸேது (அணைக்கு) வுக்குப்போல ஆத்ம ஸேதுவுக்கும் அன்னியமான வஸ்துவினது இருப்பை அறிவிக்கிறது. "ஸேதுவைக்கடந்து" என்றவிடத்தில் (தாண்டி என்ற பொருளுள்ள) தீர்த்வா என்ற சப்தப் பிரயோகம் காணப்பட்டுமிருக்கிறது. உலகிலுள்ள அணையைத்தாண்டி அணையற்ற ஜலக்கசிவுள்ள ப்ரதேசத்தை எவ்விதமடைகின்றானோ இவ்விதமே ஆத்மாவைத்தாண்டி ஸேதுவாகவில்லாத அனாத்மாவையடைகிறான் எனத்தோற்றமேற்படுகிறது. உந்மான ப்ரயோகமும் காணப்படுகிறது. அதாவது:—"அந்த ப்ரம்ஹமானது *நான்கு பாதங்களுள்ளதும், எட்டுக் கொளம்புக

---

* நான்கு திக்குகளும் கலைகளாகும். அது ப்ரகாசமெனப்பெயரிய ப்ரம்ஹத்தினது பாதமாகும். பூமி, அந்தரிக்ஷம், த்யுலோகம், ஸமுத்திரம் இவை அநந்தமெனப் பெயரிய ப்ரம்ஹத்தினது பாதமாகும். அக்கினி, ஸூரியன், சந்திரன், மின்னல் இவை ஜ்யோதிஷ்மான் எனப்பெயரிய ப்ரம்ஹத்தினது பாதமாகும். சக்ஷுஸ். சுரோத்திரம், வாக், மனஸ் இவை ஆயதநமெனப்பெயரிய ப்ரம்ஹத்தினது பாதமாகும். ஆகவே ப்ரம்ஹமானது ப்ரகாசவான் என்றும், அநந்தவான் என்றும், ஜ்யோதிஷ்மான் என்றும், ஆயதநவான் என்றுமான நான்கு பாதங்களுள்ளதாகவாகின்றது. இத்தகைய நான்கு பாதங்களுடையவும் பாதிபாதி பாகங்களால் எட்டுக் குளம்புள்ளதாகவாகின்றது. ஒவ்வொரு பாதங்களிலும் நான்கு நான்கு கலைகள் வீதம் நான்கு பாதங்களிலுமாகச் சேர்ந்து பதினாறு கலைகள் ஏற்படுவதால் ப்ரம்ஹம் பதினாறு கலைகளுள்ளதாகவாகிறது என்பது சுருதியின் பொருள்.

यच्च लोक उन्मितमेतावदिदमिति परिच्छिन्नं कार्षापणादि ततोऽन्यद्वस्त्वस्तीति प्रसिद्धम्। तथा ब्रह्मणोऽप्युन्मानात्ततोऽन्येन वस्तुना भवितव्यमिति गम्यते। तथा संबन्धव्यपदेशोऽपि भवति—'सता सोम्य तदा संपन्नो भवति' (छा० ६। ८। १) इति 'शारीर आत्मा' (तै० २। ३। १) 'प्राज्ञेनात्मना संपरिष्वक्तः' (बृ० ४। ३। २१) इति च। मितानां च मितेन संबन्धो दृष्टो यथा नराणां नगरेण। जीवानां च ब्रह्मणा संबन्धं व्यपदिशति सुषुप्तौ। अतस्ततः परमन्यदमितमस्तीति गम्यते। भेदव्यपदेशश्चैतमेवार्थं गमयति। तथाहि—'अथ य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते' (छा० १। ६। ६) इत्यादित्याधारमीश्वरं व्यपदिश्य ततो भेदेनाक्ष्याधारमीश्वरं व्यपदिशति—'अथ य एषोऽन्तरक्षिणि पुरुषो दृश्यते' (छा० १। ७। ५) इति। अतिदेशं चास्यामुना रूपादिषु करोति—'तस्यैतस्य तदेव रूपं यदमुष्य रूपं यावमुष्य गेष्णौ तौ गेष्णौ यन्नाम तन्नाम' (छा० १। ७। ५।) इति। सावधिकं चेश्वरत्वमुभयोर्व्यपदिशति—'ये चामुष्मात्पराञ्चो लोकास्ते-

---

ளுள்ளதும், பதினாறு கலைகளுள்ளதுமாகும்" என்றும். உலகில் "இது இவ்வளவு எடையுள்ளது" எனக் (1)கார்ஷாபணம் முதலிய அளக்கப்பட்ட பொருள் யாதுண்டோ அதைக்காட்டிலும் வேறான பொருள் இருக்கின்றதென்பது பிரஸித்தமாகவிருக்கின்றது. அவ்விதமே ப்ரம்ஹத்துக்கும் உன்மானம் சொல்லியிருப்பதால் அதைக்காட்டிலும் வேறு பொருளிருக்கவேண்டும் எனத்தோற்றுகின்றது. அதுபோல ஸம்பந்த உபதேசமுமிருக்கிறது—அதாவது:—"ஹே ஸோம்ய! அப்பொழுது ஸத்பதப்பொருளுடன் ஒன்றுபட்டவனாகவாகிறான்" என்றும், சாரீரனான (சரீர ஸம்பந்தம் பெற்றவனான) ஆத்மா "ப்ராக்ஞனான ஆத்மாவுடன் நன்கு கலந்தவனாய்" என்றுமாம். ஓரளவுள்ளவற்றுக்கு ஓரளவுள்ளவற்றுடன் ஸம்பந்தமானது காணப்படுகிறது. அதாவது:—மனிதர்கட்கு பட்டினத்துடன் போன்றும். ஜீவர்களுக்கும் ப்ரம்ஹத்துடன் ஸம்பந்தத்தை ஶ்ருதி ஸுஷுப்த்தியில் காண்பிக்கிறது. ஆகவே அதைக்காட்டிலும் வேறாய் அளவிலகப்படாத பொருளிருப்பதாகத் தெரிகிறது. பேதத்தை யுபதேசஞ் செய்திருப்பதும் இதே பொருளைத்தெரிவிக்கிறது. அதாவது:—"பிறகு சூரியனுடைய நடுவில் யாதொரு இந்த ஹிரண்மய புருஷன் காணப்படுகின்றானோ" என்பதாய் ஆதித்யனையாதாரமாகவுடைய ஈஶ்வரனைச்சொல்லி அவனைக்காட்டிலும் வேறாக கண்ணையாதாரமாகவுடைய ஈஶ்வரனை "பிறகு கண்ணுக்குள் யாதொரு இந்தப் புருஷன் காணப்படுகின்றானோ" என்பதாயுபதேசிக்கிறது. இவனுக்கு அவனுடன் ரூபாதிகளில் அதிதேசத்தையும் செய்கிறது. "அந்தப் புருஷனுடைய ரூபம்யாதுண்டோ அதுவேதான் அந்த இந்தப் புருஷனுக்கும்ரூபம். அவனது கான ஸாதனங்கள் யாதுண்டோ அவைகளேதான் இவனுடைய கான ஸாதனங்களாகும். (அவனுடைய) பெயர் யாதுண்டோ (அதுவேதான்) இவனுடைய பெயராகும்" என்றும். இவ்விருவருக்கும் வரம்புக்குட்பட்ட ஐஶ்வரியத்தை "இவற்றைக்காட்டிலும் மேற்பட்ட லோகங்கள் எவை

---

(1) பதினாறுபண எடையுள்ளது கார்ஷாபணம் எனப்படும்.

षां चेष्टे देवकामानां च' (छा० १। ६। ८) इत्येकस्य। 'ये चैतस्मादर्वाञ्चो लोकास्तेषां चेष्टे मनुष्यकामानां च' (छा० १। ७। ६) इत्येकस्य। यथेदं मागधस्य राज्यमिदं वैदेहस्येति ॥ ३१ ॥ एवमेतेभ्यः सेत्वादिव्यपदेशेभ्यो ब्रह्मणः परमस्तीत्येवं प्राप्ते प्रतिपाद्यते—

## सामान्यात्तु ॥ ३२ ॥

तुशब्देन प्रदर्शितां प्राप्तिं निरुणद्धि। न ब्रह्मणोऽन्यत्किञ्चिद्भवितुमर्हति प्रमाणाभावात्। नह्यन्यस्यास्तित्वे किञ्चित्प्रमाणमुपलभामहे। सर्वस्य हि जनिमतो वस्तुजातस्य जन्मादि ब्रह्मणो भवतीति निर्धारितम्। अनन्यत्वं च कारणात्कार्यस्य। नच ब्रह्मव्यतिरिक्तं किञ्चिदजं संभवति 'सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम्' (छा० ६। २। १) इत्यवधारणात्। एकविज्ञानेन च सर्वविज्ञानप्रतिज्ञानान्न ब्रह्मव्यतिरिक्तवस्त्वस्तित्वमवकल्पते। ननु सेत्वादिव्यपदेशा ब्रह्मव्यतिरिक्तं तत्त्वं सूचयन्तीत्युक्तम्। नेत्युच्यते। सेतुव्यपदेशस्तावन्न

---

யுண்டோ அவற்றுக்கும், தேவகாமங்களுக்கும் ஈசனாகிறார்" என ஒருவருக்கும், "இவற்றுக்குக் கீழ்பட்ட லோகங்கள் எவையுண்டோ அவற்றுக்கும் மனுஷ்ய காமங்களுக்கும் ஈசனாகிறார்" என மற்றவருக்கும் உபதேசித்திருக்கிறது. இது மாகதனுடைய ராஜ்யம், இது வைதேஹனுடைய ராஜ்யம் என்பது போலவாம்.

அவதாரிகா பாஷ்யம்.—இவ்விதம் இந்த ஸேது முதலியவற்றின் உபதேசித்தினின்றும் ப்ரம்ஹத்துக்கும் பரமானது ஒன்று இருக்கின்றது என இவ்விதம் ப்ராப்தமாகவே சொல்லப்படுகிறது—

## (ஸூ) ஸாமான்யாத்து (32)

(ப—ரை) सामान्यात् (ஸாமான்யாத்) = விதாரகத்துவமானது பொதுவாக விருப்பதைக்கொண்டு இவ்விதமுபதேசிக்கப்பட்டது. तु (து)=ஸேதுத்வம் முதலியன உண்மையானதாக வுபதேசிக்கப்படவுமில்லை. (32) (எ—று)

பாஷ்யம்.—ஸூத்திரத்திலுள்ள து என்றதால் முன்னர் காண்பிக்கப்பட்ட ஆசங்கை மறுக்கப்படுகின்றது. ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறாக வொன்றிருப்பதாகச் சொல்லுவது பொருந்தாது. வேறாகவொன்றிருக்கும் விஷயத்தில் ப்ரமாணமொன்றையும் காண்கின்றோ மில்லை. உத்பத்தியை யடைகின்ற எல்லா வஸ்துவுக்கும் பிறவி முதலியன ப்ரம்ஹத்தினிடமிருந்து ஏற்படுவதாக முன்னர் நிலைநாட்டப்பட்டிருக்கிறது. ப்ரம்ஹத்தை விடவேறுபட்ட பொருளொன்றும் உத்பத்தியையடையாததாக இல்லை. "ஹேஸோம்ய! உத்பத்திக்கு முந்தி இவை யாவும் ஸத்தாகவே (ஸத்பதப்பொருளாகவே) இருந்தது அது ஏகம்=(தனது வகுப்பிற்சேர்ந்த மற்றொன்றற்றதாகவும், ஏவ=வேறுவகுப்பிற் சேர்ந்த மற்றொன்றற்றதாகவும், அத்விதீயம்=தன்னுள்ளில் வேறொன்றற்றதாகவும் ஆகும்" என வுறுதிகூறப்பட்டிருக்கிறது. ஏகவிக்ஞானத்தால் (ஒன்றையறிவதால்) ஸர்வவிக்ஞானமும் வருவதாக ப்ரதிக்ஞை செய்திருப்பதிலிருந்து ப்ரம்ஹத்தைவிட வேறுபட்ட பொருளிருப்பதாகச் சொல்லுவது பொருந்தாது.

ब्रह्मणो बाह्यस्य सद्भावं प्रतिपादयितुं क्षमते। सेतुरात्मेति ह्याह न ततः परमस्तीति। तत्र परस्मिन्नसति सेतुत्वं नावकल्पत इति परं किमपि कल्प्येत। नचैतन्न्याय्यं हठो ह्यप्रसिद्धकल्पना। अपिच सेतुव्यपदेशादात्मनो लौकिकसेतुनिदर्शनेन सेतुबाह्यवस्तुतां प्रसञ्जयता मृद्दारुमयतापि प्रासज्येत। नचैतन्न्याय्यम्। अजत्वादिश्रुतिविरोधात्। सेतुसामान्यात्तु सेतुशब्द आत्मनि प्रयुक्त इति श्लिष्यते। जगतस्तन्मर्यादानां च विधारकत्वं सेतुसामान्यमात्मनः। अतः सेतुरिव सेतुरिति प्रकृत आत्मा स्तूयते। सेतुं तीर्त्वेत्यपि तरतेरतिक्रमासंभवात्प्राप्त्यर्थ एव वर्तते। यथा व्याकरणं तीर्ण इति प्राप्त इत्युच्यते नातिक्रान्तस्तद्वत्॥ ३२॥

## बुद्ध्यर्थः पादवत्॥ ३३॥

---

சங்கை — ஸேத்வாதிவ்யபதேசங்கள் ப்ரம்ஹ வ்யதிரிக்தமான தத்துவத்தை குறிப்பிக்கின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறதே எனின்?

உத்தரம்—இல்லையென்று சொல்லப்படுகிறது. முதலில் ஸேதுவ்யபதேசமானது ப்ரம்ஹத்துக்கு வெளியில் வஸ்துவினிருப்பைச சொல்லச் சக்தியுடையதன்று. ஸேதுவை ஆத்மாவெனச் சொல்லுகின்றதே யொழிய அதற்குமேலாக ஒன்றிருப்பதாகச்சொல்லவில்லையன்றோ? அவ்விடத்தில் வேருகவொன்று இல்லாவிடில் ஸேதுத்வமானது பொருந்ாதெனக் கொண்டு வேருகவொன்று கல்பிக்கப்படவேண்டும். இது நியாயமானதன்று. பிரஸித்தமாக இல்லாத பொருளைக் கல்பிப்பது பிடிவாதத்தனமாகவன்றோ ஆகும். மேலும், உலகப்பிரஸித்தமான ஸேது திருஷ்டாந்தம் செய்திருப்பதன்மூலம் ஸேதுவைக் காட்டிலும் வேறுபட்டபொருளைக் கற்பிப்பவனால் ஸேதுத்வ வியபதேசத்திலிருந்து ஆத்மாவுக்கு மண்மயமாகவும், கட்டைமயமாகவும் இருத்தலுங் கூட கற்பிக்கவேண்டிவரும். இது யுக்திக் கொத்ததாகவாகாது. அஜத்வம் (உத்பத்தியற்றிருத்தல்) முதலியவற்றைச் சொல்லும் ஶ்ருதிகளுக்கு விரோதம் வரக்கூடியதாக விருப்பதே அதன் காரணமாகும். ஸேதுசப்தமோ ஸேதுவுக்கொத்திருப்பதால் ஆத்மாவினிடத்தில் பிரயோகிக்கப்பட்டது என்பது தான் பொருத்த முடையதாக வாகும். ஜகத்திற்கும், அதன் மரியாதைக்கும் ஆதாரமாக விருத்தலேதான் ஆத்மாவினது ஸேதுஸாதிருஶ்யமாகும். ஆனதுபற்றி ஸேதுவானது போல இதுவும் ஸேதுவாக வாகிறது என்பதாய் ப்ரகிருதனான ஆத்மா ஸ்துதிக்கப்படுகிறது. "ஸேதுவைத்தாண்டி" என்பதவும் கூட த்ரூ என்ற தாதுவுக்கு கடத்தல் என்ற பொருள் ஸம்பவிக்காதாதலால் அடைகிறான் என்ற பொருளிற்றான பிரயோகிக்கப்படுகிறது. உலகில் வியாகரணத்தைத் தாண்டினான் என்றவிடத்தில் (அதை) யடைந்தான் எனச் சொல்லப்படுகிறதே யொழிய அதைக் கடந்து பிறவொன்றை அடைந்தான் என எவ்விதம் சொல்லப்படுவதில்லையோ அவ்விதமே இங்கும் காண்க. (32) (எ—று)

## (ஸூ) புத்யர்த்த: பாதவத் (33)

(ப—ரை) ப்ரம்ஹத்துக்குச் சொல்லிய உந்மானவ்யபதேசமுங் கூட बुद्ध्यर्थः

यदप्युक्तमुन्मानव्यपदेशादस्ति परमिति, तत्राभिधीयते—उन्मानव्यपदेशोऽपि न ब्रह्मव्यतिरिक्तवस्त्वस्तित्वप्रतिपत्त्यर्थः। किमर्थस्तर्हि बुद्ध्यर्थः, उपासनार्थ इति यावत्। चतुष्पादष्टशफं षोडशकलमित्येवं रूपा बुद्धिः कथं नु नाम ब्रह्मणि स्थिरा स्यादिति विकारद्वारेण ब्रह्मण उन्मानकल्पनैव क्रियते। नह्यविकारेऽनन्ते ब्रह्मणि सर्वैः पुंभिः शक्या बुद्धिः स्थापयितुं मन्दमध्यमोत्तमबुद्धित्वात्पुंसामिति। पादवत्। यथा मन आकाशयोरध्यात्ममधिदैवतं च ब्रह्मप्रतीकयोराम्नातयोश्चत्वारो वागादयो मनस्संबन्धिनः पादाः कल्प्यन्ते चत्वारश्चाग्न्यादय आकाशसंबन्धिनः आध्यानाय तद्वत्। अथवा पादवदिति यथा कार्षापणे पादविभागो व्यवहारप्राचुर्याय कल्प्यते। नहि सकलेनैव कार्षापणेन सर्वदा सर्वे जना व्यवहर्तुमीशते क्रयविक्रये परिमाणानियमात्तद्वदित्यर्थः ॥ ३३ ॥

---

(புத்யர்த்த:)=உபாஸனைக்கு வேண்டியே சொல்லப்பட்டதாக வாகும். **पादवत्** (பாதவத்)=அத்யாத்மத்தில் மனத்தையும், அதிதைவத்தில் ஆகாசத்தையும் ப்ரம்ஹத்தினது ப்ரதீகங்களாகச் சொல்லி வாக், மனஸ், சக்ஷுஸ், சுரோத்ரம் இந் நான்கும் மனத்தின் பாதங்களென்றும், அக்னி வாயு ஸூரியன் திக்கு இவைகள் ஆகாசத்தின் பாதங்களென்றும் கற்பிக்கப்படுவது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க. (33) (எ—று)

பாஷ்யம்.—உன்மானம் சொல்லியிருப்பதிலிருந்து ப்ரம்ஹத்துக்கும் வேறுபட்ட தொன்றிருக்கின்றது என யாதொன்று சொல்லப்பட்டதோ இவ்விஷயத்திற் சொல்லப்படுகிறது. உன்மானஞ் சொன்னதுங்கூட ப்ரம்ஹத்தைவிட வேறுபட்ட பொருளிருப்பதாகக் கூறவந்ததன்று. பின்னை எதற்காகவோ எனில்? புத்திக்கு வேண்டியே=உபாஸனைக்குவேண்டியே சொல்லப்பட்டது. உபாஸனமோ ப்ரம்ஹம் நான்கு கால்களுள்ளது, எட்டுக்குளம்புகளுள்ளது, பதினாறு கலைகளுள்ளது. என்ற இம்மாதிரியானதாம். புத்தியானது ப்ரம்ஹத்தினிடத்தில் எவ்விதம் நிலை பெறக்கூடும் எனக்கருதி காரியத்வாராவாக ப்ரம்ஹத்துக்கு உன்மானகற்பனை செய்யப்படுகிறது. உலகிலுள்ள புருஷர்கள் மந்தபுத்திகளாகவும், மத்யமபுத்திகளாகவும், உத்தமபுத்திகளாகவும் இருப்பதுபற்றி எவ்வித விகாரமுமற்ற ப்ரம்ஹத்தினிடத்தில் எல்லா ஜீவர்களாலும் புத்தியானது சுளுவில் ஸ்தாபிக்கக்கூடியதாகவா கா,நன்றோ? பாதம்போலவாம். அத்யாத்மத்திலும்,அதிதைவதத்திலும் ப்ரம்ஹத்தினுடைய ப்ரதீகங்களாகச் சொல்லப்பட்ட மனஸ், ஆகாசம் இவற்றுக்கு வாக்கு முதலியன மனத்தை ஸம்பந்தித்த நான்கு பாதங்களாகவும் அக்னிமுதலியன ஆகாசத்தை ஸம்பந்தித்த நான்குபாதங்களாகவும் தியானத்துக்கு வேண்டிக் கற்பிக்கப்படுவது எவ்விதமோ அவ்விதமே இங்குங் காண்க.

அல்லது (ஒரேதங்கத்தில்) கார்ஷாபணம் (பதினாறுபண எடை) என்ற வியவஹாரம் விருத்திக்கவேண்டிப் பாதகற்பனை செய்யப்படுவது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க. முழு கார்ஷாபணத்தாலும் எல்லா ஜனங்களும் எப்பொழுதுமே வியவஹரிக்கக் கூடியவர்களாக இருக்கமாட்டாரன்றோ. விற்றல் வாங்

स्थानविशेषात्प्रकाशादिवत् ॥ ३४ ॥

इह सूत्रे द्वयोरपि संबन्धभेदव्यपदेशयोः परिहारोऽभिधीयते। यदप्युक्तं संबन्धव्यपदेशाद्भेदव्यपदेशाच्च परमतः स्यादिति तदप्यसत्। यत एकस्यापि स्थानविशेषापेक्षयैतौ व्यपदेशावुपपद्येते। संबन्धव्यपदेशे तावदयमर्थः। बुद्ध्याद्युपाधिस्थानविशेषयोगादुद्भूतस्य विशेषविज्ञानस्योपाध्युपशम य उपशमः स परमात्मना संबन्ध इत्युपाध्यपेक्षयैवोपचर्यते न परिमितत्वापेक्षया। तथा भेदव्यपदेशोऽपि ब्रह्मण उपाधिभेदापेक्षयोपचर्यते न स्वरूपभेदापेक्षया प्रकाशादिवदित्युपमोपादानम्। यथैकस्य प्रकाशस्य सौर्यस्य चान्द्रमसस्य वोपाधियोगादुपजातविशेषस्योपाध्युपशमात्संबन्धव्यपदेशो भवत्युपाधिभेदाच्च भेदव्यपदेशः। यथावा सूचीपाशाकाशादिषूपाध्यपेक्षयैवैतौ संबन्धभेदव्यपदेशौ भवतस्तद्वत् ॥

---

கல் செய்யும் விஷயத்தில் பரிமாணநியமமில்லாமலிருப்பதே அதன் காரணமாகும் என்பது அதன் பொருள். (33) (எ—று)

(ஸூ) ஸ்தானவிசேஷாத் ப்ரகாசாதிவத் (34)

(ப—ரை) **प्रकाशादिवत्** (ப்ரகாசாதிவத்)=ப்ரகாசாதிகளுக்குப்போல **स्थानविशेषात्** (ஸ்தானவிசேஷாத்)=புத்தியாதி உபாதியாகிற ஸ்தானவிசேஷத்தை யொட்டி ஸம்பந்தவ்யபதேசமும், பேதவ்யபதேசமும் செய்யப்படுகிறது. (34)

பாஷ்யம்.—இந்த ஸூத்திரத்தில் ஸம்பந்த பேதவ்யபதேசங்களுக்குப் பரிஹாரஞ் செய்யப்படுகிறது. ஸம்பந்தவ்யபதேசமும், பேதவ்யபதேசமுமிருப்பதன்மூலம் இந்த ப்ரம்ஹத்தைக் காட்டிலும் பரமானதொன்றிருக்க வேண்டும் என யாதொன்று சொல்லப்பட்டதோ அதுவும் பொருந்தாது. ஏன்? ஒன்றுக்கே ஸ்தானவிசேஷத்தை யொட்டி இந்த வ்யபதேசங்கள் பொருந்தக் கூடியனவாகவே ஆகின்றன. முதலில் ஸம்பந்தவ்யபதேசஞ் செய்ததின் பொருள் பின்வருமாறு—புத்தி முதலிய உபாதிகளாகிற ஸ்தானவிசேஷத்தின் சேர்க்கையையொட்டி உண்டான விசேஷ விக்ஞானத்துக்கு உபாதியொடுங்கினதும் ஒடுங்குதல் யாதுண்டோ அதுதான் பரமாத்மாவுடன் ஸம்பந்தமென்பதாய் உபாதியையபேக்ஷித்தே உபசாரமுறையாற் கூறப்படுகிறதேயொழிய ஒரு அளவுக்குட்பட்டவன் என்ற கருத்துக்கொண்டன்று. அவ்விதமே ப்ரம்ஹத்துக்குப் பேதவ்யபதேசமும் உபாதி பேதாபேக்ஷையை முன்னிட்டு உபசாரமுறையாற் கூறப்படுகிறதே யொழிய ஸ்வரூபபேதாபேக்ஷையை முன்னிட்டன்று. ஸூத்திரத்தில் **ப்ரகாசாதிவத்** என்றதால் உவமை சொல்லப்பட்டதாகவாகிறது. அதாவது:—ஸூரியனுடையதாகவோ, சந்திரனுடையதாகவோவுள்ள வொரு ப்ரகாசத்துக்கு உபாதியின் சேர்க்கை இருக்குங்கால் ஒரு விசேஷமேற்பட்டு உபாதியினுபசமம் ஏற்பட்டதும் ஸம்பந்த வ்யபதேசமும், உபாதி பேதத்தால் பேதவ்யபதேசமும் ஏற்படுவது எவ்விதமோ, ஊசி, கயிறு, இவற்றின் ஆகாசம் முதலியவற்றில் உபாதியின் அபேக்ஷயினாலேயே இந்த ஸம்பந்த பேதவ்யபதேசங்கள் ஏற்படுவதும் எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க என்றாம். (34) (எ—று)

## उपपत्तेश्च ॥ ३५ ॥

उपपद्यते चात्रेदृश एव संबन्धो नान्यादृशः 'स्वमपीतो भवति' (छा० ६।८।१) इति हि स्वरूपसंबन्धमेनमामनन्ति स्वरूपस्य चानपायित्वात्। न नरनगरन्यायेन संबन्धो घटते। उपाधिकृतस्वरूपतिरोभावात्तु—'स्वमपीतो भवति' (छा० ६।८।१) इत्युपपद्यते। तथा भेदोऽपि नान्यादृशः संभवति। बहुतरश्रुतिप्रसिद्धैकेश्वरत्वविरोधात्। तथाच श्रुतिरेकस्याप्याकाशस्य स्थानकृतं भेदव्यपदेशमुपपादयति—'योऽयं बहिर्धा पुरुषादाकाशः' (छा० ३।१२।७), 'योऽयमन्तः पुरुष आकाशः' (छा० ३।१२।८), 'योऽयमन्तर्हृदय आकाशः' (छा० ३।१२।९) इति ॥ ३५ ॥

## तथान्यप्रतिषेधात् ॥ ३६ ॥

एवं सेत्वादिव्यपदेशात्परपक्षहेतूनुन्मथ्य संप्रति स्वपक्षं हेत्वन्तरेणोपसंहरति। तथा

---

### (ஸூ) உபபத்தே: ச (35)

(ப—ரை) उपपत्तेश्च (உபபத்தேஶ்ச)=பொருந்திய யுக்தியிருப்பதாலும், ஸம்பந்தமும், பேதவ்யபதேசமும் இதுவரை சொன்னதுபோலாகுமேயொழிய வேறுவிதமாகவாவதற்கில்லை. (35) (எ—று)

பாஷ்யம்.—இம்மாதிரியாகவேயுள்ள ஸம்பந்தம்பொருந்துமேயொழிய வேறுவிதமாயுள்ள ஸம்பந்தம் பொருந்தமாட்டாது. "தன்னையடைந்தவனாகவாகிறான்" என்றதாலோ ஸ்வரூபமான ப்ரம்ஹத்துடன் ஜீவனுக்கு இந்த ஸம்பந்தத்தைச் சொல்லுகின்றனர். ஸ்வரூபமானது அழிவற்றதாகவிருப்பதே அதன் காரணமாகும். நரனுக்கும், நகரத்துக்குமுள்ள நியாயத்தையொட்டி ஸம்பந்தமானது பொருந்தமாட்டாது. உபாதியினால் செய்யப்பட்ட ஸ்வரூபத்துக்குத் திரோபாவம் (மறைதல்) ஏற்பட்டாலோ "தன்னையடைந்தவனாகவாகிறான்" என்றது பொருந்தக்கூடியதாகவாகிவிடுகிறது. அதுபோலவே பேதமும் வேறு மாதிரியாக ஸம்பவிக்கமுடியாது. வெகுதரமான ஶ்ருதிகளிற் பிரஸித்தமாயுள்ள ஈஶ்வரன் ஒருவன் என்ற கொள்கைக்கு விரோதம் வரக்கூடியதாக இருப்பதே அதன் காரணமாகும். அவ்விதமே ஶ்ருதியும் ஒரே ஆகாசத்துக்கு ஸ்தானத்தாலேற்பட்ட பேதவ்யபதேசத்தை "சரீரத்தைக் காட்டிலும் வெளியிலுள்ள யாதொரு இந்த ஆகாசமுண்டோ" "சரீரத்தின் உள்ளில் யாதொரு ஆகாசமுண்டோ" "ஹிருதயத்துக்குள்ளில் யாதொரு ஆகாசமுண்டோ" என்றதால் உபதேசித்து மிருக்கிறது.

### (ஸூ) ததா அந்யப்ரதிஷேதாத் (36)

(ப—ரை) तथा (ததா)=அவ்விதமே अन्यप्रतिषेधात् (அந்யப்ரதிஷேதாத்)=ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட பொருளைச் சாஸ்திரம் மறுத்துக் கூறியிருப்பதிலிருந்தும் ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறாக வொன்றில்லை என்பது நிஶ்சயிக்கப்படுகிறது. (36) (எ—று)

பாஷ்யம்.—இவ்விதம் ஸேத்வாதி வ்யபதேசங்களாகிற பரபக்ஷஹேதுக்களை

न्यप्रतिषेधादपि न ब्रह्मणः परं वस्त्वन्तरमस्तीति गम्यते। तथाहि—'स एवाधस्तात्' (छा० ७। २५। १), 'अहमेवाधस्तात्' (छा० ७। २५। १), 'आत्मैवाधस्तात्' (छा० ७। २५। २), 'सर्वं तं परादाद्योऽन्यत्रात्मनः सर्वं वेद' (बृ० २। ४। ६), 'ब्रह्मैवेदं सर्वम्' 'आत्मैवेदं सर्वम्' (छा० ७। २५। २), 'नेह नानास्ति किञ्चन' (बृ० ४। ४। १९), 'यस्मात्परं नापरमस्ति किञ्चित्' (श्वे० ३। ९), 'तदेतद्ब्रह्मापूर्वमनपरमनन्तरमबाह्यम्' (बृ० २। ५। १९) इत्येवमादिवाक्यानि स्वप्रकरणस्थान्यन्यार्थत्वेन परिणेतुमशक्यमानानि ब्रह्मव्यतिरिक्तवस्त्वन्तरं वारयन्ति। सर्वान्तरश्रुतेश्च न परमात्मनोऽन्योऽन्तरात्मास्तीत्यवधार्यते॥३६॥

## अनेन सर्वगतत्वमायामशब्दादिभ्यः॥ ३७॥

अनेन सेत्वादिव्यपदेशनिराकरणेनान्यप्रतिषेधसमाश्रयणेन च सर्वगतत्वमप्यात्मनः

---

மறுத்து இதுபோழ்து சொந்தப்பக்ஷத்தை வேறுஹேதுவினுல் சொல்லி முடிக்கிருர். அவ்விதம் அந்நியத்தை நிஷேதஞ் செய்திருப்பதிலிருந்தும் கூட ப்ரம்ஹத்தை விட வேறுன வஸ்த்வந்தரமில்லையென அறியக்கிடக்கிறது. அதாவது:— "அதுவே கீழிலுள்ளது" "நானே கீழிலுள்ளவன்" "ஆத்மாவே கீழிலுள்ளது" "எவனெருவன் ஆத்மாவைக் காட்டிலும் வேருக ஸர்வத்தையும் அறிவானே அவனை ஸர்வப்பொருளும் நிராகரணம் செய்து விடும்" (அதாவது: பந்தத்தையடைந்தவனுகச் செய்துவிடும் என்பதாம்.) "இவையாவும் ப்ரம்ஹமே" "ஆத்மாவே இவையாவுமாகும்" "இந்த ஆத்மாவினிடத்தில் வேறுபட்டபொருளொன்றுமில்லை." "எதைக் காட்டிலும் மேற்பட்டதாகவோ கீழ்பட்டதாகவோ வொன்றுமில்லை" "அந்த ப்ரம்ஹம் தனக்கொருகாரணமற்றதும், காரியமற்றதும் உள்ளிலொன்றற்றதும் வெளியிலொன்றற்றதும் ஆகும்" என இம்மாதிரியாக ஆத்மாவைச் சொல்லும் ப்ரகரணத்திலுள்ள வாக்கியங்கள் வேறுபொருளுள்ளனவாக மாற்ற முடியாதனவாய் ப்ரம்ஹத்தைவிட வேறுபட்ட வஸ்த்வந்தரத்தை மறுக்கின்றன. எல்லாவற்றுக்கும் உள்ளிலுள்ளது என்ற ஶ்ருதியிருப்பதிலிருந்தும் பரமாத்மாவைக் காட்டிலும் அந்நியனுன அந்தராத்மா வொருவனில்லை என வுறுதி செய்யப்படுகிறது. (36) (எ–று)

## (ஸூ) அநேந ஸர்வகதத்வ மாயாமசப்தாதிப்ய: (37)

(ப–ரை) **अनेन** (அநேந)=ஸேத்வாதிவ்யபதேசத்தை மறுத்ததினுலும், வேறுன பொருளின் மறுப்பைக் கைகொண்டதனுலும் **सर्वगतत्वम्** (ஸர்வகதத்வம்)= ஆத்மாவுக்கு எங்கும் நீக்கமறநிறைந்து நிற்றலானது ஸித்தமாகவாகிறது. **आयाशब्दादिभ्यः** (ஆயாமஶப்தாதிப்ய:)=நீக்கமற நிறைவுகூறும் சப்தாதிகளிருப்பதிலிருந்தும் முற்கூறியது உறுதிப்படுகிறது. (37) (எ–று)

பாஷ்யம்.—இந்த ஸேத்வாதிவ்யபதேசத்தை மறுத்ததினுலும், பிறவற்றின் மறுப்பை அங்கீகரித்ததினுலும் ஆத்மாவுக்கு ஸர்வகதத்வமும் (எங்கும் நீக்கமற

सिद्धं भवति। अन्यथा हि तन्न सिद्ध्येत्। सेत्वादिव्यपदेशेषु हि मुख्येष्वङ्गीक्रियमाणेषु परिच्छेद आत्मनः प्रसज्येत सेत्वादीनामेवमात्मकत्वात्। तथान्यप्रतिषेधेऽप्यसति वस्तु वस्त्वन्तराद्व्यावर्तत इति परिच्छेद एवात्मनः प्रसज्येत। सर्वगतत्वं चास्यायामशब्दादिभ्यो विज्ञायते। आयामशब्दो व्याप्तिवचनः शब्दः। 'यावान्वा अयमाकाशस्तावानेषोऽन्तर्हृदय आकाशः' (छा० ८। १। ३), 'आकाशवत्सर्वगतश्च नित्यः', 'ज्यायान्दिवः' (छा० ३। १४। ३), 'ज्यायानाकाशात्', 'नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः' (भ. गी. २। २४) इत्येवमादयो हि श्रुतिस्मृतिन्यायाः सर्वगतत्वमात्मनोऽवबोधयन्ति॥

## ८ फलाधिकरणम्। सू० ३८—४१

### फलमत उपपत्तेः॥ ३८॥

---

நிறைந்து நிற்றலும்) ஸித்தமாகவாகிறது. வேறுவிதமானாலோ அது ஸித்திக்காது. ஸேத்வாதிவ்யபதேசங்கள் முக்கியமாகக் கொள்ளப்படுமானாலோ ஆத்மாவுக்கு பரிச்சேதமானது (உருவத்தில் குறைவுபாடானது) வரத்தெரியும். ஸேத்வாதிகள் இவ்விதவுருவமுள்ளனவாக விருப்பதே அதன் காரணமாகும். அதுபோலவே அந்யத்தை மறுத்துக் கூறுவிடில் வஸ்து(ப்ரம்ஹம்)வேறு வஸ்துவினிடமிருந்து விலகினதாய்க் கொண்டு முற்கூறிய பரிச்சேதமே ஆத்மாவுக்கு வந்துவிடத்தெரியும். ஶ்ருதியில் ஆயாமசப்தாதிகளிருப்பதைக் கொண்டு இந்த ஆத்மாவுக்கு ஸர்வகதத்வமும் (எங்கும் நீக்கமறநிறைந்து நிற்றலும்) அறியப்படுகிறது. ஆயாமசப்தமாவது:-வியாப்தியை(நீக்கமறநிறைவைக்)கூறும் சப்தமாகும். "இந்த ஆகாசம் எவ்வளவோ அந்தர்ஹிருதயத்திலுள்ள இந்த ஆகாசமும் (ப்ரம்ஹமும்) அவ்வளவே" "ஆகாசம் போல ஸர்வகதமும் நித்யமுமாகும்" "த்யுலோகத்தைக் காட்டிலும் மேலானது" "ஆகாசத்தைக் காட்டிலும் மேலானது" "இவன் (ஆத்மா) நித்யனும் ஸர்வகதனும், ஸ்தாணுவும், அசைவற்றவனும் ஸநாதநனுமாவான்" என்றதாதியான ஶ்ருதிஸ்ம்ருதி நியாயங்களோ ஆத்மாவுக்கு ஸர்வகதத்வத்தைத் தெளிவாயுபதேசிக்கின்றன. (37) (எ-று)

ஏழாவது பராதிகரணம் முற்றிற்று.

---

## பலாதிகரணம் 8.

(அ-கை) இதுவரையுள்ளக் கிரந்தத்தால் தத்பதார்த்தம், த்வம்பதார்த்தம் இவற்றைப்பகுத்தறியும் முறை உபதேசிக்கப்பட்டது. அத்தகைய பகுத்தறிவானது ஸர்வக்ஞனும், ஸர்வஶக்தனும், பரமகருணைவாய்ந்தவனுமான பரமேஶ்வரன் மூலந்தான்வரும் என்பதை விளக்கவேண்டி 4 ஸூத்திரங்கள் கொண்ட இந்த அதிகாரணம் ஆரம்பிக்கப்படுகிறது. அவற்றின் முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

(ஸூ) பலமத உபபத்தே: (38)

कर्मैव फलदं यद्वा कर्माराधित ईश्वरः। अपूर्वावान्तरद्वारा कर्मणः फलदातृता ॥ १ ॥
अचेतनात्फलासूतेः शास्त्रीयात्पूजितेश्वरात्। कालान्तरे फलोत्पत्तेर्नापूर्वपरिकल्पना ॥ २ ॥

**तस्यैव ब्रह्मणो व्यावहारिक्यामीशित्रीशितव्यविभागावस्थायामयमन्यः स्वभावो वर्ण्यते। यदेतदिष्टानिष्टव्यामिश्रलक्षणं कर्मफलं संसारगोचरं त्रिविधं प्रसिद्धं जन्तूनां किमेतत्कर्मणोभवत्याहोस्विदीश्वरादिति भवति विचारणा। तत्र तावत्प्रतिपाद्यते फलमत ईश्वराद्भवितुमर्हति। कुतः—उपपत्तेः। स हि सर्वाध्यक्षः सृष्टिस्थितिसंहारान्विचित्रान्विदधद्देशकालविशेषाभिज्ञत्वात्कर्मिणां कर्मानुरूपं फलं संपादयतीत्युपपद्यते। कर्मणस्त्वनुक्षणवि-**

---

(ப—ரை) **फलम्** (பலம்)=சுகம், துக்கம், சுகதுக்கம் என்ற கர்மபலன் **अतः** (அத:)=இந்த ஈஸ்வரனிடமிருந்தே உண்டாகிறது. என்? **उपपत्तेः** (உபபத்தே:)= போதிய யுக்தியிருப்பதே அதன் காரணமாகும். (38) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) கர்மமேபலத்தைத்தருகிறதா? அல்லது கர்மாவினால் ஈஸ்வரன் பலனைத்தருகிறாரா? என்பது ஸந்தேஹம். இடையிலுள்ள அபூர்வம் வாயிலாகக் கர்மத்துக்கே பலன் தரும் தன்மை சொல்லவேண்டும் என்பது பூர்வபக்ஷம். அசேதனத்தினிடமிருந்து பலனுண்டாகாதாகையால் சாஸ்திரத்திற் சொல்லப்பட்டவரும், கர்மாவினால் ஆராதிக்கப்பட்டவருமான ஈஸ்வரனாரிடமிருந்து காலாந்தரத்தில் பலனுண்டாவதாகச்சொல்லுவதே பொருந்தக்கூடியதாகவிருப்பதால் *அபூர்வமென்ற வொன்றைக் கற்பிக்கவேண்டிய அவஸ்யமில்லை என்பது ஸித்தாந்தம்.

பாஷ்யம்.—அந்த ப்ரம்ஹத்துக்கே ஈஸிதாவென்றும், ஈஸிதவ்யம் என்றுமான வியாவஹாரிகமான விபாகநிலையில் உள்ள இந்த வேறுவிதமான ஸ்வபாவமானது வர்ணிக்கப்படுகிறது. ஜந்துக்களுக்கு இஷ்டமென்றும், அநிஷ்டமென்றும், இஷ்டாநிஷ்டம் கலந்ததென்றுமான லக்ஷணம்வாய்ந்ததும் ஸம்ஸாரத்தை (ஜனனமரணப்ரவாஹத்தை) கோசரமாக (ஆஸ்ரயமாக) வுடையதுமான மூன்றுவிதமான யாதொரு கர்மபலன் ப்ரஸித்தமாகக் காணப்படுகிறதோ இது கர்மாவினிடமிருந்தே உண்டாகிறதா? அல்லது ஈஸ்வரனாரிடமிருந்து உண்டாகிறதா? என விசாரிக்கப்படுகிறது. அவற்றுள் முதலில் ஸித்தாந்தமாகத்தோன்றுவது யாதென்னில் பலன் இந்த ஈஸ்வரனாரிடமிருந்து உண்டாவது தான் பொருத்தமுடைத்து என்றும். என்? உபபத்தி யிருப்பதே அதன் காரணமாகும். அவரோ ஸர்வாத்யக்ஷராயும் விசித்ரங்களான ஸிருஷ்டி ஸ்திதிஸம்ஹாரங்களைச் செய்பவராயும் இருப்பதால் தேசம், காலம், நிமித்தம் இவற்றைப் பற்றிய அறிவுள்ளவராதல் பற்றி கர்மாநுஷ்டானஞ் செய்பவர்க்குக் கர்மத்துக்குத் தக்கபடி பலனைத் தருகிறார் என்பது பொருத்தமுடையதாக வாகிவிடுகிறது. ஒவ்வொரு க்ஷணத்திலும் அழியுந்தன்மையுடைய கர்மத்தினிடமிருந்தோ காலாந்தரத்தில் நேரக்

---

* கர்மத்தைச் செய்தபின்னரும் பலன் வருவதற்கு முன்னரும் உள்ள கர்மத்தினது ஸூக்ஷ்மமானநிலை அபூர்வமெனப்படும் என்பது பூர்வமீமாம்ஸகர்களின் கொள்கை.

नाशिनः कालान्तरभावि फलं भवतीत्यनुपपन्नम्। अभावाद्भावानुत्पत्तेः। स्यादेतत्। कर्म विनश्यत्स्वकालमेव स्वानुरूपं फलं जनयित्वा विनश्यति तत्फलं कालान्तरितं कर्त्रा भोक्ष्यत इति। तदपि न परिशुध्यति प्राग्भोक्तृसंबन्धात्फलत्वानुपपत्तेः। यत्कालं हि यत्सुखं दुःखं वात्मना भुज्यते तस्यैव लोके फलत्वं प्रसिद्धम्। नह्यसंबद्धस्यात्मना सुखस्य दुःखस्य वा फलत्वं प्रतियन्ति लौकिकाः। अथोच्येत मा भूत्कर्मानन्तरं फलोत्पादः। कर्मकार्यादपूर्वात्फलमुत्पत्स्यत इति। तदपि नोपपद्यते। अपूर्वस्याचेतनस्य काष्ठलोष्टसमस्य चेतनेनाप्रवर्तितस्य प्रवृत्त्यनुपपत्तेः। तदस्तित्वे च प्रमाणाभावात्। अर्थापत्तिः प्रमाणमिति चेत्। न। ईश्वरसिद्धेरर्थापत्तिक्षयात्॥ ३८॥

श्रुतत्वाच्च॥ ३९॥

---

கூடிய பலன் வருகிறது என்று சொல்லுவது பொருத்தமுடையதாக வாகமாட்டாது. அபாவத்தினின்றும் பாவத்தினுத்பத்தி ஸம்பவிக்காததே அதன் காரணமாகும்.

சங்கை—இஃதிருக்கட்டும். கர்மமோ விநாசத்தை யடையவாரம்பிக்குங்கால் தனது காலத்திலேயே தனக்கு அநுரூபமான (பொருத்தமாயுள்ள) பலனை உண்டு பண்ணி விட்டுப் பிறகு நாசத்தையடைகிறது. அப்பலன் வேறுகாலத்தில் கர்த்தாவினால் அனுபவிக்கப்படுகிறது என்கிறோம். எனின்?

உத்தரம்—அதுவும் சுத்தமுள்ளமுறையாக வாகமாட்டாது. போக்தாவுடன் ஸம்பந்தமேற்படுவதற்கு முன்னர் அதற்கு பலனாகுந்தன்மை சொல்லவியலாதிருப்பதே அதன் காரணமாகும். எக்காலத்தில் சுகமோ, துக்கமோ யாதொன்று ஆத்மாவினால் அநுபவிக்கப்படுகிறதோ அதற்கே பலனாகுந்தன்மை உலகில் பிரஸித்தமாக விருக்கிறது. உலகிலுள்ளவர்கள் ஆத்மாவுடன் ஸம்பந்தப்படாத சுகத்தையோ துக்கத்தையோ பலனாகவெண்ணுவதில்லை யன்றோ.

சங்கை—கர்மாவுக்கு அடுத்தபடியாகப் பலனுண்டாகவேண்டாம். கர்மத்தினது கார்யமான அபூர்வத்தினின்றும் பலனுண்டாகலாம் எனச் சொல்லுகிறோம் என்றாலோ?

உத்தரம்—அதுவும் பொருந்தாது. அசேதனமும், கட்டைக்கும் கல்லுக்குமொப்பானதும், சேதனனால் பிரவிருத்திசெய்விக்கப் படாததுமான அபூர்வத்துக்கு ப்ரவிருத்தி பொருந்தக்கூடியதாக வில்லாதிருப்பதே அதன் காரணமாகும். அபூர்வமிருக்கும் விஷயத்தில் ப்ரமாணமுமில்லை. * அர்த்தாபத்தியானது ப்ரமாணமாகும் என்றாலோ? அதுபொருந்தாது. ஈச்வரஸித்தியேற்படுவதிலிருந்து அர்த்தாபத்திக்கு இடமில்லாமலுமிருக்கிறது. (38) (எ-று)

---

* பெருத்தவனை தேவதத்தன் பகலில் சாப்பிடுவதில்லை என்றவிடத்தில், உடல் வாட்டமுறாதிருப்பதைக் கொண்டு பகல் போஜனமில்லாவிடினும் இரவில் போஜனஞ் செய்கிறான் என்று கிடைத்து விடுகிறது. ஆகவே இரவுபோஜனத்தை ஊஹிக்கும் ப்ரமாணம் அர்த்தாபத்தி எனப்படும்.

न केवलमुपपत्तेरेवेश्वरं फलहेतुं कल्पयामः किं तर्हि श्रुतत्वादपीश्वरमेव फलहेतुं मन्यामहे। तथाच श्रुतिर्भवति—'स वा एष महानज आत्मान्नादो वसुदानः' (बृ० ४। ४। २४) इत्येवञ्जातीयका ॥ ३९ ॥

## धर्मं जैमिनिरत एव ॥ ४० ॥

जैमिनिस्त्वाचार्यो धर्मं फलस्य दातारं मन्यते। अत एव हेतोः श्रुतेरुपपत्तेश्च। श्रूयते तावदयमर्थः 'स्वर्गकामो यजेत' इत्येवमादिषु वाक्येषु। तत्र च विधिश्रुतेर्विषयभावोपगमाद्यागः स्वर्गस्योत्पादक इति गम्यते। अन्यथा ह्यननुष्ठातृको याग आपद्येत तत्रास्योपदेशवैयर्थ्यं स्यात्। नन्वनुक्षणविनाशिनः कर्मणः फलं नोपपद्यत इति परित्यक्तोऽयं पक्षः। नैष दोषः। श्रुतिप्रामाण्यात्। श्रुतिश्चेत्प्रमाणं यथायं कर्मफलसंबन्धः श्रुत उपप-

---

## (ஸூ) சுருதத்வாச்ச (39)

(ப—ரை) **श्रुतत्वाच्च** (ஶ்ருதத்வாச்ச)=சுருதியிற் சொல்லியிருப்பதுபற்றியும் ஈஶ்வரனே பலந்தருபவராக வாகிருர். (39) (எ—று)

பாஷ்யம்.—யுக்தியிருப்பதைக் கொண்டுமட்டும் ஈஶ்வரனைப் பலஹேதுவாகக் கற்பிக்கின்ருேமில்லை. பின்னேயோ வென்னில் ஶ்ருதியிற் சொல்லியிருப்பதைக் கொண்டுமே ஈஶ்வரனையே பலஹேதுவாக எண்ணுகிருேம். அவ்விதமே ஶ்ருதியுமிருக்கிறது. அதாவது:—"மஹானும் அஜனும் ஆன அந்த இந்த ஆத்மாவே அன்னத்தைநாலாபக்கத்திலும் தருபவராகவும் வஸுவை (தனத்தைத்) தருவராகவுமாகிருர்." என இம்மாதிரியானவையாம். (39) (எ—று)

## (ஸூ) தர்மம் ஜைமினிரத ஏவ (40)

(ப—ரை) **अत एव** (அத ஏவ)=ஶ்ருதியும் யுக்தியுமிருப்பதிலிருந்தே **जैमिनिः** (ஜைமிநி:)=ஜைமிநி என்ற மஹருஷி **धर्मम्** (தர்மம்)=தர்மத்தையே பலதாதாவாக வெண்ணுகிருர். (40) (எ—று)

பாஷ்யம்.—ஜைமிநி என்ற ஆசிரியரோ தர்மத்தைப் பலதாதாவாக வெண்ணுகிருர். ஶ்ருதியும், யுக்தியுமிருப்பதே அதன் காரணமாகும். "ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் யாகஞ் செய்யவேண்டும்" என்ற இம்மாதிரியான வாக்கியங்களில் இந்தப் பொருள் சொல்லவும் படுகிறது. அவ்விடத்தில் யஜேத என்றவிடத்திலுள்ள லிங்கின் ஆதேசமான த என்பதின் ப்ரோணுருபமான அர்த்தத்துக்கு யாகமானது விஷயமாக விருத்தலே யடைவதால் யாகமானது ஸ்வர்க்கத்துக்கு உத்பாதகம்=ஸாதனம் என்றேற்படுகிறது. அவ்விதமில்லாவிடில் யாகமானது அநுஷ்டிப்பவரற்றதாக வாகிவிடும். அப்பொழுது இதனுடைய உபதேசத்துக்கு வையர்த்யமும் (பயனற்றதன்மையும்) வரத்தெரியும்.

சங்கை—ஒவ்வொருக்ஷணத்திலும் விநாசத்தையடையும் தன்மை வாய்ந்த கர்மத்தினிடமிருந்து பலனுண்டாவது பொருந்தக் கூடியதன்று என்பதாய் இந்த முறை விடப்பட்டிருக்கிறதன்ருே எனின்?

द्यते तथा कल्पयितव्यः। नचानुत्पाद्य किमप्यपूर्वं कर्म विनश्यत्कालान्तरितं फलं दातुं शक्नोति। अतः कर्मणो वा सूक्ष्मा काचिदुत्तरावस्था फलस्य वा पूर्वावस्थापूर्वं नामास्तीति तर्क्यते। उपपद्यते चायमर्थ उक्तेन प्रकारेण। ईश्वरस्तु फलं ददातीत्यनुपपन्नम्। अविचित्रस्य कारणस्य विचित्रकार्यानुपपत्तेर्वैषम्यनैर्घृण्यप्रसङ्गादनुष्ठानवैयर्थ्यापत्तेश्च। तस्माद्धर्मादेव फलमिति ॥ ४० ॥

**पूर्वं तु बादरायणो हेतुव्यपदेशात् ॥ ४१ ॥**

बादरायणस्त्वाचार्यः पूर्वोक्तमेवेश्वरं फलहेतुं मन्यते। केवलात्कर्मणोऽपूर्वाद्वा केवलात्फलमित्ययं पक्षस्तुशब्देन व्यावर्त्यते। कर्मापेक्षादपूर्वापेऽक्षाद्वा यथातथास्त्वीश्वरा-

---

உத்தரம்—இது தோஷமாகாது. ஶ்ருதிக்கு ப்ராமாண்யமிருப்பதே அதன் காரணமாகும். ஶ்ருதியானது ப்ரமாணமாக இருக்குமாயின் ஶ்ருதியிற் சொல்லியிருக்கப்பட்ட இந்தக் கர்மபலஸம்பந்தமானது எவ்விதம் சொன்னால் பொருந்துமோ அவ்விதம் கல்பிக்கவேண்டியது அவஶ்யமாக வாகிறது. விநாசத்தை யடையுமியல்புடைய கர்மமானது அபூர்வமெனப் பெயரியவொன்றை உண்டுபண்ணுமல் வெகுகாலத்துக்குப் பின்னர் வரும்பலனைத் தருவதற்குச் சக்தியுடையதாக வாகாது என்பது பற்றி கர்மத்தினது ஸூக்ஷ்மமான உத்தராவஸ்தை யொன்றோ பலத்தினுடைய பூர்வாவஸ்தை யொன்றோ அபூர்வம் என்ற பெயருள்ளதாக விருக்கிறது என ஊஹிக்கப்படுகிறது. இப்பொருள் இங்கு சொன்னமுறையால் பொருத்தமுள்ளதாகவுமாகிறது. ஈஶ்வரன் பலனைத்தருகிறார் என்பதோ பொருத்தமுள்ளதாக வாகமாட்டாது. விசித்திரமாக வில்லாத காரணப்பொருளுக்கு விசித்திரமான காரியத்தை யுண்டுபண்ணுதல் ஸம்பவிக்காததலாலும், வைஷம்யம், நைர்கிருண்யம் வருமாதலாலும், அநுஷ்டானம் பயனற்றதாக வாகிவிடுதலாலுமே என்றும். ஆனதுபற்றித் தர்மத்தினிடமிருந்தே பலனுண்டாகிறது என்கிறோம்.

(அ—கை) இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்த்தமாகவே அடுத்த ஸூத்திரத்தால் ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது.

**(ஸூ) பூர்வந்து பாதராயணோ ஹேதுவ்யபதேசாத் (41)**

(ப—ரை) **तु** (து)=முன்சொன்ன ஆக்ஷேபம் பொருந்தாது. **बादरायणः** (பாதராயணஃ)=பாதராயணர் என்ற ஆசிரியர் **पूर्वम्** (பூர்வம்)=முன்னர் சொல்லப்பட்ட ஈஶ்வரனையே பலஹேதுவாக (பலனைத் தருபவராக) எண்ணுகிறார். ஏன்? **हेतुव्यपदेशात्** (ஹேதுவ்யபதேஶாத்)=ஶ்ருதியில் ஈஶ்வரனே தர்மாதர்மங்களைச் செய்விப்பவராகவும், அவற்றின் பலனைத்தருபவராகவும் சொல்லப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். (41) (எ—று)

பாஷ்யம்.—பாதராயணரென்ற ஆசிரியரோ வெனில் முன்னர் சொல்லப்பட்ட ஈஶ்வரனையே பலனுக்கு ஹேதுவாக (காரணமாக) எண்ணுகிறார். தனித்த கர்மத்தினிடமிருந்தோ, தனித்த அபூர்வத்தினிடமிருந்தோ பலன் உண்டாகிறது

त्फलमिति सिद्धान्तः। कुतः—हेतुव्यपदेशात्। धर्माधर्मयोरपि हि कारयितृत्वेनेश्वरो हेतुर्व्यपदिश्यते। फलस्य च दातृत्वेन 'एष ह्येव साधु कर्म कारयति तं यमेभ्यो लोकेभ्य उन्निनीषते। एष उ एवासाधु कर्म कारयति तं यमधो निनीषते' इति। स्मर्यते चायमर्थो भगवद्गीतासु—'यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति। तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम्॥ स तया श्रद्धया युक्तस्तस्या राधनमीहते। लभते च ततः कामान्मयैव विहितान्हितान्' (७। २१) इति। सर्ववेदान्तेषु चेश्वरहेतुका एव सृष्टयो व्यपदिश्यन्ते। तदेव चेश्वरस्य फलहेतुत्वं यत्स्वकर्मानुरूपाः प्रजाः सृजतीति। विचित्रकार्यानुपपत्त्यादयोऽपि दोषाः कृतप्रयत्नापेक्षत्वादीश्वरस्य न प्रसज्यन्ते॥ ४१॥

इति श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्य श्रीमच्छंकरभगवत्पादकृतौ श्रीमच्छारीरकमीमांसाभाष्ये तृतीयाध्यायस्य द्वितीयः पादः॥ २॥

---

என்ற இந்த முறையானது ஸூத்திரத்திலுள்ள (து) என்றதால் மறுக்கப்படுகிறது. கர்மத்தை யபேக்ஷிப்பவராகவோ, அபூர்வத்தை யபேக்ஷிப்பவராகவோ எவ்வித மேனுமாகுக ஈப்வரனிடமிருந்தேதான் பலனுண்டாகிறது என்பது ஸித்தாந்தம். என்? ஹேதுவ்யபதேசமிருப்பதே அதன் காரணமாகும். "இவரே யன்றோ அவனை நற்கருமங்களைச் செய்யச்செய்கிறார் எவனை உயரத்தூக்க வெண்ணுகிறாரோ, இவரே யன்றோ அவனைக் கீழ்ச்செல்லும்படி செய்விக்கிறார் எவனைக் கீழச் செல்லுவிக்கவெண்ணுகிறாரோ" என்றதால் ஶ்ருதியில் தர்மாதர்மங்களுக்குக் காரயிதாவாக விருப்பதுபற்றியும், பலனைத் தருபவராக விருத்தல்பற்றியும் ஈப்வரன் ஹேதுவாகச் சொல்லப்படுகிறார். இப்பொருள் கீதையிலும் சொல்லப்படுகிறது. அதாவது:—"எந்த எந்தப்பக்தன் எந்த எந்தச் சரீரத்தை ஶ்ரத்தையுடன் அர்ச்சிக்க விரும்புகின்றானோ அந்தந்தப் பக்தனுக்குண்டான அந்த ஶ்ரத்தையை நான் அசைவற்றதாகச் செய்கிறேன். அவன் நிலைபெற்ற அந்த ஶ்ரத்தையுடன் கூட அந்தச் சரீரத்தினுடைய ராதனத்தை (பூஜனத்தைச்) செய்கிறான். அப்பூஜை காரணமாய் என்னாலேயே கொடுக்கப்பட்ட வேண்டிய இஷ்டங்களை யடைகிறான்" என்றும். எல்லாவேதாந்தங்களிலும் கூட ஈப்வரகாரணங்களாகவே ஸிருஷ்டிகள் சொல்லப்படுகின்றன. சொந்த கர்மத்துக்குக் கொத்தவர்களாக ப்ரஜைகளை ஸிருடிக்கிறார் என்பது யாதுண்டோ அதுவேதான் ஈப்வரனுக்குப் பலஹேதுத்வமாகவாகும். விசித்திரகாரியத்தின் ஸிருஷ்டி ஸம்பவிக்காது என்றதாதிதோஷங்கள் ஜீவனாற் செய்யப்பட்ட ப்ரயத்நாபேக்ஷனாக அவரிருப்பதுபற்றி இவருக்கு வருவதற்கிடமில்லை. (41) (எ-று)

எட்டாவது பலாதிகரணம் முற்றிற்று.

ஸ்ரீமத் கோவிந்தபகவத்பூஜ்யபாதரவர்களின் சிஷ்யர்களான ஸ்ரீமத் சங்கர பகவத்பூஜ்யபாத ரவர்களின் கிருதியான சாரீரமீமாம்ஸா பாஷ்யத்தில் மூன்றாவது அத்தியாயத்தின்

இரண்டாவது பாதம் முற்றிற்று.

[अत्र परापरब्रह्मविद्यागुणोपसंहारविवरणम् ]

ओं नमो भगवते वासुदेवाय ॥

# மூன்ருவது அத்தியாயத்தின் மூன்ருவது பாதம்.

(அவதாரிகை) चिदानन्दाकारं जलदरुचि सारं श्रुतिगिरां
व्रजस्त्रीणां हारं भवजलधिपारं कृतधियाम् ।
विहन्तुं भूभारं विदधदवतारं मुहुरहो
महो वारंवारं भजत कुशलारंभकृतिनः ॥

"सर्वे वेदा यत्पदमामनन्ति तपांसि सर्वाणि च यद्वदन्ति ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण ब्रवीमि ॥"

[எல்லாவேதங்களும் எந்த ஸ்வரூபத்தைச் சொல்லுகின்றனவோ, எல்லாத் தவங்களும் எதைச் சொல்லுகின்றனவோ, (அதாவது: அடைவதற்காக ஏற்பட்டனவோ என்றும்) எதில் விருப்பங்கொண்டு ப்ரம்ஹசர்யத்தைச் செய்கின்றனரோ அந்த ஸ்வரூபத்தைச் (அதாவது: ப்ரம்ஹத்தை என்றும்) சுருக்கமாக உனக்கு உபதேசிக்கின்றேன்.] என்றபடி கர்மப்ரம்ஹகாண்டாத்மகமான வேதங்கள் யாவும் ப்ரம்ஹத்தை யுபதேசிப்பதிலேயே முக்கியநோக்குடையன வென்றேற்படுகிறது. ஆனல் "**तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसा अनाशकेन** [அந்த இந்தப் பரம் பொருளை ப்ராம்மணர்கள் வேதாநுவசத்தினுலும் (ப்ரம்ஹசரியத்தினுலும்) யாகத்தினுலும் தானத்தினுலும் (யாகதானேபலக்ஷிதமான கிருஹஸ்தாஶ்ரமதர்மத்தினுலும்) தபஸ்ஸினுலும் (தபோபலக்ஷிதமான வானப்ரஸ்தாஶ்ரமதர்மத்தினுலும்) விஷயப்பற்றைவிலக்குவதனுலும் (ஸன்னியாஸாஶ்ரமதர்மத்தினுலும்) அறியவிரும்புகின்றனர்] என்றதால் அந்தந்த ஆஶ்ரமத்துக்குரிய தர்மங்களால் ப்ரம்ஹத்தை யறிய ஆவலுண்டாவதாக மட்டும் தெரிகிறது. ஆகவே கர்மகாண்டங்களால் விதிக்கப்பட்ட கர்மானுஷ்டானத்தினல் சித்த சுத்தியும் அதன் மூலம் முமுக்ஷு முண்டாகின்ற தென்றும், ப்ரம்ஹக்ஞானத்தால் அத்யாரோபாபவாதமுறையால் நிர்விஶேஷ ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரமுண்டாகின்ற தென்றும் ஏற்படுகிறது. சித்த சுத்தி வாயிலாகச் சித்தைகாக்ரியத்தைத் தரும் கர்மமானது காயிகமென்றும், மானஸிகமென்றும் இருவகைப்படும். அவற்றுள் காயிக கர்மங்களை ப்ரதானமாகச் சொல்லும் வேதபாகம் கர்மகாண்டமெனப்படும். மானஸிகமான கர்மங்களை ப்ரதானமாகச் சொல்லும் வேதபாகம் ஸங்கர்ஷணகாண்டமென்றும் உபாஸனகாண்டமென்றும் சொல்லப்படும். ப்ரம்ஹக்ஞானத்தை ப்ரதானமாயுபதேசிக்கும் வேதபாகம் உபநிஷத்தென்றும், ப்ரம்ஹகாண்டமென்றும், க்ஞானகாண்டமென்றும், வேதாந்தமென்றும் சொல்லப்படும். ஆனல் வேதாந்தங்களில் ஆங்காங்கு நிர்க்குண ப்ரம்ஹ ஸாக்ஷாத்காரத்

துக்குப் பரமாந்தரங்கஹேதுவான சித்தைகாக்ரியத்தைத் தருவதும் அவாந்தரமான சிலபலனைத்தருவதுமான ஸகுணப்ரம்ஹ உபாஸனங்களும் சொல்லப்படுவதுண்டு. ஆனுல் ப்ரம்ஹம் உண்மையில் எவ்விதக்குணஸம்பந்தமு மற்றதானுயினும் அநாதிஸித்தங்களான உபநிடதங்கள் உபாஸனைக்கு வேண்டிச் சிற்சிலகுணங்களை ப்ரம்ஹத்துக்குக் கற்பித்திருப்பதால் எத்தகைய குணங்களைச் சாஸ்திரம் ப்ரம்ஹத்துக்குக் கற்பித்திருக்கிறதோ அத்தகைய குணங்களுடன் கூடினதாகவே தான் ப்ரம்ஹோபாஸனஞ் செய்யவேண்டுவதாகவாகிறது. ஆனுல் சிற்சில குணவிசிஷ்டமாகச் செய்யப்படும் ப்ரப்ஹோபாஸனத்துக்குத் தனியே வெவ்வேறுபெயர்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எப்பெயர் கொண்ட எந்த உபாஸனஞ் செய்யப்படுங்கால் எந்தெந்தக் குணங்களைச் சேர்த்துக்கொள்ளும்படி சாஸ்திரமுபதேசிக்கிறதோ அக்குணங்களை விடுத்தாலும், அல்லது வேறு உபாஸனத்துக்குச் சொல்லிய குணங்களை வேறுவுபாஸனத்தில் சேர்த்தாலும் அது சாஸ்திரீய உபாஸனமாக வாகாததுடன் தனிப்பட்ட உபாஸனத்துக்குச் சாஸ்திரஞ் சொல்லியபலனையும் இவன் அடையமுடியாதவனுகவே தானுகிவிடக்கூடும். ஆகவே எந்தத் தனிப்பட்ட உபாஸனத்துக்குவேண்டி எந்தெந்தக் குணங்கள் சொல்லப்படுகின்றனவென்பதை அறிவிக்கவேண்டியும், ஒரேதனிப்பட்டவுபாஸனத்துக்குரிய குணங்கள் பலசாகைகளையுடைய உபநிடதங்களில் ஓரிடத்தில் சிலகுணங்களும், மற்றும் சிலசாகைகளில் சிலகுணங்களும் விதிக்கப்பட்டிருப்பின் அவற்றையும் சேர்த்துக்கொண்டு தனிப்பட்ட இந்த உபாஸனத்துக்குரிய மொத்தமான எல்லாக்குணங்களுடனும் கூடினதாக ப்ரம்ஹத்தை உபாஸிப்பதாற்ருன் சாஸ்திரோக்தபலனை இவனடையமுடியு மாதலால் அதற்கு வேண்டி இந்த மூன்ருவது பாதம் ஆரம்பிக்கப்படுகிறது. ஆகவேதான் இந்த 3-வது பாதத்துக்குக் குணேபஸம்ஹாரபாதம் எனப் பெயரிடப்பட்டது பொருந்துகிறது. அவ்விதம் ஒரு வேதசாகையிற் சொல்லியகுணங்களை வேறுசாகையிற் சொல்லிய குணங்களுடன் சேர்த்துப் பொருள்கொண்டு செய்யப்படும் உபாஸனம் மானஸிககர்மாவாகவாவதால் காயிகமான கர்மங்களைச் சொல்லும் கர்மகாண்டத்தில் ஜைமினி முதலியோற் கையாண்ட முறையைப் பின்பற்றியே இங்கும் பொருள் கொள்ளவேண்டுவது அவசியமாகின்றமையின் இந்தப் பாதத்தில் பூர்வமீமாம்ஸையிற் தனிப்பட்ட கர்மங்களை நிர்ணயிப்பதற்குச் சொல்லிய பலநியாயங்கள் ஆங்காங்கு ஸூத்திரத்திலும், பாஷ்யத்திலும் பூர்வபக்ஷம் சொல்லும் பொழுதும் ஸித்தாந்தம் சொல்லும்பொழுதும் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. இந்தக் குணேபஸம்ஹாரபாதத்தில் 66 ஸூத்திரங்களும் 36 அதிகரணங்களு மிருக்கின்றன. அவற்றுள் ஸர்வவேதாந்தப்ரத்யயம் என்றதாதிய 4 ஸூத்திரங்கள் கொண்ட முதலாவது அதிகரணத்தில் வேதாந்தமான ப்ரம்ஹகாண்டத்தின் சாகைகள் பலவற்றுள்ளும் ஒரே உபாஸனம் சிலசாகைகளில் சிலகுணங்களுடனும், சிலசாகைகளில் சிலகுணங்களுடனும் உபதேசிக்கப்பட்டிருப்பினுங் கூட ப்ரதானமான ஒரே உபாஸனவிஷயமான எல்லாக்குணங்களையும் ஒன்று சேர்த்துக் கொண்டே அந்த

## १ सर्ववेदान्तप्रत्ययाधिकरणम् । सू० १-४

## सर्ववेदान्तप्रत्ययं चोदनाद्यविशेषात् ॥ १ ॥

सर्ववेदेष्वनेकत्वमुपास्तेरथवैकता । अनेकत्वं कौथुमादि नामधर्मविभेदतः ॥ १ ॥

विधिरूपफलैकत्वादेकत्वं नाम न श्रुतम् । शिरोव्रताख्यधर्मस्तु स्वाध्याये स्यान्न वेदने ॥ २ ॥

**व्याख्यातं विज्ञेयस्य ब्रह्मणस्तत्त्वम । इदानीं तु प्रतिवेदान्तं विज्ञानानि भिद्यन्ते न वेति विचार्यते । ननु विज्ञेयं ब्रह्मपूर्वापरादिभेदरहितमेकरसं सैन्धवघनवदवधारितं तत्र**

---

ப்ரதான உபாஸனத்தைச் செய்யவேண்டுமெனவும், அதற்கான நியாயங்களுமுப தேசிக்கப்படுகின்றன. அதன் முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

**(ஸூ) ஸர்வவேதாந்தப்ரத்யயம் சோதநாத்யவிசேஷாத் (1)**

(ப-ரை) **सर्ववेदान्तप्रत्ययम्** (ஸர்வேதாந்தப்ரத்யயம்)=எல்லாவேதாந்தங்களை யும் ப்ரமாணமாகக் கொண்ட உபாஸனமானது (அதாவது:—ப்ரமாணபூதமான எல்லாவேதாந்தங்களிலும் விதிக்கப்படுமுபாஸனமானது என்றும்) [**एकमित्येव विजानीयात्** (ஏகமித்யேவ விஜாநீயாத்)=ஒன்றென்றே அறியவேண்டும்.] **कुतः** (குதஃ)=ஏன்? **चोदनाद्यविशेषात्** (சோதநாத்யவிசேஷாத்)=சோதனை=அதைவிளக் கும் சப்தம், ஆதி=பலஸம்பந்தம், உபாஸ்யமானரூபம், பெயர் முதலியன **அவிசே ஷாத்**=பொதுவாக விருப்பதே அதன் காரணமாகும். (1)

வையாஸிக நியாயமாலை.

(க-ரை) எல்லாவேதாந்தங்களிலுமுள்ள உபாஸ்தி ஒன்று? அல்லது வெவ் வேறு? என்பது ஸந்தேஹம். கௌதுமம் முதலிய பெயர், சிரோவ்ரதம் என்ற தர்மம் இவை வேவ்வேருக இருப்பதுபற்றி உபாஸ்தி வெவ்வேறென்றேதான் சொல்லவேண்டும் என்பது பூர்வபக்ஷம். உபாஸ்தியைப் பற்றிய விதி, உபாஸ் யத்தின் ஸ்வரூபம், உபாஸ்தியின் பலன் இவை ஒன்ருக விருப்பதால் உபாஸ்தியா னது ஒன்று என்றுதான் ஏற்படுகிறது. பெயரோ முக்கியமானதாகச் சொல்லப் படவில்லை. சிரோவ்ரதம் எனப்பெயரிய தர்மமோ வெனில் வேதாத்யயனத்திற் காக ஏற்பட்டதே யொழிய உபாஸ்திவிஷயத்திலன்று என்பது ஸித்தாந்தம்.

பாஷ்யம்.—விக்ஞேயமான ப்ரம்ஹத்தினுடைய தத்துவமானது வியாக்கியா னஞ் செய்யப்பட்டது. இதுபோழ்தோ ப்ரதிவேதாந்தங்களிலும் விக்ஞானங் கள் வேறுபடுகின்றனவா? அல்லது இல்லையா? என விசாரிக்கப்படுகிறது.

சங்கை—விக்ஞேயமான ப்ரம்ஹமானது (1) பூர்வாபராதி பேதமற்றதென் றும், உப்புக்கட்டிபோல (2) ஏகரஸமானதென்றும் முன்னர் உறுதிகூறப்பட்டி

---

(1) அவயவமுள்ள பொருளுக்கு அதன் அவயம் வேறுபடுவதிலிருந்து பேதமேற் படலாமானதால் அத்தகைய அவயவங்களுடன் கூடின ப்ரம்ஹத்தை விஷயமாகக் கொ ண்ட விக்ஞானங்களும் தனக்குரிய விஷயபேதத்தால் பேதப்படக்கூடும். ப்ரம்ஹத்துக் கோ எவ்வித அவயவமும் இல்லை என மறுக்கப்பட்டிருக்கிறது.

(2) ப்ரம்ஹமானது பல்வேறுபட்ட ஸ்வபாவமுள்ளதன்று. அவ்விதமாயின் ஸ்வ

कुतो विज्ञानभेदाभेदचिन्तावतारः। नहि कर्मबहुत्ववद्ब्रह्म बहुत्वमपि वेदान्तेषु प्रतिपिपादयिषितमिति शक्यं वक्तुम्। ब्रह्मण एकत्वादेकरूपत्वाच्च। नचैकरूपे ब्रह्मण्यनेकरूपाणि विज्ञानानि संभवन्ति। नह्यन्यथार्थोऽन्यथा ज्ञानमित्यभ्रान्तं भवति। यदि पुनरेकस्मिन्ब्रह्मणि बहूनि विज्ञानानि वेदान्तान्तरेषु प्रतिपिपादयिषितानि तेषामेकमभ्रान्तं भ्रान्तानीतराणीत्यनाश्वासप्रसङ्गो वेदान्तेषु। तस्मान्न तावत्प्रतिवेदान्तं ब्रह्मविज्ञानभेद आशङ्कितुं शक्यते। नाप्यस्य चोदनाद्यविशेषादभेद उच्यते। ब्रह्मविज्ञानस्याचोदनालक्षणत्वात्। अविधिप्रधानैर्हि वस्तुपर्यवसायिभिर्ब्रह्मवाक्यैर्ब्रह्मविज्ञानं जन्यत इत्यवोचदाचार्यः 'तत्तु समन्वयात्' (ब्र० सू० १।१।४) इत्यत्र। तत्कथमिमां भेदाभेदचिन्तामारभत इति। तदुच्यते—सगुणब्रह्मविषया प्राणादिविषया चेयं विज्ञानभेदाभेदचिन்तेत्यदोषः। अत्र हि कर्मवदुपासनानां भेदा-

---

ருக்கிறது. அவ்விதமிருக்க விக்ஞானபேதாபேதத்தைப் பற்றிய விசாரத்துக்கு இடமேது? மேலும், கர்மவெகுத்வத்தைப் போல ப்ரம்ஹவெகுத்வத்தையும் வேதாந்தமானது சொல்லவிரும்புகிறது எனச் சொல்லவும் முடியாது. ப்ரம்ஹம் ஏகமாக (ஒன்ருக) இருப்பதும், எவ்விததர்பமுமற்றதாக விருப்பதுவுமே அதன் காரணமுமாகும். ஏகரூபமான (எவ்விததர்மமுமற்ற) ப்ரம்ஹத்தினிடத்தில் அநேகரூபங்களான விக்ஞானங்கள் ஸம்பவிக்க முடியாதன்ருே? பொருள் வேறுபட்டது அதைப்பற்றியுண்டாகும் விக்ஞானங்கள் வேறுவிதமானது என்பது மயக்கமற்றதாக வாகமுடியாதன்ருே? ஏரேப்ரம்ஹத்தினிடத்தில் வெவ்வேறு வேதாந்த சாகைகள் பலதரப்பட்ட விக்ஞானங்களை உபதேசிக்க விரும்புமாயின் அவ்விக்ஞானங்களுள் ஒன்றுபட்டும் மயக்கமற்றது (உண்மையானது) என்றும், மற்றவை மயக்கங்களானவை என்றேற்பட்டு வேதாந்தங்களில் நம்பிக்கைக்குறைவு வந்து விடத்தெரியும். ஆனதுபற்றி ஒவ்வொரு வேதாந்தங்களிலும் விக்ஞானபேதம் ஆசங்கிக்கவும் முடியாது. மேலும் சோதனை (விதிவாக்கியம்) முதலியன பொதுவாக விருப்பதன் மூலம் உபாஸனையின் அபேதமும் சொல்லமுடியாது. ப்ரம்ஹவிக்ஞானமானது விதிக்கு விஷயமாகாதிருப்பதே அதன் காரணமாகும். ஆசிரியரோ விதியைப்ரதானமாகக் கூருதனவும், வஸ்துவை மட்டும் கூறுவதில் நோக்குடையனவுமான ப்ரம்ஹவாக்கியங்களால் ப்ரம்ஹவிக்ஞான முண்டாவதாக வன்ருே "தத்துஸமந்வயாத்" என்ற விடத்தில் சொல்லியிருக்கிருர். அவ்விதமிருக்க உபாஸனையின் பேதாபேதத்தைப் பற்றிய இந்த விசாரத்தைத் தொடங்கக்காரணம் யாது எனின்?

உத்தரம்.—அவ்விஷயத்திற் சொல்லப்படுகிறது—ஸகுண ப்ரம்ஹவிஷயமாகவும், ப்ராணுதி விஷயமாகவும் இந்த விக்ஞானத் (உபாஸ்தி) தின் பேதாபேதசிந்தையேற்படுவதால் முற்கூறிய தோஷமேதுவுமில்லை. இவ்விடத்திலோ கர்மங்களுக்குப் போல உபாஸனங்களுக்கும் பேதாபேதங்கள் ஸம்பவிக்கலாம். கர்மங்கள்

---

பாவமாறுபாட்டால் உபாஸ்தி பேதம் சொல்லக்கூடும். ப்ரம்ஹமோ ஒரேவிதமான ஸ்வபாவ (ஸ்வரூப) முள்ளது என்பது ஏகரஸம் என்றதாற் சொல்லப்படுகிறது.

भेदौ संभवत: कर्मवदेव चोपासनानि दृष्टफलान्यदृष्टफलानि चोच्यन्ते । क्रममुक्तिफलानि च कानिचित्सम्यग्ज्ञानोत्पत्तिद्वारेण । तेष्वेषा चिन्ता संभवति । किं प्रतिवेदान्तं विज्ञानभेद आहोस्विन्नेति । तत्र पूर्वपक्षहेतवस्तावदुपन्यस्यन्ते । नाम्नस्तावद्भेदप्रतिपत्तिहेतुत्वं प्रसिद्धं

---

போலவே உபாஸனங்களும் திருஷ்டமான பலனுள்ளனவாகவும், அதிருஷ்டமான பலனுள்ளனவாகவும் விதிக்கப்படுகின்றன. சில உபாஸனங்கள் ஸம்யக்ஞானத்தை யுண்டுபண்ணும் வாயிலாக க்ரமமுக்தியைத் தருவனவாகவும் காணப்படுகின்றன. அந்த உபாஸனங்களில் இந்த விசாரமானது ஸம்பவிக்கக் கூடியதுதான். அதாவது:—ஒவ்வொரு வேதாந்த சாகைகளிலும் விக்ஞானபேதமுண்டா? அல்லது இல்லையா? என்றும்.

அவ்விஷயத்தில் பூர்வபக்ஷத்துக்குரிய ஹேதுக்கள் கூறப்படுகின்றன. ஜ்யோ(1)திஸ் முதலிய விடங்களில் நாமாவு (பெயரு) க்கு பேதக்ஞான ஹேதுவாக

---

(1) பூர்வமீமாம்ஸையில் சாகாந்தராதிகரணத்தின் பூர்வபக்ஷத்தில் பெயர், ரூபம், தர்மவிசேஷம், புனருக்தி (அப்யாஸம்) நிந்தை, சக்தி, ஸமாப்தி (முடிவிலுள்ள) வசனம், ப்ராயச்சித்தம், அந்யார்த்ததரிசனம் (அதாவது அர்த்தவாதம்) இவை காணப்படுவதைக் கொண்டு ஒருசாகையிலுள்ள கர்மத்துக்கும், மற்றொருசாகையிலுள்ள கர்மத்துக்கும் பேதமானது சொல்லப்பட்டிருக்கிறது. அங்குகூறியநாம (பெயர்) முதலியபேத ஹேதுக்கள் பின்வருமாறு—"அதைஷ ஜ்யோதி: அதைஷ விச்வஜ்யோதி: அதைஷ ஸர்வ ஜ்யோதி: ஏதேந ஸஹஸ்ரதக்ஷிணேந யஜேத" என்றவிடத்தில் ஏதேந யஜேத என்பதால் முன்னற் கூறப்பட்டுள்ள ஜ்யோதிஷ்டோமத்தையே அநுவாதஞ் செய்துகொண்டு ஸஹஸ்ரதக்ஷிணை எனப்பெயரிய குணமானது விதிக்கப்படுகிறதா? அல்லது ஜ்யோதிஸ் என்றும், விச்வஜ்யோதிஸ், என்றும், ஸர்வஜ்யோதிஸ் என்றுமான இம்மூன்றும் முன்னர் கூறப்பட்ட ஜ்யோதிஷ்டோமம் என்ற கர்மத்தைக் காட்டிலும் வேறுபட்டன,அவைகளேதான் ஸஹஸ்ர தக்ஷிணையுடன் கூடியன என்பதாய் "ஏதேந யஜேத" என்ற வாக்கியத்தால் விதிக்கப்படுகின்றனவா? என ஸந்தேஹமுதயமாகவே யஜேத என்பதால் முன்னற் கூறப்பட்ட கர்மமானது ப்ரத்யபிக்ஞா (ஐக்யக்ஞான) முறையால் அறிவிக்கப்படுவதாலும், நாமங்கள் ஆக்யாதத்துக்கு (திஙந்தபதத்துக்கு) உள்ளடங்கியிருப்பதாலும், அதாவது: விசேஷணமாகவிருப்பதாலும், ஜ்யோதிராதி சப்தங்களும் முன்னற் கூறப்பட்ட ஜ்யோதிஷ்டோமமென்ற கர்மத்தினது பெயர்களேயாகும். ஒன்றுக்கே அநேகம் பெயர்களிருப்பது உலகில் ப்ரஸித்தமாகவுமிருக்கிறது. அதாவது:—ஒருவனே பிதாவென்றும், புத்திரனென்றும், ப்ராதாவென்றும், அம்மான் என்றும், தேவதத்தனென்றும் சொல்லப்படுவதைக்காண்கிறோம் என்பதாம். என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே, ஸித்தாந்தம் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது:—இங்கு கூறிய ஜ்யோதிஸ், விச்வஜ்யோதிஸ், ஸர்வஜ்யோதிஸ் முதலிய பெயர்கள் யஜேத என்ற திஙந்தத்துக்கு விசேஷணங்களாக வுண்மையிலாகுமானல் பூர்வபக்ஷி சொல்லுவது பொருந்தலாம்தான். ஜ்யோதிராதி நாமங்(பேயர்) களோ யஜேத என்ற திஙந்தத்துடன் ஒத்ததாக இல்லாமல் (மூன்றும் வேற்றுமையுடன் கூடாமல்) ஒன்றும் வேற்றுமை (ப்ரதமாவிபக்தி) உள்ளனவாகத் தொடக்கத்திலேயே தனியாகப் படிக்கப்பட்டனவாய்க் கொண்டு சப்தம் வேறுபடுவதன் மூலமேற்படும் அர்த்த (பொருளின்) பேதத்தைத் தெரிவிக்கின்றன. மேலும், 8விதமான தோஷமுள்ள

ज्योतिरादिषु। अस्ति चात्र वेदान्तान्तरविहितेषु विज्ञानेष्वन्यदन्यन्नाम तैत्तिरीयकं वाजसनेयकं कौथुमकं शाट्यायनकमित्येवमादि। तथा रूपभेदोऽपि कर्मभेदस्य प्रतिपादकः प्रसिद्धो 'वैश्वदेव्यामिक्षा वाजिभ्यो वाजिन' मित्येवमादिषु। अस्ति चात्र रूपभेदः। तद्यथा—केचिच्छाखिनः पञ्चाग्निविद्यायां षष्ठमपरमग्निमामनन्त्यपरे पुनः पञ्चैव पठन्ति।

---

விருத்தல் ப்ரஸித்தமாகவிருக்கிறது. இவ்விடத்திலும் வேதாந்தத்திலுள்ள வெவ்வேறுசாகைகளில் காணப்படும் விக்ஞானங்களில் (உபாஸனங்களில்) தைத்திரீயகம், வாஜஸநேயகம், கௌதுமகம், சாட்யாயனகம், என இம்மாதிரியான வெவ்வேறு பெயர்கள் இருக்கவுமிருக்கின்றன. அவ்விதமே "தப்தே பயஸி தத்யாநயதி ஸா வைஸ்வதேவ்யாமிக்ஷா" என்றதாதியான விடங்களில் ரூபபேதமும் கர்மபேதத்தைத் தெரிவிப்பதாக ப்ரஸித்தமாகவே இருக்கிறது. இவ்விடத்திலோ (1) ரூபபேதமுமிருக்கிறது. அதாவது:—சிலசாகைக்காரர்கள் பஞ்சாக்னி வித்

---

விகல்பம் வருவதன்மூலம் (விகல்பத்தில் 8வித தோஷங்களை 3-வது அத்தியாயம் 62-வது பக்கத்தில் விரிவாய் காண்க.) ஒரு சப்தத்துக்கு அனேகம் பொருள் சொல்லுவது எவ்விதம் பொருந்துவதில்லையோ இவ்விதமே ஒரே பொருளுக்கு அநேகம் (1)சப்தங்களிருப்பதும் அவ்விதமேதானாகும். ஆகவே உபக்கிரமத்திலேயே "அத ஏஷ ஜ்யோதி:" என்றதாதி நிர்த்தேசஞ் செய்திருப்பதிலிருந்து அர்த்தபேதமானது ஸித்தித்துவிடவே இந்த ஜ்யோதிராதி பதங்களால் விதிக்கப்படும் பொருள் யாது என ஆசங்கை வருங்கால் "ஏதேந ஸஹஸ்ரதக்ஷிணேந யஜேத" என்ற வாக்கியத்தினால் யாகரூபமான பொருள் விதிக்கப்படுகிறது எனவேற்படுகிறது. ஆகவே முதலிலுண்டான பேதக்ஞானத்தைக் கொண்டுப் பின்னருண்டாகும் அபேதஸாதகமான ப்ரத்யபிக்ஞான (ஐக்யக்ஞான) மானது விடப்படுகிறது. என்பதாய் நாமாவை (பெயரை) யொட்டிக் கர்மபேதமானது பூர்வமீமாம்ஸையில் சொல்லப்பட்டிருக்கிறது என்பதாம்.

(1) குறிப்பு—ஒருவனே அம்மான் என்றும், பிதாவென்றும், புத்திரனென்றுமான சப்தங்களால் சொல்லப்படுவதாகத் தோற்றமேற்படினும் பிதிருத்வம் என்ற தர்மத்தையொட்டிப் பிதாவென்ற சப்தமும், புத்திரத்வம் என்ற தர்மத்தையொட்டி புத்திரன் என்ற சப்தமும் பிரயோகிக்கப்படுவதால் ஒரே புருஷன் அந்தந்த தர்மத்துடன் கூடுங்கால் வேறுபட்டவனாகவேதானாகிறான் என்பது ஸித்தாந்தியின் மதமாகும். இவ்விதமே குடம், கலசம் முதலிய பல சப்தங்களால் சொல்லப்படும் ஒரே பொருள் விஷயத்திலும் கண்டு கொள்ளவேண்டும் என்றாம்.

(1) தப்தே பயஸி தத்யாநயதி ஸா வைச்வதேவ்யாமிக்ஷா என்ற விடத்தில் காய்ச்சின பாலில் தயிரைவிடுவதால் பாலிலுண்டாகும் கட்டியான பாகம் ஆமிக்ஷையென்றும், அது நீக்கி வெரும் ஜலமானபாகம் வாஜிநம் என்றும் சொல்லப்படும். இவ்விடத்தில் விச்வதேவர் என்ற தேவதைகளையுடையதும் ஆமிக்ஷா என்ற த்ரவ்யத்தையுடையதுமான ஒரு கர்மம் விதிக்கப்படுகிறது. இதற்குமேல் வாஜிப்யோ வாஜிநம் என்ற வாக்கியம் காணப்படுகிறது. இந்த வாக்கியத்தால் வைச்வதேவ்யாமிக்ஷா என்ற வாக்யத்தால் விதிக்கப்பட்ட கர்மத்தைக் காட்டிலும் வேறான கர்மம் விதிக்கப்படுகிறதா? அல்லது "வைச்வதேவ்யாமிக்ஷா" என்றதால் விதிக்கப்பட்ட கர்மாவில் குணம் விதிக்கப்படுகின்றதா? என்று ஸந்தேஹம் வர அவ்விஷயத்தில் பின்வருமாறு பூர்வபக்ஷம் செய்யப்படுகி

तथा प्राणसंवादादिषु केचिदूनान्वागादीनामनन्ति केचिदधिकान्। तथा धर्मविशेषोऽपि कर्मभेदस्य प्रतिपादक आशङ्कितः कारीर्यादिषु। अस्ति चात्र धर्मविशेषः। यथाथर्वणिकानां शिरोव्रतमिति। एवं पुनरुक्त्यादयोऽपि भेदहेतवो यथासंभवं वेदान्तान्तरेषु योज-

யையில் (1) ஆறுவதாக வொரு வேறு அக்னியைப் படிக்கின்றனர். வேறுசிலரோ ஐந்து அக்னிகளையே படிக்கின்றனர். அவ்விதமே ப்ராணஸம்வாதாதிகளில் சந்தோகர்கள் வாக், சக்ஷுஸ், சுரோத்ரம், மனஸ் என்றதால் குறைவுள்ளதாகவே வாகாதி ப்ராணன்களைப் படிக்கின்றனர். சிலர் (வாஜஸநேயிகள்) முற்கூறிய நான்குப்ராணன்களுடன் **ரேதஸ்** என்ற அதிகமானதொரு ப்ராணனையும் படிக்கின்றனர். அதுபோலவே (2) காரீரீமுதலிய விடங்களில் தர்மவிசேஷமும் (அங்கவிசேஷமும்) கர்மபேதத்தை ப்ரதிபாதிப்பதாக ஆசங்கிக்கப்பட்டிருக்கிறது. இவ்விடத்திலும் தர்மவிசேஷமிருக்கிறது. அதர்வவேத உபநிடதமான முண்டகோபநிடதத்தை அத்யயனஞ் செய்பவர்க்குச் சிரஸ்ஸில் நெருப்புச்சட்டியைத்

றது. அதாவது:—வைச்வதேவ யாகத்தில் வஜிப்ய: என்ற வாக்கியத்தால் குணம்தான் விதிக்கப்படுகிறது என்றும். இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே விச்வதேவர் என்ற தேவதையையுடையதும் ஆமிக்ஷா என்ற த்ரவியத்தையுடையதுமான கர்மம் வேறென்றும், வாஜிப்ய: என்றதாற் சொல்லப்படும் அச்வ என்ற தேவதையையுடையதும் வாஜிநம் என்ற த்ரவியத்தையுடையதுமான கர்மம் தனிப்பட்டதென்றும், (தஸ்மாத்வாஜிபதோத் தேச்யாச்வதேவதாகம், வாஜிநத்ரவ்யகமந்யதேவ கர்ம என்று ப்ரம்ஹ வித்யாபரணத்தில் கூறியதை அனுஸரித்து இவ்விதமெழுதப்பட்டது. ராமானந்தர் முதலியோர் வாஜி என்ற சப்தத்தாலேயே தேவதையைக் குறிக்கின்றனர்.) இவ்விதம் இவ்விரண்டு கர்மங்களும் தனிப்பட்டதெனக்கொள்ளுவதற்கு "த்ரவ்யம் தேவதை இரண்டும்யாகத்தின் ரூபமாகும்" என்றபடி ஆமிக்ஷா என்ற த்ரவ்யமும் விச்வதேவ என்ற தேவதையும் என்ற த்ரவ்யதேவதைகள் தனியாகச் சொல்லப்பட்டிருப்பதும், வாஜிநம் என்ற த்ரவ்யமும், வாஜிப்ய: என்றதாற் சொல்லப்படும் அச்வ என்ற தேவதையும் என்ற த்ரவ்யதேவதைகள் தனியாகச் சொல்லப்பட்டிருப்பதுமே காரணமென்றும் சொல்லித்ரவ்யம் தேவதை என்ற ரூபபேதத்தைக்கொண்டு கர்மபேதமானது ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது.

(1) ப்ருஹதாரண்யகோபநிடதத்திலும், சாந்தோக்கியோபநிடதத்திலும் பஞ்சாக்னி வித்யோபாஸ்தி சொல்லுமிடத்து த்யுலோகம், பர்ஜன்யம், பிருதிவீ, புருஷன், யோஷித் என்ற ஐந்து அக்னிகள்ஸமானங்களாகச் சொல்லப்பட்டிருப்பினும் ப்ருஹதாரண்யகத்தில் "அவனுக்குப் பிரஸித்தமான அக்னியே அக்னியாகும்" என்பதாய் ஆறுவதான அக்னியும் படிக்கப்பட்டிருக்கிறது. அந்த அக்னியைச் சாந்தோக்கியத்திற் சொல்லிய உபாஸனத்திற் சேர்த்துக்கொள்ளமுடியாது. ஏன்? "எவனொருவன் இவ்விதம் ஐந்து அக்னிகளை யுபாஸிப்பானோ" என்பதால் ஐந்து என அக்கினிகளைச் சொல்லிச் சாந்தோக்கியத்தில் முடித்திருப்பதே அதன் காரணமாகும். ஆகவே சாந்தோக்கியத்திலுள்ள பஞ்சாக்னி வித்யையில் சேர்த்துக்கொள்ள வியலாத ஆறுவது அக்னியினால் பிருஹதாரண்யகத்திலுள்ள பஞ்சாக்னி வித்யை வேறுபட்டதாகவேதாகிறது.

(2) காரீரி வாக்கியங்களை அத்யயனஞ் செய்யும் தைத்திரீய சாகிகள் பூமியில் போஜனஞ்செய்கின்றனர். மற்றவர் அவ்விதஞ்செய்வதில்லை.

विस्तर: । [illegible]विशेषात् विज्ञानभेद इति । एवं प्राप्ते ब्रूम:—सर्ववेदान्तप्रत्ययानि विज्ञानानि तस्मिंस्तस्मिन्वेदान्ते तानि तान्येव भवितुमर्हन्ति । कुत:—चोदनाद्यविशेषात् । आदिग्रहणेन शाखान्तराधिकरणसिद्धान्तसूत्रोदिता अभेदहेतव इहाकृष्यन्ते । संयोगरूपचोदनाख्याविशेषादित्यर्थ: । यथैकस्मिन्नग्निहोत्रे शाखाभेदेऽपि पुरुषप्रयत्नस्तादृश एव चोद्यते जुहुयादिति । एवम् 'यो ह वै ज्येष्ठं च श्रेष्ठं च वेद' (बृ० ६ । १ । १, छा० ५ । १ । १) इति वाजसनेयिनां छन्दोगानां च तादृश्येव चोदना । प्रयोजनसंयोगोऽप्यविशिष्ट एव 'ज्येष्ठश्च श्रेष्ठश्च स्वानां भवति' (बृ० ६ । १ । १) इति । रूपमप्युभयत्र तदेव विज्ञानस्य यदुत ज्येष्ठश्रेष्ठादिगुणविशेषणान्वितं प्राणतत्त्वम् । यथा च द्रव्यदेवते यागस्य रूपमेवं विज्ञेयं रूपं विज्ञानस्य तेन हि तद्रूप्यते । समाख्याऽपि सैव प्राणविद्येति । तस्मा-

---

தரித்தல் ரூபமான விரதம் சொல்லப்பட்டிருக்கிறது. மற்றவர்க்கு அவ்விதமில்லை. இவ்விதமே புனருக்தி (அப்யாஸம்) முதலிய பேதகாரணங்களும் வேதாந்த சாகைகளில் ஆங்காங்கு பொருத்திக்காணத்தக்கன. ஆகவே ஒவ்வொரு வேதாந்தத்திலும் வித்யாபேதமானது ஏற்படத்தான் செய்கிறது. என இவ்விதம் (பூர்வபக்ஷம்) ப்ராப்தமாகவே (ஸித்தாந்தத்தைச்) சொல்லுகிறோம். ஸர்வவேதாந்த ப்ரத்யயங்களான=எல்லா வேதாந்தங்களாலும் அறியப்படுகின்ற விக்ஞானங்கள்=உபாஸனங்கள், அந்தந்த வேதாந்தத்திலும் அவையவையேதானாகும். என்? சோதனாதிகள் பொதுவாகவிருப்பதே அதன் காரணமாகும். (இந்த ஸூத்திரத்திலுள்ள) ஆதி= என்ற பதத்தால் பூர்வமீமாம்ஸையிலுள்ள சாகாந்தராதிகரண ஸித்தாந்த ஸூத்திரத்திற் சொல்லப்பட்ட அபேத ஹேதுக்கள் இங்கும் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. அவையாவன—ஸம்யோகம் (பலஸம்பந்தம்) ரூபம், சோதனை, ஆக்ஞை (பெயர்) இவைகள் பொதுவாகவிருப்பதால் என்பது அதன் பொருள் என்றும். ஒரே அக்னி ஹோத்திர விஷயத்தில் சாகாபேதமிருப்பினுங்கூட அதற்குரிய புருஷனது ப்ரயத்னம் அம்மாதிரியாகவே ஜுஹுயாத் என்றதால் விதிக்கப்படுகிறதென்பது எவ்விதமோ, இவ்விதமே "எவனொருவன் (ப்ராணனை) ஜ்யேஷ்டனாகவும் (ஜ்யேஷ்டத்வம் என்ற குணமுள்ளவனாகவும்) ஶ்ரேஷ்டனாகவும் (ஶ்ரேஷ்டத்துவம் என்ற குணமுள்ளவனாகவும்) உபாஸிப்பானோ" என வாஜஸநேயிகளுக்கு எவ்விதமோ, அவ்விதமே சந்தோகர்களுக்கும் விதியிருக்கிறது. "தனது வகுப்பாருள் ஜ்யேஷ்டனாகவும், ஶ்ரேஷ்டனாகவும் ஆகிறான்" என்பதாய் பல ஸம்பந்தமும் (இருவர்க்கும்) பொதுவாகவே இருக்கிறது. ஜ்யேஷ்டத்வ ஶ்ரேஷ்டத்வாதி குணங்களாகிற விசேஷணங்களுடன் கூடினது ப்ராண தத்துவம் என்ற விக்ஞானத்தின் (உபாஸனத்தின்) ரூபம் யாதுண்டோ அது சாந்தோக்யம் ப்ருஹதாரண்யகம் இரண்டிலும் ஒன்றாகவேயிருக்கிறது. த்ரவ்யம் தேவதை இரண்டும் யாகத்தின் ஸ்வரூபம் என்பது எவ்விதமோ இவ்விதமேதான் விக்ஞானத்தின் (உபாஸனத்தின்) ரூபம் விக்ஞேயமான பொருளாகும். அந்த விக்ஞேயத்தால் அந்த விக்ஞானம் ரூபமுள்ளதாக்கப்படுவதே அதன் காரணமுமாகும். ப்ராண வித்யை என்ற பெயரும்

त्सर्ववेदान्तप्रत्ययत्वं विज्ञानानाम्। एवं पञ्चाग्निविद्या वैश्वानरविद्या शाण्डिल्यविद्येत्येवमादिषु योजयितव्यम्। ये तु नामरूपादयो भेदहेत्वाभासास्ते प्रथम एव काण्डे 'न नाम्ना स्यादचोदनाभिधानत्वात्' इत्यारभ्य परिहृताः ॥ १ ॥

इहापि कञ्चिद्विशेषमाशङ्क्य परिहरति—

**भेदान्नेति चेन्नैकस्यामपि ॥ २ ॥**

स्यादेतत्। सर्ववेदान्तप्रत्ययत्वं विज्ञानानां गुणभेदान्नोपपद्यते। तथाहि वाजसनेयिनः पञ्चाग्निविद्यां प्रस्तुत्य षष्ठमपरमग्निमामनन्ति—'तस्याग्निरेवाग्निर्भवति' (बृ० ६।२।१४)

---

அதுவேயாகும். ஆகவே விக்ஞானங்கள் (உபாஸனங்கள்) எல்லா வேதாந்தங்களாலும் அறிவிக்கப்படுவதாகவாகிறது. இவ்விதமே பஞ்சாக்னிவித்யை, வைஶ்வாநரவித்யை, ஶாண்டில்யவித்யை என்ற இதுமுதலான விடங்களிலும் பொருத்திக்கண்டு கொள்ளவேண்டும். பெயர் ரூபம் முதலிய பேதத்துக்குரிய போலி ஹேதுக்கள் எவை சொல்லப்பட்டனவோ அவை பூர்வகாண்டத்திலேயே "ந நாம்நா ஸ்யாத் அசோதநாபிதாநத்வாத்" நாம்னா=காடகம் முதலிய பெயரினுல் கர்மத்தில் பேதமானது (வேறுபாடானது) நஸ்யாத்=வரமாட்டாது. ஏன்? அசோதனாபிதாநத்வாத்=காடகம் முதலிய பதங்கள் அம்மாதிரியான கிரந்தத்தின் (நூலின்) பெயர்களாகுமே யொழிய கர்மங்களைச் சொல்லுகின்றனவாக வாகாததே அதன் காரணமாகும். ஆகவே வெவ்வேறு பெயருள்ள சாகைகள் வேறுபடினுங்கூட அவற்றில் விதிக்கப்படும் கர்மம் ஒன்றேயாகும் என்பது அதன் பொருள்.) என்று தொடங்கி மறுக்கப்பட்டிருக்கின்றன. (1) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—இந்த ப்ரம்ஹ காண்டத்திலும் உபாஸன பேதத்துக்குரிய சில விசேஷங்களை ஆசங்கித்து அதை மறுக்கிறார்—

## (ஸூ) பேதாத்நேதிசேத் ந ஏகஸ்யாமபி (2)

(ப—ரை) **भेदान्नेतिचेत्** (பேதாந்நேதிசேத்)=உபாஸ்யத்தில் குணம் பேதப்படுவதால் ஆமிக்ஷை என்றும், வாஜிநம் என்றுமான த்ரவ்யமாகிற ரூபபேதமேற்படுவதன் மூலம், கர்மபேதமேற்படுவதுபோல உபாஸனமும் வேறாகத்தானிருக்கவேண்டுமே யொழிய ஒன்றாக இருக்கமுடியாது. எனின்? **न** (ந)=அவ்விதம் சொல்லுவது பொருந்தாது. ஏன்? **एकस्यामपि** (ஏகஸ்யாமபி)=ஒரே வித்யை (உபாஸனை) யிலுங்கூட இம்மாதிரியான குணபேதங்களிருக்கலாம். (அதாவது: அற்பரூபபேதமிருப்பது வித்யையொன்றென்பதற்கு விரோதியாக வாகமாட்டாது என்று கருத்து) (2) (எ—று)

பாஷ்யம்.—இஃதிருக்கட்டும். உபாஸனங்களின் குணங்கள் பேதப்படுவதால் ஸர்வ வேதாந்தங்களிலும் அது ஒன்றுபட்டதே என்பது பொருந்தாது. அதாவது:—வாஜஸநேயிகள் பஞ்சாக்னி வித்யையைச் சொல்லத்தொடங்கி "அவனுக்கு ப்ரஸித்தமான அக்னியேதான் அக்னியாகவாகிறது" என்றதாதியால் வே

इत्यादिना। छन्दोगास्तु तं नामनन्ति पञ्चसङ्ख्ययैव च तमुपसंहरन्ति 'अथ ह य एतानेवं पञ्चाग्नीन्वेद' (छा० ५।१०।१०) इति। येषां च स गुणोऽस्ति येषां च नास्ति कथमुभयेषामेका विद्योपपद्येत। नचात्र गुणोपसंहारः शक्यते प्रत्येतुं, पञ्चसङ्ख्याविरोधात्। तथा प्राणसंवादे श्रेष्ठादन्यांश्चतुरः प्राणान्वाक्चक्षुःश्रोत्रमनांसि छन्दोगा आमनन्ति। वाजसनेयिनस्तु पञ्चममप्यामनन्ति 'रेतो वै प्रजापतिः प्रजायते ह प्रजया पशुभिर्य एवं वेद' (बृ० ६।१।६) इति। आवापोद्वापभेदाच्च वेद्यभेदो भवति, वेद्यभेदाच्च विद्याभेदो द्रव्यदेवताभेदादिव यागस्येति चेत्। नैष दोषः। यत एकस्यामपि विद्यायामेवञ्जातीयको गुणभेद उपपद्यते। यद्यपि षष्ठस्याग्नेरुपसंहारो न संभवति तथापि द्युप्रभृतीनां पञ्चानामग्नीनामुभयत्र प्रत्यभिज्ञायमानत्वान्न विद्याभेदो भवितुमर्हति। नहि षोडशिग्रहणाग்ரहणयोरतिरात्रो भिद्यते। पठ्यतेऽपि

---

றான ஆறாவது அக்னியைப் படிக்கின்றனர். சந்தோகர்களோவெனில் அந்த ஆறாவது அக்னியைப்படிப்பதில்லை "பிறகு எவனொருவன் இந்த ஐந்து அக்னிகளை உபாஸிக்கின்றானோ" என்றதால் ஐந்து எண்ணுடனேயே முடிக்கின்றனர். எவர்க்கு அந்தக்குணம் (ஆறாவது அக்கினி) இருக்கின்றதோ, எவர்களுக்கு இல்லையோ இவ்விருவருக்கும் வித்யை ஒன்று என்பது எவ்விதம் பொருந்தும்? இவ்விடத்தில் குணோபஸம்ஹாரமிருப்பதாக வறியமுடியாது. ஐந்து என்ற எண் விரோதப்படுவதே அதன் காரணமாகும். அவ்விதமே ப்ராணோபாஸ்தி சொல்லுமிடத்தில் முக்கிய ப்ராணனைக்காட்டிலும் வேறுபட்ட வாக், சக்ஷுஸ், ச்ரோத்ரம், மனஸ் என்ற நான்கு ப்ராணன்களைச் சந்தோகர் படிக்கின்றனர். வாஜஸநேயிகளோ "ரேதஸ்ஸே ப்ரஜாபதியாகும். எவனொருவன் இவ்வித முபாஸிக்கின்றானோ ப்ரஜைகளுடனும், பசுக்களுடனும் பிறக்கிறான்" என்றதால் ஐந்தாவதான பொருளையும் படிக்கின்றனர். ஒருவர் ஆறாவது அக்னியைச் சேர்த்துக் கொளுதல் என்ற ஆவாபமும், மற்றவர் அதை விடுதல் என்ற உத்வாபமும் இருப்பதன் மூலம் பேதம் வருவதிலிருந்து வேத்யமானது (உபாஸ்யமானது) பேதப்படுகிறது. உபாஸ்யம் பேதப்படுவதிலிருந்து த்ரவ்ய தேவதைகள் பேதப்படுவதிலிருந்து யாகத்துக்குப் பேதம் வருவதுபோல வித்யாபேதம் ஏற்படுகிறது என்கிறோம் எனின்.

இது தோஷமாகாது. ஏன்? ஒரே வித்யையிலுங்கூட இம்மாதிரியான குணபேதமானது பொருந்தக் கூடியதாகவாவதே அதன் காரணமாகும். வாஜஸநேயிகள் சொல்லும் ஆறாவது அக்னிக்குச்சந்தோகர்கள் சொல்லும் பஞ்சாக்னி வித்யையில் உபஸம்ஹாரம் (சேர்த்துப் பொருள்கொள்ளல்) முடியாதுதான் ஆயினும் த்யுலோகம் முதலிய ஐந்து அக்னிகள் இரண்டிடத்திலும் ஒத்துக்காணப்படுவதால் வித்யாபேதமேற்படுவதற்கிடமில்லை. அதிராத்ரம் என்ற யாகம் ஷோடசியின் க்ரஹணம், அஃதின்மை இவற்றால் வேறுபடமாட்டாதன்றோ. சந்தோகர்களால் ஆறாவது அக்னியும் "இவ்வுலகினின்றும் லோகாந்தரத்தை யடைந்தவனை ருத்விக்குகள் அக்னியின் பொருட்டுக் கொண்டுபோகின்றனர்" என்றதால் படிக்கப்

च षष्ठोऽग्निश्छन्दोगैः—'तं प्रेतं दिष्टमितोऽग्नय एव हरन्ति' (छा० ५।९।२) इति। वाजसनेयिनस्तु सांपादिकेषु पञ्चस्वग्निष्वनुवृत्तायाः समिद्धूमादिकल्पनाया निवृत्तये 'तस्याग्निरेवाग्निर्भवति समित्समित्' (बृ० ६।२।१४) इत्यादि समामनन्ति स नित्यानुवादः। अथाप्युपासनार्थ एष वादस्तथापि स गुणः शक्यते छन्दोगैरप्युपसंहर्तुम्। नचात्र पञ्चसङ्ख्याविरोध आशङ्क्यः। सांपादिकाग्न्यभिप्राया ह्येषा पञ्चसङ्ख्या नित्यानुवादभूता न विधिसमवायिनीत्यदोषः। एवं प्राणसंवादेष्वप्यधिकस्य गुणस्येतरत्रोपसंहारो न विरुध्यते। नचावापोद्वापभेदाद्वेद्यभेदो विद्याभेदश्चाशङ्क्यः। कस्यचिद्वेद्यांशस्यावापोद्वापयोरपि भूयसो वेद्यराशेरभेदावगमात्। तस्मादेकविद्यमेव ॥ २ ॥

---

பட்டிருக்கிறது. வாஜஸநேயிகளோவெனில் *ஸாம்பாதிகங்களான (உபாஸனைக்கு வேண்டி கற்பிக்கப்பட்ட) ஐந்து அக்னிகளில் தொடர்ந்துவருகின்ற ஸமித், தூமம் முதலியவற்றின் கற்பனைக்கு நிவிருத்தியேற்படவேண்டி "அவனுக்கு ப்ரஸித்தமான அக்னியேதான் அக்னியாகவாகிறது, ப்ரஸித்தமான ஸமித்தேதான் ஸமித்தாகவாகிறது" என்றதாதியைப் படிக்கின்றனர். அவ்விதம் படிப்பது (1) நித்யாநுவாதமாகும். உபாஸனைக்கு வேண்டியே அவ்விதஞ் சொல்லப்பட்டது எனக் கொண்டபோதிலும் அந்தக் குணமானது சந்தோகர்களாற் சேர்த்துக் கொள்ளக் கூடியதாகவுமாகலாம். அவ்விதமாயின் சந்தோகர்களுடைய இந்த அக்னிகள் விஷயத்தில் ஐந்து என்ற எண்ணுக்கு விரோதம் வருமென ஆசங்கிக்க இடமில்லை. ஏன்? இங்கு கூறிய இந்த ஐந்து என்ற எண்ணனது ஸாம்பாதிகங்களான=(உபாஸனைக்குவேண்டிக் கற்பிதங்களான) அக்கினியைப்பற்றியதாய் நித்யாநுவாத முறையாற் கூறப்பட்டதாகவாகுமேயொழிய பஞ்சாக்னி உபாஸ்தி விதியைச் சேர்ந்ததாகவாகமாட்டாது. ஆனதுபற்றித் தோஷம் வருவதற்கிடமில்லை. இவ்விதமே ப்ராணனைப்பற்றிச் சொல்லுமிடங்களிலும் அதிகமான குணத்தை வேறிடத்திற் சேர்த்துக்கொள்ளுவது முறண்படவும் மாட்டாது. மேலும், ஓரிடத்தில் ஒன்றைச் சேர்த்தலும், மற்றோரிடத்தில் ஒன்றை விடுதலும் என்ற வேற்றுமை காணப்படுவதைக் கொண்டு உபாஸ்யத்தின் பேதமோ, உபாஸனையின் பேதமோ வருவதாக ஆசங்கிக்கவேண்டுவதவசியமில்லை. உபாஸ்யமான ஸ்வல்ப அம்சத்துக்கு ஓரிடத்தில் அதிகமான பாடமும் மற்றோரிடத்தில் அஃதின்மையும் காணப்படினுங்கூட உபாஸ்யமாகச் சொல்லப்பட பெரும்பாலானவற்றுக்கு அபேதமும் (ஒற்றுமையும்) காணப்படுகிறது. ஆனதுபற்றி உபாஸ்தி ஒன்றேயாகும்.

---

*ஆறாவதான அக்னியையும், அதைப்பற்றின விசேஷத்தையும் அநுவாதமுறையாற் கூறியிருப்பதிலிருந்து அவை உபாஸ்யங்களாக இல்லாததால் இரண்டிடத்திலும் ஐந்து அக்னிகளே உபாஸ்யங்களாகவாவதால் ரூபபேதம் வருவதற்கிடமில்லை என்பது பாஷ்யத்தின் கருத்து.

(1) எவ்வித விதியுமில்லாமல் இயற்கையில் கிடைத்தபொருளைத் தானுஞ் சொல்லுவது நித்தியாநுவாதமெனப்படும்.

**स्वाध्यायस्य तथात्वेन हि समाचारेऽधिकाराच्च सववच्च तन्नियमः ॥ ३ ॥**

**यदप्युक्तमाथर्वणिकानां विद्यां प्रति शिरोव्रताद्यपेक्षणादन्येषां च तदनपेक्षणाद्विद्याभेद इति तत्प्रत्युच्यते। स्वाध्यायस्यैष धर्मो न विद्यायाः। कथमिदमवगम्यते। यतस्तथात्वेन स्वाध्यायधर्मत्वेन समाचारे वेदव्रतोपदेशपरे ग्रन्थ आथर्वणिका इदमपि वेदव्रतत्वेन व्याख्यातमिति समामनन्ति। 'नैतदचीर्णव्रतोऽधीते' (मु० ३। २। ११) इति चाधिकृतविषयादेतच्छब्दादध्ययनशब्दाच्च स्वोपनिषदध्ययनधर्म एवैष इति निर्धार्यते।**

---

(அ-கை) இதுவரையுள்ளக் கிரந்தத்தால் ரூபபேதத்தால் வித்யாபேதம் வர மாட்டாது எனவுபதேசித்து இந்தச் சூத்திரத்தால் தர்மம் மாறுபட்டபோதிலும் வித்யை மாறுபடுவதற்கில்லை என்பதை உபதேசிக்கிருர்—

**(ஸூ) ஸ்வாத்யாயஸ்ய ததாத்வேந ஹி ஸமாசாரே அதிகாராத்ச ஸவவத்ச தந்நியம: (3)**

(ப-ரை) **स्वाध्यायस्य** (ஸ்வாத்யாயஸ்ய)=சிரோவ்ரதம் என்ற தர்மம் அதர்வ வேதத்தினுடையதாக சொல்லப்பட்டதாகக் கொள்ளவேண்டும். **समाचारे** (ஸமா **சாரே**)=வேதாத்யயனஞ் செய்வதற்குவேண்டிய தர்மத்தையுபதேசிக்கும் கிரந்தத்தில் சிரோவ்ரதமென்ற இந்தத் தர்மத்தை **तथात्वेन हि** (ததாத்வேந ஹி)=வேதாத்யயன தர்மமாகவன்ரே ஆதர்வணிகர்கள் சொல்லுகின்றனர். **अधिकाराच्च** (அதி **காராத்ச**)=ஶ்ருதியில் "**नैतदचीर्णव्रतोऽधीते** (நைததசீர்ணவ்ரதோ அதீதே)=என்ற விடத்தில் துடர்ந்துவரும் முண்டகோபநிடதத்தைச் சொல்லும் **एतत्** (ஏதத்)= என்ற சப்தமிருப்பதும், **अधीते** (அதீதே)=என்றதால் அத்யயனம் சொல்லப்பட்டிருப்பதுமே மற்றொரு காரணமாகும். **सववच्च** (ஸவவத்ச)=ஸௌர்யம் என்ற ஹோமந்தொடங்கி ஶதௌதநம் வரையுள்ள 7 ஹோமங்கள் அதர்வவேதாத்யயனஞ் செய்பவர்க்கே சொல்லப்படுவது எவ்விதமோ அவ்விதமே **तन्नियमः** (தந்நியம:)=முண்டகோபநிடதத்தை அத்யயனஞ் செய்பவர்க்கே தலையில் நெருப்புத்தணலின் தாரணமானது நியமமாகவாகும். (3) (எ-று)

பாஷ்யம்.—ஆதர்வணிகர்களுக்கு ப்ரம்ஹவித்யையைக் குறித்து சிரோவ்ரதம் முதலியவற்றின் அபேக்ஷை இருப்பதாலும், மற்றவர்க்குச் சிரோவ்ரதாதிகளின் அபேக்ஷையில்லாதிருப்பதாலும், வித்யையின் (உபாஸனத்தின்) பேதம் ஏற்படுகிறது எனயாதொன்று சொல்லப்பட்டதோ அதற்குப்பதில் சொல்லப்படுகிறது. இந்தத் தர்மமானது வேதத்தினுடையதேயொழிய வித்யையினுடையதாகவாகாது. இது எவ்விதமறியப்படுகிறது எனின்? யாதுகாரணம்பற்றி ததாத்வேந வேதாத்யயனத்தின் தர்மமாக, ஸமாசாரத்தில்=வேதவ்ரதத்தையுபதேசிக்கும் கிரந்தத்தில் ஆதர்வணிகர்கள் இதையும்=இந்த சிரோவ்ரதத்தையும், வேதத்தின் வ்ரதமாக வியாக்கியானஞ் செய்யப்பட்டதெனச் சொல்லுகின்றனரோ (அக்காரணம்பற்றியே என்க.) விரதத்தை (சிரோவ்ரதத்தை) யனுஷ்டிக்காதவன் "இதை (ப்ரகிருதமான முண்டகோபநிடதத்தை) அத்யயனஞ் செய்தல் கூடாது" என்றவிடத்தில் துடர்

ननु च 'तेषामेवैतां ब्रह्मविद्यां वदेत शिरोव्रतं विधिवद्यैस्तु चीर्णम्' (मुण्ड० ३।२।१०) इति ब्रह्मविद्यासंयोगश्रवणादेकैव सर्वत्र ब्रह्मविद्येति सङ्कीर्येतैष धर्मः। न। तत्राप्येतामिति प्रकृतप्रत्यवमर्शात्। प्रकृतत्वं च ब्रह्मविद्याया ग्रन्थविशेषापेक्षमिति ग्रन्थविशेषसंयोग्येवैष धर्मः। सववच्च तन्नियम इति निदर्शननिर्देशः। यथाच सवाः सप्त सौर्यादयः शतौदन-पर्यन्ता वेदान्तरोदितत्रेताग्न्यनभिसंबन्धादाथर्वणोदितैकाग्न्यभिसंबन्धाच्चाथर्वणिकानामेव नियम्यन्ते तथैवायमपि धर्मः स्वाध्यायविशेषसंबन्धात्तत्रैव नियम्यते। तस्मादप्यनवद्यं विद्यैकत्वम्॥ ३॥

## दर्शयति च॥ ४॥

---

ந்துவரும் முண்டகோபநிஷத்தைச் சொல்லும் ஏதத்=என்ற சப்தமும், அதீதே= என்பதாய் அத்யயனத்தைச் சொல்லும் சப்தமும் காணப்படுவதிலிருந்து அவர்க்குச்சொந்தமான உபநிஷத்தின் அத்யயனத்துக்குரியதாகவே இந்தத் தர்மமாகும் என வுறுதி செய்யப்படுகிறது,

சங்கை—"அவர்க்கே இந்த ப்ரம்ஹ வித்யையைச் சொல்லவேண்டும் எவர்களால் சிரோவ்ரதமானது முறைப்படி அநுஷ்டிக்கப்பட்டதோ" என்றவிடத்தில் ப்ரம்ஹவித்யையின் ஸம்பந்தம் இந்த சிரோவ்ரதத்துக்கிருப்பதாகத் தெரிவதால் எல்லாவிடத்திலும் ப்ரம்ஹவித்தையானது ஒன்றே, ஆனதுபற்றி இந்தச் சிரோவ்ரதமென்ற தர்மமானது எல்லாப்ரம்ஹவித்யையிலும் வரத்தான் வரும் எனின்?

உத்தரம்—அவ்விதம் சொல்லமுடியாது. அவ்விடத்திலுங்கூட "ஏதாம்" (இந்த) என்பதாய் ப்ரகிருதமான ப்ரம்ஹவித்தையைக் கூறியிருப்பதே அதன் காரணமாகும். ப்ரம்ஹவித்தைக்கு ப்ரகிருதமாக விருத்தலானது கிரந்தவிசேஷத்தை யபேக்ஷித்தேற்படுவதால் கிரந்தவிசேஷத்தை (முண்டகோபநிஷத்தைச்) சேர்ந்ததாகவே தான் இந்தத் தர்மமாகும்.* ஸூத்திரத்தில் "ஸவவத்ச தந்நியம:" என்றதால் திருஷ்டாந்தம் சொல்லப்பட்டதாக வாகிறது. ஸௌர்யம் முதல் ஶதௌதனம் முடியவுள்ள ஏழு ஸவங்கள்=ஹோமங்கள், வேறுவேதங்களிற் சொல்லியத்ரேதாக்னி (கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி) களின் ஸம்பந்தம் காணப்படாததாலும், அதர்வவேதத்திற் சொல்லப்பட்ட ஏகாக்னிஸம்பந்தம் காணப்படுவதாலும் ஆதர்வணிகர்களுக்குமட்டுமே என எவ்விதம்நியமமாகக் கொள்ளப்படுகின்றனவோ அதுபோலவே இந்தத்தர்மமும் (தலையில் அங்காரதாரணமும்) வேதாத்யயன விசேஷஸம்பந்தமிருப்பதை யொட்டி அவ்விஷயத்திலேயே (முண்டகோபநிஷதாத்யயன விஷயத்திலேயே) நியமமாகக் கொள்ளப்படுகிறது. ஆனது பற்றியும் வித்தை யொன்று தானென்பது தோஷமற்றதாகவாகிறது. (3) (எ—று)

## (ஸூ) தர்சயதி ச (4)

---

* ஆகவே ப்ரம்ஹவித்யாபதத்துக்கு ப்ரம்ஹவித்தையைச் சொல்லும் கிரந்தமென பொருள் கொள்ளவேண்டுமென்பது பாஷ்யத்தின் கருத்து.

**दर्शयति च** वेदोऽपि विद्यैकत्वं सर्ववेदान्तेषु वेद्यैकत्वोपदेशात् 'सर्वे वेदा यत्पदमामनन्ति' (क० २। १५) इति। तथा 'एतं ह्येव बह्वृचा महत्युक्थे मीमांसन्त एतमग्नावध्वर्यव एतं महाव्रते छन्दोगाः' इति च। तथा 'महद्भयं वज्रमुद्यतम्' (क० ६। २) इति काठक उक्तस्येश्वरगुणस्य भयहेतुत्वस्य तैत्तिरीयके भेददर्शननिन्दायै परामर्शो दृश्यते 'यदा ह्येवैष एतस्मिन्नुदरमन्तरं कुरुते। अथ तस्य भयं भवति। तत्त्वेव भयं विदुषोऽमन्वनस्य' (तै० २। ७। १) इति। तथा वाजसनेयके प्रादेशमात्रसंपादितस्य वैश्वानरस्य छान्दोग्ये सिद्धवदुपादानम् 'यस्त्वेतमेवं प्रादेशमात्रमभिविमानमात्मानं वैश्वानरमुपास्ते' (छा० ५। १८। १) इति। तथा सर्ववेदान्तप्रत्ययत्वेनान्यत्र विहितानामुक्थादीनामन्यत्रो-

---

(ப—ரை) உபாஸ்யமானது ஒன்றாக விருப்பதிலிருந்து உபாஸனமும் ஒன்றேதானாகும் என வேதமானது **दर्शयति च** (தர்சயதி ச)=காண்பித்து மிருக்கிறது.

பாஷ்யம்.—"எல்லாவேதாந்தங்களும் எதை † யறியத்தகுந்ததாகச் சொல்லுகின்றனவோ" என்பதாய் வேத்யமானது எல்லாவேதாந்தங்களிலும் வேத்யமானது ஒன்றேன வுபதேசிப்பதிலிருந்து வித்தையும் ஒன்றேயாகும் எனத் தெரிவித்திருக்கிறது. அதுபோலவே "இவரையேயன்றோ பஹ்வ்ருசர்கள் (ருக்வேதிகள்) மஹத்தான உக்தத்தில் (சஸ்திரத்தில்) விசாரிக்கவேண்ணுகின்றனர். இவரை அத்வர்யுக்கள் (யஜுர்வேதிகள்) மஹத்தான அக்னியிலும் (அத்வர்யு செய்யுங்கர்மத்திலும்) இவரைச் சந்தோகர்கள் (ஸாமவேதிகள்) மஹாவ்ரதத்திலும் (ஸ்தோத்திரத்திலும்) விசாரிக்கவேண்ணுகின்றனர்" எனப் படிக்கப்படுகிறது. அவ்விதமே "உயரெடுக்கப்பட்ட வஜ்ராயுதம் போன்று (ப்ரம்ஹம்) மஹத்தான பயத்தைத் தரக்கூடியது" எனக் கடோபநிடதத்திற் சொல்லப்பட்ட பயஹேதுவாக விருத்தல் என்ற ஈஸ்வரகுணத்துக்குத் தைத்திரீயோபநிடதத்தில் "எது போழ்து இவன் இதனிடத்தில் (ப்ரம்ஹத்தினிடத்தில்) அற்பமாயுள்ள பேதத்தையும் பார்க்கின்றானே அதுபோழ்து அவனுக்குப் பயம் (ஸம்ஸாரம்) உண்டாகிறது. அதுவே யன்றோ யறியாதவனான வித்வானுக்கு பயஹேதுவாகவாகிறது" என்றதால் பேததர்சனத்தை நிந்திக்கவேண்டி பராமர்சம் காணப்படுகிறது. அதுபோலவே ப்ருஹதாரண்யகத்தில் ப்ராதேச (ஒட்டையளவு) மாத்திரமாகக் கற்பிக்கப்பட்ட வைஸ்வாநரனுக்குச் சாந்தோக்கியத்தில் "(1) எவனொருவன் இவ்விதம் ப்ராதேசமாத்திரனாகவும் அபிவிமானனாகவும் இந்த வைஸ்வாநர ஆத்மாவை உபாஸிக்கிறானே" என்றதால் ஸித்தமாகவே எடுத்துக் கூறல் காணப்படுகிறது. அவ்விதமே எல்லாவேதாந்தங்களாலும் அறியப்படுவதுபற்றி வேறிடத்தில் விதிக்கப்பட்ட உக்-

---

† சுருதியானது வேத்யம் ஒன்றாவதிலிருந்து நிர்க்குணப்ரம்ஹவித்தையின் ஐக்கியத்தைச் சொல்லுகிறது. ஆயினும், ப்ரகரணபாடத்தையொட்டி ஸகுணப்ரம்ஹவித்தைகளுக்குங்கூட எல்லாச் சாகைகளிலும் ஐக்கியமானது ஸித்திக்கிறது என வெண்ணி ஸூத்திரம் செய்யப்பட்டது என ராமாநந்த வியாக்கியானத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

(1) இந்தச் சுருதியின்பொருளை முதலாவது அத்தியாயம் 269-வது பக்கத்தில் பரக்கக் காண்க.

पासनविधानायोपादानात्प्रायदर्शनन्यायेनोपासनानामपि सर्ववेदान्तप्रत्ययत्वसिद्धिः ॥ ४ ॥

## २ उपसंहाराधिकरणम् । सू० ५

## उपसंहारोऽर्थाभेदाद्विधिशेषवत्समाने च ॥ ५ ॥

एकोपास्तावनाहार्या आहार्या वा गुणाः श्रुतौ । अनुक्तत्वादनाहार्या उपकारः श्रुतैर्गुणैः ॥ १ ॥

श्रुतत्वादन्यशाखायामाहार्या अग्निहोत्रवत् । विशिष्टविद्योपकारः स्वशाखोक्तगुणैः समः ॥ २ ॥

---

தம் முதலியவற்றுக்கும் வேறிடத்திலுபாஸனத்தை விதிக்கவேண்டி உபதேசம் காணப்படுவதிலிருந்து அவற்றைப் பற்றிய உபாஸனங்களுக்கும் ஸர்வவேதாந்தங்களாலும் விதிக்கப்படும் தன்மையானது பூயோநுக்கிரஹ (வெகுவாக இருப்பதையே கிரஹிக்கவேண்டும் என்ற) நியாயத்தையொட்டி ஸித்திக்கிறது. (4)

ஒன்றுவது ஸர்வவேதாந்தப்ரத்யயாதிகரணம் முற்றிற்று.



## உபஸம்ஹாராதிகரணம் 2.

(அ-கை) எல்லா வேதாந்தசாகைகளிலுமுள்ள வித்தையானது ஒன்றேயாகும் என விசாரிப்பதன் பலனை ஒரே ஸூத்திரங்கொண்ட இந்த அதிகரணத்தாலுபதேசிக்கிறார்.—

Released by Maran's Dog ,Toronto, Canada

### (ஸூ) உபஸம்ஹாரோ அர்த்தாபேதாத் விதிசேஷவத் ஸமானே ச (5)

(ப-ரை) வேறிடத்திற் சொல்லப்பட்ட விஜ்ஞானகுணங்களுக்கு **समाने च** (ஸமாநே ச)=வேறிடத்திற் சொல்லப்பட்ட ஒரேமாதிரியான உபாஸனத்தில் **उपसंहारः** (உபஸம்ஹார:)=உபஸம்ஹாரமானது சேர்த்துக்கொள்ளுதலானது அவஸ்யமாக வாகிவிடுகிறது. **अर्थभेदात्** (அர்த்தாபேதாத்)=பலன் ஒன்றாகவிருப்பதே அதன் காரணமாகும். **विधिशेषवत्** (விதிசேஷவத்)=விதிசேஷங்களான அக்னிஹோத்ராதி தர்மங்களுக்கு ஒரே அக்னிஹோத்ராதி கர்மங்களில் உபஸம்ஹாரம் செய்து கொள்ளுவது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க.

### வையாஸிக நியாயமாலை.

(க-ரை) ஒரே உபாஸ்திவிஷயமாக வேறிடத்திற் சொல்லப்பட்ட குணங்களை வேறிடத்திற் சேர்த்துக் கொள்ளவேண்டுமா? அல்லது சேர்த்துக் கொள்ள வேண்டுவதில்லையா? என்பது ஸந்தேஹம். ஶ்ருதியில் ஓரிடத்திற் சொல்லப்பட்டவைமற்றவிடத்தில் சொல்லப்படாமைபற்றி அவ்விடத்தில் வேறிடத்திற் சொல்லப்பட்டகுணங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டுவதில்லை. எவ்வளவு குணங்கள் எங்கு ஶ்ருதியிற் படிக்கப்பட்டனவோ அவற்றால் மட்டுமே அங்கு கூறப்பட்ட உபாஸனத்துக்கு உபகாரமானது ஏற்பட்டுவிடலாம் என்பது பூர்வ

Released by Maran's Dog ,Toronto, Canada

इदं प्रयोजनसूत्रम्। स्थिते चैवं सर्ववेदान्तप्रत्ययत्वे सर्वविज्ञानानामन्यत्रोदितानां विज्ञानगुणानामन्यत्रापि समाने विज्ञान उपसंहारो भवति। अर्थाभेदात्। य एव हि तेषां गुणानामेकत्रार्थो विशिष्टविज्ञानोपकारकः स एवान्यत्रापि। उभयत्रापि हि तदेवैकं विज्ञानं तस्मादुपसंहारः। विधिशेषवत्। यथाहि विधिशेषाणामग्निहोत्रादिधर्माणां तदेवैकमग्निहोत्रादि कर्म सर्वत्रेत्यर्थाभेदादुपसंहरणमेवमिहापि। यदि हि विज्ञानभेदो भवेत्ततो विज्ञानान्तरनिबद्धत्वाद्गुणानां प्रकृतिविकृतिभावाभावाच्च न स्यादुपसंहारः। विज्ञानैकत्वे तु नैवमिति। अस्यैव तु प्रयोजनसूत्रस्य प्रपञ्चः सर्वाभेदादित्यारभ्य भविष्यति॥ ५॥

---

பக்ஷம். ஶ்ருதியில் வேருசாகையில் கூறப்பட்டிருப்பதுபற்றி வேரு சாகையிலும் அக்குணங்களை அக்னிஹோத்திரகர்மாவில் போலச் சேர்த்துக்கொள்ள வேண்டுவது அவஶ்யமே யாகும். சொந்தசாகையில் சொல்லப்பட்ட குணங்களுக்கும் வேருசாகையில் சொல்லப்பட்ட குணங்களுக்கும் பிரதானமான வித்யோபகாரகத்வமானது ஒன்ருகவே இருக்கின்றது என்பது ஸித்தாந்தம். (எ-று)

பாஷ்யம்.—இது பயனைச் சொல்லும் ஸூத்திரமாகும். எல்லா உபாஸனங்களும் எல்லாவேதாந்தங்களாலும் விதிக்கப்படுகின்றன வென்பது நிலைத்த பின்னர் வேறிடத்திற் சொல்லப்பட்ட விக்ஞானகுணங்களுக்கு வேறிடத்திலும் ஸமானமான (ஏரேமாதிரியாகவான) உபாஸனத்தில் உபஸம்ஹாரமானது (சேர்த்துக் கொள்ளுதலானது) ஏற்படுகிறது. பலன் ஒன்ருகவிருப்பதே அதன் காரணமாகும். அந்தக் குணங்களுக்கு ஒருவிடத்தில் ப்ரதானமான விக்ஞான உபகாரத்தைச் செய்தல் என்றபலன் எதுவோ அதேபலன்தான் வேறிடத்திலுமேற்படுகிறது. அந்த ஒரேவிக்ஞானமன்ரோ இரண்டிடத்திலும் காணப்படுகிறது. ஆனது பற்றி உபஸம்ஹாரமானது ஏற்படுகிறது. விதிசேஷமானது போலவாம். அதாவது:—விதிசேஷங்களான அக்னிஹோத்ராதி தர்மங்களுக்கு அதேவொரு அக்னிஹோத்ராதி கர்மந்தான் எல்லாவிடத்திலும் என்பதுபற்றி (உபகாரலக்ஷணமான) பலன் ஒன்ருகிவிடுவதிலிருந்து உபஸம்ஹாரம் ஏற்படுவது எவ்விதமோ இவ்விதமே இங்குமாகும். விக்ஞானபேதமிருக்குமாயின் அப்பொழுது குணங்கள் வேருவிக்ஞானத்தைச் சேர்ந்தனவாக விருப்பதுபற்றியும் ப்ராகிருதி விகிருதிபாவமில்லாமையாலும் அவற்றுக்கு உபஸம்ஹாரமேற்படமாட்டாது. விக்ஞானமொன்ருகவிருந்தாலோ இவ்விதமில்லை. இந்தப்ரயோஜனஸூத்திரத்துக்கே "ஸர்வாபேதாத்" என்றுதொடங்கி விஸ்தாரமானது சொல்லப்படப்போகிறது. (5)

இரண்டாவது உபஸம்ஹாராதிகரணம் முற்றிற்று.

---

## அந்யதாத்வாதிகரணம் 3.

**(ஸூ) அந்யதாத்வம்சப்தாத் இதிசேத்ந அவிசேஷாத் (6)**

(ப-ரை) சாந்தோக்கியம், ப்ருஹதாரண்யகம் இவ்விரண்டிலும் சொல்லப்

## ३ अन्यथात्वाधिकरणम्। सू० ३-८

## अन्यथात्वं शब्दादिति चेन्नाविशेषात्॥ ६॥

एका भिन्नाथवोद्गीथविद्या छान्दोग्यकाण्वयोः। एका स्यान्नामसामान्यात्संग्रामादिसमत्वतः॥ १॥
उद्गीथावयवोंकार उद्गातेत्युभयोर्भिदा। वेद्यभेदेऽर्थवादादिसाम्यमत्राप्रयोजकम्॥ २॥

वाजसनेयके 'ते ह देवा ऊचुर्हन्तासुरान्यज्ञ उद्गीथेनात्ययामेति' (बृ० १।३।१) 'ते ह वाचमूचुस्त्वं न उद्गाय' (बृ० १।३।२) इति प्रक्रम्य वागादीन्प्राणानसुरपाप्मविद्धत्वेन निन्दित्वा मुख्यप्राणपरिग्रहः पठ्यते—'अथ हेममासन्यं प्राणमूचुस्त्वं न उद्गायेति तथेति तेभ्य एष प्राण उदगायत्' (बृ० १।३।७) इति। तथा छान्दोग्येऽपि—

---

படும் உத்கீதவித்யைக்கு अन्यथात्वम् (அந்யதாத்வம்)=பேதமானது அறியத்தகுந்தது. என்? शब्दात् (ஶப்தாத்)=பிருஹதாரண்யகத்தில் त्वं न उद्गाय (த்வம் ந உத்காய)=நீ ஔத்காத்ரம் என்ற கர்மத்தைச் செய்வாயாக என்றதால் ப்ராணனை உத்கீதத்துக்குச் கர்த்தாவாகவும், சாந்தோக்கியத்தில் तमुद्गीथमुपासाञ्चक्रिरे (தமுத்கீதமுபாஸாஞ்சக்ரிரே)=அந்த ப்ராணனை உத்கீதமாகவுபாஸித்தனர் என்றதால் ப்ராணனை உத்கீதரூபமாகவும் சொல்லும் சப்தமிருப்பதே அதன் காரணமாகும். इति चेत् (இதிசேத்)=என்றாலோ न (ந)=அது பொருந்தாது. अविशेषात् (அவிசேஷாத்)=இரண்டிடத்திலும் ஒரேவித்யைதான் சொல்லப்படுகிறது என்பதற்குரிய காரணங்கள் வெகுவாகவிருப்பதே அதன் காரணமாகும்.

வையாஸிக நியாயமாலே.

(க—ரை) சாந்தோக்யம், பிருஹதாரண்யகம் இரண்டிலுமுள்ள உத்கீதவித்யை ஒன்றா? அல்லது வேறுபட்டதா? என்பது ஸந்தேஹம். இரண்டிடத்திலும் உத்கீதவித்யை என்றபெயர் ஒத்திருப்பதாலும், இந்திரியங்கள் ஒன்றுக்கொன்று சண்டையிட்டனவென்பதாய் சொல்லப்படும் இந்திரியங்களின் சண்டை முதலியன இரண்டிடத்திலும் பொதுவாக விருப்பதாலும் இரண்டிடத்திலுமுள்ள உத்கீதவித்யை ஒன்றேயாகும் என்பது பூர்வபக்ஷம். ஓரிடத்தில் உத்கீதாவயவமான ஓங்காரமென்றும், ஓரிடத்தில் உத்கீதகர்த்தா என்றுமாக ப்ராணன் சொல்லப்படுவதால் இரண்டும் வேறுபட்டதே யாகும். வேத்யமான (உபாஸ்யமான) பொருள் வேறுபடுங்கால் அர்த்தவாதாதிகள் ஸமமாகவிருப்பது வித்யை ஒன்றென்ற விஷயத்தில் காரணமாகவாகமாட்டாது என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—வாஜஸநேயக (ப்ருஹதாரண்யக) த்தில் "அந்தத்தேவர்கள் (ஸாத்விகங்களான இந்திரியவிருத்திகளுக்கு அபிமானிதேவதைகள்) இதுபோழ்து அஸுரர்களை (ரஜஸ்தமோ ரூபங்களான இந்திரியவிருத்திகளுக்கு அபிமானிதேவதைகளை) யாகத்தில் உத்கீதத்தினால் (உத்கீதமெனப் பெயரிய ஸாமகானத்தினால்) ஜயிப்போமாக எனச் சொல்லினர். அதுபோழ்து அந்தத்தேவர்கள் நீ உத்கானம் செய்வாயாக என வாகிந்திரியத்தைச் சொல்லினர்" என்று தொடங்கி வாகாதிகளான இந்திரியங்கள் ஆஸுரமான பாபத்தினால் (காமத்தினால்) கவரப்பட்டன

'तद्ध देवा उद्गीथमाजग्मुरनेनैनानभिभविष्याम:' (छा० १।२।१) इति प्रक्रम्येतरान्प्राणानसुरपाप्मविद्धत्वेन निन्दित्वा तथैव मुख्यप्राणपरिग्रह: पठ्यते—'अथ ह य एवायं मुख्य: प्राणस्तमुद्गीथमुपासाञ्चक्रिरे' (छा० १।२।७) इति। उभयत्रापि च प्राणप्रशंसया प्राणविद्याविधिरध्यवसीयते। तत्र संशय:—किमत्र विद्याभेद: स्यादाहोस्विद्विद्यैकत्वमिति। किं तावत्प्राप्तं, पूर्वेण न्यायेन विद्यैकत्वमिति। ननु न युक्तं विद्यैकत्वं प्रक्रमभेदात्। अन्यथा हि प्रक्रमन्ते वाजसनेयिनोऽन्यथा छन्दोगा:। 'त्वं न उद्गाय' (बृ० १।३।२) इति वाजसनेयिन उद्गीथस्य कर्तृत्वेन प्राणमामनन्ति। छन्दोगास्तूद्गीथत्वेन 'तमुद्गीथमुपासाञ्चक्रिरे (छा० १।२।७) इति। तत्कथं विद्यैकत्वं स्यादिति चेत्। नैष दोष:। न ह्येतावता विशेषेण विद्यैकत्वमपगच्छति। अविशेषस्यापि बहुतरस्य प्रतीयमान-

---

என்பதாய் அவற்றை நிந்தித்து விட்டு "பிறகு ஆஸ்யனை (முகத்தின் மத்தியிலிருப்பவனை) இந்தப்ராணனை நோக்கி (ப்ராணாபிமானிதேவதையை நோக்கி) நீ எங்கள்விஷயத்தில் உத்கானஞ் செய்வாயாக என்று சொல்லின. அவ்விதமே யாகட்டுமென முக்கியப்ராணன் அந்த வாகாதி இந்திரியங்களையும் பொருட்டு உத்கானஞ்செய்தது" என்றதால் முக்கிய ப்ராணனுடைய பரிக்ரஹமானது படிக்கப் படுகிறது. அது போலவே சாந்தோக்கியத்திலும் "ஒருவரை யொருவர் பங்கப் படுத்தும் நோக்கங்கொண்டு தொடங்கப்பட்ட யுத்தத்தில் தேவர்கள் இதனால் அஸுரர்களை ஜயிப்போம் என்பதாய் உத்கீதத்தையனுஷ்டித்தனர்" என்று தொடங்கி வேறுப்ராணன்களை ஆஸுரபாப ஸம்பந்தம்பெற்றவர்களென்பதாய் நிந்தித்து "பிறகு யாதொரு இந்த முக்கியப்ராணனுண்டோ அவனை உத்கீதமாக உபாஸித்தனர்" என்பதாய் முக்கியப்ராண பரிக்ரஹமானது படிக்கப்படுகிறது. இரண்டிடத்திலும் ப்ராணனைப்பற்றிய ப்ரஶம்ஸை (புகழுரை) இருப்பதனால் ப்ராணவித்யையின் (உபாஸ்தியின்) விதியானது நிஸ்சயிக்கப்படுகிறது. அங்கு ஸம்சயமுண்டாகிறது. இவ்விடத்தில் வித்யைவேறுபடுமா? அல்லது வித்யையொன்றுபடுமா? என்றும். முந்தின அதிகரணத்திற் சொல்லிய நியாயத்தினால் வித்யை ஒன்றுதான் என வேற்படுகிறது.

சங்கை—தொடக்கம் வேறுபட்டிருப்பதால் வித்யை யொன்றுபட்டதாக வாகமுடியாது. வாஜஸநேயிகள் வேறுவிதமாகவும், சந்தோகர்கள் வேறுவிதமாகவும் தொடங்குகின்றனர். அதாவது:—"நீ எங்களுக்கு உத்காநத்தைச் செய்" என்பதாய் வாஜஸநேயிகள் ப்ராணனை உத்கீதத்துக்குக் கர்த்தாவாகச் சொல்லுகின்றனர். சந்தோகர்களோ "அவனை (ப்ராணனை) உத்கீதமாக உபாஸித்தனர்" என்பதாய் உத்கீதமாக ப்ராணனைச் சொல்லுகின்றனர் என்பதாம். இவ்விதமிருக்க வித்யை ஒன்று என்று எவ்விதமேற்படும் என்றாலோ?

உத்தரம்—இது தோஷமாகாது. இந்த விசேஷத்தினால் (வேற்றுமையினால்) மட்டும் வித்யையின் ஏகத்வமானது ஓடிப்போய் விடாது. பலதரப்பட்ட வேற்று

त्वात्। तथाहि—देवासुरसङ्ग्रामोपक्रमत्वमसुरात्ययाभिप्राय उद्गीथोपन्यासो वागादिसङ्कीर्तनं तन्निन्दया मुख्यप्राणव्यपाश्रयस्तद्वीर्याच्चासुरविध्वंसनमश्मलोष्टनिदर्शनेनेत्येवं बहवोऽर्था उभयत्राप्यविशिष्टाः प्रतीयन्ते। वाजसनेयकेऽपि चोद्गीथसामानाधिकरण्यं प्राणस्य श्रुतम्—'एष उ वा उद्गीथः' (बृ० १। ३। २३) इति। तस्माच्छान्दोग्येऽपि कर्तृत्वं लक्षयितव्यम्। तस्माच्च विद्यैकत्वमिति ॥ ६ ॥

**न वा प्रकरणभेदात्परोवरीयस्त्वादिवत् ॥ ७ ॥**

न वा विद्यैकत्वमत्र न्याय्यम्। कस्मात्। प्रकरणभेदादिति प्रक्रमभेदादित्यर्थः।

---

மையின்மையின் காரணமும் காணவே படுகிறது. அதாவது:—தேவாஸுர ஸங்கிராமத்தின் உபக்ரமம், அஸுரர்களை விரட்டுவதில் நோக்கம், உத்கீதத்தின் உபன்னியாஸம், வாகாதிகளைச் சொல்லல், அவற்றை நிந்திக்கும் வாயிலாக முக்கிய ப்ராணனை யாச்ரயித்தல், அம்முக்ய ப்ராணனுடைய வீர்யத்தினால் கற்பாறையில் மோதின மண்ணுங்கட்டி நாசமடைவதைத் திருஷ்டாந்தமாகக் காட்டும்வாயிலாக அஸுரமான பாபத்தை யழித்தல், என்ற இம்மாதிரியான பலஸமாசாரங்கள் இரண்டிடங்களிலும் பொதுவாகவே காணப்படுகின்றன. பிருஹதாரண்யகத்திலுங் கூட ப்ராணனுக்கு உத்கித ஸாமானாதிகரண்யமானது (உத்கீத சப்தத்தாற் சொல்லப்படுதலானது) "இவனே (ப்ராணனே) தான் உத்கீதம்" என்ற விடத்திற் காணப்படுகிறது. * ஆனதுபற்றிச் சாந்தோக்கியத்திலுங்கூட ப்ராணனுக்கு லக்ஷணைமுறையால் கர்த்திருத்வத்தைக் கொள்ளவேண்டுவதவச்யமாகிறது. ஆகவே வித்யை யொன்று பட்டதே யாகும். (6) (எ-று)

(அ-கை) இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது—

**(ஸூ) நவாப்ரகரணபேதாத் பரோவரீயஸ்த்வாதிவத் (7)**

(ப-ரை) இவ்விடத்தில் [**विद्यैकत्वम्** (வித்யைகத்வம்) = ஒரேவித்யை எனக் கொள்ளுவது] **नवा** (நவா)=பொருத்தமுள்ளதாகவாகாது. **प्रकरणभेदात्** (ப்ரகரண பேதாத்)=தொடக்கம் வேறுபட்டிருப்பதே அதன் காரணமாகும். **परोवरीयस्त्वादिवत्** (பரோவரீயஸ்த்வாதிவத்)=பரோவரீயஸ்த்வம் முதலிய குணங்களுடன் கூடின உத்கீதோபாஸனமானது, அதே இடத்திற் சொல்லப்படும் வேறு உத்கீதோபாஸ்தியைவிட வேறுபட்டதாக எவ்விதம் கொள்ளப்படுகிறதோ அவ்விதமே இங்கும் சாண்க. (7) (எ-று)

பாஷ்யம்.—இவ்விடத்தில் வித்யைகத்வமானது நியாயமுள்ளதாக வாகாது. வித்யா பேதமேதான் நியாயமுள்ளதாகவாகும். என்? ப்ரகரணபேதத்தாலென்றும். ப்ரக்ரமத்தின் (தொடக்கத்தின்) பேதமிருப்பதால் என்பது அதன் பொ

---

* ஆகவே பூர்வபக்ஷத்தில் ப்ராணனிடத்தில் உத்கீதத்வம், உத்காதிருத்வம் இரண்டிற்கும் ஸமுச்சயத்தை அங்கீகரிக்கவேண்டும் என்பது பாஷ்யத்தின் கருத்தென ப்ரம்ஹ வித்யாபரணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

तथाहि—इह प्रक्रमभेदो दृश्यते । छान्दोग्ये तावत्—'ओमित्येतदक्षरमुद्गीथमुपासीत' (छा० १।१।१) इत्येवमुद्गीथावयवस्योङ्कारस्योपास्यत्वं प्रस्तुत्य रसतमादिगुणोपव्याख्यानं तत्र कृत्वा 'अथ खल्वेतस्यैवाक्षरस्योपव्याख्यानं भवति' (छा० १।१।१०) इति पुनरपि तमेवोद्गीथावयवमोङ्कारमनुवर्त्य देवासुराख्यायिकाद्वारेण तम् 'प्राणमुद्गीथमुपासाञ्चक्रिरे' (छा० १।२।२) इत्याह । तत्र यद्युद्गीथशब्देन सकला भक्तिरभिप्रेयेत तस्याश्च कर्तोद्गातर्त्विक्तत उपक्रमश्चोपरुध्येत लक्षणा च प्रसज्येत । उपक्रमानुरोधेन चैक-

---

ருள். அதாவது:—இங்கு (இவ்விருஸ்தலங்களிலும்) ப்ரக்ரமத்தின் (தொடக்கத்தின்) பேதமானது காணக்கிடக்கிறது. சாந்தோக்கியத்திலோ "ஓம் என்ற உத்கீதத்தின் அவயவமான இந்த அக்ஷரத்தை (எழுத்தை) உபாஸிப்பாயாக" என இவ்விதம் உத்கீதாவயவமான ஓங்காரத்துக்கு உபாஸ்யத்துவத்தைச் சொல்லத் தொடங்கி அந்த ஓங்காரத்தினிடத்தில் ரஸதமத்வம், ஆப்தி, ஸம்ருத்தி, என்ற குணங்களை "பிறகு இதே அக்ஷரத்துக்கு உபவ்யாக்யானம் (இத்தகைய உபாஸனம் இத்தகைய மஹிமை யுள்ளது, என்ற விளக்கம்) பின்வருமாறு ஏற்படுகின்றது" என்றதாலுபதேசித்துத் திரும்பவும் அந்த உத்கீதாவயவமான ஓங்காரத்தையே அநுவர்த்தித்துக் கொண்டு (திரும்பவும் வாங்கிக்கொண்டு) தேவாஸுரர்கள் சண்டையிடத் தொடங்கினர் என்ற ஆக்யாயிகையைச் (கதையை) சொல்லும் வாயிலாக அந்த "உத்கீதாவயவமான ஓங்காரத்தை ப்ராணனாக வுபாஸித்தனர்" என்பதாய்ச் சொல்லப்படுகிறது. அவ்விடத்திலுள்ள உத்கீத என்ற சப்தத்தால் எல்லா * ஸாமபக்தியும் (ஸாமகானப்பிரிவும்) சொல்லப்படுகிறதென்றும், அந்த எல்லாப்பக்திகளையும் கானஞ் செய்யும் ருத்விக்கான உத்காதாவும் சொல்லப்படுகிறான் என்றும் கருதப்படுமானால் அப்பொழுது ஓங்காரோபாஸ்தியைச் சொல்ல வெண்ணங்கொண்ட உபக்கிரமம் வீணாவதுடன், உத்கீதம் என்ற பதத்தில் †கர்த்

---

* யாககாலத்தில் தேவதையை ஸ்துதிப்பதற்காக ஸாமத்தைக் கானஞ் செய்யுங்கால் அதை ப்ரஸ்தாவம், உத்கீதம், ப்ரதிஹாரம், உபத்ரவம், நிதநம் என ஐந்து பக்திகளாகப் (பிரிவுகளாகப்) பிரித்து கானஞ்செய்யவேண்டுமென விதியிருக்கிறது. அந்த ஐந்து பக்திகளுள் இரண்டாவது பக்தியான (ஸாமகானப்பிரிவான) உத்கீதத்தைக் கானஞ்செய்யுங்கால் ஒவ்வொரு பதங்களுடனும் ஓம் என்ற ப்ரணவத்தைச் சேர்த்துக்கொண்டு அதாவது:—"ஓம் தத்ஸவிதுர்வரேணியோம், ஓம் பார்கோ தேவஸ்ய தீமாஹி, ஓம் தியோ யோ நः ப்ரசோ என்ற மாதிரியாகக்கானஞ்செய்யுமிடத்தில் ஒவ்வொரு பதத்துக்குமிடையிலுள்ள ஓம் என்ற ப்ரணவமானது உத்கீதமெனச் சொல்லப்படுகிறது. ஆயினும் உத்கீதமென்ற பக்தியின் (ஸாமகானப்பிரிவின்) இடையிலுள்ள ஓங்காரத்தில் ப்ராணபுத்தியோ, ப்ரம்ஹபுத்தியோ, செய்யவேண்டுமென்பது அதன் பொருள். ஆகவே உத்கீதம் என்று சுருதி சொல்லியிருப்பதைக் கொண்டு 1-வதான ப்ரஸ்தாவபக்தி, 3-வதான ப்ரதிஹாரபக்தி, 4-வதான உபத்ரவபக்தி 5-வதான நிதநபக்தி இவைகளும் கிரஹிக்கப்படுகிறதென்றும், அந்த எல்லாப் பக்திகளை கானஞ்செய்யும் ருத்வித் உத்காதா என்று சொல்லப்படுகிறான் என்றும் கொள்ளப்படுமானால் உபக்கிரமத்துக்கு விரோதம் வருவதுடன் லக்ஷணையும் சொல்லவேண்டி வரும் என்பது பாஷ்யத்தின் கருத்து.

† ஓமித்யேதத்க்ஷர முத்கீதமுபாஸீத எனத் தொடக்கத்திலுள்ள உத்கீத என்ற

स्मिन्वाक्य उपसंहारेण भवितव्यम्। तस्मादत्र तावदुद्गीथावयव ओङ्कारे प्राणदृष्टिरुपदिश्यते। वाजसनेयके तूद्गीथशब्देनावयवग्रहणे कारणाभावात्सकलैव भक्तिरावेद्यते। 'त्वं न उद्गाय' (बृ० १। ३। २) इत्यपि तस्याः कर्तोद्गातर्त्विक्प्राणत्वेन निरूप्यत इति प्रस्थानान्तरम्। यदपि तत्रोद्गीथसामानाधिकरण्यं प्राणस्य तदप्युद्गातृत्वेनैव दिदर्शयिषितस्य प्राणस्य सर्वात्मत्वप्रतिपादनार्थमिति न विद्यैकत्वमावहति। सकलभक्तिविषय एव च तत्राप्युद्गीथशब्द इति वैषम्यम्। नच प्राणस्योद्गातृत्वमसंभवेन हेतुना परित्यज्यत उद्गीथभाववदुद्गातृभावस्याप्युपासनार्थत्वेनोपदिश्यमानत्वात्। प्राणवीर्येणैव चोद्गातौद्गात्रं करोतीति नास्त्यसंभवः। तथाच तत्रैव श्रावितम्—'वाचा च ह्येव स प्राणेन चोदगायत्' (बृ० १। ३। २४) इति। नच विवक्षितार्थभेदेऽवगम्यमाने वाक्यच्छायानुकारमात्रेण समा-

---

திருக்கைக்ஷணையும் செய்யவேண்டிவரும். ஒரு வாக்கியத்தில் உபக்கிரமத்தை யொட்டியே தான் உபஸம்ஹாரமும் (அதன் முடிவும்) இருக்கவேண்டுவது அவஸ்ய மாகும். ஆகவே இவ்விடத்தில் (சாந்தோக்கியத்தில்) உத்கீதாவயவமான ஓங்கா ரத்தில் ப்ராணபுத்தி செய்யவேண்டுவதாக வுபதேசிக்கப்படுகிறது. வாஜஸநேய கத்திலோ உத்கீதசப்தத்தால் அதனுடைய அவயவத்தைக் கிரஹிப்பதற்குரிய கார ணமில்லாமைபற்றி எல்லாஸாமபக்தியுமே அறிவிக்கப்படுகிறது "நீ உத்கானஞ் செய்வாயாக" என்றதால் அந்த எல்லாப் பக்திகளுக்கும் (ஸாமாகானஞ் செய்யும் முறைக்கும்) கர்த்தாவான (எல்லா ஸாமபக்திகளையும் கானஞ்செய்கிற) உத்காதாவாகிற ருத்விக்கானவன் ப்ராணனுகச் சொல்லப்படுகிறுன் என்பது பற்றி இங்கு உபதேசிக்கும் முறை வேறுவிதமாகக் காணப்படுகிறது. பிருஹதாரண்ய கத்தில் "இந்த ப்ராணனே தான் உத்கிதம்" என்பதாய் ப்ராணன் உத்கித என்ற பதத்தாற் சொல்லப்படுவதாக யாதொன்று சொல்லப்பட்டதோ அதுவும் உத்கா தாவாகவே சொல்ல விரும்பப்பட்ட ப்ராணனுக்கு ஸர்வாத்மத்வத்தை ப்ரதிபா திக்க (விளக்க) வேண்டியே. ஆதலால் அது வித்யை ஒன்றென்பதைச் சொல்ல மாட்டாது. அவ்விடத்திலுள்ள உத்கீதசப்தமானது ஸாமபக்தியாவையுமே விஷய மாகக் கொண்டது என்பது பற்றி வைஷம்யமிருக்கிறது. மேலும் ப்ராணனுக்கு உத்காதாவாக விருக்குந்தன்மையானது ஸம்பவிக்க முடியாது என்ற காரணத் தால் பரித்யாகஞ் செய்யக்கூடியது மன்று. ப்ராணனுக்கு உத்கீதபாவம் போல வே உத்காதாவாக விருக்குந்தன்மையும் உபாஸனைக்கு வேண்டி உபதேசிக்கப் படுவதாக விருப்பதே அதன் காரணமாகும். ப்ராணனுடைய வீர்யத்தை (வலு வைக்) கொண்டே உத்காதாவானவன் ஔத்காத்ரம் என்ற கர்மாவைச் செய்வ தால் இது ஸம்பவிக்காது என்பது மில்லை. அவ்விதமே அதே இடத்தில் "அந்த உத்காதாவானவன வாக்கினுலும் ப்ராணனுலுமே உத்கானஞ் செய்தான்" எனச்

---

பதத்தால் உத்கீதபக்தியின் அவயவமான ஓங்காரமென்ற எழுத்தை ப்ரம்ஹமாக உபாஸிக்கவேண்டும் என்று இயற்கையாகக் கிடைக்கும் பொருளை விடுத்து உத்கீதம் என்பதற்கு ஸாமகானஞ் செய்பவர் என்பதாய் லக்ஷணைமுறையை யாசிரயித்துப் பொருள் கொள்ளவேண்டிவரும். இதுவோ நியாயமாகவாகாது என்பது கருத்து.

नार्थत्वमध्यवसातुं युक्तम्। तथाह्यभ्युदयवाक्ये पशुकामवाक्ये च—'त्रेधा तण्डुलान्विभ-

சொல்லப்பட்டு மிருக்கிறது. மேலும், சாஸ்திரம் சொல்ல விருப்பங்கொண்ட பொருளின் பேதமானது காணப்படுங்கால் வாக்கியத்தின் போக்கு ஒத்துவருவது போலக் காணப்படுவதைக் கொண்டுமட்டும் ஸமானமான பொருளுள்ள தன்மையை நிஸ்சயிப்பது யுக்தமாகவு மாகாது. அவ்விதமே * அப்யுதய வாக்யத்தி

*"விவா ஏதம் ப்ரஜயா பசுபிரர்த்தயதி, வர்த்தயத்யஸ்ய ப்ராத்ருவ்யம்,யஸ்ய ஹவிர்நிருப்தம் புரஸ்தாச்சந்த்ரமா அப்யுதேதி த்ரேதாதண்டுலாந்விபஜேத் யே மத்ய மா:ஸ்யு: தாநக்நயே தாத்ரே புரோடாசமஷ்டாகபாலம் குர்யாத், யேஸ்தவிஷ்ட் டா: தாநிந்த்ராயப்ரதாத்ரே ததந் சரும், யேணிஷ்ட்டாஸ்தாந்விஷ்ணவே சிபிவிஷ் டாய ச்ருதே சரும்" என்பது அப்யுதயவாக்கிய மெனப்படும். இதன் பொருள் பின் வருமாறு—எந்த யஜமானன் சதுர்த்தசீ தினத்தன்று அமாவாஸ்யை எனப் பிரமித்து பிரதமைதினம் செய்யவேண்டிய தர்சம் என்ற கர்மத்துக்கு வேண்டிப் பிரவிருத்தித்து முதல்நாளே தர்சகர்மத்தின் தேவதைகளான அக்னியாதிகளையும் பொருட்டு தண்டுலம் (அரிசி) தயிர், பால் இவைகளாகிற ஹவிஸ்ஸை நிர்வாபம் (பிரித்தலை) செய்கின்றானோ அவ்விதம் அவன் நிர்வாபஞ்செய்தபின்னர் சந்திரனுதயத்தை யடைவானாயின், காலத்தைத் தவறாக எண்ணின குற்றத்துக்காக அந்த யஜமானனை நிர்வாபம் செய்த அந்த ஹவிஸ்ஸே ப்ரஜைகளைவிட்டுப் பிரித்து விடுவதுடன் சத்ருக்களையும் இவனுக்கு விருத்திசெய்து விடுகிறது. ஆகவே இந்த யஜமானன் மத்யமம், ஸ்தவிஷ்டம், அணிஷ்டம் என மூன்றுவிதமாக விருக்கின்ற அரிசிகளையும், தயிர் பால் இவைகளையும் அக்னியாதி தேவதைகளினின்றும் விபாகஞ்செய்தல் வேண்டும். அவ்விதம் பிரித்து தாத்ருத்வம் முதலிய குணங்களுடன் கூடினவர்களும் தர்சம் என்ற கர்மத்தின் தேவதைகளைக் காட்டிலும் வேறுபட்டவர்களுமான அக்னியாதிதேவதைகளையும் பொருட்டு நிர்வாபஞ் செய்யவேண்டும் என்றும். அந்தப் பங்குகளுள் ஸ்தூலமான தண்டுலத்தாலாயசருவைத் தயிரிலும், நுட்பமான (சிறிதான) தண்டுலசருவைப் பாலிலும், தயாரிக்கவேண்டும் என்பது அதன் பொருளாம். இந்த விடத்தில் காலமாறுபாடுரூபமான அபராதம் நேர்ந்த காலத்தில் வேறுதேவதையுடன் கூடினதும், ப்ராயச்சித்தரூபமாக வானதும்,தர்சம் என்ற கர்மத்தை விடவேறுபட்டதுமான கர்மாவானது விதிக்கப்படுகிறது எனப் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே "யேமத்யமா" என்ற தாதிவாக்கியத்தால் தண்டுலங்களின் மூன்றுபங்கானபிரிவை அநுவாதஞ் செய்து கொண்டு, "விபஜேத்" என்றதால் ஹவிஸ்ஸுக்கு ப்ரகிருதமான தர்சகர்மதேவதையைவிட்டுப் பிரித்தலைமட்டும் செய்து அந்தத் தர்சம் என்ற கர்மத்திலேயே வேறுதேவதையின் ஸம்பந்தம் மட்டும் விதிக்கப்படுகிறதே யொழிய தனியான தொருகர்மம் விதிக்கப்படவில்லை என ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே அப்யுதயவாக்கியத்தில் காலமாறுபாட்டுடன் தொடக்கம் காணப்படுவது கொண்டு நிர்வாபஞ்செய்த ஹவிஸ்ஸை முன்னர் ஸங்கல்பிதமான தேவதையினின்றும் பிரித்தல் மட்டும் உபதேசிக்கப்பட்டதாக மட்டுந்தான் தீர்மானிக்கப்படுகிறது. பசு காமவாக்கியத்திலோ வெனில் நிர்வாபம் செய்யப்பட்ட தண்டுலம் முதலியவற்றுள் மிக்க ஸ்தூலமான பாகங்களை ஸநிமான் என்ற குணமுள்ள அக்னியைக் குறித்து அஷ்டாகபாலத்தில் (எட்டுமேடக்கில்) வைத்து ஸம்ஸ்காரஞ்செய்து புரோடாசத்தை நிர்வாபஞ் செய்யவேண்டுமென்றும், நடுத்தரமான தண்டுல பாகங்களை சிபிவிஷ்டர் என்ற குணமுள்ள விஷ்ணு என்ற தேவதையைக் குறித்து காய்ச்சின பாலில் சருவாகச்செய்து நிர்வாபஞ் செய்யவேண்டும்

ऽैन्द्रे मध्यमाः स्युस्तानग्नये दात्रे पुरोडाशमष्टाकपालं कुर्यात्' इत्यादिनिर्देशसाम्येऽप्युपक्रमभेदादभ्युदयवाक्ये देवतापनयोऽध्यवसितः, पशुकामवाक्ये तु यागविधिः। तथेहाप्युपक्रमभेदाद्विद्याभेदः। परोवरीयस्त्वादिवत्। यथा परमात्मदृष्ट्यध्याससाम्येऽपि 'आकाशो ह्येवैभ्यो ज्यायानाकाशः परायणम्' (छा० १।९।१) 'स एष परोवरीयानुद्गीथः स एषोऽनन्तः' (छा० १।९।२) इति परोवरीयस्त्वगुणविशिष्टमुद्गीथोपासनमक्ष्यादि-

---

லும், பசு காமவாக்கியத்திலும் "தண்டுலங் (அரிசி) களை மூன்றுபங்காகப் பிரிக்க வேண்டும். அவற்றுள் நடுத்தரமான பங்குகள் எவையுண்டோ அவற்றை தாத்ருத்வம் என்றகுணமுள்ள அக்னியின் பொருட்டு அஷ்டாகபால புரோடாசமாக்கிக் (எட்டுமடக்கில் வைத்து ஸம்ஸ்காரஞ்செய்யப்பட்ட புரோடாசமாகச் செய்து) கொள்ளவேண்டும்" என்ற தாத்யுபதேசத்தின் ஸாம்யமிருந்தபோதிலுங்கூட அப்யுதயவாக்கியத்தில் உத்தேஶ்யதேவதையின் பரித்யாகமானது நிஸ்சயிக்கப்பட்டிருக்கிறது. பசு காமவாக்கியத்திலோயாகவிதியானது நிஸ்சயிக்கப்பட்டிருக்கிறது. அதுபோலவே இங்கும் உபக்ரமபேதத்தால் வித்தையின் பேதமானது ஏற்படுகிறது. பரோவரீயஸ்த்வாதி போலவே இதுவுமாகும். அதாவது:—உத்கீதத்தில் பரமாத்ம திருஷ்டி செய்யவேண்டும் (உத்கீதத்தைப் பரமாத்மாவாக வுபாஸிக்க வேண்டும்) என்பது பொதுவாக விருந்த போதிலுங்கூட "ஆகாசமே யன்றோ (ஆகாசமெனப் பெயரிய பரமாத்மாவே அன்றோ) இவற்றைக் காட்டிலும் மேலானவர். ஆகாசமே பராயணம் (முக்கியமான ப்ராப்திஸ்தானம்)" என்றும், "அந்த இந்த பரோவரீயானே (மேலானவற்றுக்கெல்லாம் மேலானவரே அதாவது: பரமாத்மாவே) உத்கீதமாகும். அந்த இந்த உத்கீதம் அநந்தனும் (அநந்தனான பரமாத்மாவும்) ஆகும்" என்று மானவிடத்தில் பரோவரீயஸ்த்வம் என்ற குணவிசிஷ்டமான உத்கீதோபாஸனமானது அக்ஷி (கண்) ஆதித்யன் (ஸூரியன்) முதலியவற்றை யடைந்த ஹிரண்யஶ்மஶ்ருத்வம் (தங்கம் போன்ற மீசையை யுடையவராக விருத்தல்) முதலிய குணங்களுடன் கூடின உத்கீதோபாஸனத்தை விடவேறுபட்டதாக வாவது எவ்விதமோ அவ்விதமே இங்கும் கொள்ளவேண்டும் என்றும்

---

என்றும், தண்டுலத்தின் நுட்பமான பங்குகளை ப்ரதாத்ருத்வம் என்ற குணமுள்ள இந்திரன் என்ற தேவதையைக் குறித்து தயிரில் தயாரித்த சருவை நிர்வாபஞ் செய்யவேண்டும் என்றுமான உபதேசமானது அப்யுதயவாக்கியத்துடன் ஒத்ததாகக் காணப்பட்ட போதிலுங்கூட "எவனுக்குப் பசுவில் விருப்பமிருக்கிறதோ அவன் அமாவாஸ்யையை (தர்சகர்மத்தைச்) செய்துவிட்டு கன்றுகளை அதன் தாயை விட்டுப் பிரித்துக் கட்டவேண்டும்" என்பதாய் நித்யகர்மாவான தர்சத்தைச் செய்துவிட்டுத் திரும்பவும் பால் கரக்கவேண்டி வத்ஸங்களைத் தாயைவிட்டுப் பிரித்துக் கட்டவேண்டும் என்று விதியுடன் உபக்கிரமித்திருப்பதால் பசுவில் விருப்பமுள்ள யஜமானனுக்குத் தனிப்பட்ட தொருயாகம் விதிக்கப்படுகிறதே யொழிய அப்யுதயவாக்கியத்தில் போல தர்சகர்மத்திலேயே வேறுதேவதை விதிக்கப்படுவதில்லை. ஆகவே அது போலவே இவ்விடத்திலும் நிர்த்தேசம் ஒற்றிருப்பதானது வித்யை ஒன்று என்பதற்குக் காரணமாக வாகமாட்டாது என்பது பாஷ்யத்தின் கருத்து.

स्यादिगतहिरण्यश्मश्रुत्वादिगुणविशिष्टोद्गीथोपासनाद्भिन्नम् । नचेतरेतरगुणोपसंहार एकस्यामपि शाखायां तद्वच्छाखान्तरस्थेष्वप्येवञ्जातीयकेषूपासनेष्विति ॥ ७ ॥

**संज्ञातश्चेत्तदुक्तमस्ति तु तदपि ॥ ८ ॥**

अथोच्येत संज्ञैकत्वाद्विद्यैकत्वमत्र न्याय्यमुद्गीथविद्येति ह्युभयत्राप्येका संज्ञेति । तदपि नोपपद्यते । उक्तं ह्येतत्—'न वा प्रकरणभेदात्परोवरीयस्त्वादिवत्' (ब्र० सू० ३ । ३ । ७) इति । तदेव चात्र न्याय्यतरं श्रुत्यक्षरानुगतं हि तत्संज्ञैकत्वं तु श्रुत्यक्षरबाह्यमुद्गीथशब्दमात्रप्रयोगाल्लौकिकैर्व्यवहर्तृभिरुपचर्यते । अस्ति चैतत्संज्ञैकत्वं प्रसिद्धभेदेष्वपि परोवरीयस्त्वाद्युपासनेषूद्गीथविद्येति । तथा प्रसिद्धभेदानामप्यग्निहोत्रदर्शपूर्णमासादीनां का-

---

சாகை ஒன்ருக விருப்பினுங்கூட ஓரிடத்திற் சொல்லிய குணங்களுக்கு அதே சாகையில் வேறிடத்தில் உபஸம்ஹாரமானது எவ்விதம் கிடையாதோ அதுபோல வே வேறுசாகைகளிற் சொல்லிய இம்மாதிரியான உபாஸனங்களிலும் குணேுபஸம்ஹாரம் கண்டுகொள்ளவேண்டுவது அவஶ்யமாகிறது என்ரும். (7) (எ–று)

**(ஸூ–) ஸம்க்ஞாத:சேத் ததுக்தம் அஸ்திது ததபி (8)**

(ப–ரை) **संज्ञातश्चेत्** (ஸம்க்ஞாத:சேத்)=உத்கீதவித்யை என்ற பெயர் இரண்டிடத்திலும் ஒன்ருக விருப்பதிலிருந்து இரண்டுவித்யையும் ஒன்றேதாளுகும். எனின்? **तदुक्तम्** (ததுக்தம்)=அவ்விஷயத்தில் "நவாப்ரகரணபேதாத் பரோவரீயஸ்த்வாதிவத்" என்ற முந்தின ஸூத்திரத்தால் பதில் சொல்லப்பட்டிருக்கிறது. **तदपि** (ததபி)=அந்த ஒரே விதமானபெயரும் **अस्ति तु** (அஸ்திது)=ப்ரஸித்தமான பேதமுள்ளவைகளான பரோவரீயஸ்த்வம் முதலிய குணவிசிஷ்ட உபாஸனங்களில் உத்கீதவித்யை என்பதாய் காணவே படுகிறது. (8) (எ–று)

பாஷ்யம்.—பெயரொன்ருக விருப்பதுபற்றி வித்யையும் இங்கு ஒன்று என்பதுதான் நியாயமானதாக வாகும். உத்கீதவித்யை என்றல்லவோ இரண்டிடத்திலும் ஒரேபெயர் காணப்படுகிறது எனச் சொல்லப்படுமாளுல் அதுவும் பொருந்தாது. "நவா ப்ரகரணபேதாத் பரோவரீயஸ்த்வாதிவத்" என்ற முந்தின ஸூத்திரத்தில் இதற்குப்பதில் சொல்லப்பட்டிருக்கின்றதன்ருே? அதுவே தான் (வித்யாபேதம் தான்) இங்கு நியாயமானதாகவாகும். ஶ்ருதியிலுள்ள அக்ஷரத்துக்கு ஒத்ததாகவன்ருே அது ஆகிறது. ஸக்ஞை ஒன்ருயிருப்பதோவெனில் ஶ்ருதியின் அக்ஷரங்களுக்கு வெளியிலுள்ளதாகவும், உத்கீதம் என்ற சப்தப்ரயோகம் மட்டும் செய்திருப்பதைக் கொண்டு உலகிலுள்ள வியவஹாரஞ்செய்கின்றவர்களால் உபசாரமுறையாற் கூறப்படுவதாகவு மிருக்கிறது. ப்ரஸித்தமான பேதமுள்ள பரோவரீயஸ்த்வம் முதலியகுணம் வாய்ந்த உபாஸனங்களில் உத்கீதவித்யை என்பதாய் ஸக்ஞை ஒன்ருகவே காணவும் படுகின்றது. அதுபோலவே ப்ரஸித்தமான பேதமுள்ளவைகளான அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம் முதலியன காடகமென்ற ஒரேகிரந்தத்தில் படிக்கப்படுவதுபற்றி காடக மென ஒரே பெயருள்ளனவாகவே காணவும்படுகிறது. அவ்விதமே இங்கும் ஆகலாம். எந்த

ठकैकग्रन्थपरिपठितानां काठकसंज्ञैकत्वं दृश्यते तथेहापि भविष्यति । यत्र तु नास्ति कश्चि-देवञ्जातीयको भेदहेतुस्तत्र भवतु संज्ञैकत्वाद्विद्यैकत्वं यथा संवर्गविद्यादिषु ॥ ८ ॥

४ व्याप्त्यधिकरणम् । सू० ९

व्याप्तेश्च समञ्जसम् ॥ ९ ॥

किमध्यासोऽथवा बाध ऐक्यं वाथ विशेष्यता । अक्षरस्यात्र नास्त्यैक्यं नियतं हेत्वभावतः ॥ १ ॥

वेदेषु व्याप्त ओंकार उद्गीथेन विशिष्यते । अध्यासादौ फलं कल्प्यं सन्निकृष्टांशलक्षणा ॥ २ ॥

---

விடத்தில் இதுபோன்ற வேற்றுமைக்குரிய காரணமொன்று மில்லையோ அவ்வி டத்தில் ஸம்வர்க்கவித்யை முதலியவிடங்களில் போல ஸம்க்ஞை ஒன்ருக விருப் பது பற்றி வித்யைக்கு ஐக்யமானது இருக்கட்டும் (8) (எ—று)

மூன்ருவது அந்யதாத்வாதிகரணம் முற்றிற்று.

—❧—

## வ்யாப்த்யதிகரணம் 4.

### (ஸூ) வ்யாப்தே: ச ஸமஞ்ஜ்ஸம் (9)

(ப—ரை) **व्याप्तेः** (வ்யாப்தேஶ்ச)=‘ஓம்’ என்ற அக்ஷரத்துக்கு எல்லாவேதங் களிலும் வியாப்தியிருப்பதால் அவ்விதம் ஸர்வவேத வியாபியான ஓங்காரத்தை இவ்விடத்தில் கிரஹிக்காதிருக்கவேண்டி **ओमित्येतदक्षरमुद्गीथमुपासीत** (ஓமித்யேத தக்ஷரமுத்கீதமுபாஸீத)=என்ற விடத்தில் **उद्गीथम्** (உத்கீதம்)=என ஓம் என்ற அக்ஷரத்துக்குக் கொடுத்த விஶேஷணமானது (அடைமொழியானது) **समञ्जसम्** (ஸமஞ்ஜஸம்)=பொருத்தமுள்ளதாக வாகிவிடுகிறது. ஆகவே **च** (ச)=விஶே ஷணத்தை விட வேறுபட்ட பாதம், அத்யாஸம், ஐக்கியம் என்ற பக்ஷங்கள் பொ ருந்தக்கூடியன வன்று. (9) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) (ஓமித்யேதத க்ஷரமுத்கீதமுபாஸீத) என்றவிடத்தில் ஓம் என்ற அக்ஷரத்தில் உத்கித புத்தியின் அத்யாஸம் செய்யப்படுகிறதா? அல்லது பாதமா? (அதாவது:—ஓம் என்பதில் ஏற்பட்ட அக்ஷரபுத்தியானது உத்கீதபுத்தியினல் போக்கப்படுகிறதா என்பதாம்.) அல்லது ஐக்கியமா? (அதாவது:—ஓம் என்கிற அக்ஷரந்தான் உத்கிதம், உத்கீதந்தான் ஓம் என்ற அக்ஷரம் என்பதாய் இரண்டும் ஒன்றென்ற எண்ண முண்டுபண்ணப்படுகிறதா? என்ரும்.) அல்லது:—ஓம் என்ற அக்ஷரத்துக்கு உத்கிதம் என்பது விஶேஷணமாகச் சொல்லப்படுகிறதா? (அதாவது:—எல்லாவேதங்களிலுமுள்ள ஓம் என்ற அக்ஷரத்தை விலக்கி உத்கீ தம் என்ற ஸாமபக்தியிலுள்ள ஓம் என்றதை மட்டும் கிரஹிக்கவேண்டும் என்ப தாக விலக்குவிதி கூறப்படுகிறதா? என்ரும்) என்பது ஸந்தேஹம். இவ்விடத்தில் ஐக்கியமானது நியதமாக (நிஶ்சிதமாகக்) கொள்ளமுடியாது. • அதற்குரிய காரண

'ओमित्येतदक्षरमुद्गीथमुपासीत' (छा० १।१।१) इत्यत्राक्षरोद्गीथशब्दयोः सामानाधिकरण्ये श्रूयमाणेऽध्यासापवादैकत्वविशेषणपक्षाणां प्रतिभासनात्कतमोऽत्र पक्षो न्याय्यः स्यादिति विचारः। तत्राध्यासो नाम द्वयोर्वस्तुनोरनिवर्तितायामेवान्यतरबुद्धावन्यतरबुद्धिरध्यस्यते। यस्मिन्नितरबुद्धिरध्यस्यतेऽनुवर्तत एव तस्मिंस्तद्बुद्धिरध्यस्तेतरबुद्धावपि। यथा नाम्नि ब्रह्मबुद्धावध्यस्यमानायामप्यनुवर्तत एव नामबुद्धिर्न ब्रह्मबुद्ध्या निवर्तते। यथावा प्रतिमादिषु विष्ण्वादिबुद्ध्यध्यासः। एवमिहाप्यक्षर उद्गीथबुद्धिरध्यस्यत उद्गीथे वाऽक्षरबुद्धिरिति। अपवादो नाम यत्र कस्मिंश्चिद्वस्तुनि पूर्वनिविष्टायां मिथ्याबुद्धौ निश्चितायां पश्चादुपजायमाना यथार्था बुद्धिः पूर्वनिविष्टाया मिथ्याबुद्धेर्निव-

---

மில்லாதிருப்பதே அதன்காரணமாகும். ஆகவே அத்யாஸம், பாதம், விஶேஷணம், ஏகத்வம் இவற்றுள் யாதானுமொன்றைத்தான் கிரஹிக்கவேண்டும் என்பது பூர்வ பக்ஷம் வேதங்களில் வியாப்தமான (எல்லாவேதங்களிலும் படிக்கப்படுகின்ற) ஓங் காரமானது உத்கீதம் என்பதால் விஶேஷிக்க(தனித்துக் காட்ட)ப்படுகிறது. அதாவது:—ஓம் என்ற அக்ஷரத்துக்கு உத்கீதம் என்பது விஶேஷணமாகச் சொல்லப் படுகிறது என்றும். அத்யாஸம் முதலிய பக்ஷங்களிலோ பலன் கல்பிக்க வேண்டி வருகிறது. விசேஷணபக்ஷத்திலும் அவயவலக்ஷணை செய்யவேண்டிவருகிறதுதாயினும் அது ஸங்கிகிருஷ்டாம்ச லக்ஷணையாகவாவதால் தோஷமாகவாகாது என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—"ஓமித்யேத தக்ஷர முத்கீத முபாஸீத" என்ற இந்த விடத்தில் அக்ஷரம், உத்கீதம் என்ற இவ்விரு சப்தங்களுக்கும் ஸாமாநாதிகரண்யமானது (ஒத்த ஒருபொருளுள்ளதாயிருக்குந்தன்மையானது) ஶ்ருதியில் காணப்படுவது பற்றி அத்யாஸம், அபவாதம், ஏகத்வம், விஶேஷணம் என்ற நான்கு பக்ஷங்கள் தோன்றுவதால் இவற்றுள் எந்த வொருபக்ஷம் (முறை) நியாயமானதாக வாகிறது என்பதாய் விசாரமானது ஏற்படுகிறது. அப்பக்ஷங்களுள் அத்யாஸ மாவது:—(எந்த விடத்தில்) இரண்டு பொருள்களுள் ஒருபொருளைப்பற்றிய புத்தி (எண்ணம்) நிவர்த்திக்க (விலக்க) ப்படாதிருக்கும்பொழுதே மற்றொன்றான புத்தி (எண்ணம்) அத்யஸிக்க (ஏற்றிக்காட்ட) ப்படுகிறதோ அதாவது:—எதில் வேறு பொருளின் புத்தி அத்யஸிக்க (ஏற்றிக்காட்ட) ப்படுகிறதோ அதில் அத்யஸிக்கப் பட்ட வேறுபொருளின் புத்தி (தோற்றம்) இருந்தபோதிலுங் கூட அதைப்பற்றிய புத்தியும் (எண்ணமும்) தொடர்ந்து வந்துகொண்டே இருக்கின்றதோ என்றும். (அங்கு அத்யாஸமாகும்) உதாஹரணமாய் எவ்விதம் நாமாவில் ப்ரம்ஹபுத்தியின் அத்யாஸம் காணப்படினுங் கூட அதில் நாமபுத்தியும் தொடர்ந்துவருகிறதே யொழிய ப்ரம்ஹபுத்தியால் அந்த நாமபுத்தியானது நிவர்த்திக்க (விலக்க) ப்படுவதில்லையோ, ப்ரதிமாதிகளில் விஷ்ணுபுத்தியின் அத்யாஸம் எவ்விதமோ அவ்விதமே இங்கும் ஓம் என்ற அக்ஷரத்தில் உத்கீதபுத்தி அத்யஸிக்கப்படுகிறது, அல்லது உத்கீதத்தில் ஓம் என்ற அக்ஷரபுத்தியானது அத்யஸிக்க (ஏற்றிக்கூற) ப்படுகிறது

तिका भवति। यथा देहेन्द्रियसङ्घात आत्मबुद्धिरात्मन्येवात्मबुद्ध्या पश्चाद्भाविन्या 'तत्त्वमसि' (छा० ६। ८। ७) इत्यनया यथार्थबुद्ध्या निवर्त्यते। यथा वा दिग्भ्रान्तिबुद्धिर्दिग्याथात्म्यबुद्ध्या निवर्त्यते। एवमिहाप्यक्षरबुद्ध्योद्गीथबुद्धिर्निवर्त्यत उद्गीथबुद्ध्या वाक्षरबुद्धिरिति। एकत्वं त्वक्षरोद्गीथशब्दयोरनतिरिक्तार्थवृत्तित्वम्। यथा द्विजोत्तमो ब्राह्मणो भूमिदेव इति। विशेषणं पुनः सर्ववेदव्यापिन ओमित्येतस्याक्षरस्य ग्रहणप्रसङ्ग औद्गात्रविशेषस्य समर्पणम्। यथा नीलं यदुत्पलं तदानयेति। एवमिहाप्युद्गीथो य ओङ्कारस्तमुपासीतेति। एवमेतस्मिन्सामानाधिकरण्यवाक्ये विमृश्यमान एते पक्षाः प्रतिभान्ति तत्रान्यतमनिर्धारणकारणाभावादनिर्धारणप्राप्ताविदमुच्यते— व्याप्तेश्च समञ्जसमिति॥

चशब्दोऽयं तु शब्दस्थाननिवेशी पक्षत्रयव्यावर्तनप्रयोजनः। तदिह त्रयः पक्षाः सावद्या इति पर्युदस्यन्ते। विशेषणपक्ष एवैको निरवद्य इत्युपादीयते। तत्राध्यासे तावद्या

---

என்று கொள்ளுதலாம். அபவாதமாவது:—யாதானுமொருபொருளில் முன்னர் ஏற்பட்ட பொய்யான புத்தியானது நிஸ்சிதமாக இருக்குங்கால் (அதைபற்றியே) பின்னருண்டாகின்ற உண்மையான புத்தியானது முன்னர் ஏற்பட்ட பொய்யான புத்தியை விலக்குவதாகவாகிறது. தேஹேந்திரிய ஸங்காதத்திலுண்டான ஆத்ம புத்தியானது "அது வாக நீ இருக்கின்றாய்" என்ற இந்தப் பின்னருண்டான ஆத்மவிஷயமாகவே உள்ள உண்மையான ஆத்மபுத்தியால் நிவிருத்திக்கப்படுவது எவ்விதமோ, திக்குகளைப் பற்றியுண்டாகும் மயக்கமான எண்ணமானது திக்விஷயமான உண்மையான புத்தியால் போக்கப்படுவது எவ்விதமோ இவ்விதமே இங்கும் "ஓம்" என்ற அக்ஷரபுத்தியினால் உத்கீதபுத்தியானது நிவர்த்திக்கப் படுகிறது, அல்லது உத்கீதபுத்தியினால் அக்ஷரபுத்தி நிவிருத்திக்கப்படுகின்றது என்று கொள்ளுதலாம். ஏகத்வமாவது:—அக்ஷரம் உத்கீதம் என்ற இரண்டுசப் தங்களுக்கும் வேறுபட்ட பொருளற்றதாயிருத்தலாம். த்விஜோத்தமன் என்பதும், ப்ராம்ஹணன் என்பதும், பூமிதேவன் என்பதும் எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க. விசேஷணமோவெனில்:—எல்லா வேதங்களிலும் பரவி இருக்கின்ற ஓம் என்ற இந்த அக்ஷரத்தின் கிரஹணம ப்ரஸக்தமாகவே ஔத்காத்ர மென்ற கர்மாவிலுள்ள ஓம் என்ற அக்ஷரத்தைமட்டும் அறிவிப்பதாம். "நீலமான யாதொரு உத்பலமுண்டோ அதைக்கொண்டுவா" என்றவிடத்தில் எவ்வித மோ இவ்விதமே இங்கும் உத்கீதமான யாதொரு ஓங்காரமுண்டோ அதை உபாஸிப்பாயாக என்றும்.

இவ்விதம் ஒற்ற ஒருபொருளைக்கூறும் இந்த வாக்கியத்தை ஆலோசிக்குங்கால் இந்நான்குபக்ஷங்கள் தோற்றுகின்றன. அவற்றுள் யாதானு மொன்றைத் தான் கொள்ளவேண்டுமென உறுதிசெய்வதற்குரிய காரணமில்லாமையால் எந்தப் பக்ஷத்தை வேண்டுமானாலும் கொள்ளலாம் என ப்ராப்தமாகவே "வ்யாப்தேஸ்ச ஸமஞ்ஜஸம்" என இந்த ஸூத்திரம் படிக்கப்படுகிறது. ஸூத்திரத்திலுள்ள ச என்ற இந்த சப்தமானது து என்ற சப்தத்தின் ஸ்தானத்தில் படிக்கப்படுவதாய் மற்ற மூன்றுபக்ஷங்களையும் மறுப்பதை பயனாகவுடையதாகவாகிறது. ஆகவே

बुद्धिरितरत्राध्यस्यते तच्छब्दस्य लक्षणावृत्तित्वं प्रसज्येत तत्फलं च कल्प्येत। श्रूयत एव फलम् 'आपयिता ह वै कामानां भवति' (छा० १।१।७) इत्यादीति चेत्। न। तस्यान्यफलत्वात्। आप्त्यादिदृष्टिफलं हि तन्नोद्गीथाध्यासफलम्। अपवादेऽपि समानः फलाभावः। मिथ्याज्ञाननिवृत्तिः फलमिति चेत्। न। पुरुषार्थोपयोगानवगमात्। नच कदाचिदप्योङ्कारादोङ्कारबुद्धिर्निवर्तत उद्गीथाद्वोद्गीथबुद्धिः। नचेदं वाक्यं वस्तुतत्त्वप्रतिपादनपरम्। उपासनाविधिपरत्वात्। नाप्येकत्वपक्षः सङ्गच्छते निष्प्रयोजनं हि तदा शब्दद्वयोच्चारणं स्यात्। एकेनैव विवक्षितार्थसमर्पणात्। नच हौत्रविषय आध्वर्यवविषये वाऽक्षर ओङ्कारशब्दवाच्य उद्गीथशब्दप्रसिद्धिरस्ति। नापि सकलायां साम्नो द्वितीयायां भक्तावुद्गीथ-

---

இங்கு மூன்றுபக்ஷங்கள் குற்றமுள்ளன பற்றி மறுக்கப்படுகின்றன. விசேஷண பக்ஷமொன்றே குற்றமற்றிருப்பதுபற்றி ஏர்க்கப்படுகிறது. அவற்றுள் முதலாவதான அத்யாஸபக்ஷத்தில் எந்தப் புத்தியானது வேறிடத்தில் அத்யஸிக்க (ஏற்றிக் கூறப்) படுகிறதோ அத்தகைய அறிவைத்தரும் சப்தத்துக்கு லக்ஷணமுறையால் அத்தகைய பெருளுள்ள தன்மை கல்பிக்கவேண்டிவரும். அவ்வித கல்பனைக்குப் பலனும் கல்பிக்கவேண்டிவரும்.

சங்கை—"காமங்களை அது அடைவிக்கின்றதாகவே இருக்கின்றது" என்றதாதியான பலன் ஶ்ருதியில் கூறப்பட்டே இருக்கின்றது எனின்?

உத்தரம்—அது பொருந்தாது. அந்தப்பலன் வேறொன்றினுடையதாக விருத்தலே அதன் காரணமாகும். ஓங்காரத்தை ஆப்தி என்றும் ஸமிருத்தி என்றுமான குணங்களுடன் சேர்த்துச் செய்யுமுபாஸனையின் பலனாக அது சொல்லப்பட்டிருக்கிறதே யொழிய உத்கீதாத்யாஸத்தின் பலனாக அது சொல்லப்படவில்லை அன்றோ? இரண்டாவதான அபவாதபக்ஷத்திலும் பயனின்மை ஸமானமாகவிருக்கின்றது. பொய்யான க்ஞானநிவிருத்தி பயனாகலாமென்றாலோ, அது பொருந்தாது. புருஷார்த்தத்துக்கு உபயோகப்படுவதாக அறியப்படாததே அதன் காரணமாகும். ஓங்காரத்தினிடமிருந்து ஓங்காரபுத்தியாவது, உத்கீதத்தினிடமிருந்து உத்கீதபுத்தியாவது ஒருபொழுதேனும் நிவிருத்தியை அடையமாட்டாதன்றோ? மேலும், இந்த வாக்கியமானது வஸ்துவினது தத்துவத்தை (உண்மையான ஸ்வரூபத்தை) க்கூறவந்ததுமன்று. உபாஸனையை விதிக்கவேண்டியன்றோ இந்த வாக்கியம் ஏற்பட்டது. ஏகத்வம் என்ற மூன்றாவது பக்ஷமும் பொருந்தாது. அப்பொழுது இரண்டு சப்தங்களின் உச்சாரணமானது நிஷ்ப்ரயோஜனமாகவன்றோ ஆகிவிடும். ஒரு சப்தத்தினாலேயே விரும்பின பொருள் கிடைத்துவிடுவதே அதன் காரணமாகும். ஓம் என்ற சப்தத்தால் சொல்லப்படுகின்றதும், ஹௌத்ரம் (யாகத்தில் ருக்வேதிகள் சொல்லும் சஸ்திராதிகளுக்கு ஹௌத்ரம் என்று பெயர்) என்ற கர்மத்திலோ, ஆத்வர்யவ(யஜுர்வேதிகள் செய்யும் கர்மம்)த்திலோ உச்சரிக்கப்படுகின்ற அக்ஷரத்தில் உத்கீதசப்த ப்ரஸித்தியுமில்லை. உத்கீதசப்தத்தால் சொல்லப்படும் இரண்டாவது பக்திமுழுதிலும் ஓங்காரசப்தப்ரஸித்தி இல்லை. அவ்விதமிருந்தாலன்றோ அபின்னமான (ஐக்யமான) பொருள் ஏற்படக்கூடும். (மூன்று

शब्दवाच्यायामोङ्कारशब्दप्रसिद्धिर्येनानतिरिक्तार्थता स्यात्। परिशेषाद्विशेषणपक्षः परिगृह्यते। व्याप्तेः सर्ववेदसाधारण्यात् सर्वव्याप्यक्षरमिह मा प्रसञ्जीत्यत उद्गीथशब्देनाक्षरं विशेष्यते कथं नामोद्गीथावयवभूत ओङ्कारो गृह्येतेति। नन्वस्मिन्नपि पक्षे समाना लक्षणा। उद्गीथशब्दस्यावयवलक्षणार्थत्वात्। सत्यमेवमेतत्। लक्षणायामपि तु सन्निकर्षविप्रकर्षौ भवत एव। अध्यासपक्षे ह्यर्थान्तरबुद्धिरर्थान्तरे निक्षिप्यत इति विप्रकृष्टा लक्षणा विशेषणपक्षे त्ववयविवचनेन शब्देनावयवः समर्प्यत इति सन्निकृष्टा। समुदायेषु हि प्रवृत्ताः शब्दा अवयवेष्वपि प्रवर्तमाना दृष्टाः पटग्रामादिषु। अतश्च व्याप्तेर्हेतोरोमित्येतदक्षरमित्येतस्योद्गीथमित्येतद्विशेषणमिति समञ्जसमेतन्निरवद्यमित्यर्थः॥ ९॥

## ५ सर्वाभेदाधिकरणम्। सू० १०

## सर्वाभेदादन्यत्रेमे॥ १०॥

---

பக்ஷங்களும் ஸம்பவிக்காது போகவே) எஞ்சி இருப்பதைக் கொண்டு விசேஷண பக்ஷமே இங்கு கிரஹிக்கப்படுகிறது. ஓங்காரத்துக்கு வ்யாப்தியானது (நிறைந்திருத்தலானது) எல்லாவேதங்களுக்கும் பொதுவாகவே இருப்பதால் எல்லா வேதங்களிலும் நிறைந்திருக்கும் ஓம் என்ற அக்ஷரத்தின் கிரஹணம் இங்கு வராமலிருப்பதற்குவேண்டி ஓம் என்ற அக்ஷரமானது உத்கீத சப்தத்தால் விலக்கிக் காட்டப்படுகிறது. உத்கீதாவயமான ஓங்காரமானது எவ்விதம் கிரஹிக்கப்படுமோ அவ்விதம் சொல்லப்படுகின்றது என்றும்.

சங்கை—இந்த விசேஷணபக்ஷத்திலும் கூட லக்ஷணை பொதுவாகவே இருக்கின்றது. அதாவது: உத்கீத என்ற சப்தத்துக்கு லக்ஷணைமுறையால் அதன் அவயவம் என்ற பொருள் கொள்ளவேண்டிவருகிறது என்றும். எனின்?

உத்தரம்—இவ்விதம் வருவது உண்மைதானாயினும் லக்ஷணைசொல்லும் விஷயத்திலும் கூட ஸமீபத்துள்ளதைக் கிரஹித்தல், விலகியுள்ளதைக் கிரஹித்தல் என்ற மாறுபாடு இருக்கின்றது. அத்யாஸபக்ஷத்திலோ வேறுபொருளைப்பற்றிய புத்தியானது வேறுபொருளில் செய்யப்படுகின்றது என்பதுபற்றி அங்குள்ள லக்ஷணையானது விப்ரகிருஷ்டமாக (விலகியுள்ள பொருளைப் பற்றியதாக) வாகிறது. விசேஷணபக்ஷத்திலோ அவயவியைச்சொல்லும் சப்தத்தால் அவயவமானது கொள்ளப்படுவதுபற்றி லக்ஷணைஸந்நிகிருஷ்டமாக (ஸமீபித்துள்ளதைக் கூறுவதாக) வாகிறது. துணி, க்ராமம் முதலிய விடங்களில் ஸமுதாயங்களைச் சொல்லும் சப்தங்கள் அதன் அவயவங்களையும் கூறுகின்றனவாகக் காணப்படுகின்றன. ஆகவே ஓங்காரத்துக்கு வ்யாபதி இருக்கும் காரணமாக "ஓமித்யேததக்ஷரம்" என்ற இதற்கு உத்கீதம் என்ற இந்தப் பதம் விசேஷணமாக வாவதால் இது ஸமஞ்ஜஸமாக(எவ்விதக் குற்றமுமற்றதாக)வாகிறது என்று பொருள். (9) (எ-று)

**நான்காவது வ்யாப்த்யதிகரணம் முற்றிற்று.**

वसिष्ठत्वाद्यनाहार्यमाहार्यं वैवमित्यतः । उक्तस्यैव परामर्शादनाहार्यमनुक्तितः ॥ १ ॥
प्राणद्वारेण बुद्धिस्थं वसिष्ठत्वादि नेतरत् । एवंशब्दपरामर्शायोग्यमाहार्यमिष्यते ॥ २ ॥

---

## ஸர்வாபேதாதிகரணம் 5.

(அ—கை) பிருஹதாரண்யகம், சாந்தோக்கியம் இரண்டிலும் ப்ராண (இந்திரிய) ஸம்வாதம் சொல்லுமிடத்தில் வாகிந்திரியமானது முக்கிய ப்ராணனைப்பார்த்து "நான் வஸிஷ்ட்டத்வம் என்ற குணமுள்ளதாக இருப்பது யாதுண்டோ நீயே தான் வஸிஷ்டனாக (வஸிஷ்டத்வம் என்ற குணமுள்ளதாக) இருக்கிருய்" என்பதாய் தன்னிடத்திலுள்ள வஸிஷ்டத்வம் என்ற குணம் முக்கிய ப்ராணன் மூலமாகவே ஏற்படுவதுபற்றி அந்த வஸிஷ்டத்வமென்றகுணம் முக்கியப்ராணனுடையதேயாகும் எனத் தெரிவித்தது என்று தொடங்கி சக்ஷுரிந்திரியமானது தன்னிடத்திலுள்ள ப்ரதிஷ்ட்டாத்வம் என்ற குணம் முக்கிய ப்ராணன் மூலமேற்படுவதால் அந்த ப்ரதிஷ்டாத்வம் என்ற குணம் முக்கியப்ராணனுடையதே தானுகும் எனத் தெரிவித்தது, இவ்விதமே சுரோத்திரேந்திரியமானது என்னிடமுள்ள ஸம்பத் என்ற குணமானது முக்கியப்ராணன் மூலமேற்படுவதுபற்றி அந்த ஸம்பத் என்ற குணம் முக்கிய ப்ராணனுடையதேதானுகும் எனத் தெரிவித்தது, இவ்விதமே மனஸ்ஸானது தனக்கு ஆயதநத்வம் என்ற குணமானது முக்கிய ப்ராணன் மூலமேற்படுவதுபற்றி அந்த ஆயதநத்வம் என்ற குணமானது முக்கிய ப்ராணனுடையதே தானுகும் எனத் தெரிவித்தது என்பதாய் முக்கிய ப்ராணனேதானுபாஸ்யமான வஸ்து என உபாஸ்யமான முக்கிய ப்ராணனுக்கு (1) வஸிஷ்ட்டத்வம், (2) ப்ரதிஷ்ட்டாத்வம், (3) ஸம்பத், (4) ஆயதநத்வம் என்ற குணங்களைச் சொல்லியிருக்கிறது. ஆனல் கௌஷீதகி உபநிஷத் முதலியவிடத்தில் இம்மாதிரியான ப்ராண ஸம்வாதஞ் சொல்லுமிடத்தில் முக்கிய ப்ராணனுக்கு ஶ்ரைஷ்ட்யம் என்ற குணம் மட்டும் சொல்லப்படுகிறதே யொழிய முற்கூறிய வஸிஷ்ட்டத்வம் முதலிய குணங்கள் சொல்லப்படவில்லை. ஆகவே சாந்தோக்கிய ப்ருஹதாரண்யகங்களிற் சொல்லிய வஸிஷ்ட்டத்வாதி குணங்களைக் கௌஷீதகி சாகையிலும் சேர்த்துக்கொண்டு உபாஸனஞ் செய்யவேண்டுமா? அல்லது வேண்டாமா? என ஸந்தேஹம்வர சேர்த்துக்கொள்ளவேண்டுவதில்லை எனப் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே எல்லா உபநிடதங்களிலும் உபாஸ்யமான ப்ராணன் ஒன்ருகவே இருப்பதால் ஓரிடத்தில் சொல்லப்படாவிடினும் கூட வேறிடத்திற் சொல்லியதை இங்கும் சேர்த்துக்கொண்டுதான் முக்கிய ப்ராணேபாஸனம் செய்யவேண்டும் என ஒரே ஸூத்திரங்கொண்ட இந்த அதிகரணத்தை ஆரம்பிக்கிருர்—

### (ஸூ) ஸர்வாபேதாத் அந்யத்ர இமே (10)

(ப—ரை) **सर्वाभेदात्** (ஸர்வாபேதாத்)=எல்லாவிடங்களிலும் உபாஸ்ய வஸ்துவில் வேற்றுமை இல்லாதிருப்பதுபற்றி **अन्यत्र** (அந்யத்ர)=வேறு கௌஷீதகி உபநிடதத்திலுங்கூட **इमे** (இமே)=இந்த வஸிஷ்ட்டத்வம் முதலிய குணங்கள் [**उपसंहर्तव्याः** (உபஸம்ஹர்த்தவ்யா:)=சேர்த்துக்கொள்ளத்தக்கனவே யாகும்.] (10)

वाजिनां छन्दोगानां च प्राणसंवादे श्रैष्ठ्यगुणान्वितस्य प्राणस्योपास्यत्वमुक्तम्। वागादयोऽपि हि तत्र वसिष्ठत्वादिगुणान्विता उक्ताः ते च गुणाः प्राणे पुनः प्रत्यर्पिताः—'यद्वा अहं वसिष्ठाऽस्मि त्वं तद्वसिष्ठोऽसि' (बृ० ६।१।१४) इत्यादिना। अन्येषामपि तु शाखिनां कौषीतकिप्रभृतीनां प्राणसंवादेषु 'अथातो निःश्रेयसादानम्', एता ह वै देवता अहंश्रेयसे विवदमानाः' (कौ० २।१४) इत्येवञ्जातीयकेषु प्राणस्य श्रैष्ठ्यमुक्तं न त्विमे वसिष्ठत्वादयोऽपि गुणा उक्ताः। तत्र संशयः—किमिमे वसिष्ठत्वादयो गुणाः

---

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) சாந்தோக்ய ப்ருஹதாரண்யகத்தில் ப்ராணஸம்வாதம் சொல்லுமிடத்திலுள்ள முக்கிய ப்ராணனுக்குச் சொல்லிய வஸிஷ்டத்வாதி குணங்களைக் கௌஷீதகீ உபநிடதத்திற் சொல்லிய ப்ராணோபாஸ்தியில் சேர்த்துக்கொள்ள வேண்டுவதில்லையா? அல்லது சேர்த்துக்கொள்ளவேண்டுமா? என்பது ஸந்தேஹம். ஶ்ருதியில் ஏவம் வித்வான் (இவ்விதமுபாஸிப்பவன்) என்றவிடத்தில் ஏவம் என்று சொல்லியிருப்பதிலிருந்து அங்கு சொல்லியிருப்பதற்குமட்டுமே கிரஹணமேற்படுமாதலாலும், அங்கு (கௌஷீதகியில்) வஸிஷ்டத்வாதி குணங்கள் சொல்லப்படாததாலும், கௌஷீதகியில் வஸிஷ்டத்வாதிகுணங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டுவதில்லை என்பது பூர்வபக்ஷம். உபாஸ்யமான ப்ராணன் வாயிலாக புத்தியிலிருக்கும் வஸிஷ்டத்வாதி குணங்கள் ஏவம் என்ற சப்தத்தால் கிரஹிக்கப்படுவதற்கு யோக்கியமாகுமேயொழிய பிறவை ஆகாதாகையால் கௌஷீதகியிலும் வஸிஷ்டத்வாதிகளைச் சேர்த்துக்கொண்டே உபாஸிக்கவேண்டுமென்றேற்படுகிறது என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்—வாஜிகளுடையவும், சந்தோகர்களுடையவும் ப்ராண ஸம்வாதம் சொல்லுமிடத்து ஶ்ரைஷ்ட்யம் என்ற குணத்துடன் கூடின ப்ராணனுக்கு உபாஸ்யத்வமானது சொல்லப்பட்டிருக்கிறது. வாகாதிகளோ அவ்விடத்தில் வஸிஷ்டத்வம் முதலிய குணங்களுடன் கூடினவைகளாகச் சொல்லப்பட்டன. அந்த (வஸிஷ்டத்வம் முதலிய) குணங்களும் "நான் வஸிஷ்டையாக (வஸிஷ்டத்வம் என்ற குணமுள்ளதாக) இருக்கிறேன் என்பது யாதுண்டோ நீயே (ப்ராணனே) யன்றோ வஸிஷ்டனாக (வஸிஷ்டத்வம் என்ற குணமுள்ளதாக) இருக்கின்றாய்" என்றதாதியால் திரும்பவும் ப்ராணனிடத்தில் அர்ப்பணஞ் செய்யப்பட்டிருக்கின்றன. மற்றவர்களான கௌஷீதகீ முதலியோரின் ப்ராண ஸம்வாதங்களில் "பிறகு நிஸ்ரேயஸத்தினுடைய (ஶ்ரைஷ்ட்யத்தினுடைய) ஆதான (நிர்த்தாரணமானது தொடங்கப்படுகிறது" என்றுதொடங்கி "இந்தத் தேவதைகள் (வாகாதி இந்திரியாபிமானி தேவதைகள்) நான் சிறந்தவன் என்பதை நிலைநாட்டவேண்டி சண்டையிடுகின்றனவாய்க்கொண்டு" என்ற இம்மாதிரியானவிடங்களில் ப்ராணனுக்கு ஶ்ரைஷ்ட்யம் (சிறந்தவனாகவிருத்தல்) மட்டும் சொல்லப்பட்டிருக்கிறதேயொழிய வஸிஷ்டத்வாதிகளான குணங்கள் சொல்லப்படவில்லை. அங்கு ஸம்சயமுண்டாகிறது. அதாவது:—ஓரிடத்திற் சொல்லப்பட்ட இந்த வஸிஷ்டத்வாதி

क्वचिदुक्ता अन्यत्राप्यस्येरन्नुत नास्येरन्निति। तत्र प्राप्तं तावन्नास्येरन्निति। कुतः—एवंशब्दसंयोगात्। 'अथो य एवं विद्वान्प्राणे निःश्रेयसं विदित्वा' इति तत्रतत्रैवंशब्देन वेद्यं वस्तु निवेद्यते। एवंशब्दश्च सन्निहितावलम्बनो न शाखान्तरपरिपठितमेवञ्जातीयकं गुणजातं शक्नोति निवेदयितुम्। तस्मात्स्वप्रकरणस्थैरेव गुणैर्निराकाङ्क्षत्वमिति। एवं प्राप्ते प्रत्याह—अस्येरन्निमे गुणाः क्वचिदुक्ता वसिष्ठत्वादयोऽन्यत्रापि। कुतः—सर्वाभेदात्। सर्वत्रैव हि तदेवैकं प्राणविज्ञानमभिन्नं प्रत्यभिज्ञायते। प्राणसंवादादिसारूप्यात्। अभेदे च विज्ञानस्य कथमिमे गुणाः क्वचिदुक्ता अन्यत्र नास्येरन्। नन्वेवंशब्दस्तत्र तत्र भेदेनैवञ्जातीयकं गुणजातं वेद्यत्वाय समर्पयतीत्युक्तम्। अत्रोच्यते—यद्यपि कौषीतकिब्राह्मणगतेनैवंशब्देन वाजसनेयिब्राह्मणगतं गुणजातमसंशब्दितमसन्निहितत्वात्तथापि तस्मिन्नेव

---

களான குணங்கள் வேறிடத்திலும் சேர்த்துக் கொள்ளப்படுமா? அல்லது சேர்த்துக் கொள்ளப்படாதா? என்றும். அவ்விதம் ஸந்தேஹமுதயமாகுங்கால் வேறிடத்தில் சேர்த்துக் கொள்ளப்படமாட்டாது என்றே ப்ராப்தமாகிறது. ஏன்? ஏவம் என்ற சப்தப்பிரயோகமிருப்பதே அதன் காரணமாகும். ஸ்ருதியில் "எவனொருவன் இவ்விதமுபாஸிக்கின்றனவனைப் ப்ராணனிடத்தில் நிஸ்ரேயஸத்தை யறிந்து" என்பதாய் அந்தந்தவிடத்தில் ஏவம் (இவ்விதம்) என்ற சப்தத்தால் உபாஸ்யமான வஸ்து தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஏவம் என்ற சப்தமும் ஸமீபத்திலுள்ள பொருளைச் சொல்லுகின்றதாய் கொண்டு வேறு சாகையிற் படிக்கப்பட்ட இம்மாதிரியான குண ஸமூஹத்தைச் சொல்லத் திறமுடையதாகவாகமாட்டாது. ஆகவே சொந்தமான ப்ரகரணத்திற் படிக்கப்பட்ட குணங்களினாலேயே அதற்கு நிராகாங்க்ஷத்வமானது (பிறவொன்றின் அபேக்ஷையற்றிருத்தலானது) ஏற்படுகிறது. என இவ்விதம் (பூர்வபக்ஷம்) ப்ராப்தமாகவே (ஸித்தாந்தத்தைச்) சொல்லுகிறார். அதாவது:—ஓரிடத்திற் சொல்லப்பட்ட வஸிஷ்ட்டத்வம் முதலிய இந்தக் குணங்கள் வேறிடத்திலும் சேர்த்துக்கொள்ளக் கூடியனவே என்றும். ஏன்? ஸர்வாபேதமிருப்பதே அதன் காரணமாகும். எல்லாவிடங்களிலும் அந்தப் பிராணோபாஸனமொன்றே அபின்னமாக (வேறுபாடற்றதாக) ப்ரத்யபிக்ஞான முறையால் (ஐக்யக்ஞானமுறையால்) அறியப்படுகிறது. ப்ராண (இந்திரிய)ங்களின் ஸம்வாதாதிகள் ஒத்திருப்பதே அதன் காரணமாகும். விக்ஞானம் (உபாஸனம்) ஒன்றாகவிருக்கும்பொழுது வேறிடத்தில் சொல்லப்பட்டிருப்பினுங்கூட வேறிடத்தில் எவ்விதம் சேர்த்துக்கொள்ளப்படாதனவாக வாகும்.

சங்கை—ஏவம் (இவ்விதம்) என்ற சப்தமானது ஆங்காங்குள்ள இம்மாதிரியான குண ஸமூஹத்தை உபாஸ்யத்தின் வேறுபாட்டுக்குவேண்டித் தெரிவிக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறதன்றோ எனின்?

உத்தரம்—இவ்விஷயத்திற் சொல்லப்படுகிறது. கௌஷீதகி ப்ராம்ஹணத்திலுள்ள ஏவம் என்ற சப்தத்தினால் வாஜஸநேயி ப்ராம்ஹணத்திலுள்ள குண ஸமூஹமானது ஸமீபத்திலில்லாதிருப்பதுபற்றி சொல்லப்படமாட்டாது என்பது உண்மைதானாயினும் அதே ப்ராணோபாஸனத்தில் வாஜஸநேயி ப்ராம்ஹணத்தி

विज्ञाने वाजसनेयिब्राह्मणगतेनैवंशब्देन तत्संशब्दितमिति न परशाखागतमप्यभिन्नविज्ञानावरुद्धं गुणजातं स्वशाखागताद्विशिष्यते । नचैवं सति श्रुतहानिरश्रुतकल्पना वा भवति । एकस्यामपि हि शाखायां श्रुता गुणाः श्रुता एव सर्वत्र भवन्ति गुणवतो भेदाभावात् । नहि देवदत्तः शौर्यादिगुणत्वेन स्वदेशे प्रसिद्धो देशान्तरं गतस्तद्देश्यैरविभावितशौर्यादिगुणोऽप्यतद्गुणो भवति । यथात्र तत्र परिचयविशेषाद्देशान्तरेऽपि देवदत्तगुणा विभाव्यन्ते एवमभियोगविशेषाच्छाखान्तरेऽप्युपास्या गुणाः शाखान्तरेऽप्यस्येरन् । तस्मादेकप्रधानसंबद्धा धर्मा एकत्राप्युच्यमानाः सर्वत्रैवोपसंहर्तव्या इति ॥ १० ॥

## ६ आनन्दाद्यधिकरणम् । सू० ११-१३

ளுள்ள ஏவம் என்ற சப்தத்தால் அது சொல்லப்பட்டுவிட்டதுபற்றி அந்தக் குண ஸமூஹமானது வேறு சாகையிலிருப்பினுங்கூட ஒத்த ஒரே உபாஸனத்தில் ஸம்பந்தப்பட்டிருப்பதைக்கொண்டு சொந்த சாகையிலிருப்பதைக்காட்டிலும் வேறுபட்டதாகவாகமாட்டாது. இவ்விதமிருக்குங்கால் ஃப்ருதமான குணத்தைவிடுதலும், அஃப்ருதமானவற்றைக் கல்பித்தலும் என்றதோஷம் வருவதற்கிடமில்லை. இப்மாதிரியான குணம் வாய்ந்த பொருள் வேறுபடாதிருப்பதுபற்றி குணம் ஒரு சாகையிற் சொல்லப்படினுங்கூட எல்லா சாகைகளிலும் அவை சொல்லப்பட்டனவாகவேதானுகும். சூரத்தன்மை முதலிய குணம் வாய்ந்தவனுகச் சொந்தத்தேசத்தில் பிரவிஸித்தியையடைந்த தேவதத்தன் வேறு தேசத்தை யடைந்தபொழுது அத்தேசத்திலுள்ளவர்களால் சூரத்தன்மை முதலிய குணம் வாய்ந்தவனுக அறியப்படாவிடினுங்கூட அந்தக் குணமற்றவனுகவாகமாட்டானன்றே? அவ்விடத்திலுங்கூட நெருங்கிப்பழகுவதை முன்னிட்டு வேறுதேசத்திலும்தேவதத்தனுடைய குணங்கள் நன்கு அறியவேபடுகின்றன. இவ்விதமே அபியோக விசேஷத்தினுல் (உபாஸனமொன்றுகவிருப்பதால்) வேறு சாகையில் உபாஸ்யங்களான குணங்கள் வேறு சாகையிலும் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. ஆகவே முக்கியமான பொருளைச் சார்ந்தவைகளான தர்மங்கள் ஒரே இடத்திற் சொல்லப்படினுங்கூட முக்கியமான பொருளைப்பற்றிய உபாஸனங்கள் யாவற்றிலும் சேர்த்துக்கொள்ளவேபடுகின்றன என்றேற்படுகிறது. (10) (எ—று)

ஐந்தாவது ஸர்வாபேராதிகரணம் முற்றிற்று.



## ஆநந்தாத்யதிகரணம் 6.

(அ—கை) க்ஞேயமான ப்ரம்ஹமானது நிர்விசேஷமாக (எவ்வித தர்மமுமற்றதாக) இருப்பதுபற்றி அந்த நிர்க்குண ப்ரம்ஹ விஷயமாகச் சொல்லப்படும் ஆநந்தாதிகள் விஷயத்தில் வரும் ஸந்தேஹத்தைப் போக்கவேண்டி 3 ஸூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணமாரம்பிக்கப்படுகிறது. அதன் முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

## आनन्दादयः प्रधानस्य ॥ ११ ॥

नाहार्या उत वाहार्या आनन्दाद्या अनाहृतिः । वामनीसत्यकामादेरिवैतेषां व्यवस्थितेः ॥ १ ॥
विधीयमानधर्माणां व्यवस्थास्याद्यथाविधि । प्रतिपत्तिफलानान्तु सर्वशाखासु संहृतिः ॥ २ ॥

**ब्रह्मस्वरूपप्रतिपादनपरासु श्रुतिष्वानन्दरूपत्वं विज्ञानघनत्वं सर्वगतत्वं सर्वात्मत्वमित्येवञ्जातीयका ब्रह्मणो धर्माः क्वचित्केचिच्छ्रूयन्ते। तेषु संशयः—किमानन्दादयो ब्रह्मधर्मा यत्र यावन्तः श्रूयन्ते तावन्त एव तत्र प्रतिपत्तव्याः किंवा सर्वे सर्वत्रेति। तत्र यथाश्रुतिविभागं धर्मप्रतिपत्तौ प्राप्तायामिदमुच्यते—आनन्दादयः प्रधानस्य ब्रह्मणो धर्माः सर्वे सर्वत्र प्रतिपत्तव्याः। कस्मात्। सर्वाभेदादेव। सर्वत्र हि तदेवैकं प्रधानं विशेष्यं**

---

## (ஸூ) ஆநந்தாதய: ப்ரதாநஸ்ய (11)

(ப—ரை) **आनन्दादयः** (ஆநந்தாதய:)=ஆனந்தம்முதலிய **प्रधानस्य** (ப்ரதாநஸ்ய)= க்ஞேய ப்ரம்ஹத்தினுடைய [**धर्मास्सर्वेपि** (தர்மாஸ்ஸர்வேபி)=தர்மங்கள் யாவும் க்ஞேயஸ்வரூபத்தை யுபதேசிக்கும் எல்லாவிடங்களிலும் சேர்த்துக்கொள்ளத் தக்கனவேயாகும்.] (11) (எ—று)

### வையாஸிக நியாயமாலே.

(க—ரை) வேறிடத்திற் சொல்லப்படும் ஆனந்தாதிகள் வேறிடத்திற் சேர்த்துக்கொள்ளத்தக்கனவா? அல்லது இல்லேயா? என்பது ஸந்தேஹம். வாமநீத்வம், ஸத்யகாமத்வம் முதலியவற்றுக்குப்போல அந்த ஆனந்தாதிகளுக்கும் வ்யவஸ்திதி (வறையறை) இருப்பதால் அவற்றின் சேர்க்கையில்லே என்பது பூர்வபக்ஷம். சாஸ்திரத்தினல் விதிக்கப்படுகின்ற தர்மங்களுக்கு விதிக்குத்தக்கபடி வ்யவஸ்தை ஏற்படலாமேயொழிய, அறிவைப் பலனுகவுடையவற்றுக்கு எல்லாச் சாகைகளிலும் உபஸம்ஹாரமானது ஸம்பவிக்கலாம் என்பது **ஸித்தாந்தம்.** (எ—று)

பாஷ்யம்.—ப்ரம்ஹஸ்வரூபத்தைச் சொல்லும் நோக்குள்ள ஶ்ருதிகளில் ஆனந்தரூபத்வம், விச்ஞானகநத்வம், ஸர்வகதத்வம், ஸர்வாத்மத்வம், என்ற இம்மாதிரியான சில ப்ரம்ஹ தர்மங்கள் சிலவிடங்களில் படிக்கப்படுகின்றன. அவற்றில் ஸந்தேஹமுதயமாகிறது. அதாவது:—ஆனந்தம் முதலிய ப்ரம்ஹ தர்மங்கள் எவ்விடத்தில் எவ்வளவு சொல்லப்படுகின்றனவோ அவ்வளவே அவ்விடத்தில் அறியத்தக்கனவா? எல்லா தர்மங்களும் எல்லாவிடத்திலுமே அறியத்தக்கனவா? என்றும். ஶ்ருதியிற் சொல்லிய விபாகத்துக்குத் தக்கபடிதான் தர்மங்களே அறியவேண்டும் என ப்ராப்தமாகவே இது சொல்லப்படுகிறது. ப்ரதானமான ப்ரம்ஹத்தினுடைய ஆனந்தாதிகளான தர்மங்கள் யாவும் எல்லாவிடத்திலும் அறியத்தக்கனவே ஆகும். என்? எல்லாவிடத்திலும் க்ஞேயம் ஒன்ருகவிருப்பதே அதன் காரணமாகும். எல்லாவிடத்திலும் அந்த ப்ரம்ஹம் ஒன்றே ப்ரதானமாக=விசேஷ்யமாக இருக்கிறதே யொழிய அது வேறுபடுவதில்லேயன்ருே? ஆனதுபற்றி

ब्रह्म न भिद्यते। तस्मात्सार्वत्रिकत्वं ब्रह्मधर्माणां तेनैव पूर्वाधिकरणोदितेन देवदत्तशौर्यादिनिदर्शनेन ॥ ११ ॥

नन्वेवं सति प्रियशिरस्त्वादयोऽपि धर्माः सर्वे सर्वत्र सङ्कीर्येरन्। तथाहि—तैत्तिरीयक आनन्दमयमात्मानं प्रक्रम्याम्नायते—'तस्य प्रियमेव शिरः। मोदो दक्षिणः पक्षः। प्रमोद उत्तरः पक्षः। आनन्द आत्मा। ब्रह्म पुच्छं प्रतिष्ठा' (तै० २। ५) इति। अत उत्तरं पठति—

प्रियशिरस्त्वाद्यप्राप्तिरुपचयापचयौ हि भेदे ॥ १२ ॥

प्रियशिरस्त्वादीनां धर्माणां तैत्तिरीयक आम्नातानां नास्त्यन्यत्र प्राप्तिः। यत्कारणं प्रियं मोदः प्रमोद आनन्द इत्येते परस्परापेक्षया भोक्त्रन्तरापेक्षया चोपचितापचितरूपा

---

ப்ரம்ஹ தர்மங்களுக்கு முந்தின அதிகரணத்திற் சொல்லப்பட்ட தேவதத்தனது சவுரியாதி திருஷ்டாந்தத்தினால் எல்லாவிடத்திலும் ஸம்பவித்தலிருக்கலாம். (11)

அவதாரிகா பாஷ்யம்.—சங்கை—இவ்விதமாயின் ப்ரிய சிரஸ்த்வம் முதலிய தர்மங்கள் யாவும் எல்லாவிடங்களிலும் வந்துவிடத் தெரியும். அதாவது:—தைத்திரீயகத்தில் ஆனந்தமயனான ஆத்மாவைச் சொல்லத்தொடங்கி "அவனுக்கு (1) ப்ரியமே சிரஸ்ஸாகும். மோதமே வலதுபக்கத்து இரக்கையாகும். ப்ரமோதமானது இடதுபக்கத்து இரக்கையாகும். ஆனந்தமானது ஆத்மாவாக (நடுவுடலாக) வாகும். ப்ரம்ஹமானது நிலைத்துநிற்றலுக்குக் காரணமான புச்சமாக (வாலாக) வாகும்" எனப்படிக்கப்பட்டிருக்கிறது என்றும். என வரும் ஆக்ஷேபத்துக்குப் பதிலைப் பின்வரும் ஸூத்திரத்தால் உபதேசிக்கிறார்—

(ஸூ) ப்ரியசிரஸ்த்வாத்யப்ராப்தி: உபசயாபசயௌஹி பேதே (12)

(ப-ரை) प्रियशिरस्त्वाद्यप्राप्तिः (ப்ரியசிரஸ்தவாத்யப்ராப்தி:)=தைத்திரீயத்திற் சொல்லப்பட்ட ப்ரியசிரஸ்த்வம் முதலிய தர்மங்களுக்கு வேறிடத்தில் ப்ராப்தியானது கிடையாது. ஏன்? उपचयापचयौ (உபசயாபசயௌ)=உயர்வுதாழ்வுகள் भेदे हि (பேதே ஹி)=உபாஸ்யமான பொருளில் பேதமிருந்தாலன்றோ ஏற்படக்கூடும். (12) (எ-று)

பாஷ்யம்.—தைத்திரீயகத்திற் சொல்லப்பட்ட ப்ரியசிரஸ்த்வம் முதலிய தர்மங்களுக்கு வேறிடத்தில் ப்ராப்தியானது கிடையாது. ஏன்? ப்ரியம், மோதம், ப்ரமோதம், ஆனந்தம் என்ற இவைகள் ஒன்றையொன்று அபேக்ஷித்தும், வேறு போக்தாவை அபேக்ஷித்தும், உயர்வுதாழ்வுள்ளனவாகக் காணப்படுவதே அதன் காரணமாகும். உயர்வு தாழ்வுகள் பேதமிருந்தாலன்றோ ஸம்பவிக்கும். ப்ரம்ஹ

---

(1) வஸ்துவின் தர்சனத்தாலுண்டாகும் ஆனந்தம் ப்ரியம் என்றும், வஸ்துவின் ப்ராப்தியாலுண்டாகும் ஆனந்தம் மோதமென்றும், வஸ்துவின் அனுபவத்தாலுண்டாகும் ஆனந்தம் ப்ரமோதமென்றும் சொல்லப்படும்.

उपलभ्यन्ते। उपचयापचयौ च सति भेदे संभवतः। निर्भेदं तु ब्रह्म 'एकमेवाद्वितीयम्' (छा० ६।२।१) इत्यादिश्रुतिभ्यः। नचैते प्रियशिरस्त्वादयो ब्रह्मधर्माः, कोशधर्मास्त्वेत इत्युपदिष्टमस्माभिः 'आनन्दमयोऽभ्यासात्' (ब्र० सू० १।१।१२) इत्यत्र। अपिच परस्मिन्ब्रह्मणि चित्तावतारोपायमात्रत्वेनैते परिकल्प्यन्ते न द्रष्टव्यत्वेन। एवमपि सुतरामन्यत्राप्राप्तिः प्रियशिरस्त्वादीनाम्। ब्रह्मधर्मास्त्वेतान्कृत्वा न्यायमात्रमिदमाचार्येण प्रदर्शितं प्रियशिरस्त्वाद्यप्राप्तिरिति। स च न्यायोऽन्येषु निश्चितेषु ब्रह्मधर्मेषूपासनायोपदिश्यमानेषु नेतव्यः संयद्वामादिषु सत्यकामादिषु च। तेषु हि सत्यप्युपास्यस्य ब्रह्मण एकत्वे प्रक्रमभेदादुपासनाभेदे सति नान्योन्यधर्माणामन्योन्यत्र प्राप्तिः। यथा च द्वे नार्यावेकं नृपतिमुपासाते छत्रेणैका चामरेणान्या तत्रोपास्यैकत्वेऽप्युपासनाभेदो धर्मव्यवस्था च भवत्येवमिहापीति। उपचितापचितगुणत्वं हि सति भेदव्यवहारे सगुणे ब्रह्मण्युपपद्यते न निर्गुणे परस्मिन्ब्रह्मणि। अतो न सत्यकामत्वादीनां धर्माणां क्वचिच्छ्रुतानां सर्वत्र प्राप्तिरित्यर्थः॥

---

மோ பேதமற்றது. "ஏகமேவாத்விதீயம்" என்றதாதி ஶ்ருதிகளிருப்பதே அதன் காரணமாகும். மேலும் இந்த ப்ரியசிரஸ்த்வம் முதலியன ப்ரம்ஹ தர்மங்களன்று கோசத்தின் தர்மங்களே ஆகும் என "ஆனந்த மயோப்யாஸாத்" என்றவிடத்தில் நம்மால் விளக்கப்பட்டுமிருக்கிறது. மேலும் இந்த ப்ரியசிரஸ்த்வம் முதலியன பர ப்ரம்ஹத்தினிடத்தில் சித்தப்ரவேசத்துக்கு உபாயமாகமட்டும் கல்பிக்கப்படுகின்றனவே அன்றி உபாஸ்யமாக அவை சொல்லப்படவில்லை. இவ்விதம் ஸித்திப்பதிலிருந்தும் ப்ரியசிரஸ்த்வாதிகளுக்கு வேறிடத்தில் நிஶ்சிதமாக ப்ராப்தியில்லை. ஆயினும் இவற்றை ப்ரம்ஹ தர்மங்களாக வைத்துக்கொண்டு வியாஸாசாரியரால் "ப்ரியசிரஸ்த்வாத்யப்ராப்தி:" என்பதாய் யுக்திமட்டுமே காண்பிக்கப்பட்டது. அந்த நியாயமானது உபாஸனத்துக்குவேண்டி உபதேசிக்கப்படுகின்ற ஸம்யத்வாமத்வம், ஸத்யகாமத்வம் முதலிய நிஶ்சிதங்களான வேறு ப்ரம்ஹ தர்மங்களில் பொருத்திக் காணவேண்டுவதாகவாகிறது. அந்த தர்மங்களுள் உபாஸ்யமான ப்ரம்ஹத்துக்கு ஏகத்வமானது இருந்தபோதிலுங்கூட, உபக்கிரமம் வேறுபடுவதைக்கொண்டு உபாஸனையின் வேறுபாடு ஏற்படுங்கால் வெவ்வேறானவற்றின் தர்மங்களுக்கு வெவ்வேறானவிடத்தில் ப்ராப்தியேற்படுவதற்கில்லை. அதாவது:— இரண்டு ஸ்திரீகள் அரசனை யுபாஸிக்கத்தொடங்கி குடையினால் ஒருவளும், சாமரத்தினால் மற்றவளுமாக உபாஸிக்கின்றனர். அவ்விடத்தில் உபாஸ்யனான அரசன் ஒருவனாகவிருந்தபோதிலுங்கூட உபாஸனையின் பேதமும், தர்மத்தில் வரையறையும் ஏற்படுவது எவ்விதமோ இவ்விதமே இங்குமிருக்கலாம் என்றும். உயர்வு தாழ்வுள்ள குணமுள்ளதாயிருக்குந்தன்மையானது வேற்றுமையுள்ள வியவஹாரமிருக்குங்கால் ஸகுண ப்ரம்ஹத்தினிடத்தில் பொருந்தலாமேயொழிய நிர்க்குணமான (எவ்விதக் குணஸம்பந்தமுமற்ற) பரப்ரம்ஹத்தினிடத்தில் பொருத்தமுள்ளதாகவாகமாட்டாது. ஆகவே ஓரிடத்தில் படிக்கப்பட்ட ஸத்யகாமத்வம் முதலிய தர்மங்களுக்கு வேறிடத்தில் ப்ராப்தியானது கிடையாது என்று பொருள்.

## इतरे त्वर्थसामान्यात् ॥ १३ ॥

इतरे त्वानन्दादयो धर्मा ब्रह्मस्वरूपप्रतिपादनायैवोच्यमाना अर्थसामान्यात्प्रतिपाद्यस्य ब्रह्मणो धर्मिण एकत्वात्सर्वे सर्वत्र प्रतीयेरन्निति वैषम्यं प्रतिपत्तिमात्रप्रयोजना हि त इति ॥ १३ ॥

## ७ आध्यानाधिकरणम् । सू० १४-१५

---

### (ஸூ) இதரே து அர்த்தஸாமாந்யாத் (13)

(ப-ரை) इतरे तु (இதரே து)=ஸத்யம், க்ஞானம், ஆனந்தம் என்ற ப்ரம்ஹ தர்மங்களோவெனில் अर्थसामान्यात् (அர்த்தஸாமாந்யாத்)=அவற்றின் பொருளான ப்ரம்ஹமானது ஒன்ருகவிருப்பதால் ப்ரம்ஹத்தையுபதேசிக்கும் எல்லாவிடங்களிலும் சேர்த்துக்கொள்ளத் தக்கனவேயாகும். (13) (எ-று)

பாஷ்யம்.—ப்ரம்ஹத்தினது ஸ்வரூபத்தை விளக்குவதற்குவேண்டியே உபதேசிக்கப்படுகின்ற இதரங்களான=ஆனந்தாதிகளான தர்மங்கள் அர்த்தம் பொதுவாகவிருப்பதால்(அதாவது:—ப்ரதிபாத்யமான ப்ரம்ஹரூபமான தர்மியானது ஒன்ருகவிருப்பதால்) அவையாவும் எல்லாவிடங்களிலும் தோற்றக்கூடியனவேயாகும் என்பதுபற்றி முன்னர் சொல்லப்பட்டதற்கு மாறுபட்டதாகவே ஆகிறது. அவைகள் அறிவைமட்டும் ப்ரயோஜனமாகவுடையனவாகவிருப்பதே அதன் காரணமாகும். (13) (எ-று)

ஆருவது ஆனந்தாத்யதிகரணம் முற்றிற்று.



### ஆத்யாநாதிகரணம் 7.

(அ-கை) इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः। मनसस्तु परा बुद्धिर्बुद्धेरात्मा महान्परः । महतः परमव्यक्तमव्यक्तात्पुरुषः परः । पुरुषान्नपरं किञ्चित्सा काष्ठा सा परा गतिः ॥

இந்திரியங்களைக் காட்டிலும் அர்த்தங்கள் (விஷயங்கள்) பரமானவை, அர்த்தங்களைக்காட்டிலும் மனது பரமானது, மனதைக்காட்டிலும் புத்தி பரமானது, புத்தியைக்காட்டிலும் மஹானுத்மா பரமானது, மஹத்தைக்காட்டிலும் அவ்யக்தம் பரமானது, அவ்யக்தத்தைக்காட்டிலும் புருஷன் பரமானவன், புருஷனைக் காட்டிலும் பரமானதொன்றுமில்லை. அவனே காஷ்டையாக (முடிவிடமாக) வும், அவனே மேலான ப்ராப்யமாகவும் ஆகிருன் எனப் படிக்கப்படுகிறது. இவ்விடத்திற் சொல்லிய அர்த்தம் முதலியன ஒன்றைக்காட்டிலும் மற்றவை பரங்கள் என உபதேசிக்கப்படுகின்றனவா? அல்லது எல்லாவற்றைக்காட்டிலும் புருஷனேபரன் என்பதாய் உபதேசிக்கப்படுகிறதா? என ஸந்தேஹமுதயமாகவே அர்த்தாதிகளுள் ஒவ்வொன்றைக் காட்டிலும் மற்றவை மேலானவை என்று உபதேசிக்கப்படுவதாகக் கொள்ளுவதுதான் பொருந்தும் எனப் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே, புரு

## आध्यानाय प्रयोजनाभावत् ॥ १४ ॥

सर्वा परंपराऽक्षादे र्ज्ञेया पुरुष एव वा । ज्ञेया सर्वा श्रुतत्वेन वाक्यानि स्युर्बहूनि हि ॥ १ ॥
पुमर्थः पुरुषज्ञानं तत्र यत्नः श्रुतो महान् । तद्बोधाय श्रुतोऽक्षादिर्वेद्य एकः पुमांस्ततः ॥ २ ॥

काठके हि पठ्यते—'इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः । मनसस्तु परा बुद्धिः' (क० ३ । १०) इत्यारभ्य 'पुरुषान्न परं किञ्चित्सा काष्ठा सा परा गतिः' (क०

---

ஷனே எல்லாவற்றைக் காட்டிலும் மேலானவன் என்றும், அர்த்தாதிகளைக் காட்டிலும் மனம் முதலியவற்றைப் பரங்களென ஆத்யானம்செய்யும் (எண்ணும்) வாயிலாக எல்லாவற்றுக்கும் புருஷனே பரமானவன் என புருஷ விஷயமான ஸம்யக்ஞானத்தையுண்டுபண்ணவேண்டியே இவ்விதம் அர்த்தாதிகளின் பரத்வம் சொல்லப்படுகிறதென்றும் ஸித்தாந்தஞ்செய்யவேண்டி 2 ஸூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணமாரம்பிக்கப்படுகிறது. அவற்றுள் முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

### (ஸூ) ஆத்யாநாய ப்ரயோஜநாபாவாத் (14)

(ப—ரை) புருஷனே எல்லாவற்றுக்கும் பரனுவான். அர்த்தாதிகளின் பரத்வமானது आध्यानाय (ஆத்யாநாய)=இந்திரியாதிகளைக்காட்டிலும் அர்த்தாதிகளைப் பரங்களாகவெண்ணுதல் மூலமுண்டாகும் புருஷனது ஸம்யக்ஞானத்துக்குவேண்டியே உபதேசிக்கப்பட்டதாகவாகும். प्रयोजनाभावात् (ப்ரயோஜநாபாவாத்)=அர்த்தாதிகளைப் பரங்களாகச்சொன்னதற்குத் தனித்த ப்ரயோஜனம் (பயன்) எதுவுமில்லாதிருப்பதே அதன் காரணமாகும். (14) (எ—று)

### வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ஶ்ருதியிற்சொல்லிய இந்திரியாதிகளுடைய பரம்பரையானது க்ஞேயமா? அல்லது புருஷனே க்ஞேயனு? என்பது ஸந்தேஹம். இந்திரியாதிகளுடைய பரம்பரையாவும் க்ஞேயமாகவேதானுகும். ஶ்ருதியிற் சொல்லியிருப்பதே அதன் காரணமாகும். அர்த்தம் (பொருள்) வேறுபடுவதன் மூலம் அதைக்கூறும் வாக்கியங்களும் வெகுவே (பலவையே) ஆகும் என்பது பூர்வபக்ஷம். புருஷனைப்பற்றிய க்ஞானமானது புருஷார்த்தமாகவாகிறது. அத்தகைய புருஷார்த்தமான புருஷக்ஞானத்தில் ஶ்ருதியில் அதிகமான முயற்சியும் காணப்படுகிறது. அத்தகைய புருஷனது க்ஞானத்துக்கு வேண்டியே இந்திரியாதிகள் ஶ்ருதியிற் கூறப்பட்டுமிருக்கின்றன. ஆனதுபற்றிப் புருஷன் ஒருவனேதான் வேத்யனுக (அறியத்தக்கவனுக) வாகிறுன் என்பது ஸித்தாந்தம். (14) (எ—று)

பாஷ்யம்.—"இந்திரியங்களைக் காட்டிலுமோ அர்த்தங்கள் பரங்களானவை, அர்த்தங்களை (சப்தாதி விஷயங்களை) க்காட்டிலும் மனது பரமானது, மனத்தைக் காட்டிலுமோ புத்தி பரமானது" என்றுதொடங்கி "புருஷனைக் காட்டிலும் பரமானதொன்றுமில்லை. அதுவே காஷ்டையாக (முடிவிடமாக) வாகும். அதுவே பரமான கதியுமாக (மேலான ப்ராப்யமாக) வாகும்" எனக் கடோபநிடதத்திற்

३। ११) इति। तत्र संशयः—किमिमे सर्व एवार्थादयस्ततस्ततः परत्वेन प्रतिपाद्यन्त उत पुरुष एवैभ्यः सर्वेभ्यः परः प्रतिपाद्यत इति। तत्र तावत्सर्वेषामेवैषां परत्वेन प्रतिपादनमिति भवति मतिः। तथाहि श्रूयते—'इदमस्मात्परमिदमस्मात्परम्' इति। ननु बहुष्वर्थेषु परत्वेन प्रतिपिपादयिषितेषु वाक्यभेदः स्यात्। नैष दोषः। वाक्यबहुत्वोपपत्तेः। बहून्येव ह्येतानि वाक्यानि प्रभवन्ति बहुविषयान्परत्वोपेतान्प्रतिपादयितुम्। तस्मात्प्रत्येकमेषां परत्वप्रतिपादनमिति। एवं प्राप्ते ब्रूमः—पुरुष एव ह्येभ्यः सर्वेभ्यः परः प्रतिपाद्यत इति युक्तं न प्रत्येकमेषां परत्वप्रतिपादनम्। कस्मात्। प्रयोजनाभावात्। नहीतरेषु परत्वेन प्रतिपन्नेषु किञ्चित्प्रयोजनं दृश्यते श्रूयते वा। पुरुषे त्विन्द्रियादिभ्यः परस्मिन्सर्वानर्थव्रातातीते प्रतिपन्ने दृश्यते प्रयोजनं मोक्षसिद्धिः। तथाच श्रुतिः—'निचाय्य तं मृत्युमुखात्प्रमुच्यते' (क० ३। १५) इति। अपिच परप्रतिषेधेन काष्ठाशब्देन

---

படிக்கப்படுகிறது. இந்த அர்த்தாதிகள் யாவுமே அதனைக் காட்டிலும் பரமென வுபதேசிக்கப்படுகின்றனவா? அல்லது புருஷனே இவை எல்லாவற்றையும் காட்டிலும் பரனாகவுபதேசிக்கப்படுகின்றானா? என அவ்விடத்தில் ஸம்சயமுண்டாகிறது. அங்குள்ள இவை எல்லாவற்றுக்குமே பரத்வமுபதேசிக்கப்படுவதாகத் தோற்ற மேற்படுகிறது. இது அதைக்காட்டிலும் பரமானது, இது அதைக்காட்டிலும் பரமானது என்றல்லவோ ஸ்ருதி உபதேசிக்கிறது.

சங்கை—வெகு பொருள்கள் பரத்வமுள்ளனவாக ப்ரதிபாதிக்க விரும்பப் படுமாயின் வாக்கியபேதம் வந்துவிடும் எனின்?

உத்தரம்.—இது தோஷமாகாது. வாக்கியம் வெகுவாகவிருத்தல் பொருந் தக்கூடியதாகவிருப்பதே அதன் காரணமாகும். பரத்வத்துடன் கூடின வெகு விஷயங்களை ப்ரதிபாதிப்பதற்கு இந்த வெகு வாக்கியங்களேயன்றோ திறமுடைய னவாகின்றன. ஆகவே இவைகளுள் ஒவ்வொன்றுக்கும் பரத்வம் கொள்ளுவது தான் பொருத்தமுடையது என இவ்விதம் (பூர்வபக்ஷம்) ப்ராப்தமாகவே (ஸித் தாந்தம்) சொல்லுகிறோம். புருஷனேயன்றோ இவை எல்லாவற்றைக் காட்டி லும் பரனாக ப்ரதிபாதிக்க (ச்சொல்ல) ப்படுகிறான் என்பது பொருந்துமேயல்லா து இவற்றுக்குத் தனித்தனி பரத்வம் சொல்லப்படுவதாகக் கொள்ளுவது பொருந் தாது. ஏன்? ப்ரயோஜனமில்லாதிருப்பதே அதன் காரணமாகும். மற்றவைகள் பரங்களாகக் கொள்ளப்படுங்கால் அற்பம் பிரயோஜனமும் காணப்படவுமில்லை. ஸ்ருதியில் சொல்லப்படவுமில்லை. புருஷன் இந்திரியாதிகளைக் காட்டிலும் பரனா கவும், எல்லா அனர்த்தக் கூட்டங்களையும் கடந்தவனாகவும் கொள்ளப்படுங்கால் மோக்ஷஸித்தியென்ற ப்ரயோஜனம் காணவும் படுகின்றது. அவ்விதமே ஸ்ருதி யும் "அதை விசாரித்தறிந்துகொண்டு மிருத்யு முகத்தினின்றும் (பந்தத்தினின் றும்) விடுபடுகிறான்" எனக் கூறுகிறது. மேலும், ஸூத்திரக்காரர் புருஷனைக் காட்டிலும் பரமில்லையென ஸ்ருதி நிஷேதித்திருப்பதைக் கொண்டும், காஷ்டை (முடிவானவிடம்) என்ற சப்தத்தினாலும் ஸ்ருதிக்குப் புருஷன் விஷயத்திலுள்ள ஆதரவை (தாத்பரியத்தை) க் காண்பிக்கின்றவராய் புருஷனையறிவதற்கு வேண்

च पुरुषविषयमादरं दर्शयन्पुरुषप्रतिपत्त्यर्थैव पूर्वापरप्रवाहोक्तिरिति दर्शयति—आध्यानायेति। आध्यानपूर्वकाय सम्यग्दर्शनायेत्यर्थः। सम्यग्दर्शनार्थमेव हीहाध्यानमुपदिश्यते न त्वाध्यानमेव स्वप्रधानम् ॥ १४ ॥

## आत्मशब्दाच्च ॥ १५ ॥

इतश्च पुरुषप्रतिपत्त्यर्थैवेयमिन्द्रियादिप्रवाहोक्तिः। यत्कारणम्। 'एष सर्वेषु भूतेषु गूढोत्मा न प्रकाशते। दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः' (कठ० ३।१२) इति प्रकृतं पुरुषमात्मेत्याह। अतश्चानात्मत्वमितरेषां विवक्षितमिति गम्यते। तस्यैव च दुर्विज्ञानतां संस्कृतमतिगम्यतां च दर्शयति। तद्विज्ञानायैव 'यच्छेद्वाङ्मनसी प्राज्ञः' (कठ० ३।१३) इत्याध्यानं विदधाति। तद्व्याख्यातम् 'आनुमानिकमप्येकेषाम्' (ब्र० सू० १। ४।१) इत्यत्र। एवमनेकप्रकार आशयातिशयः श्रुतेः पुरुषे लक्ष्यते नेतरेषु। अपिच 'सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम्' (क० ३।९) इत्युक्ते किं तदध्वनः पारं

---

டியே முன்பின்னுள்ள பரப்ரவாஹோக்தியேற்பட்டது என்பதை "ஆத்யாநாய" என்றதால் தெரிவிக்கிறர். ஆத்யானத்தை முன்னிட்ட ஸம்யக்தரிசனத்துக்கு வேண்டி என்பது அதன் பொருள். ஸம்யக்தரிசனத்துக்கு வேண்டியே இங்கு ஆத்யானமுபதேசிக்கப்படுகிறதேயொழிய ஆத்யானமே சொந்தத்தில் முக்கியமானதாகவாகமாட்டாது. (14) (எ—று)

## (ஸூ) ஆத்மசப்தாத்ச (15)

(ப—ரை) आत्मशब्दाच्च (ஆத்மஶப்தாத்ச)=ப்ரகிருத புருஷனிடத்தில் ஆத்ம சப்தப் பிரயோகம் காணப்படுவதைக்கொண்டும் மற்றவை அனுத்மாவென்றும் அவற்றில் ஶ்ருதிக்குத் தாத்பர்யமில்லையென்றும் தெளிவாகிறது. (15) (எ—று)

பாஷ்யம்.—இதனுலும் புருஷனது ஸம்யக்தரிசனத்துக்கு வேண்டியே இந்த இந்திரியாதிகளின் பிரவாஹம் சொல்லப்பட்டதாகவாகும். ஏன்? "எல்லாப் பூதங்களிலும் மறைந்த இந்த ஆத்மா ப்ரகாசிப்பதில்லை. ஆனுல் சிறந்ததும், ஸூக்ஷ்மமுமான புத்தியினுல் ஸூக்ஷ்மதரிசிகளால் ஸாக்ஷாத்கரிக்கப்படுகிறது" என்பதாய் ப்ரகிருத புருஷனை ஆத்மாவென ஶ்ருதி சொல்லுவதாலென்க. இதனுலும் மற்றவைகளுக்கு அனுத்மத்வமானது விவக்ஷிதமெனத்தெரிகிறது. அந்த ஆத்மாவுக்கே எளிதிலறியக்கூடாதிருக்குந் தன்மையையும், ஸம்ஸ்காரம் பெற்ற புத்தியினுல் அறியக்கூடியதாகவிருக்குந் தன்மையையும் தெரிவிக்கிறது. அதாவது:—அந்த ஆத்மவிக்ஞானத்துக்கு வேண்டியே "ப்ராக்ஞன் வாக்கு மனம் இவற்றையடக்க வேண்டும்" என்பதாய் ஆத்யானத்தைவிதிக்கிறது. அது "ஆநுமானிக மப்யேகேஷாம்" என்றவிடத்தில் வியாக்கியானஞ் செய்யப்பட்டிருக்கிறது. இவ்விதம் ஶ்ருதிக்குப் புருஷனிடத்தில் அநேகப் பிரகாரமான தாத்பரிய விசேஷமானது காணப்படுகிறதேயொழிய மற்றவைகளிடத்திலில்லை. மேலும் "அவன் வழியின் பாரத்தை (க்கரையை) அடைகிருன். அது விஷ்ணுவின் பரமமான பதமாகும்" எனச்

**विष्णोः परमं पदमित्यस्यामाकाङ्क्षायामिन्द्रियाद्यनुक्रमणात्परमपदप्रतिपत्त्यर्थ एवायमायास इत्यवसीयते ॥ १५ ॥**

## ८ आत्मगृहीत्यधिकरणम् । सू० १६-१७

## आत्मगृहीतिरितरवदुत्तरात् ॥ १६ ॥

आत्मा वा इदमित्यत्र विराट्स्यादथवेश्वरः । भूताऽसृष्टेर्नेश्वरः स्याद्गवाद्यानयनाद्विराट् ॥ १ ॥

भूतोपसंहतेरीशः स्याद्द्वैतावधारणात् । अर्थवादो गवाद्युक्तिर्ब्रह्मात्मत्वं विवक्षितम् ॥ २ ॥

---

சொல்லப்பட்டதும் அத்வாவின் (வழியின்) பார(க்கரை)மான விஷ்ணுவின் பரம மான பதம் என்பது எது? என ஆகாங்க்ஷை வருங்கால் இந்திரியாதிகளைச் சொல்லத் தொடங்கியிருப்பதால் பரமபதத்தை யறிவிக்கவேண்டியே ஸ்ருதிக்கு இவ்வளவு முயற்சி ஏற்பட்டது என நிஶ்சயிக்கப்படுகிறது. (15) (எ—று)

ஏழாவது ஆத்யாநுதிகரணம் முற்றிற்று.



## ஆத்மகிருஹீத்யதிகரணம் 8.

### (ஸூ) ஆத்மகிருஹீதி: இதரவத் உத்தராத் (16)

(ப—ரை) [**आत्मा वा इदमेक एवाग्र आसीन्नान्यत्किञ्चन मिषत्स ईक्षत लोकान्नु सृजै**(ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீந்நாந்யத்கிஞ்சந மிஷத் ஸ ஈக்ஷத லோகாந்நு ஸ்ருஜை)=(உத்பத்திக்கு முந்தி இது ஆத்மா வொன்றுகமட்டுமே இருந்தது. **मिषत्** (மிஷத்)=ஜங்கமமொன்றுமில்லை. அது லோகங்களை ஸிருஷ்டிக்கிறேன் என வாலோசித்தது] என ஐதரேயகோபநிடதத்தில் படிக்கப்படுகிறது. இவ்விடத்திலுள்ள **आत्मा** (ஆத்மா)=என்றதால் **आत्मगृहीतिः** (ஆத்மக்ருஹீதி:)=பரமாத்ம கிரஹணமே செய்யப்பட்டதாகக் கொள்ளவேண்டும். **इतरवत्** (இதரவத்)=வேறு ஸிருஷ்டி வாக்கியங்களில் படிக்கப்பட்ட ஆத்மசப்தத்தால் பரமாத்மா கிரஹிக்கப்படுவது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க. **उत्तरात्** (உத்தராத்)=அதே வாக்கியத்தில் மேலுள்ளவிடத்தில் "லோகங்களை ஸிருஷ்டிக்கிறேன் எனவாலோசித்தது" என்பதாய் பரமாத்மாவைக் கிரஹிப்பதற்குரிய விசேஷணம் காணுவதும் மற்றொரு காரணமாகும். (16) (எ—று)

#### வையாஸிக நியாயமாலை (முதலாவது வர்ணகம்.)

(க—ரை) "ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்" என்றவிடத்துள்ள ஆத்மசப்தத்தால் விராட் புருஷன் சொல்லப்படுகிறாரா? அல்லது பரமேஶ்வரன் சொல்லப்படுகிறாரா? என்பது ஸந்தேஹம். மஹா பூதங்களின் ஸிருஷ்டி சொல்லப்படாததால் ஆத்ம சப்தத்தால் ஈஶ்வரன் சொல்லப்படமாட்டார். பசு முதலியவற்றைக் கொண்டுவந்ததாகச் சொல்லியிருப்பதிலிருந்து விராட்புருஷனேதான் ஆத்மசப்தத்தாற் சொல்லப்படுவார் என்பது பூர்வபக்ஷம். ¹வேறு ஸ்ருதியிற் சொல்லப்

समाहिते' (छा० ८। १। ३) इत्येवमाद्याः। सन्ति चान्या आयतनविशेषहीना अपीह ब्रह्मविद्याः षोडशकलाद्याः। सत्यमेवमेतत्। तथाप्यत्र विद्यते विशेषः संभृत्याद्यनुपसंहारहेतुः। समानगुणाम्नानेन हि प्रत्युपस्थापितासु विप्रकृष्टदेशास्वपि विद्यासु विप्रकृष्टदेशा गुणा उपसंह्रियेरन्निति युक्तम्। संभृत्यादयस्तु शाण्डिल्यादिवाक्यगोचराश्च मनोमयत्वादयो गुणाः परस्परव्यावृत्तस्वरूपत्वान्न प्रदेशान्तरवर्तिविद्याप्रत्युपस्थापनक्षमाः। नच ब्रह्मसंबन्धमात्रेण प्रदेशान्तरवर्तिविद्याप्रत्युपस्थापनमित्युच्यते, विद्याभेदेऽपि तदुपपत्तेः। एकमपि हि ब्रह्म विभूतिभेदैरनेकधोपास्यत इति स्थितिः। परोवरीयस्त्वादिवद्भेददर्शनात्। तस्माद्वीर्यसंभृत्यादीनां शाण्डिल्यविद्यादिष्वनुपसंहार इति ॥ २३ ॥

## १३ पुरुषविद्याधिकरणम्। सू० २४

### पुरुषविद्यायामिव चेतरेषामनाम्नानात् ॥ २४ ॥

---

ஆகிய இரண்டும் இந்த ஆகாசத்தில் உள்ளிலேயே அடங்கியிருக்கின்றன" என இது முதலானவைகளாம். ஆயதந விசேஷமில்லாத ஷோடசகலம் முதலிய வேறு ப்ரம்ஹ வித்யைகளும் இருக்கின்றனவன்றோ எனின்?

உத்தரம்—இவ்விதமிருப்பது உண்மைதான். ஆயினும் இவ்விடத்தில் ஸம்பிருத்யாதிகளின் அநுபஸம்ஹார ஹேதுவான விசேஷமிருக்கிறது. ஸமானமான குணங்களைச் சொல்லியிருப்பதைக் கொண்டு புத்தியிற் தோற்றத்தை யடைந்த வித்யைகள் விலகின தேசத்திற் படிக்கப் பட்டிருப்பினுங்கூட அவ்வித்யைகளில் வேறுதேசத்தில் படிக்கப்பட்ட குணங்கள் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன என்பது பொருந்தும். ஸம்ப்ருத்யாதிகளும், சாண்டில்யாதி வாக்கியத்திற் சொல்லப்பட்ட மனோமயத்வம் முதலிய குணங்களும் ஒன்றுக்கொன்று மாறுபட்ட ஸ்வரூபமுள்ளனவாக விருப்பனபற்றி வேறுப்ரதேசத்திலுள்ள வித்யையின் தோற்றத்தை தருவதற்குச் சக்தியுடையனவன்று. ப்ரம்ஹத்தின் ஸம்பந்தமிருப்பதைக் கொண்டு மட்டும் வேறுப்ரதேசத்திலுள்ள வித்யையின் தோற்றமேற்படக் கூடும் எனச் சொல்லவியலாது. வித்யை வேறுபடுமிடங்களிலுங்கூட அதுபொருந்தக் கூடியதாக விருப்பதே அதன் காரணமாகும். ப்ரம்ஹமானது ஒன்றாயினுங்கூட விபூதிபேதங்களைக் கொண்டு அநேகவிதமாக வுபாஸிக்கப்படுவதான நிலை சாஸ்திரத்திற் காண்கிறது. * பரோவரீயஸ்த்வாதிகள் போல பேதம் காணப்படுவதே அதன் காரணமாகும். ஆகவே வீர்யம், ஸம்ப்ருதி முதலியவற்றுக்கு சாண்டில்ய வித்யாதிகளில் உபஸம்ஹாரம் கிடையாது என்பது ஸித்திக்கிறது. (23) (எ-று)

பன்னிரண்டாவது ஸம்ப்ருத்யதிகரணம் முற்றிற்று.



---

* ஒரே உத்கீதத்தில் பரோவரீயஸ்த்வம் முதலிய குணவிசிஷ்டமாகச் செய்யப்படும் உபாஸ்தியைக் காட்டிலும், ஹிரண்யச்மச்ருத்வாதி குணவிசிஷ்டமாகச் செய்யப்படும் உபாஸ்தியானது வேறுபட்டதாகக் கொள்ளப்படுவது போலவே இங்கும் காணவேண்டும்.

पुंविद्यैका विभिन्ना वा तैत्तिरीयकताण्डिनोः । मरणावभृथत्वादिसाम्यादेकेति गम्यते ॥ १ ॥
बहुना रूपभेदेन किञ्चित्साम्यस्य बाधनात् । न विद्यैक्यं तैत्तिरीये ब्रह्मविद्याप्रशंसनात् ॥ २ ॥

अस्ति ताण्डिनां पैङ्गिनां च रहस्यब्राह्मणे पुरुषविद्या । तत्र पुरुषो यज्ञः कल्पितः । तदीयमायुस्त्रेधा विभज्य सवनत्रयं कल्पितम् । अशिशिषादीनि च दीक्षादिभावेन कल्पितानि । अन्ये च धर्मास्तत्र समधिगता आशीर्मन्त्रप्रयोगादयः । तैत्तिरीयका अपि कञ्चित्पुरुषयज्ञं कल्पयन्ति—'तस्यैवं विदुषो यज्ञस्यात्मा यजमानः श्रद्धा पत्नी' (नारा० ८०) इत्येतेनानुवाकेन । तत्र संशयः—किं य इतरत्रोक्ताः पुरुषयज्ञस्य धर्मास्ते तैत्तिरीयकेषूप-

---

## புருஷவித்யாதிகரணம் 13.

### (ஸூ) புருஷவித்யாயாமிவச இதரேஷாம் அநாம்நாநாத் ()

(ப-ரை) पुरुषविद्यायामिव च (புருஷவித்யாயாமிவச)=தாண்டிரஹஸ்ய ப்ராம்ஹணம், பைங்கி ரஹஸ்யப்ராம்ஹணம் முதலியவற்றிற் சொல்லிய புருஷவித்யையிற் போல इतरेषाम् (இதரேஷாம்)=மற்ற தைத்திரீயர்களின் சாகையில் अनाम्नानाच्च (அநாம்நாநாத்ச)=சொல்லப்படாததாலும் தாண்டி பைங்கிரஹஸ்யாதிகளிற் சொல்லியவற்றுக்குத் தைத்திரீயத்தில் உபஸம்ஹாரமானது கிடையாது. (24)

வையாஸிக நியாயமாலே.

(க-ரை) தைத்திரீயகர்களுக்கும், தாண்டிகளுக்கும் புருஷவித்யையானது ஒன்ரு? அல்லது வேறுபட்டதா? என்பது ஸந்தேஹம். மரணத்தை அவபிருதமாகச் சொல்லியிருத்தல் முதலியன ஸமானமாக விருப்பதால் இரண்டிடத்திலுமுள்ள புருஷவித்யையானது ஒன்றே என அறியக்கிடக்கிறது என்பது பூர்வபக்ஷம். வெகுவாகவுள்ள ரூபபேதத்தால் ஸ்வல்பமாகவுள்ள ஸாம்யத்துக்குப் பாதமேற்படலாமாதலால் வித்யைக்யம் கிடையாது. தைத்திரீயகத்தில் ப்ரம்ஹவித்யை ஸ்துதிக்கப்பட்டிருக்கிறது என்பது ஸித்தாந்தம். (எ-று)

பாஷ்யம்.—தாண்டிகளுடையவும், பைங்கிகளுடையவும், ரஹஸ்ய ப்ராம்ஹணத்தில் புருஷ வித்யையானது சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விடங்களில் புருஷன் யக்ஞமாகக் கல்பிக்கப்பட்டிருக்கிருன். அவனுடையதான ஆயுளை மூன்ருகப்பிரித்து மூன்று ஸவநமாகக் கல்பிக்கப்பட்டிருக்கிறது. ஆஹாரேச்சை முதலியன தீக்ஷை முதலியனவாகக் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. அவ்விடத்தில் ஆசிஸ்ஸூம், "அக்ஷிதமஸி, அச்யுதமஸி, ப்ராண ஸம்சிதமஸி" என்ற மந்திர ப்ரயோகம் முதலிய வேறு தர்மங்களும் அறியக்கிடக்கின்றன. தைத்திரீயர்களும் "இம்மாதிரியாக உபாஸிக்கும் வித்வானுடைய யக்ஞத்துக்கு ஆத்மா யஜமானனுகவும், ஶ்ரத்தை பத்நியாகவும் ஆகும்" என்ற இந்த அநுவாகத்தினல் ஒரு புருஷயக்ஞத்தைக் கல்பிக்கின்றனர். அங்கு ஸம்சயமுதயமாகிறது—அதாவது:—வேறிடத்திற் சொல்லப்பட்ட புருஷயக்ஞத்தினுடைய தர்மம் யாதுண்டோ அவைகள் தைத்திரீயக உபாஸனங்களிற் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனவா? அல்லது சேர்த்துக்

संहर्तव्याः किंवा नोपसंहर्तव्या इति। पुरुषयज्ञत्वाविशेषादुपसंहारप्राप्तावाचक्ष्महे—नोपसंहर्तव्या इति। कस्मात्। तद्रूपप्रत्यभिज्ञानाभावात्। तदाहाचार्यः—पुरुषविद्यायामिवेति। यथैकेषां शाखिनां ताण्डिनां पैङ्गिनां च पुरुषविद्यायामाम्नानं नैवमितरेषां तैत्तिरीयाणामाम्नानमस्ति। तेषां हीतरविलक्षणमेव यज्ञसंपादनं दृश्यते पत्नीयजमानवेदवेदिबर्हिर्यूपाज्यपशृत्विगाद्यनुक्रमणात्। यदपि सवनसंपादनं तदपीतरविलक्षणमेव 'यत्प्रातर्मध्यन्दिनःसायं च तानि' (नारा० ८०) इति। यदपि किञ्चिन्मरणावभृथत्वादिसाम्यं तदप्यल्पीयस्त्वाद्भूयसा वैलक्षण्येनाभिभूयमानं न प्रत्यभिज्ञापनक्षमम्। नच तैत्तिरीयके पुरुषस्य यज्ञत्वं श्रूयते। विदुषो यज्ञस्येति हि नैते समानाधिकरणे षष्ठ्यौ विद्वानेव यो यज्ञस्तस्येति। नहि पुरुषस्य मुख्यं यज्ञत्वमस्ति। व्यधिकरणे त्वेते षष्ठ्यौ विदुषो यो यज्ञस्तस्येति। भवति हि पुरुषस्य मुख्यो यज्ञसंबन्धः। सत्यां च गतौ मुख्य एवार्थ आ-

---

கொள்ளப்படுவதில்லையா? என்றும். புருஷயக்ஞமாக விருத்தல் இரண்டிடத்திலும் பொதுவாக விருப்பதால் சேர்த்துக் கொள்ளல் ப்ராப்த்தமாகவே சொல்லுகிறோம். சேர்த்துக்கொள்ளக் கூடியனவன்று என்றும். ஏன்? அதே ரூபந்தான் இங்கும் சொல்லப்படுகிறது என்ற ஐக்யக்ஞானமில்லாதிருப்பதே அதன் காரணமாகும். அதையே ஆசிரியரும் புருஷவித்யையிற் போலவெனச் சொல்லுகிறார். ஒரே சாகிகளான தாண்டிகளுடையவும், பைங்கிகளுடையவும் புருஷவித்யையில் எவ்வித முபதேசிக்கப்படுகிறதோ, இவ்விதம் மற்றவர்களான தைத்திரீயகர்களுடைய சாகையில் உபதேசங் காணப்படவில்லை. தைத்திரீயகர்களுடைய சாகையிலோ பத்நீ, யஜமானன், வேதம் (தர்ப்பமுஷ்டி) வேதி, பர்ஹிஸ், யூபம், ஆஜ்யம், பசு, ருத்விக், முதலியவற்றின் அநுக்கிரமண (உபதேச) த்தால் மற்றவர்க்கு மாறுபட்டதாகவே யக்ஞஸம்பாதனம் (யக்ஞோபாஸ்தி) காணப்படுகிறது. ஸவநஸம்பாதனம் செய்திருப்பதாக யாதொன்று சொல்லப்பட்டதோ அதுவும் மற்றவர் சொல்லியிருப்பதற்கு மாறுபாடுள்ளதாகவே இருக்கிறது. அதாவது:—"ப்ராதஃ (காலையிலும) மாத்யந்தினத்திலும், ஸாயங்காலத்திலும் எதுவுண்டோ அவைகள்" என்பதாம். மரணமே அவபிருதமாகும் என்றதாதியான ஸாம்யம் காணப்படுவதாக யாதொன்று சொல்லப்பட்டதோ அதுவும் அற்பமாக விருத்தல் பற்றி அதிகமான வைலக்ஷண்யத்தி (மாறுபாட்டி) ஞல் மறுக்கப்படுவதாய்க் கொண்டு இரண்டும் ஒன்று என்ற ஐக்யக்ஞானத்தைத் தருவதற்குச் சக்தியுடையதன்று.

மேலும், தைத்திரீயகத்தில் புருஷனுக்கு யக்ஞத்வமானது சொல்லப்படவில்லை. அங்குள்ள "விதுஷோ யக்ஞஸ்ய" என்ற இது வித்வானுகிற யாதொரு யக்ஞமுண்டோ அவனுக்கு என்பதாய் ஸமானதிகரண (ஸமானமான பொருளுள்ள) ஷஷ்டீவிபக்தி (ஆறும் வேற்றுமை) அன்று. புருஷனுக்கு யக்ஞத்வமானது முக்கியமானதன்றன்றோ? பின்னையோவெனில் வித்வானுடைய யாதொரு யக்ஞமுண்டோ அதற்கு என்பதாய் இந்த ஷஷ்டீவிபக்திகள் (ஆறும் வேற்றுமைகள்) வியதிகரணங்களாக (மாறின பொருளுள்ளனவாக) க் கொள்ளப்படுகின்றன. புரு

श्रयितव्यो न भाक्तः। आत्मा यजमान इति च यजमानत्वं पुरुषस्य निर्ब्रुवन्वैयधिकरण्येनैवास्य यज्ञसंबन्धं दर्शयति। अपिच तस्यैवंविदुष इति सिद्धवदनुवादश्रुतौ सत्यां पुरुषस्य यज्ञभावमात्मदीनां च यजमानादिभावं प्रतिपित्समानस्य वाक्यभेदः स्यात्। अपिच ससन्न्यासामात्मविद्यां पुरस्तादुपदिश्यानन्तरं तस्यैवंविदुष इत्याद्यनुक्रमणं पश्यन्तः पूर्वशेष एवैष आम्नायो न स्वतन्त्र इति प्रतीमः। तथाचैकमेव फलमुभयोरप्यनुवाकयोरुपलभामहे 'ब्रह्मणो महिमानमाप्नोति' (नारा० ८०) इति। इतरेषां त्वनन्यशेषः पुरुषविद्याम्नायः। आयुरभिवृद्धिफलो ह्यसौ 'स ह—षोडशं वर्षशतं जीवति य एवं वेद' (छा० ३। १६। ७) इति समभिव्याहारात्। तस्माच्छाखान्तराधीतानां पुरुषविद्याधर्माणामाशीर्मन्त्रादीनामप्राप्तिस्तैत्तिरीयके ॥ २४ ॥

## १४ वेधाद्यधिकरणम्। सू० २५

## वेधाद्यर्थभेदात् ॥ २५ ॥

---

ஷனுக்கோ யாக ஸம்பந்தம் முக்கியமாகவுமிருக்கிறது. இடமிருக்குங்கால் முக்கியமான பொருளைக் கொள்ளுவது பொருந்துமேயல்லாது கௌணமான பொருளைக்கொள்ளுவது பொருந்தாது. "ஆத்மா யஜமானனுவான்" என்பதாய் புருஷனுக்கு யஜமானனாகவிருத்தலை விளக்கும் வேதமானது இந்த வித்வானுக்கு யக்ஞ ஸம்பந்தத்தை வையதிகரண்யத்தினாலேயே (மாறுபட்ட பொருள்கொள்ளும் முறையினாலேயே) விளக்கியிருக்கிறது.

மேலும், இவ்விதமுபாஸிக்கும் அவனுக்கு என்பதாய் ஸித்தமான பொருளை அநுவாதஞ்செய்யும் சப்தமிருக்குங்கால் புருஷனுக்கு யக்ஞத்தன்மையையும், ஆத்மா முதலியவற்றுக்கு யஜமானதித் தன்மையையும் கொள்ளுபவர்க்கு வாக்கிய பேதம் வந்துவிடும். மேலும் ஸன்னியாஸத்துடன் கூடின ஆத்மவித்யையை முன்னருபதேசித்து பிறகு "இவ்விதமுபாஸிக்கும் அவர்க்கு" என்ற தொடக்கத்தைப் பார்க்குங்கால் இந்தவுபதேசமானது முன்னருள்ள உபதேசத்தின் சேஷமேயொழிய ஸ்வதந்திரமான (தனிப்பட்டதான) உபதேசமன்று என எண்ணுகிறோம். அவ்விதமே "ப்ரம்ஹத்தின் மஹிமாவை (ஸ்வரூபத்தை) அடைகிறான்" என்பதாய் இரண்டு அநுவாகங்களுக்கும் ஒரேபலன் சொல்லியிருப்பதைக் காண்கிறோம். மற்றவர்க்கோவெனில் புருஷவித்யையினுபதேசமானது ஸ்வதந்திரமாகவுள்ளது. ஆயுளின் பெருக்கையன்றோ இது பயனாகவுடையது. அதாவது:—"எவனொருவன் இவ்விதமுபாஸிப்பானோ அவன் நூற்றுப்பதினாறு வருஷங்கள் (1600வருஷ என்றும் சொல்லலாம்) ஜீவிக்கிறான் எனச் சொல்லியிருப்பதாலென்க. ஆகவே வேறு சாகையிற் சொல்லப்பட்ட புருஷ வித்யா தர்மங்களான ஆசிஸ், மந்த்രப்ரயோகம் முதலியவற்றுக்கு தைத்திரீயகத்தில் ப்ராப்தியானது கிடையாது. (24)

பதிமூன்றாவது புருஷவித்யாதிகரணம் முற்றிற்று.

वेध्यमन्त्रप्रवर्ग्यादि विद्याङ्गमथवा नतु। विद्या सन्निधिपाठेन विद्याङ्गे मन्त्रकर्मणी ॥ १ ॥
लिङ्गेनान्यत्र मन्त्राणां वाक्येनापि च कर्मणाम्। विनियोगात् सन्निधिस्तु बाद्धयोऽतो नाङ्गता तयोः॥

---

## வேதாத்யதிகரணம் 14.

(அ—கை) ஆதர்வணிகர்களின் உபநிஷதாரம்பத்தில் "ஸர்வம் ப்ரவித்ய ஹ்ருதயம் ப்ரவித்ய தமநீ: ப்ரவ்ருஜ்ய சிரோபிப்ரவ்ருஜ்ய த்ரிதா விப்ருக்த:" (ஹே தேவதையே நீ எனது சத்துருவினுடைய எல்லா அங்கங்களையும் நாசஞ்செய்வாயாக. அதிலும் விசேஷமாக ஹிருதயத்தைப் பிளந்துவிடு. நரம்புகளை ஒடித்துவிடு. தலையை நாலாபக்கத்திலும் நாசஞ்செய். இவ்விதஞ்செய்தல் மூலம் எனது சத்ருவானவன் மூன்றுவிதமாகவும் பிரிதலையடைந்தவனாக ஆகட்டும்) என்ற மந்திரமானது படிக்கப்படுகிறது. இதுபோலவே தாண்டிகளுடைய உபநிஷதாரம்பத்தில் "தேவ ஸவித:! ப்ரஸூவ யக்ஞம் ப்ரஸூவ யக்ஞபதிம்" (ஹே ஸூரியதேவனே! யக்ஞத்தையும், யக்ஞபதியையும் உண்டாக்கித் தருவீராக) எனப்படிக்கப்பட்டிருக்கிறது. அவ்விதமே சாட்யாயனிகளுடைய உபநிஷதாரம்பத்தில் "ஶ்வேதாஶ்வோஹரித நீலோஸி" (உச்சை ஶ்ரவஸ் என்றவெண்ணிறமான குதிரையுள்ள இந்திரனே நீர் நீலநிறமான மணிபோன்றிருக்கின்றீர்) எனப்படிக்கப்பட்டிருக்கிறது. வாஜஸநேயிகளுடைய உபநிஷதாரம்பத்தில் "தேவாஹவை ஸத்ரம் நிஷேது:"(தேவர்கள் ஸத்ரம் என்ற யாகத்தைச் செய்யத்தொடங்கினர்) என்று ப்ரவர்க்ய ப்ராம்ஹணமானது படிக்கப்பட்டிருக்கிறது. கௌஷீதகிகளுடைய அக்னிஷ்டோமப்ராம்ஹணத்தில் "ப்ரம்ஹ வா அக்னிஷ்டோமோ ப்ரம்ஹைவ தத ஹர்ப்ரம்ஹணைவதே ப்ரம்ஹோபயந்தி தேம்ருதத்வமாப்நுவந்தி ய ஏததஹருபயந்தி" (அக்னிஷ்டோமம் என்ற யாகம் ப்ரம்ஹமேயாகும். அந்த யாகமானது எந்தத் தினத்திற் செய்யப்படுமோ அந்தத் தினமும் ப்ரம்ஹமேயாகும். ஆகவே எவர் இந்த தினத்திற் செய்யக்கூடிய கர்மத்தைச் செய்கின்றனரோ அவர் ப்ரம்ஹமாகிற ஸாதனத்தினாலேயே ப்ரம்ஹத்தையடைகின்றனர். அதாவது:—அவர் கிரமமாக மோக்ஷத்தையடைகின்றனர் என்றும்) எனப் படிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே "ப்ரவித்ய" என்றதாதி மந்திரங்களும், ப்ரவர்க்யாதி கர்மங்களும், உபநிஷத்திற் சொல்லிய உபாஸனங்களில் சேருகின்றனவா? அல்லது இல்லையா? என ஸந்தேஹம்வர உபாஸனத்தில் இவை சேருவதில்லை என ஸித்தாந்தம் செய்யவேண்டி ஒரே ஸூத்திரங்கொண்ட இந்த அதிகரணமாரம்பிக்கப்படுகிறது—

### (ஸூ) வேதாத்யர்த்தபேதாத் (25)

(ப—ரை) **वेधाद्यर्थभेदात्** (வேதாத்யர்த்தபேதாத்)=ஹிருதயத்தைப் பிளந்துவிடு என்றதாதிகளின் பொருளான ஹிருதயத்தைப் பிளத்தல் முதலியன வேறுபடுவதால் இவை உபாஸனத்திற் சேராதனவேயாகும். (25) (எ—று)

**வையாஸிக நியாயமாலை.**

**(க—ரை) வேத்யமான மந்திரமும், ப்ரவர்க்யாதிகர்மமும், வித்யாங்கமா? அல்லது இல்லையா? என்பது ஸந்தேஹம். வித்யையின் ஸந்நிதியில் பாடமிருப்பதால்**

अस्याथर्वणिकानामुपनिषदारम्भे मन्त्रसमाम्नायः–'सर्वं प्रविध्य हृदयं प्रविध्य धमनीः प्रवृज्य शिरोऽभिप्रवृज्य त्रिधा विपृक्तः' इत्यादिः। ताण्डिनाम्–'देव सवितः प्रसुव यज्ञम्' इत्यादिः। शाट्यायनिनाम्—'श्वेताश्वो हरितनीलोऽसि' इत्यादिः। कठानां तैत्तिरीयाणां च—'शं नो मित्रः शं वरुणः' (तै० १।१।१) इत्यादिः। वाजसनेयिनां तूपनिषदारम्भे प्रवर्ग्यब्राह्मणं पठ्यते—'देवा ह वै सत्रं निषेदुः' इत्यादि। कौषीतकिनामप्यग्निष्टोमब्राह्मणम्—'ब्रह्म वा अग्निष्टोमो ब्रह्मैव तदहर्ब्रह्मणैव ते ब्रह्मोपयन्ति तेऽमृतत्वमाप्नुवन्ति य एतदहरुपयन्ति' इति। किमिमे सर्वे प्रविध्यादयो मन्त्राः प्रवर्ग्यादीनि च कर्माणि विद्यासूपसंह्रियेरन्किंवा नोपसंह्रियेरन्निति मीमांसामहे। किं तावन्नः प्रतिभाति। उपसंहार एवैषां विद्यास्विति। कुतः। विद्याप्रधानानामुपनिषद्ग्रन्थानां समीपे पाठात्। नन्वेषां

---

மந்திரம், கர்மம் இவைகள் வித்யையின் அங்கங்களாகவாகும் என்பது பூர்வபக்ஷம். லிங்கத்தினல் மந்திரங்களுக்கும், வாக்கியத்தினல் கர்மங்களுக்கும் வேறிடத்தில் விநியோகமிருப்பதால் இக்காரணம்பற்றி வித்யாஸந்நிதி பாடமானது பாதிக்கப்படும். ஆனதுபற்றி மந்திரம், கர்மம் இவற்றுக்கு வித்யாங்கத்வமானது கிடையாது என்பது ஸித்தாந்தம். (எ–று)

பாஷ்யம்.—ஆதர்வணிகர்களின் உபநிஷதாரம்பத்தில் *"ஸர்வம் ப்ரவித்ய ஹிருதயம் ப்ரவித்ய தமநீः ப்ரவ்ருஜ்ய சிரோ அபிப்ரவ்ருஜ்ய த்ரிதா விப்ருக்த:" என்றதாதி மந்திரபாடமிருக்கிறது. தாண்டிகளுடைய (உபநிஷதாரம்பத்தில்) (1)"தேவஸவித: ப்ரஸூவ யக்ஞம்" என்றதாயும், சாட்யாயநிகளுடைய (உபநிஷதாரம்பத்தில்) (2)"ஶ்வேதாஶ்வோ ஹரித நீலோஸி" என்றதாதியும், கடர்களுடையவும் தைத்திரீயர்களுடையவும் (உபநிஷதாரம்பத்தில்) (3)"ஶம்நோ மித்ர: ஶம் வருண:" என்றதாதியும் மந்திரபாடமிருக்கிறது. வாஜஸநேயிகளுடைய உபநிஷதாரம்பத்திலோவெனில் "தேவாஹவை ஸத்ரம் நிஷேது:" என்றதாதி ப்ரவர்க்யப்ராம்ஹணமானது படிக்கப்படுகிறது. கௌஷீதகிகளுடைய மந்திர ப்ராம்ஹணமானது (4)"ப்ரம்ஹவா அக்னிஷ்டோமঃ ப்ரம்ஹைவததஹঃ ப்ரம்ஹணைவ தே ப்ரம்ஹோபயந்தி தே அமிருதத்வமாப்நுவந்தி ய ஏததஹ ருபயந்தி" எனவிருக்கிறது. இந்த ப்ரவித்யாதிகளான எல்லா மந்திரங்களும், ப்ரவர்க்யாதிகளான கர்மங்களும் வித்யைகளில் சேர்த்துக்கொள்ளப்படுகின்றனவா? அல்லது சேர்த்துக்கொள்ளப்படுவதில்லையா? என விசாரிக்கிறோம். முதலில் நமக்குத் தோற்றுவது யாதென்னில் வித்யைகளில் இவற்றுக்கு உபஸம்ஹாரம் உண்டுதான் என்றும். ஏன்? வித்யையை ப்ரதானமாகக்கொண்ட உபநிஷத் கிரந்தங்களுடைய ஸமீபத்தில் பாடமிருப்பதே அதன் காரணமாகும்.

சங்கை.—இவற்றுக்கு வித்யையைச் சார்ந்தனவாக விதியிருப்பதாகக் காண்கின்றோமில்லை யன்றோவெனில்?

---

* இதன் பொருளை அவதாரிகையிற் காண்க.

(1) (2) (3) (4) இவற்றின் பொருளையும் அவதாரிகையிற் காண்க.

विद्यार्थतया विधानं नोपलभामहे । बाढम् । अनुपलभमाना अपि त्वनुमास्यामहे सन्निधिसामर्थ्यात् । नहि सन्निधेरर्थवत्त्वे संभवत्यकस्मादसावनाश्रयितुं युक्तः । ननु नैषां मन्त्राणां विद्याविषयं किञ्चित्सामर्थ्यं पश्यामः । कथं च प्रवर्ग्यादीनि कर्माण्यन्यार्थत्वेनैव विनियुक्तानि सन्ति विद्यार्थत्वेनापि प्रतिपद्येमहीति । नैष दोषः । सामर्थ्यं तावन्मन्त्राणां विद्याविषयमपि किञ्चिच्छक्यं कल्पयितुं हृदयादिसङ्कीर्तनात् । हृदयादीनि हि प्रायेणोपासनेष्वायतनादिभावेनोपदिष्टानि तद्द्वारेण च हृदयं प्रविध्येत्येवञ्जातीयकानां मन्त्राणामुपपन्नमुपासनाङ्गत्वम् । दृष्टश्चोपासनेष्वपि मन्त्रविनियोगः 'भूः प्रपद्येऽमुनामुनामुना' (छां० ३ । १५ । ३) इत्येवमादिः । तथा प्रवर्ग्यादीनां कर्मणामन्यत्रापि विनियुक्तानां सतामविरुद्धो विद्यासु विनियोगो वाजपेय इव बृहस्पतिसवस्येति । एवं प्राप्ते—

---

உத்தரம்—ஆம். நாம் அவ்விதம் காணவிடினுங்கூட வித்யையின் ஸமீபபாடமிருக்கும் ஸாமர்த்யத்தைக்கொண்டு அநுமானஞ் செய்கிறோம். ஸந்நிதியானது (வித்யையின் ஸமீபபாடமானது) பயனுள்ளதாகவாகுங்கால் காரணமின்றி அதை விடுவது பொருந்தாது.

சங்கை—இந்த மந்திரங்களுக்கோ வித்யா விஷயமான ஸாமர்த்யம் ஒன்றையும் காண்கின்றோமில்லை. ப்ரவர்க்யாதி கர்மங்களோ வேறு ப்ரயோஜனத்தையொட்டி விதிக்கப்பட்டிருக்குங்கால் வித்யார்த்தமாகவும் அவையாகும் என எவ்விதம் நாம் கொள்ளமுடியும் எனின் ?

உத்தரம்—இது தோஷமாகவாகாது. மந்திரங்களுக்கு வித்யாவிஷயமாகவும் கொஞ்சம் ஸாமர்த்தியமானது கற்பிக்கக்கூடியதாகவாகலாம். என்? (மந்திரத்தில்) ஹிருதயாதிகள் சொல்லப்பட்டிருப்பதாலென்க. ஹிருதயாதிகளோவெனில் பெரும்பாலும் உபாஸனங்களில் ஆயதநாதி (ஸ்தானாதி) பாவத்துடன் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அவ்வழியாக 'ஹிருதயம் ப்ரவித்ய' என்றதாதியான மந்திரங்களுக்கு உபாஸனாங்கத்துவமானது பொருத்தமுள்ளதாகவே ஆகிறது. உபாஸனங்களிலும் (1)"பூ:ப்ரபத்யே அமுநா அமுநா அமுநா" என்றதாதி மந்திர விநியோகம் காணவும்படுகிறது. அதுபோல ப்ரவர்க்கியாதி கர்மங்களுக்கு வாக்கியத்தினால் வேறிடத்தில் விநியோகமானது காணப்படினுங் கூட வித்யைகளில் விநியோகமானது விரோதப்படமாட்டாது. (2) வாஜபேயத்தில் ப்ருஹஸ்பதி ஸவத்துக்குப்

---

(1) புத்திரனுக்கு நீண்டவாயுள் விதிக்கவேண்டி த்ரைலோக்யத்துக்கு கோசத்வேந உபாஸ்தி சொல்லப்பட்டவிடத்தில் பிதாவானவன் படிக்கும் மந்திரம் பின்வருமாறு—அமுநா என்றதால் புத்திரனுடைய பெயரை 3 தடவை உச்சரித்து புத்திரனுடன் கூட பூ: என்ற இவ்வுலகையும் அவ்வுலகையும் நான் அடைவேனாக. எனக்குப் புத்திரவியோகம் உண்டாகவேண்டாம் என அதன் பொருள்.

(2) "ப்ரம்ஹவர்சஸத்தில் விருப்பமுள்ளவன் ப்ருஹஸ்பதி ஸவம் என்ற யாகத்தைச் செய்யவேண்டும்" என்ற வாக்கியத்தினால் ப்ரம்ஹவர்ச்சஸம் என்ற பலனை யுத்தேசித்து விதிக்கப் பட்டிருப்பினுங்கூட ப்ருஹஸ்பதிஸவம் என்ற யாகமானது "வாஜபேயத்தைச் செய்து ப்ருஹஸ்பதி ஸவத்தைச் செய்யவேண்டும்" என்ற வாக்கியத்தினால் வாஜபேயத்

ब्रूमः, नैषामुपसंहारो विद्यास्विति । कस्मात् । वेधाद्यर्थभेदात् । हृदयं प्रविध्येत्येवजातीयकानां हि मन्त्राणां येऽर्था हृदयवेधादयो भिन्ना अनभिसंबद्धास्त उपनिषदुदिताभिर्विद्याभिः । न तेषां ताभिः सङ्गन्तुं सामर्थ्यमस्ति । ननु हृदयस्योपासनेष्वप्युपयोगात्तद्द्वारक उपासनासंबन्ध उपन्यस्तः । नेत्युच्यते । हृदयमात्रसङ्कीर्तनस्य ह्येवमुपयोगः कथञ्चिदुत्प्रेक्ष्येत । नच हृदयमात्रमत्र मन्त्रार्थः । हृदयं प्रविध्य धमनीः प्रवृज्येत्येवजातीयको हि न सकलो मन्त्रार्थो विद्याभिरभिसंबध्यते । आभिचारिकविषयो ह्येषोऽर्थस्तस्मादाभिचारिकेण कर्मणा सर्वं प्रविध्येत्येतस्य मन्त्रस्याभिसंबन्धः । तथा 'देव सवितः प्रसुव यज्ञम्' इत्यस्य यज्ञप्रसवलिङ्गत्वाद्यज्ञेन कर्मणा संबन्धः । तद्विशेषसंबन्धस्तु प्रमाणान्तरादनुसर्तव्यः । एवमन्येषामपि मन्त्राणां केषाञ्चिल्लिङ्गेन केषाञ्चिद्वचनेन केषाञ्चित्प्र-

---

போலவரம் என இவ்விதம் ப்ராப்தமாகவே சொல்லுகிறோம். மந்திரம், கர்மம் இவற்றுக்கு வித்யைகளில் உபஸம்ஹாரமானது கிடையாது. ஏன்? வேதாதிகளின் பொருளுக்குப் பேதம் (வேற்றுமை) காணப்படுவதாலென்க. அதாவது:— 'ஹிருதயம் ப்ரவித்ய' என்ற இம்மாதிரியான மந்திரங்களுக்கு ஹிருதயத்தைப் பிளத்தல் முதலிய யாதொரு பொருளுண்டோ அவை உபநிஷத்திற் சொல்லிய வித்யைகளுடன் வேறுபட்டனவாகவே அதாவது:—அவற்றுடன் ஸம்பந்தப்படாதனவாகவே ஆகும் என்றும். அவற்றுக்கு அவற்றுடன் ஸம்பந்தப்படுவதற்குரிய ஸாமர்த்தியமில்லையன்றோ?

சங்கை— ஹிருதயத்துக்கு உபாஸனங்களிலுங்கூட உபயோகமிருப்பதால் அதன் வாயிலாக உபாஸனஸம்பந்தமும் உபன்னியஸிக்கப்பட்டதன்றோவெனின்?

உத்தரம்—இல்லையெனச் சொல்லப்படுகிறது. ஹிருதயத்தைமட்டும் சொல்லியிருப்பதற்கு வேண்டுமானால் இவ்விதமுபயோகம் வெகுபாடுபட்டு உத்ப்ரேக்ஷிக்கக் கூடுமானாலுங்கூடும். ஹிருதயம் மட்டும் இங்குள்ள மந்திரத்தின் பொருளன்று. 'ஹிருதயத்தைப் பிளந்துவிடு, நரம்புகளைத் துண்டித்துவிடு' என்ற இம்மாதிரியான எல்லா மந்திரத்தின் பொருளும் வித்யைகளுடன் ஸம்பந்தத்தையடையமாட்டாது. (1)ஆபிசாரிகமான கர்மத்தையன்றோ இதன் பொருள் விஷயமாகக் கொண்டுள்ளது. ஆகவே ஆபிசாரிகமான கர்மத்துடன் 'ஸர்வம் ப்ரவித்ய' என்ற இந்த மந்திரத்துக்கு ஸம்பந்தமேற்படலாம். அவ்விதமே "தேவஸவித: ப்ரஸுவ யக்ஞம்" என்ற இந்த மந்திரத்துக்கு யக்ஞத்தையுண்டுபண்ணுதல் என்ற லிங்கம் காணப்படுவதால் யாகமாகிற கர்மத்துடன் ஸம்பந்தமேற்படுகிறது. அவ்விஷயமான விசேஷ ஸம்பந்தமோவெனில் வேறு ப்ரமாண மூலம் கண்டுகொள்ள வேண்டும். இவ்விதம் சிலவற்றுக்கு லிங்கத்தினாலும், சிலவற்றுக்கு வசனத்தின

---

துக்கு உத்தராங்கமாகவும் விதிக்கப்படுவதால் இரண்டுக்கும் அங்கமாயிருத்தல் அங்கீகரிக்கப்படுவது போல் இங்கும் சம்பவிக்கலாம் என்று கருத்து.

(1) சத்துரு நாசத்துக்கு வேண்டி அதர்வவேதத்திற் சொல்லியபடி செய்யும் கர்மம் ஆபிசாரிககர்மம் எனப்படும்.

माणान्तरेणेत्येवमर्थान्तरेषु विनियुक्तानां रहस्यपठितानामपि सतां न सन्निधिमात्रेण विद्याशेषत्वोपपत्तिः । दुर्बलो हि सन्निधिः श्रुत्यादिभ्य इत्युक्तं प्रथमे तन्त्रे 'श्रुति-

---

லும், சிலவற்றுக்கு வேறு ப்ரமாணத்தினாலும் என இவ்விதம் வேறு பொருளில் விநியோகிக்கப்பட்டவைகளான வேறு மந்திரங்களுக்குங்கூட உபநிஷத்தில் பாடமிருப்பினும் ஸன்னிதி (வித்யையின் ஸமீப) பாடத்தைக்கொண்டு மட்டும் அவற்றுக்கு வித்யா சேஷத்துவம் சொல்லுவது பொருத்தமுள்ளதாகவாகமாட்டாது. ஸன்னிதியானது (ஸமீபபாடமானது) ப்ருத்யாதிகளைக்காட்டிலும் துர்ப்பலமானதாகவல்லவோ பூர்வமீமாம்ஸையிற் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது:—*"ப்ரு

---

* இதன் பொருள் பின்வருமாறு:—பூர்வமீமாம்ஸையில் ச்ருதி, லிங்கம், வாக்யம், ப்ரகரணம், ஸ்தானம், ஸமாக்யை என அங்கதாபோதகமாக 6வித பிரமாணங்கள் கூறப் பட்டிருக்கின்றன. அவற்றுள் ச்ருதியாவது:—அங்கத்வத்தை நேரில் போதிக்கும் சப்தம். உதாஹரணம்—தத்நா ஜுஹோதி (தயிரினால் அக்னிஹோத்திர ஹோமம் செய்ய வேண்டும்) என்பதாம். இங்கு தத்நா என்றவிடத்துள்ள த்ருதீயா சுருதியினால் (மூன்றாம் வேற்றுமையினால்) தயிருக்கு ஹோம ஸாதனத்வமானது போதிக்கப்படுகின்றது. லிங்கமாவது:—ஸாமர்த்யம். (யோக்யதை.) இது சப்த ஸாமர்த்யம், அர்த்த ஸாமர்த்யம் என இரண்டுவிதமாகும். ஸ்ருவேண அவத்யதி, (ஸ்ருவம் என்ற பாத்திரத்தால் எடுக்கவேண்டும்) ஸ்வதிதிநா அவத்யதி (கத்தியினால் எடுக்கவேண்டும்) என்றவிடத்தில் ஸ்ருவம் கத்தி இவற்றுக்கு பொதுவில் அவதான ஸாமான்யாங்கத்வ மறியப்படினும் லிங்கத்தினால் ஸ்ருவத்துக்கு த்ரவத்ரவ்ய அவதானாங்கத்வமும், ஸ்வதிதிக்கு மாம்ஸாதிகளின் அவதானாங்கத்வமும் ஸித்திக்கின்றது. பதங்களிடத்துள்ள அர்த்தவிசேஷத்தைப்போதிக்கும் சக்தி சப்த ஸாமர்த்யம் எனப்படும். உதாஹரணம்—பர்ஹிர்த்தேவஸதனம் தாமி (தேவஸதனம்—தேவர்கள் வஸிக்கக்கூடிய, பர்ஹி:—தர்ப்பத்தை, தாமி—அறுக்கிறேன்) என்ற மந்திரத்துக்கு தர்ப்பத்தை அருத்தல் என்ற பொருளைவிளக்கும் ஸாமர்த்யமிருப்பதால் இம்மந்திரத்துக்கு தர்ப்பத்தை அருப்பதில் ஸாதனத்வமானது கற்பிக்கப்படுகின்றது. வாக்யமாவது:—அங்காங்கித்வத்தை அடைவதற்கு யோக்யதையுள்ள இரண்டு வஸ்துக்களையும் சேர்த்துப் படித்தல். உதாஹரணம்—யஸ்ய பர்ணமயீ ஜுஹூர்ப்பவதி ந ஸ பாபம் ச்லோகம் ச்ருணோதி (எந்த யஜமானனுடைய கர்மத்தில் ஜுஹூ என்பது புரசமரத்தினால் செய்யப்பட்டதாகின்றதோ அவன் நிந்தையைக் கேழ்க்கமாட்டான்) என்றவிடத்தில் பர்ணதை (புரசமரம்) ஜுஹூ (ஹோமஸாதனமான ஒருவகைப் பாத்திரம்) இவற்றைக் கூறும் சப்தங்களுக்கு சேர்த்துப்பாடம் காணப்படுவதால் பர்ணதையானது ஜுஹூ என்ற பாத்திரத்துக்கு அங்கம் என அறியப்படுகின்றது. ப்ரகரணமாவது:—பரஸ்பராகாங்க்ஷை. உதாஹரணம்—தர்ச பூர்ணமாஸப்ரகரணத்தில் படிக்கப்பட்ட ப்ரயாஜம் முதலிய கர்மங்களுக்கு தர்சபூர்ணமாஸ அங்கத்வமானது ப்ரகரணத்தினால் ஏற்படுகின்றது. அதாவது: தர்சபூர்ணமாஸத்துக்குத் தனக்கு உபகாரகம் எது? என்ற ஆகாங்க்ஷை இருக்கின்றது. அவ்விதமே ப்ரயாஜாதி கர்மங்களுக்கு தன்னால் உபகரிக்கத்தகுந்தது எது? என்ற ஆகாங்க்ஷை இருக்கின்றது. இத்தகைய பரஸ்பராகாங்க்ஷையினால் ப்ரயாஜாதிகளுக்கு தர்சபூர்ணமாஸாங்கத்வம் தீர்மானிக்கப் படுகின்றது என்பதாம்.

ஸ்தானமாவது: ஸாதேச்யம் (ஒரே தேசத்தையுடையதா இருத்தலாம்) இது பாட ஸாதேச்யம் அனுஷ்டான ஸாதேச்யம் என இருவகைப்படும். பாட ஸாதேச்யமானது

लिङ्गवाक्यप्रकरणस्थानसमाख्यानां समवाये पारदौर्बल्यमर्थविप्रकर्षात्' (जै० सू० ३। ३। १३) इत्यत्र। तथा कर्मणामपि प्रवर्ग्यादीनामन्यत्र विनियुक्तानां न विद्याशेषत्वोपपत्तिः। नह्येषां विद्याभिः सहैकार्थ्यं किञ्चिदस्ति। वाजपेये तु बृहस्पतिसवस्य स्पष्टं विनियोगान्तरम्—'वाजपेयेनेष्ट्वा बृहस्पतिसवेन यजेत' इति। अपिचैकोऽयं प्रवर्ग्यः सकृदुत्पन्नो बलीयसा प्रमाणेनान्यत्र विनियुक्तो न दुर्बलेन प्रमाणेनान्यत्रापि विनियोगमर्हति। अगृह्यमाणविशेषत्वे हि प्रमाणयोरेतदेवं स्यान्नतु बलवदबलवतोः प्रमाण-

---

தி, லிங்க வாக்ய ப்ரகரண ஸ்தான ஸமாக்யாஞம் ஸமவாயே பாரதௌர்பல்யம் அர்த்தவிப்ரகர்ஷாத்" என்றவிடத்தில் என்றும். அவ்விதமே வேறிடத்தில் விநியோகிக்கப்பட்ட (2) ப்ரவர்க்யம் முதலிய கர்மங்களுக்கும் வித்யாசேஷத்வம் சொல்லுவது பொருந்தக் கூடியதன்று. இவற்றுக்கு வித்யைகளுடன் கூட ஐகார்த்யம் (ஒத்தபொருள்) கொஞ்சமும் கிடையாது. வாஜபேயத்திலோ வெனில் "வாஜபேயத்தால் யஜித்து (ப்பிறகு) ப்ருஹஸ்பதிஸவத்தால் யஜிக்கவேண்டும்" என்பதாய் தெளிவான வேறு விநியோகம் காணக்கிடக்கிறது. மேலும் ஒருதடவை உண்டான இந்த ஒரு ப்ரவர்க்கியமானது வலுப்பெற்ற ப்ரமாணத்திஞல் வேறிடத்தில் விநியோகிக்கப்பட்டதாய்க் கொண்டு துர்ப்பல ப்ரமாணத்திஞல் வேறிடத்திலுங்கூட விநியோகத்தையடைவதாகச் சொல்லுவது பொருந்தாது. ப்ர

---

யதாக்கிரம பாடம், ஸந்நிதிபாடம் என இருவகைப்படும். காம்யேஷ்டி யாஜ்யாநுவாக்யா காண்டத்தில் படிக்கப்பட்ட யாஜ்யானுவாக்யா மந்திரங்களுக்கு காம்யேஷ்ட்யங்கத்வமானது யதாஸங்க்யபாடம் என்ற ஸாதேச்யத்தால் ஏற்படுகின்றது. அதாவது:—முதலில் படிக்கப்பட்ட காம்யேஷ்டிக்கு யாஜ்யானுவாக்யாகாண்டத்தில் முதலில் படிக்கப்பட்ட யாஜ்யானுவாக்யையும், இரண்டாவது காம்யேஷ்டிக்கு இரண்டாவது யாஜ்யானுவாக்யையும் அங்கம் என்ற முறையால் அறியப்படுகிறது. சுந்தத்வம் தைவ்யாய என்ற மந்திரமானது ஸாந்நாய்யயாகபாத்திரஸந்நிதியில் படிக்கப்படுவதால் ஸந்நிதிபாடம் என்ற பிரமாணத்தால் ஸாந்நாய்ய பாத்திர புரோக்ஷணத்துக்கு அங்கமென அறியப்படுகின்றது. பசு யாகதர்மங்களுக்கு பசு யாகாங்கத்வமானது அனுஷ்டான ஸாதேச்யம் என்ற பிரமாணத்தாலறியப்படுகின்றது. யௌகிக சப்தம் ஸமாக்யை எனப்படும். இது வைதிகம், லௌகிகம் என இருவகைப்படும். "ஹோத்ருசமஸ:" என்பது முதலியன வைதிகஸமாக்யை எனப்படும். இதஞல் ஹோதா என்ற ருத்விக்குக்கு சமஸம் என்ற பாத்திரத்திலுள்ள ஸோமரஸத்தைப் பானம் செய்வதில் அங்கத்வம் அறியப்படுகின்றது. ஆத்வர்யவம் ஹௌத்ரம் முதலியன லௌகிக ஸமாக்யை எனப்படும். இதஞல் அந்தந்தக் காண்டங்களில் படிக்கப்படும் கர்மங்களில் அத்வர்யு முதலியருத்விக்குகளுக்கு கர்த்ருத்வரூபமான அங்கத்வமானது ஏற்படுகின்றது.

இந்த 6பிரமாணங்களுக்குள்ளும் முந்தியமுந்தியபிரமாணம் பிரபலமாகவும், பிந்திய பிந்திய பிரமாணம் துர்ப்பலமாகவுமாகின்றது. பிந்தியபிரமாணத்துக்கு முந்திய பிரமாணத்தைவிட அங்கத்வத்தைப் போதிப்பதில் விளம்பமிருப்பதே அதன் காரணமாகும். உதாஹரணத்துடன் இவ்விஷயம் பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில் விளக்கப்பட்டிருக்கின்றது. குருமுகமாய் இவ்விஷயத்தைத் தெரிந்து கொள்வதே மேலானமுறை என இங்கு விடுத்திருக்கிறோம்.

योरगृह्यमाणविशेषता संभवति बलवदबलवत्त्वविशेषादेव । तस्मादेवञ्जातीयकानां मन्त्राणां कर्मणां वा न सन्निधिपाठमात्रेण विद्याशेषत्वमाशङ्कितव्यम् । अरण्यानुवचनादिधर्मसामान्यात्तु सन्निधिपाठ इति सन्तोष्टव्यम् ॥ २५ ॥

---

மாணங்களைப்பற்றிய விசேஷமானது கிரஹிக்கப்படாதிருக்குமானல் இது இவ்விதமிருந்தாலுமிருக்கலாம். வலுப்பெற்றதும், துர்ப்பலமுமான ப்ரமாணங்களுக்கு விசேஷக் கிரஹணமில்லாதிருத்தலென்பது பொருந்தமாட்டாது. வலுவுள்ளதாயிருத்தல், வலுவற்றிருத்தல் என்ற விசேஷமிருப்பதே அதன் காரணமாகும். ஆனதுபற்றி இப்பாதிரியான மந்திரங்களுக்கோ, கர்மாக்களுக்கோ வித்யாஸன்னிதியில் பாடமிருப்பதைக்கொண்டுமட்டும் வித்யாசேஷத்வம் ஆசங்கிக்க முடியாது. அரண்யத்தில் அத்யயனம் செய்தல் என்றதர்மம் இரண்டுக்கும் பொதுவாக இருப்பதைக் கொண்டு வித்யாஸன்னிதியில் இது படிக்கப்பட்டது எனத்திருப்தியையடையவேண்டும். (25) (எ-று)

பதினன்காவது வேதாத்யதிகரணம் முற்றிற்று.



## ஹாந்யதிகரணம் 15.

(அ-கை) "அச்வ இவ ரோமாணி விதூயபாபம் சந்த்ர இவ ராஹோர்முகாத் ப்ரமுச்ய தூத்வா ஶரீரமக்ருதம் க்ருதாத்மா ப்ரம்ஹலோகமபிஸம்பவாமி" குதிரையானது அழுக்குள்ள பழைய உரோமங்களை உதிர்த்து நிர்மலமாக வாவது போல நானும் பாபத்தைப் போக்கித் தெளிந்த சித்தமுள்ளவனைக் கொண்டு ராஹுவின் முகத்தினின்றும் விடுபட்ட சந்திரன்போல சரீரத்தை விடுத்து (அதாவது:—தேஹாபிமானத்தை விடுத்து என்பதாம்.) அகிருதமான=நித்யமான லோகத்தை=ப்ரம்ஹாத்மபாவத்தை ப்ராத்யகாத்மபாவத்தையடையப்போகிறேன் எனத் தாண்டிகளின் ஶ்ருதியிலும்,"யதா நத்யஸ்ஸ்யந்தமாநாஸ்ஸமுத்ரே அஸ்தங்கச்சந்தி நாமரூபே விஹாய ததா வித்வாந்நாமரூபாத் விமுக்த: பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்" பெருகியோடும் நதிகள் பெயர் ரூபம் இவற்றை விடுத்து ஸமுத்திரத்தில் எவ்விதம் மறைகின்றனவோ அவ்விதம் ப்ரம்ஹவித்தானவன் நாமரூபத்தினின்றும் விடுபட்டவனுய் ப்ரகிருதியை விடவேறுபட்டதும் திவ்யமுமான புருஷனையடைகிறுன் என ஆதர்வணிகர்களுடைய ஶ்ருதியும், "தஸ்ய புத்ரா: தாயமுபயந்தி ஸுஹ்ருதஸ்ஸாதுக்ருத்யாம் த்விஷந்த: பாபக்ருத்யாம்" மிருதனன வித்வானுடைய புத்திரர்கள் தனத்தையும், ஸுஹிருத்துக்கள் புண்ணியத்தையும், துவேஷிகள் பாபத்தையு மடைகின்றனர் என சாட்யாயனிகளுடைய ஶ்ருதியும், "தத் ஸுக்ருததுஷ்க்ருதே விதூநுதே தஸ்யப்ரியாக்ஞாதயஸ்ஸுக்ருதமுபயந்த்யப்ரியா துஷ்க்ருதம்" அந்த வித்யாபலத்தினல் புண்ணிய பாபங்களை உதறுகிறுன். ப்ரியர்களான அவனது ஞாதிகள் ஸுகிருதத்தையும், துவேஷிப்பவர் பாபத்தையும்

## १५ हान्यधिकरणम् । सू० २६

## हानौ तूपायनशब्दशेषत्वात्कुशाच्छन्दस्तुत्युपगानवत्तदुक्तम् ॥ २६ ॥

அடைகின்றனர் எனக் கௌஷீதகி ஶ்ருதியும் கூறுகிறது. இந்தச் ஶ்ருதிகளில் சேர்த்து ஸுகிருததுஷ்கிருதங்களுடைய ஹானியும், சிலவற்றில் ஸுகிருதத்தை ப்ரியர்களும், துஷ்கிருதத்தை த்வேஷிகளும் அடைவதாகப் பிரித்து உபதேசமும், சிலவிடத்தில் புண்ணியபாபங்களின் பரித்யாகம் மட்டுமும் காணப்படுகிறது. அவ்விஷயத்தில் வரும் ஸந்தேஹத்தைப் போக்கவேண்டி ஒரே ஸூத்திரங் கொண்ட இந்த அதிகரண மாரம்பிக்கப்படுகிறது.

**(ஸூ) ஹாநௌது உபாயநசப்தசேஷத்வாத் குசாச்சந்தஸ்து த்யுபகானவத் ததுக்தம். (26)**

(ப-ரை) हानौ तु (ஹாநௌ து)=ஸுகிருததுஷ்கிருதங்களுடைய ஹானி மட்டும் சொல்லியவிடத்தில் उपायनञ्च (உபாயநஞ்ச)=பிறர் அதை எடுத்துக் கொள்ளுதலையும் அங்கீகரிக்க வேண்டும். என்? उपायनशब्दशेषत्वात् (உபாயநஶப்தஶேஷத்வாத்)=ஹானம் என்ற சப்தமானது உபாயன சப்தத்தைச் சேஷமாக வுடையதாகக் கௌஷீதகிகள் படித்திருப்பதே அதன் காரணமாகும். * कुशा

*வேறுசாகையிலுள்ளவிசேஷத்தை வேறுசாகையிலும் கிரஹித்துக் கொள்ளவேண்டும் என்றவிஷயத்தில் இந்தத்திருஷ்டாந்தம் சொல்லப்படுகிறது. அவற்றுள் 1-வது திருஷ்டாந்தமாவது: ஸாமவேத கானஞ்செய்யும் உத்காதாக்களுக்கு அவர் செய்யும் ஸ்தோத்திரத்தை எண்ணுவதற்காக உபயோகிக்கப்படும் மரக்கட்டையாலான குச்சிகள் குசைகள் எனப்படும். குசாவாநஸ்பத்யா:ஸ்த தாமாபாத ஹேகுசங்களே! நீங்கள் காட்டிலுள்ள பெரியமரங்களினின்று முண்டாகி இருக்கின்றீர்கள். அத்தகைய நீங்கள் என்னைக் காருங்கள் என யஜமானன் ப்ரார்த்திக்கிறான். இவ்விடத்தில் சுருதியில் குா: என ஸ்திரீலிங்க ப்ரயோகஞ் செய்திருப்பது கொண்டும், ஔதும்பர்ய: என பாஷ்யத்தில் சொல்லியிருப்பதைக் கொண்டும் முற்கூறிய சலாகை (குச்சி) களில் குச என்ற சப்தத்துக்கு ஸ்திரீலிங்கத்தன்மை யேற்படும். தர்ப்பத்தை (நாணலை) ச்சொல்லும் குச என்ற சப்தமோ ஸ்திரீலிங்கமாகவாகாது. குசம் என நபும்ஸகலிங்கமாக அது கோசத்திற் சொல்லப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். ஆகவே ஒரு சாகையில் பொதுவாகக் குசா என்று சொல்லப்படினும் சாட்யாயனிகளுக்கு உதும்பரத்தால் (அத்திக்கட்டையால்) ஆனவைகுசைகளாகும் என பாஷ்யத்திற் சொல்லியிருப்பதைக் கொண்டு குசைகளை ஔதும்பரிகளாகக் கொள்ளுவதைக் காண்கிறோம்.

2-வது உதாஹரணமாவது:—பொதுவாய் சந்தஸ்ஸை தேவச்சந்தஸ்ஸென்றும், அஸுரச் சந்தஸ் என்றும் இரண்டாகப் பிரித்து ஒன்பது எழுத்துள்ள சந்தஸ்ஸுகள் ஆஸுரங்களென்றும், மற்றவை தேவச்சந்தஸ்ஸென்றும் சொல்லப்படும். பொதுவாக 'சந்தஸ்ஸுகளால் ஸ்துதிக்கவேண்டும்' என்று சொல்லியவிடத்தில் முற்கூறிய தேவாஸுர சந்தஸ்ஸுகளுக்கு நியமமின்றி பௌர்வாபர்யம் ப்ராப்தமாகவே தேவச்சந்தாம்ஸி பூர்வாணி தேவச்சந்ஸ்ஸுகள் முன்னர் படிக்கவேண்டியன என்ற சாகாந்தரவாக்கியத்தைக்கொண்டு தேவச்சந்தஸ்ஸுக்கு முன்னர் பாடமறியப்படுகின்றது.

उपायनमनाहार्यं हानायाह्रियतेऽथवा । अश्रुतत्वादनाक्षेपाद्विद्याभेदाच्च नाहृतिः ॥ १ ॥
विद्याभेदे प्यर्थवाद आहार्यः स्तुतिसाम्यतः । हानस्य प्रत्यभिज्ञानादेकविंशादिवादवत् ॥ २ ॥
विधूननं चालनं स्याद्धानं वा चालनं भवेत् । दोधूयन्ते ध्वजाग्राणीत्यादौ चालनदर्शनात् ॥ १ ॥
हानमेव भवेद्वाक्यशेषेऽन्योपायनश्रवात् । कर्ता न ह्यपरित्यक्तमन्यः स्वीकर्तुमर्हति ॥ २ ॥

---

**छन्दः स्तुत्युपगानवत्** (குசா, சந்தஸ், ஸ்துதி, உபகானவத்)=குசை, சந்தஸ், ஸ்துதி, உபகானம் இவைபோலவாம். **तदुक्तम्** (ததுக்தம்)=அவ்விதமே பூர்வமீமாம்ஸை யிலுமுபதேசிக்கப் பட்டிருக்கிறது. (26)

வையாஸிக நியாயமாலே.

(க-ரை) ஶ்ருதியில் எந்தவிடத்தில் ஸுக்ருத துஷ்க்ருதங்களின் ஹாநம் (பரித்யாகம்) மட்டுமே சொல்லப்படுகிறதோ அங்கு உபாயனத்தையும் (பிறர் அதை யெடுத்துக்கொள்ளுதலேயும்) சேர்த்துக்கொள்ளவேண்டாமா? அல்லது ஹாநத் துக்குவேண்டியே எடுத்துக் கொள்ளப்படுகின்றதா? என்பது ஸந்தேஹம். அந்தச் சுருதியில் உபாயநம் சொல்லப்படாததாலும், ஹானத்தினல் உபாயனமானது ஆக்ஷேபமூலம் கிடைக்காத்துபற்றியும், ஸகுணம் நிர்க்குணம் என்ற வித்யாபேத மிருப்பது கொண்டும், அவற்றைப் பிறர் எடுத்துக் கொள்ளுவதில்லே என்பது பூர் வபக்ஷம். வித்யா பேதமிருப்பினும் கூட ஸ்துதியானது பொதுவாக விருப்பதி லிருந்து ஓரிடத்திலுள்ள அர்த்தவாதமானது வேறிடத்திலும் சேர்த்துக் கொள் ளப் படுவதாகக் காணப்படுகிறது. சூரியன் இருபத்தொன்ருவதாக வாகிருன் என்ற அர்த்தவாதத்தில் வேறு அர்த்தவாதமானது சேருவதுபோல ஹாநத்துக்கு ப்ரத்யபிக்ஞை (ஐக்யக்ஞானம்) இருப்பதாலும் ஹாநம்மட்டும் சொல்லியவிடத்தி லும் உபாயநமும் ஏற்படத்தான் செய்யும் என்பது ஸித்தாந்தம். (எ-று)

---

3-வது உதாஹரணமாவது:—அதிராத்ரம் என்ற யாகத்தில் ஷோடசீ என்ற பாத்திரத்தைப்பற்றிய ஸ்தோத்திரத்தைப் படிப்பது எதுபோழ்து? எனச் சந் தோகர்களுக்கு அறிய ஆவலுண்டாகுங்கால் காலவிசேஷநியமம் சில சாகிகளுக்கு இல்லாமல் போகவே "ஸமயாத்யுஷிதே ஸூர்யே" சூரியன் உதயஸமயத்தை யடையுங்கால் அந்த ஸ்தோத்திரத்தைச் செய்தல் வேண்டும் என ருக்வேதத்திற் சொல்லியிருப்பதைக்கொண்டு காலவிசேஷக் கிரஹணம் ஏற்படுவதைக் காண்கி ருேம்.

4-வது உதாஹரணமாவது:—"ருத்விக்குகள் உபகானஞ் செய்கின்றனர்" எனப் பொதுவாக ஶ்ருதி சொல்லியிருப்பதற்கு "நாத்வர்யு ருபகாயதி" அத்வர்யு உபகானஞ் செய்யக்கூடாது என்ற விசேஷ வசனத்தைக்கொண்டு அத்வர்யுவைத் தவிர மீதமுள்ள ருத்விக்குகள் உபகானஞ் செய்பவராவர் எனக் கொள்ளுவதைக் காண்கிருேம். ஆகவே இந்நான்கு உதாஹரணங்களிலும் ஒரு சாகையிற் கூறிய வற்றுக்கு வேறுசாகையிலுள்ள விசேஷத்தைக் கொண்டு நிர்த்தாரணஞ் செய்து கொள்ளுவது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காணவேண்டும் என்றேற்படுகிறது.

अस्ति ताण्डिनां श्रुतिः—'अश्व इव रोमाणि विधूय पापं चन्द्र इव राहोर्मुखात्प्रमुच्य धूत्वा शरीरमकृतं कृतात्मा ब्रह्मलोकमभिसंभवामि' (छा० ८।१३।१) इति। तथाथर्वणिकानाम् 'तथा विद्वान्नामरूपाद्विमुक्तः परात्परं पुरुषमुपैति दिव्यम्' (मुण्ड० ३।२।८) इति। तथा शाट्यायनिनः पठन्ति 'तस्य पुत्रा दायमुपयन्ति सुहृदः साधुकृत्यां द्विषन्तः पापकृत्याम्' इति। तथैव कौषीतकिनः 'तत्सुकृतदुष्कृते विधूनुते तस्य प्रिया ज्ञातयः सुकृतमुपयन्त्यप्रिया दुष्कृतम्' (कौ० १।४) इति। तदिह क्वचित्सुकृतदुष्कृतयोर्हानं श्रूयते क्वचित्तयोरेव विभागेन प्रियैरप्रियैश्चोपायनं क्वचित्तूभयमपि हानमुपायनं च। तद्यत्रोभयं श्रूयते तत्र तावन्न किञ्चिद्वक्तव्यमस्ति। यत्राप्युपायनमेव श्रूयते न हानं तत्राप्यर्थादेव हानं सन्निपतति। अन्यैरात्मीययोः सुकृतदुष्कृतयोरुपेयमानयोरावश्यकत्वा-

---

இரண்டாவது வர்ணகம்.

(க—ரை) "விதூயபாபம்" என்ற விடத்தில் விதூய என்றதால் விதூனனமானது வெரும் சாலனம் (அசைதல்) மட்டுமா? அல்லது ஹானமா (பரித்யாகமா?) என்பது ஸந்தேஹம். விதூநநமானது சாலனமேதான் ஆகும். கொடிமரத்தின் நுனிகள் தோதூயந்தே என்றவிடத்தில் விதூநநமானது சாலனமாக (வெரும் அசைத்தலாக) மட்டும் காணப்படுவதே அதன் காரணமாகும் என்பது பூர்வபக்ஷம். இங்குள்ள விதூநநமானது ஹாநமே (பரித்யாகமே) தானுகும். ஏன்? வாக்கியசேஷத்தில் பிறர் எடுத்துக் கொள்ளுவதாகச் சொல்லியிருப்பதும் கர்த்தாவினுல் விடப்படாததை பிறர் எடுத்துக் கொள்ளமுடியாததாக விருப்பதுமே அதன் காரணமாகும் என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—"(1)அஸ்வ இவ ரோமாணி விதூய பாபம் சந்த்ர இவ ராஹோர்முகாத் ப்ரமுச்ய தூத்வா சரீரம் அகிருதம் கிருதாத்மா ப்ரம்ஹலோக மபிஸம்பவிதாஸ்மி" எனத் தாண்டி ஶ்ருதியும் "(2)ததாவித்வான் நாமரூபாத் விமுக்த: பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்" என ஆதர்வணிகஶ்ருதியும் "(3) தஸ்ய புத்ரா தாயமுபயந்தி ஸுஹிருத: ஸாது கிருத்யாம் த்விஷந்த: பாபகிருத்யாம்" என ஆதர்வணிகஶ்ருதியும், "அப்பொழுது ஸுகிருத துஷ்கிருதங்களை விதூநநஞ் செய்கிறுன். ப்ரியர்களான அவனது க்ஞாதிகள் புண்ணியத்தை யடைகின்றனர். அப்ரியர்கள் துஷ்கிருதத்தை யடைகின்றனர்" எனக் கௌஷீதகி ஶ்ருதியும் கூறுகிறது. ஆகவே இங்கு சிலவிடத்தில் ஸுகிருத துஷ்கிருதங்களுடைய ஹானமும், சிலவிடத்தில் அவற்றுக்கே ப்ரியர்களாலும் அப்ரியர்களாலும் பிரித்து உபாயனமும் (ப்ராப்தியும்) சிலவிடத்தில் ஹானம், உபாயனம் ஆகிய இரண்டும் சொல்லப்படுகிறது. அவற்றுள் எங்கு இரண்டும் சொல்லப்படுகிறதோ அவ்விடத்தில் சொல்லவேண்டியது ஒன்றுமே இல்லை. எந்தவிடத்தில் உபாயனம் மட்டுமே சொல்லப்பட்டு ஹானமானது சொல்லப்படவில்லையோ அவ்விடத்திலும் உபாயனஞ் சொல்லியிருப்பதிலிருந்தே ஹானமும் ஏற்பட்டு விடுகிறது. ஏன்? பிறர் தனது ஸுகிருததுஷ்கிருதங்களை எடுத்துக்கொள்ளுங்கால் அவற்றை இவன்

---

(1) (2) (3) இந்தச் சுருதிகளின் பொருளை அவதாரிகையில் காண்க.

त्स्वादानस्य। यत्र तु हानमेव श्रूयते नोपायनं तत्रोपायनं सन्निपतेद्वा न वेति विचिकित्सायामश्रवणादसन्निपातः। विद्यान्तरगोचरत्वाच्च शाखान्तरीयस्य श्रवणस्य। अपिचात्मकर्तृकं सुकृतदुष्कृतयोर्हानं परकर्तृकं तूपायनं तयोरसत्यावश्यकभावे कथं हानेनोपायनमाक्षिप्येत। तस्मादसन्निपातो हानावुपायनस्येति। अस्यां प्राप्तौ पठति—

हानौ त्विति। हानौ त्वेतस्यां केवलायामपि श्रूयमाणायामुपायनं सन्निपतितुमर्हति। तच्छेषत्वात्। हानशब्दशेषो ह्युपायनशब्दः समधिगतः कौषीतकिरहस्ये। तस्मादन्यत्र केवलहानशब्दश्रवणेऽप्युपायनानुवृत्तिः। यदुक्तमश्रवणाद्विद्यान्तरगोचरत्वादनावश्यकत्वाच्चासन्निपात इति, तदुच्यते। भवेदेषा व्यवस्थोक्तिर्यद्यनुष्ठेयं किञ्चिदन्यत्र श्रुतमन्यत्र नि-

---

அவச்யமாய் விடவேண்டியவனுக ஆகிவிடுவதே அதன் காரணமாகும். எவ்விடத்தில் ஹாநம் மட்டுமே சொல்லப்பட்டு உபாயநம் சொல்லப்படவில்லையோ அங்கு உபாயநமானது (பிறர் அதை எடுத்துக்கொள்ளுதலானது) ஏற்படுமா? அல்லது ஏற்படாதா? என்ற விசாரம் ப்ராப்தமாகுங்கால் ஶ்ருதியில்லாதிருப்பது பற்றி உபாயநத்துக்கு அங்கு ப்ராப்த்தியில்லை என்கிருேம். வேறு சாகையிற் சொல்லிய உபாயநமானது வேறுவித்யையை (ஸகுணநிர்குணப்ரம்ஹவித்யையை) விஷயமாகக் கொண்டிருப்பதே அதன் காரணமாகும். மேலும், ஸுக்ருததுஷ்க்ருதங்களின் ஹானமே உபாஸகனுல் செய்யப்படுகிறது. அவற்றின் உபாயநமோ பிறராற் செய்யப்படுகிறது. அவ்விரண்டுக்கும் ஆவஶ்யகத்தன்மை இல்லாதிருக்கும் பொழுது (ஒருவர் விடுவதை மற்றவர் எடுத்துக் கொள்ளவேண்டுமென்ற அவஶ்யமில்லாத பொழுது) ஹானத்தால் உபாயனமானது எவ்விதமாக்ஷேபிக்க (விரும்பப்)ப்படும். ஆகவே ஹானம் மட்டும் சொல்லியவிடத்தில் உபாயனத்துக்குச் சேர்க்கையில்லை என இவ்விதம் ப்ராப்தமாகவே "ஹாநௌது" என்ற இதைப் படிக்கிருர்.

(ஶ்ருதியில்) தனித்த ஹானம் மட்டும் சொல்லப்படினுங்கூட உபாயனமும் சேர்த்துக்கொள்ளக் கூடியதாகத்தானேற்படுகிறது. அதன சேஷமாக விருப்பதாலென்க. அதாவது:—கௌஷீதகி ரஹஸ்யத்தில் ஹான என்ற சப்தத்தின் சேஷமாக உபாயந சப்தம் அறியப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். ஆனதுபற்றி வேறிடத்தில் ஹான என்ற சப்தம் மட்டும் தனித்துப் படிக்கப்படினுங்கூட உபாயநத்துக்கும் அநுவிருத்தியானது ஏற்படத்தான் செய்யும். ஶ்ருதியில் படிக்கப்படாததாலும், (ஸகுணமும், நிர்க்குணமும் என்ற) வேறு வித்யைகளில் அவ்விஷயம் சொல்லப்பட்டிருப்பதாலும், உபாயநம் அவஶ்யமாகவில்லாதிருப்பதாலும் (ஹாநம் மட்டும் சொல்லியவிடத்தில்) உபாயநத்துக்குச் சேர்க்கையில்லை என யாதொன்று சொல்லப்பட்டதோ, அவ்விஷயத்திற் சொல்லப்படுகிறது. அநுஷ்டேயமாகவுள்ள ஒன்று வேறிடத்தில் படிக்கப்பட்டு அதை வேறிடத்திற் சேர்க்கவிருப்பங்கொள்ளப்படுமாயின் இவ்விதம் வரையறுத்துக் கூறுவது ஏற்படலாம் தான். இவ்விடத்தில் ஹானமோ உபாயநமோ அநுஷ்டேயமாகச் சொல்லப்படவில்லை. இவ்விரண்டையும் சொன்னது வித்யையின் ஸ்துதிக்குவேண்டியேதா

नीयेत। नत्विह हानमुपायनं वानुष्ठेयत्वेन सङ्कीर्त्यते। विद्यास्तुत्यर्थं त्वनयोः सङ्कीर्तनम्। इत्थं महाभागा विद्या यत्सामर्थ्यादस्य विदुषः सुकृतदुष्कृते संसारकारणभूते विधूयेते ते चास्य सुहृद्द्विषत्सु निविशेते इति। स्तुत्यर्थं चास्मिन्सङ्कीर्तने हानानन्तरभावित्वेनोपायनस्य क्वचिच्छ्रुतत्वादन्यत्रापि हानश्रुतावुपायनानुवृत्तिं मन्यते स्तुतिप्रकर्षलाभाय। प्रसिद्धा चार्थवादान्तरापेक्षार्थवादान्तरप्रवृत्तिः—'एकविंशो वा इतोऽसावादित्यः' (छा० २। १०। ५) इत्येवमादिषु। कथं हीहैकविंशतादित्यस्याभिधीयेतानपेक्ष्यमाणेऽर्थवादान्तरे 'द्वादश मासाः पञ्चर्तवस्त्रय इमे लोका असावादित्य एकविंशः' इत्येतस्मिन्। तथा 'त्रिष्टुभौ भवतः सेन्द्रियत्वाय' इत्येवमादिवादेषु 'इन्द्रियं वै त्रिष्टुप्' इत्येवमाद्यर्थवादान्तरापेक्षा दृश्यते। विद्यास्तुत्यर्थत्वाच्चास्योपायनवादस्य कथमन्यदीये सुकृतदुष्कृते अन्यैरुपेयेते इति नातीवाभिनिवेष्टव्यम्। उपायनशब्दशेषत्वादिति तु शब्दशब्दं समुच्चारयन्स्तु-

---

னுகும். அதாவது:—வித்யையானது இவ்விதம் மஹாமஹிமையுள்ளதாகவாகிறது. அதாவது:—எதன் ஸாமர்த்தியத்தினுல் இந்த உபாசகனுடைய ஸம்ஸார காரணங்களான ஸுகிருததுஷ்கிருதங்கள் விலகுகின்றனவோ. அவையும் இந்த உபாஸகனுடைய மித்திரன் சத்துரு இவர்களிடத்தில் ப்ரவேசிக்கின்றனவோ என்ருும். ஸ்துதிக்கு வேண்டி இவ்விதஞ் சொன்னவிடத்தில் ஹாநத்துக்கு (பரித்யாகத்துக்கு) ப்பிறகு ஏற்பட வேண்டுவதாக உபாயநமானது சிலவிடத்திற் சொல்லப்பட்டிருப்பதால் ஹாநம் மட்டும் சொல்லிய வேறிடத்திலுங் கூட ஸ்துதியின் ஆதிக்யம் ஏற்படவேண்டி உபாயநத்தின் அநுவிருத்தியை (தொடர்பை) எண்ணுகிருர். "இந்த ஸூரியன் இங்கிருந்து இருபத்தொன்ருவதாக வாகிருன்" என்ற இம்மாதிரியான விடங்களில் வேறு அர்த்தவாதத்தை யபேக்ஷித்து வேறு அர்த்தவாதப் பிரவிருத்தி யேற்படுவதைக் காண்கிருேம். "மாதங்கள் 12. ருதுக்கள் 5, லோகங்கள் 3. இந்தச் சூரியன் 21வதாக வாகிருன்" என்ற இந்த வேறு அர்த்தவாதமானது அபேக்ஷிக்கப்படாவிடில் ஸூரியனுக்கு இருபத்தொன்ருவதாக விருத்தல் எவ்விதம் சொல்லமுடியும்.

அவ்விதமே "* த்ரிஷ்டுபங்கள் இந்திரியத்துடன் கூடியிருத்தல் ஸித்திக்க வேண்டி கிரஹித்துக்கொள்ளத்தக்கன" என்ற இம்மாதிரியான அர்த்தவாதங்களில் "இந்திரியமேதான் திரிஷ்டுப்" என்ற வேறு அர்த்தவாதத்தின் அபேக்ஷையானது காணப்படுகிறது. வித்யையின் ஸ்துதிக்குவேண்டி இந்த உபாயநார்த்தவாதம் ஏற்பட்டிருப்பதால் பிறருடைய ஸுகிருததுஷ்கிருதங்கள் மற்றவர்களால் எவ்வித மெடுத்துக் கொள்ளப்படும் என அதிகம் † பிடிவாதஞ் செய்யவேண்டிய அவஶ்ய

---

* "த்ரிஷ்டுப்" என்பது ஒரு சந்தஸ்ஸாகும். இது எவ்விதம் இந்திரியங்களாகவாகும் என ஆசங்கைவர "இந்திரியமே தான் த்ரிஷ்டுப்" என்ற யஜுர்வேதத்திலுள்ள அர்த்தவாதமூலம் அவ்வித நிர்ணயமேற்படுவதாகக் காணப்படுகிறது என்ருும்.

† பாஷ்யத்தில் நாதீவாபிநிவேஷ்டவ்யம் என்று கூறியதின் கருத்து பின்வருமாறு. அதாவது:—உபாஸகனை ஸேவித்தல், துவேஷித்தல் இவற்ருல் உபாஸகனிடத்துள்ள புண்ணியபாபங்களுக்கொப்பான புண்ணியபாபங்கள் ஸேவிப்பவர் துவேஷிப்பவர்

त्यर्थमेव हानावुपायनानुवृत्तिं सूचयति। गुणोपसंहारविवक्षायां ह्युपायनार्थस्यैव हानानुवृत्तिं ब्रूयात्। तस्माद्गुणोपसंहारविचारप्रसङ्गेन स्तुत्युपसंहारप्रदर्शनार्थमिदं सूत्रम्। कुशाच्छन्दस्स्तुत्युपगानवदित्युपमोपादानम्। तद्यथा भाल्लविनाम्—'कुशा वानस्पत्याः स्थ ता मा पात' इत्येतस्मिन्निगमे कुशानामविशेषेण वनस्पतियोनित्वेन श्रवणे शाट्यायनिनामौदुम्बराः कुशा इति विशेषवचनादौदुम्बर्यः कुशा आश्रीयन्ते। यथाच क्वचिद्देवासुरच्छन्दसामविशेषेण पौर्वापर्यप्रसङ्गे 'देवच्छन्दांसि पूर्वाणि' इति पैङ्ग्याम्नानात्प्रतीयन्ते। यथाच षोडशिस्तोत्रे कालविशेषप्राप्तौ 'समयाध्युषिते सूर्ये' इत्यार्चश्रुतेः का-

---

மில்லை. "உபாயந ஶப்தஶேஷத்வாத்" என்றவிடத்தில் ஶப்த என்ற சப்தத்தைப் பிரயோகித்த ஸூத்திரக்காரர் ஹாநஞ்சொல்லுமிடத்தில் உபாயநத்தின் அநுவிருத்தி ஸ்துதிக்குவேண்டி சொல்லப்பட்டதென்றே குறிப்பிடுகிறார். ஸூத்திரக்காரர் உபாயநத்தைச் சொல்லவிருப்பங் கொண்டிருப்பாராயின் ஸூத்திரத்தில் உபாயநரூபமான பொருளுக்கே ஹாநிசொல்லுமிடத்தில் அநுவிருத்தியைச் சொல்லியிருப்பார் (அவ்விதமல்லாத ஶப்தத்துக்கு அநுவிருத்தியைச் சொல்லியதிலிருந்து இது ஸ்துதிக்கென்றே என்பது அவர் கருத்தாகத் தெரிகிறது.) ஆகவே குணோபஸம்ஹார விசாரம் செய்யுமிடத்து ஸ்துதிக்கும் உபஸம்ஹாரமுண்டு என்பதைக் காட்டவேண்டியே இந்த ஸூத்திரமேற்பட்டதெனக் கொள்ளவும். குசா, சந்தஸ், ஸ்துதி, உபகாநம், என்ற இவற்றால் உவமை சொல்லப்பட்டதாகவாகிறது. அதாவது:—பால்லவிகளுடைய சாகையில் "ஹேகுசைகளே! நீங்கள் காட்டிலுள்ள பெரிய மரங்களினின்று முண்டானவர்களாக இருக்கின்றீர்கள். அத்தகைய தாங்கள் என்னைக் காருங்கள்" என யாகஞ்செய்பவர் ப்ரார்த்திக்கும் மந்திரத்தில் குசைகள் பொதுவாக பெரிய மரங்களினின்று முண்டானவையாகக் காணப்படுங்கால், சாட்யாயனிகளுடைய சாகையில் "குசங்கள் அத்திக்கட்டையினின்றும் உண்டானவை" என விசேஷவசனமிருப்பது கொண்டு குசைகள் ஔதும்பரிகளாக (அத்திக்கட்டையினின்று முண்டானவைகளாக) ?வ கொள்ளப்படுகின்றன. சிலவிடத்தில் தேவச்சந்தஸ், (1) அஸுரச்சந்தஸ், இவற்றுக்குப் பொதுவாகப் பௌர்வாபர்யமானது (முன்பின்னதாகப் படித்தலானது) ப்ராப்த்தமாகவே "தேவச் சந்தஸ்ஸுகள் முன்னருள்ளன" எனப் பைங்கிரஹஸ்ய ப்ராம்ஹணமூலம் தேவச் சந்தஸ்ஸுகள் முன்னர் படிக்கவேண்டியவைகளாகக் கொள்ளப்படுகின்றன. அதிராத்ரத்தில் ஷோடசி என்ற பாத்திரத்தைப் பற்றிய ஸ்தோத்திரத்தை எப்பொழுது செய்கிறது என (சந்தோகர்களுக்கு) சந்தேஹம் வர '(2)ஸூரியன் உதயஸமயத்திலிருக்குங்கால்" என ருக்வேதிகளின் விசேஷ

---

இவர்கட்குண்டாகின்றன. ஆகவே அவ்விதமுண்டான அவற்றின் பயனை இவர் அநுபவிப்பதால் உபாயநமானது பலித்துவிடுகிறது என்றும்.

(1) ஒன்பது எழுத்துக்கள் கொண்டச் சந்தஸ் அஸுரச் சந்தஸ்ஸென்றும், மற்றவை தேவச் சந்தஸ்ஸென்றும் சொல்லப்படும்.

(2) ஸமயாத்யுஷிதபத்துக்கு ரத்னப்ரபை என்ற வியாக்யனத்தில் உதயத்துக்கு

लविशेषप्रतिपत्तिः । यथैव चाविशेषेणोपगानं केचित्समामनन्ति विशेषेण भाल्लविनः । यथैतेषु कुशादिषु श्रुत्यन्तरगतविशेषान्वय एवं हानावप्युपायनान्वय इत्यर्थः । श्रुत्यन्तर-कृतं हि विशेषं श्रुत्यन्तरेऽनभ्युपगच्छतः सर्वत्रैव विकल्पः स्यात् । स चान्याय्यः सत्यां गतौ । तदुक्तं द्वादशलक्षण्याम्—'अपि तु वाक्यशेषत्वादितरपर्युदासः स्यात्प्रतिषेधे विकल्पः स्यात्' इति ॥

---

ஃருதியைக் கொண்டு காலவிசேஷ ப்ரதிபத்தியேற்படுவதைக் காண்கிறோம். சிலர் "ருத்விக்குகள் உபகானஞ் செய்யவேண்டும்" எனப் பொதுவாகப் படிப்பினும், "அத்வர்யு உபகானம் செய்யக்கூடாது" என விசேஷ ஸ்ருதியிருப்பதைக் கொண்டு அத்வர்யுவைத் தவிர மீதமுள்ள ருத்விக்குகள் உபகானஞ் செய்வதாக உபகானத்தில் கர்த்திருவிசேஷ நிஶ்சயம் செய்யப்படுவதைக் காண்கிறோம். ஆகவே இந்தக் குசாதிகளில் வேறு ஸ்ருதியிலுள்ள விசேஷத்துக்கு அந்வயம் (சேர்க்கை) ஏற்படுவது எவ்விதமோ இவ்விதமே ஹானி சொல்லுமிடத்திலும் உபாயநத்தைச் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்பது அதன் பொருள். வேறு ஸ்ருதியிலுள்ள விசேஷத்தை வேறு ஸ்ருதியில் அங்கீகாரஞ் செய்யாதவர்க்கு எங்கும் விகல்பமே வந்துவிடத்தெரியும். கதியிருக்குங்கால் அவ்வித விகல்பத்தைச் சொல்லுவது அந்யாயமாகவாகும். அது பூர்வமீமாம்ஸையில் "(1)அபிது வாக்ய சேஷத்வாத் இதரபர்யுதாஸ: ஸ்யாத் ப்ரதிஷேதே விகல்ப: ஸ்யாத்" என்றதால் சொல்லப் பட்டிருக்கிறது.

---

அருகிலுள்ள காலம் என்றும், ப்ரம்ஹவித்யாபரணத்தில் அஸ்தமனத்துக்கு அருகிலுள்ள காலம் என்றும் பொருள் எழுதப் பட்டிருக்கிறது.

(1) அக்னிஷ்டோம ப்ரகரணத்தில் "தீக்ஷிதோ நஜுஹோதி" தீக்ஷிதன் ஹோமஞ் செய்தல்கூடாது எனச் சொல்லப்பட்டிருக்கிறது. வேறிடத்தில் "யாவத்ஜீவம் அக்னிஹோத்ரம் ஜுஹுயாத்" உயிருள்ளவரை அக்னிஹோத்ர ஹோமத்தைச் செய்யவேண்டும் என விதியிருக்கிறது. அவ்விடத்தில் 'தீக்ஷிதோ நஜுஹோதி' என்ற வாக்கியமானது ஹோமத்தை நிஷேதஞ் செய்வதாக விருக்குமானல் அப்பொழுது க்ரத்வர்த்தமாகையினல் நிஷேதமாவது அநுஷ்டேயமாகவாகும். 'யாவத்ஜீவ' விதியினல் ஹோமமாவது அநுஷ்டேயமாகவாகும். அது 8வித தோஷமுள்ளதாகையால் நியாயமற்றதாகவாகும். அபிது ஆனலோ, வாக்ய சேஷத்வாத் யாவஜ்ஜீவ வாக்கியத்துக்கு தீக்ஷிதவாக்கியமானது சேஷமாகவாவதால் 'தீக்ஷிதோ நஜுஹோதி' என்றவிடத்திலுள்ள ந என்றதால் இதரபர்யுதாஸ: தீக்ஷிதனைவிட வேறுபட்டவனை லக்ஷண முறையால் போதித்தல் ஸ்யாத் ஏற்படுகிறது. அதாவது:—தீக்ஷிதனகவில்லாதவன் யாவஜ்ஜீவ ஹோமத்தைச் செய்தல் வேண்டும் என்றும். ப்ரதிஷேதே தீக்ஷிதனை மறுத்தாலோ விகல்பஃ விகல்பமானது ஸ்யாத் வரும் என்பது ஜைமினி ஸூத்திரத்தின் பொருள். ஆகவே யாவஜ்ஜீவ வாக்யத்துக்கும் தீக்ஷிதவாக்யத்துக்கும் ஏகவாக்யதை (ஒத்த ஒரேபொருள்) ஸம்பவிக்குங்கால் எட்டுவித தோஷம் வாய்ந்த விகல்பம் சொல்லுவது பொருந்தாது என்பது ஸூத்திரத்தின் கருத்து.

अथवैतास्वेव विधूननश्रुतिष्वेतेन सूत्रेणैतच्चिन्तयितव्यम्। किमनेन विधूननवचनेन सुकृतदुष्कृतयोर्हानमभिधीयते किंवाऽर्थान्तरमिति। तत्र चैवं प्रापयितव्यम्। न हानं विधूननमभिधीयते 'धूञ् कम्पने' इति स्मरणात्। 'दोधूयन्ते ध्वजाग्राणी' इति च वायुना चाल्यमानेषु ध्वजाग्रेषु प्रयोगदर्शनात्। तस्माच्चालनं विधूननमभिधीयते। चालनं तु सुकृतदुष्कृतयोः कञ्चित्कालं फलप्रतिबन्धनादित्येवं प्राप्य प्रतिवक्तव्यम्। हानावेवैष विधूननशब्दो वर्तितुमर्हति। उपायनशब्दशेषत्वात्। नहि परपरिग्रहभूतयोः सुकृतदुष्कृतयोरप्रहीणयोः परैरुपायनं संभवति। यद्यपीदं परकीययोः सुकृतदुष्कृतयोः परैरुपायनं नाञ्जसं संभाव्यते तथापि तत्सङ्कीर्तनात्तावत्तदानुगुण्येन हानमेव विधूननं नामेति निर्णेतुं शक्यते। क्वचिदपि चेदं विधूननसन्निधावुपायनं श्रूयमाणं कुशाछन्दस्तुत्युपगानवद्विधूननश्रुत्या सर्वत्रापेक्षमाणं सार्वत्रिकं निर्णयकारणं संपद्यते। नच चालनं ध्वजाग्रवत्सुकृतदुष्कृ-

---

இரண்டாவது வர்ணகம்.

அல்லது இந்த விதூநந ஶ்ருதிகளிலேயே இந்த ஸூத்திரத்தினல் பின்வருமாறு சிந்திக்கவேண்டும். அதாவது:—விதூநந வசனத்தினல் ஸுகிருத துஷ்கிருதங்களுடைய ஹாநஞ் சொல்லப்படுகிறதா? அல்லது வேறுபொருள் கொள்ளப்படுகிறதா? என்றும். அவ்விஷயத்தில் இவ்விதம் பூர்வபக்ஷம் காணவேண்டும். விதூய என்றதால் ஹாநஞ் சொல்லப் படமாட்டாது. ஏன்? தூஞ் கம்பனே என்ற தாதுவானது கம்பனத்தில் (அசைதலில்) பிரயோகிக்கப்படும் என ஸ்மிருதி இருப்பதால் என்றும். 'கொடியின் நூனிகள் அசைக்கப் படுகின்றன' என்பதாய் வாயுவினல் அசைக்கப்படும் த்வஜத்தின் நுனிகளில் தூஞ் தாது ப்ரயோகஞ் செய்யப்படுவதைக் காண்கிறோம். ஆகவே விதூநநமானது சாலனமெனச் சொல்லப்படுகிறது. ஸுகிருத துஷ்கிருதங்களுடைய சாலனமோவெனில் சில காலம் அதன் பலன் தடைபடுவதால் என்றும் எனப் பூர்வபக்ஷத்தைச் செய்து கொண்டு அதற்குப் பதில் சொல்லவேண்டும். ஹாநியிலேயே இந்த விதூநந சப்தமிருப்பதுதான் பொருந்தக் கூடியதாக விருக்கிறது. ஹாநமானது உபாயந சப்தத்தைச் சேஷமாகக் கொண்டிருப்பதே அதன் காரணமாகும். பிறரெடுத்துக் கொள்ளும் நிலையிலுள்ள ஸுகிருத துஷ்கிருதங்கள் கர்த்தாவினல் விடப்படாத வரை பிறரால் எடுத்துக் கொள்ளக் கூடியதாக எவ்விதமாகமுடியும். பிறருடைய தான ஸுகிருத துஷ்கிருதங்களைப் பிறர் எடுத்துக்கொள்ளுவதென்பது ஒழுங்கான முறையில் பொருத்தமுள்ளதாக வாகமாட்டாது என்பது உண்மைதானயினும் அதை ஶ்ருதி சொல்லியிருப்பதைக்கொண்டு அதற்கு அநுகுணமாக ஹானமேதான் விதூநநமாகும் என நிஶ்சயிக்கக் கூடியதாகவாகிறது. ஓரிடத்தில் விதூநந ஸன்னிதியில் படிக்கப்படினுங்கூட இந்த உபாயநமானது குசை, சந்தஸ், ஸ்துதி, உபகாநம் இவைபோல விதூநந ஶ்ருதியினல் எல்லாவிடத்திலும் அபேக்ஷிக்கப் படுவதாய்க் கொண்டு எல்லாவிடத்துக்குமுரிய நிர்ணயகாரணமாக வாகிவிடுகிறது. ஸுகிருத துஷ்கிருதசாலனமானது துவஜாக்ரத்துக்குப் போல முக்கியமாகவாகா

तयोर्मुख्यं संभवति। अद्रव्यत्वात्। अश्वश्च रोमाणि विधून्वानस्त्यजन्व्रजः सहैव तेन रोमाण्यपि जीर्णानि शातयति 'अश्व इव रोमाणि विधूय पापम्' (छा० ८। १३। १) इति च ब्राह्मणम्। अनेकार्थत्वाभ्युपगमाच्च धातूनां न स्मरणविरोधः। तदुक्तमिति व्याख्यातम्॥ २६॥



## १६ सांपरायाधिकरणम्। सू० २७–२८

## सांपराये तर्तव्याभावात्तथा ह्यन्ये॥ २७॥

कर्मत्यागो मार्गमध्ये यदि वा मरणात्पुरा। उत्तीर्य विरजां त्यागस्तथा कौषीतकिश्रुतेः॥ १॥

कर्मप्राप्यफलाभावान्मध्ये साधनवर्जनात्। ताण्डिश्रुतेः पुरा त्यागो बाध्यः कौषीतकिक्रमः॥ २॥

---

தன்றோ? த்ரவ்யமாக வில்லாதிருப்பதே அதன் காரணமாகும். அஶ்வமும் கூட உரோமங்களை உதறுகின்றதாய்க் கொண்டு புழுதியைக் கழிக்கின்றதாய் அதனுடன் கூடவே பழைய உரோமங்களையும் கழித்துவிடுகிறது. "அஶ்வமானது உரோமங்களைப் போலப் பாபத்தைப் போக்கி" என ப்ராம்ஹண வாக்கியமுமிருக்கிறது. தாதுவுக்கு வெகுபொருள் ஒப்பப் பட்டிருப்பதால் [தூஞ்கம்பனே] என்ற பாணிநிஸ்ம்ருதிக்கு விரோதமுமில்லை. ஸூத்திரத்திலுள்ள ததுக்தம் என்றதற்கு முன்னரே வியாக்கியானஞ் செய்யப்பட்டுவிட்டது. (26) (எ–று)

பதினைந்தாவது ஹாந்யதிகரணம் முற்றிற்று.



### ஸாம்பராயாதிகரணம் 16.

### (ஸூ) ஸாம்பராயே தர்த்தவ்யாபாவாத் ததாஹ்யந்யே (27)

(ப–ரை) सांपराये (ஸாம்பராயே)=மரணத்துக்கு முந்தியே [सुकृतदुष्कृतहानं भवति (ஸுக்ருததுஷ்க்ருதஹாநம் பவதி)=புண்ணிய பாபங்களின் ஹாநமானது ஏற்படுகிறது] ஏன்? तर्तव्याभावात् (தர்த்தவ்யாபாவாத்)=வித்யையுடன் பரலோகஞ் செல்லுபவர்க்கு இடையில் ஸுக்ருததுஷ்க்ருதங்களால் அடையக்கூடியதொன்றுமில்லாதிருப்பதே அதன் காரணமாகும். तथाह्यन्ये (ததஹ்யந்யே)=அவ்விதமே யன்றோ தாண்டிகளும், சாட்யாயனிகளும் படிக்கின்றனர். (27) (எ–று)

#### வையாஸிக நியாயமாலை.

(க–ரை) வித்வானுக்குக் கர்மத்யாகமானது வழியின் நடுவிலா? அல்லது மரணத்துக்கு முன்னரேயா? என்பது ஸந்தேஹம். விரஜா என்ற நதியைத் தாண்டின பிறகே கர்மங்களின் தியாக மேற்படுகிறது. அவ்விதம் கௌஷீதகி ஶ்ருதிசொல்லுவதே அதன் காரணமாகும் என்பது பூர்வபக்ஷம். மரணத்துக்குப் பின்னர் விரஜாநதியைத் தாண்டும்வரை இடையில் கர்மாவினுல் ஏற்படக்கூடிய பலன் ஒன்றுமில்லாததாலும் நடுவில் கர்மத்யாகத்துக்குரிய ஸாதனமில்லாதிருப்பதாலும் அவ்விதமே தாண்டிகளின் ஶ்ருதி கூறுவதாலும் மரணத்துக்கு

देवयानेन पथा पर्यङ्कस्थं ब्रह्माभिप्रस्थितस्य व्यध्वनि सुकृतदुष्कृतयोर्वियोगं कौषीतकिनः पर्यङ्कविद्यायामामनन्ति 'स एतं देवयानं पन्थानमासाद्याग्निलोकमागच्छति' (कौ० १। ३) इत्युपक्रम्य 'स आगच्छति विरजां नदीं तां मनसैवात्येति तत्सुकृतदुष्कृते विधूनुते' (कौ० १। ४) इति। तत्किं यथाश्रुतं व्यध्वन्येव वियोगवचनं प्रतिपत्तव्यमाहोस्विदादावेव देहादपसर्पण इति विचारणायां श्रुतिप्रामाण्याद्यथाश्रुति प्रतिपत्तिप्रसक्तौ पठति—सांपराय इति। सांपराये गमन एव देहादपसर्पण इदं विद्यासामर्थ्यात्सुकृतदुष्कृतहानं भवतीति प्रतिजानीते। हेतुं चाचष्टे तर्तव्याभावादिति। नहि विदुषः संपरेतस्य विद्यया ब्रह्म संप्रेप्सतोऽन्तराले सुकृतदुष्कृताभ्यां किञ्चित्प्राप्तव्यमस्ति यदर्थं कतिचित्क्षणानक्षीणे ते कल्पेयाताम्। विद्याविरुद्धफलत्वात्तु विद्यासामर्थ्येन तयोः क्षयः स च यदैव विद्या फलाभिमुखी तदैव भवितुमर्हति। तस्मात्प्रागेव सन्नयं सुकृतदुष्कृतक्षयः

---

முன்னரேதான் கர்மத்யாகஞ் சொல்லவேண்டும். ஆகவே கௌஷீதகிகள் சொல்லிய கர்மத்யாகக்கிரமமானது பாதிக்கக்கூடியதாகவே தானாகிறது என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—தேவயானமார்க்கத்தினால் பர்யங்கத்திலிருக்கும் ப்ரம்ஹத்தைக் குறித்துக் கிளம்பினவர்க்கு நடுவழியில் ஸுக்ருததுஷ்க்ருதங்களின் ஹானியைக் கௌஷீதகிகள் பர்யங்கவித்யையில் படிக்கின்றனர். அதாவது:—"அந்த உபாஸகன் தேவயானமார்க்கத்தை யடைந்து அக்னிலோகத்தை யடைகிறான்" எனத் தொடங்கி "அவன் விரஜா என்ற நதியை யடைகிறான். அதை மனத்தினாலேயே தாண்டுகிறான். அதனால் ஸுக்ருததுஷ்க்ருதங்களை விதூநநஞ் செய்கிறான் (விடுகிறான்)" என்றும். ஆகவே ஶ்ருதியிற் சொல்லியபடி நடுவழியிலேயே வியோக வசனத்தைப் பொருட்படுத்திக் கொள்ளவேண்டுமா? அல்லது ஆதியிலேயே தேஹத்தினின்றும் நீங்கும் காலத்திலேயா? என விசாரம் வருங்கால் ஶ்ருதி ப்ராமாண்யத்தை யொட்டி ஶ்ருதியிருப்பதற்கேற்பக் கொள்ளவேண்டுவதாக ப்ராப்தமாகவே "ஸாம்பராயே" என்ற இதை ஸூத்திரக்காரர் படிக்கிறார். ஸாம்பராயத்தில்=கமநத்திலேயே அதாவது:—தேஹத்தினின்றும் கிளம்புங்காலத்திலேயே வித்யையின் ஸாமர்த்தியத்தினால் இந்த ஸுக்ருததுஷ்க்ருதங்களின் ஹாநமானது ஏற்படுகிறது என ப்ரதிக்ஞை செய்கிறார். தர்த்தவ்யாபாவாத் என்றதால் ஹேதுவையும் (காரணத்தையும்) சொல்லுகிறார். சரீரத்தை விட்டுக் கிளம்பினவனும் வித்யையினால் ப்ரம்ஹத்தை யடையவிருப்பங்கொண்டவனுமான உபாஸகனுக்கு இடையில் ஸுக்ருததுஷ்க்ருதங்களால் அடையவேண்டுவது ஒன்றுமில்லை யன்றோ. அவ்விதமிருந்தாலன்றோ அந்த ஸுக்ருததுஷ்க்ருதங்கள் அழியாமல் சில க்ஷணங்களிருப்பனவாகக் கல்பிக்கக்கூடும். (கர்மங்கள்) வித்யைக்கு விருத்தமான பலனுள்ளனபற்றி வித்யையின் ஸாமர்த்தியத்தினால் அவற்றுக்கு க்ஷயம் (நாசம்) ஏற்படுகிறது. அந்த நாசமும் வித்யையானது எது போழ்து பலனைக் கொடுக்க வாரம்பஞ்செய்கிறதோ அதுபொழுதே (புண்ணியபாபநிவிருத்தி) ஏற்படுவதுதான் பொருத்தமுள்ளதாகவாகிறது. ஆனதுபற்றி முன்னரே இருக்கும் இந்த ஸுக்ருத

पश्चात्पठ्यते । तथाह्यन्येऽपि शाखिनस्ताण्डिन: शाट्यायनिनश्च प्रागवस्थायामेव सुकृतदुष्कृतहानमामनन्ति 'अश्व इव रोमाणि विधूय पापम्' (छा० ८ । १३ । १) इति, 'तस्य पुत्रा दायमुपयन्ति सुहृद: साधुकृत्यां द्विषन्त: पापकृत्याम्' इति च ॥ २७ ॥

## छन्दत उभयाविरोधात् ॥ २८ ॥

यदि च देहादपसृतस्य देवयानेन पथा प्रस्थितस्यार्धपथे सुकृतक्षयोऽभ्युपगम्येत तत: पतिते देहे यमनियमविद्याभ्यासात्मकस्य सुकृतदुष्कृतक्षयहेतो: पुरुषप्रयत्नस्येच्छातोऽनुष्ठानानुपपत्तेरनुपपत्तिरेव तद्धेतुकस्य सुकृतदुष्कृतक्षयस्य स्यात् । तस्मात्पूर्वमेव साधकावस्थायां छन्दतोऽनुष्ठानं तस्य स्यात्। तत्पूर्वकं च सुकृतदुष्कृतहानमिति द्रष्टव्यम्। एवं निमित्तनैमित्तिकयोरुपपत्तिस्ताण्डिशाट्यायनिश्रुत्योश्च सङ्गतिरिति ॥ २८ ॥

---

துஷ்கிருத க்ஷயமானது பின்னர் படிக்கப்பட்டது. அவ்விதமே யன்றோ வேறு சாகிகளாின தாண்டிகளும், சாட்யாயனிகளும் மரணத்துக்கு முந்திய நிலையிலேயே ஸுகிருததுஷ்கிருதங்களின் ஹானியைப் படிக்கின்றனர். அதாவது:—"அஶ்வமானது உரோமங்களைப் போல பாபத்தை விலக்கி" என்றும் "அவனது புத்திரர்கள் தனத்தை யடைகின்றனர். ஸுஹிருத்துக்கள் நற்காரியத்தை (புண்ணியத்தை)யும், த்வேஷிப்பவர் பாபகாரியத்தையும் அடைகின்றனர்" என்றும் கூறுகின்றனர் என்றும். (27) (எ—று)

## (ஸூ) சந்தத உபயாவிரோதாத் (28)

(ப—ரை) **छन्दत:** (சந்தத:)=தனது இஷ்டப்படி யமநியமவித்யாப்யாஸரூபமானதும் ஸுகிருத துஷ்கிருதங்களை நசிக்கச்செய்கின்றதுமான ஹேதுவுக்கு இவனது ஜீவத்தசையிலேயே ஸம்பவமேற்படக் கூடுமாதலாலும், **उभयाविरोधात्** (உபயாவிரோதாத்)=இவ்விதம் பொருள்கொள்ளுவதில் தாண்டி, சாட்யாயனி ஶ்ருதிகளுக்கும், காரணகாரியங்களுக்கும் விரோதம் வராதிருப்பதாலும் மரணத்துக்கு முன்னரே ஸுகிருததுஷ்கிருதக்ஷயம் சொல்லுவதுதான் பொருந்துகிறது. (28)

பாஷ்யம் —தேஹத்தினின்றும் விலகினவனும் தேவயாந மார்க்கத்தினல் செல்லுகின்றவனுமானவனுக்கு நடுவழியில் ஸுகிருததுஷ்கிருதங்களின் தேய்தலானது அங்கீகரிக்கப்படுமானுல் அதுபோழ்து தேஹமானது விழுந்து விட்டமையின் ஸுகிருத துஷ்கிருதங்களின் தேய்தலுக்கு ஹேதுவானதும், யம, நியம, வித்யாப்யாஸ ரூபமானதுமான புருஷப்பிரயத்தினத்துக்கு தனது இஷ்டப்படி அநுஷ்டானம் ஸம்பவிக்க முடியாமைபற்றி அவற்றைக் காரணமாகக் கொண்ட ஸுகிருததுஷ்கிருதங்களின் தேய்தலுக்கு இடமில்லாமலேபோகத்தெரியும். ஆனதுபற்றி முன்னரே ஸாதகாவஸ்தையில் தனது இஷ்டப்படி அவற்றின் (யமநியம வித்யாப்யாஸாதிகளின்) அநுஷ்டானஞ் சொல்லவேண்டும். அவற்றை முன்னிட்டு ஸுகிருத துஷ்கிருதங்களின் பரித்யாகம் ஏற்படுகிறதெனக் கண்டுகொள்ளவேண்டும். இவ்விதங்கொள்ளுவதால் காரணகாரியங்களுக்குப் பொருத்தமும் தாண்டி சாட்யாயனி ஶ்ருதிகளுக்குப் பொருத்தமும் ஏற்படுகிறது. (28) (எ—று)

## १७ गतेरर्थवत्त्वाधिकरणम् । सू० २९-३०

## गतेरर्थवत्त्वमुभयथाऽन्यथा हि विरोधः ॥ २९ ॥

उपास्तिबोधयोर्मार्गः समो यद्वा व्यवस्थितः । सम एवोत्तरो मार्ग एतयोः कर्महानवत् ॥ १ ॥
देशान्तरफलप्राप्त्यै युक्तो मार्ग उपास्तिषु । आरोग्यवद्बोधफलं तेन मार्गो व्यवस्थितः ॥ २ ॥

क्वचित्पुण्यपापहानसन्निधौ देवयानः पन्थाः श्रूयते क्वचिन्न। तत्र संशयः—किं हानावविशेषेणैव देवयानः पन्थाः सन्निपतेदुत विभागेन क्वचित्सन्निपतेत् क्वचिन्नेति। यथा तावद्धानावविशेषेणैवोपायनानुवृत्तिरुक्तैवं देवयानानुवृत्तिरपि भवितुमर्हतीत्यस्यां प्राप्तावाचक्ष्महे। गतेर्देवयानस्य पथोऽर्थवत्त्वमुभयथा विभागेन भवितुमर्हति क्वचिदर्थवती गतिः

---

## கதேரர்த்தவத்வாதிகரணம் 17.

(ஸூ) கதே: அர்த்தவத்வம் உபயதா அந்யதாஹி விரோத: ()

(ப—ரை) गतेः (கதே:)=தேவயாநமார்க்கத்துக்கு **अर्थवत्त्वम्** (அர்த்தவத்வம்)= பயனுள்ளதன்மையானது **उभयथा** (உபயதா)=இரண்டுவிதமான பிரிவினால் ஏற்படுகிறது. அதாவது:—சிலவிடத்தில் பயனுள்ளதாகவும், சிலவிடத்தில் பயனற்றதாகவும் ஆகிறது என்றும். **अन्यथा** (அந்யதா)=இவ்விதம் இரண்டுவிதமாகப் பிரித்துப் பொருள் கொள்ளாவிடில் **विरोधो हि** (விரோதோ ஹி)=ஶ்ருதி விரோதமன்றோ வந்துவிடும். (29) (எ—று)

### வையாஸிக நியாயமாலே.

(க—ரை) உபாஸனம், ப்ரம்ஹாத்மைக்யக்ஞானம் இரண்டுக்கும் வழி ஸமமானதா? அல்லது வெவ்வேறு? என்பது ஸந்தேஹம். இவ்விரண்டுக்கும் உத்தராயண மார்க்கமானது கர்மங்களின் பரித்யாகமானதுபோல ஸமமானதேயாகும் என்பது பூர்வபக்ஷம். உபாஸ்திகளில் வேறுதேசத்தில் பலனை யடைவதற்கு வேண்டி மார்க்கம் சொல்லுவது பொருந்தலாம். ப்ரம்ஹாத்மைக்யக்ஞானத்தின் பலனோ ஆரோக்யமானது போலவாகிறது. ஆனது பற்றி மார்க்கமானது இரண்டுக்கும் வேறுபட்டதாகவே யாகிறது என்பது **ஸித்தாந்தம்.** (எ—று)

பாஷ்யம்.—சிலவிடத்தில் புண்ணியபாபஹாநஞ் சொல்லுமிடத்து தேவயாந மார்க்கமானது சொல்லப்படுகிறது. சிலவிடத்தில் சொல்லப்படவில்லை. அங்கு ஸம்சயமுண்டாகிறது. அதாவது:—புண்யபாபஹாநி சொல்லுமிடத்திலெல்லாம் பொதுவாகவே தேவயாநமார்க்கத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டுமா? அல்லது சிலவிடத்தில் தேவயாநமார்க்கம் சேரக்கூடும், சிலவிடத்தில் சேருவதில்லை எனப் பிரித்துப் பொருள் கொள்ளவேண்டுமா? என்றும். ஹாநஞ் சொல்லுமிடத்திலெல்லாம் பொதுவாகவே உபாயநத்தின் அநுவிருத்தியானது எவ்விதஞ்சொல்லப்பட்டதோ இவ்விதமே தேவயாநமார்க்கத்தின் அநுவிருத்தியும் வரத்தான்வரும் என ஆசங்கை ப்ராப்த்தமாகவே பதில் சொல்லுகிறோம். கதிக்கு=தேவயாந மார்க்கத்துக்கு, அர்த்தவத்வமானது உபயதா=வெவ்வேறாக வருவதுதான் பொருந்து

क्वचिन्नेति नाविशेषेण। अन्यथा ह्यविशेषेणैवैतस्यां गतावङ्गीक्रियमाणायां विरोधः स्यात्। 'पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति' (मु० ३।१।३) इत्यस्यां श्रुतौ देशान्तरप्रापणी गतिर्विरुध्येत। कथं हि निरञ्जनोऽगन्ता देशान्तरं गच्छेत्। गन्तव्यं च परमं साम्यं न देशान्तरप्राप्त्यायत्तमित्यानर्थक्यमेवात्र गतेर्मन्यामहे॥ २९.॥

## उपपन्नस्तल्लक्षणार्थोपलब्धेर्लोकवत्॥ ३०॥

उपपन्नश्चायमुभयथाभावः क्वचिदर्थवती गतिः क्वचिन्नेति। तल्लक्षणार्थोपलब्धेः। गतिकारणभूतो ह्यर्थः पर्यङ्कविद्यादिषु सगुणेषूपासनेषूपलभ्यते। यत्र हि पर्यङ्कारोहणं पर्यङ्कस्थेन ब्रह्मणा संवदनं विशिष्टगन्धादिप्राप्तिश्चेत्येवमादि बहु देशान्तरप्राप्त्यायत्तं फलं श्रूयते तत्रार्थवती गतिः। नहि सम्यग्दर्शने तल्लक्षणार्थोपलब्धिरस्ति। नह्यात्मैकत्वदर्शि-

---

கிறது. அதாவது:—சிலவிடத்தில் கதியானது (மார்க்கமானது) பயனுள்ளதென்றும், சிலவிடத்தில் பயனற்றதென்றுமே யொழிய இரண்டுக்கும் பொதுவாக வாகாதென்றும். அந்யதா=பொதுவாகவே இந்தக் கதியா (மார்க்கமா)னது அங்கீகரிக்கப்படுமானல் விரோதமானது வந்துவிடுமன்றே. "புண்யபாபங்களைப் போக்கி அஸங்கனுகி பரமஸாம்யத்தை (ப்ரம்ஹத்தை) அடைகிருன்" என்ற இந்த ஶ்ருதியில் தேசாந்தரத்தை யடைவிக்கும் கதியா (மார்க்கமா)னது விரோதப்படும். எத்துடனும் ஸங்கமற்றவனும், கதியற்றவனுமானவன் வேறுதேசத்தை எவ்விதம் அடையக்கூடும். இவன் அடையவேண்டிய பரமமான ஸாம்யமானது (அதாவது ப்ரம்ஹமானது) தேசாந்தரப்ராப்த்தியால் கிடைக்கக் கூடியதன்று. ஆனதுபற்றி இவ்விஷயத்தில் கதியானது பயனற்றதென்றே எண்ணுகிருேம். (29) (எ—று)

## (ஸூ) உபபந்ந: தல்லக்ஷணார்த்தோபலப்தே: லோகவத் (30)

(ப—ரை) கதிக்குச் சொல்லிய இரண்டுவிதமான தன்மையானது அதாவது: ஓரிடத்தில் பயனுள்ளதென்றும், மற்றவிடத்தில் பயனற்றதென்றும் சொன்னதானது **उपपन्नः** (உபபந்ந:)=பொருத்தமுள்ளதேயாகும். ஏன்? **तल्लक्षणार्थोपलब्धेः** (தல்லக்ஷணார்த்தோபலப்தே:)=அத்தகைய கதி காரணமாகக் கிடைக்கக்கூடிய பொருளின் தோற்றமேற்படுவதே அதன் காரணமாகும். **लोकवत्** (லோகவத்)= உலகில் போலவே இங்கும் காணவேண்டும் என்றும். (30) (எ—று)

பாஷ்யம்—கதியானது சிலவிடத்தில் பயனுள்ளதென்றும், சிலவிடத்திற் பயனற்றதென்றுமான இந்த இரண்டுவிதமாகப் பிரித்துப் பொருள் கொள்ளுவதானது பொருந்தக்கூடியதே யாகும். தல்லக்ஷணார்த்தோபலப்தியிருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—கதிக்குக் காரணமாகவான யாதொரு பொருளுண்டோ அது பர்யங்கவித்யை முதலிய ஸகுணமான உபாஸனங்களில் காணப்படுகிறது. எந்தவிடத்திலோவெனில் பர்யங்கத்தில் (கட்டிலில்) ஏறுதல், பர்யங்கத்திலுள்ள ப்ரம்ஹத்துடன் ஸம்வாதம் செய்தல், தனிப்பட்ட நறுமணம் முதலியவற்றின் ப்ராப்த்தி என்ற இதுமுதலான தேசாந்தரப்ராப்த்தியால் கிடைக்கக்கூடிய வெகுபலன் ஶ்ருதியிற் சொல்லப்படுகிறதோ அங்கு கதியானது (மார்க்க

नामाप्तकामानामिहैव दग्धाशेषक्लेशबीजानामारब्धभोगकर्माशयक्षपणव्यतिरेकेणापेक्षितव्यं किञ्चिदस्ति तत्रानर्थिका गतिः । लोकवच्चैष विभागो द्रष्टव्यो यथा लोके ग्रामप्राप्तौ देशान्तरप्रापणः पन्था अपेक्ष्यते नारोग्यप्राप्तावेवमिहापीति । भूयश्चैनं विभागं चतुर्थाध्याये निपुणतरमुपपादयिष्यामः ॥ ३० ॥

## १८ अनियमाधिकरणम् । सू० ३१

## अनियमः सर्वासामविरोधः शब्दानुमानाभ्याम् ॥ ३१ ॥

मार्गः श्रुतस्थलेष्वेव सर्वोपास्तिषु वा भवेत् । श्रुतेष्वेव प्रकरणात् द्विःपाठोऽस्य वृथाऽन्यथा ॥ १ ॥
प्रोक्तो विद्यान्तरे मार्गो ये चेम इति वाक्यतः । तेन बाध्यं प्रकरणं द्विःपाठश्चिन्तनाय हि ॥ २ ॥

---

மானது) பயனுள்ளதாகவாகும். ஸம்யக்தரிசனத்தில் (ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரத்தில்) கதியைக் காரணமாகக்கொண்ட பொருளின் ப்ராப்தியானது இல்லையன்றோ. ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரத்தை யடைந்தவர்களும், ஆனதுபற்றியே ஆப்தகாமர்களும், இப்பிறவியிலேயே கிலேசத்துக்குரிய பீஜங்கள் யாவையும் பொசுக்கினவர்களுமானவர்க்கு ஆரம்பிக்கப்பட்ட போகத்தையுடைய கர்மாசயத்தைக் கழிப்பதைத் தவிர்த்து அபேக்ஷிக்கத்தக்கூடியது ஒன்றுமே இல்லையன்றோ? ஆகவே அங்கு கதியானது பயனற்றதாகவாகிவிடுகிறது. உலகில் போலவே இந்தப் பிரிவைக் காணவேண்டும். அதாவது:—உலகில் கிராமத்தை யடையும் விஷயத்தில் தேசாந்தரத்தை யடைவிக்கும் வழியானது அபேக்ஷிக்கப்படுகிறதேயொழிய ஆரோக்ய ப்ராப்தியில் இல்லை என்பது போலவே இங்கும் காணவேண்டும் என்றும். திரும்பவுமே இந்த விபாகத்தை (பிரிவை) வெகுதெளிவாக நான்காவது அத்தியாயத்தில் சொல்லவும் போகிறோம். (30) (எ—று)

பதினேழாவது கதேரர்த்தவத்வாதிகரணம் முற்றிற்று.



## அநியமாதிகரணம் 18.

**(ஸூ) அநியம: ஸர்வாஸாம் அவிரோத: சப்தாநுமாநாப்யாம் (31)**

(ப—ரை) **सर्वासाम्** (ஸர்வாஸாம்)=எல்லா ஸகுணப்ரம்ஹ வித்யைகளுக்கும் **[अविशेषेण देवयानगतिर्वक्तव्या** (அவிசேஷேண தேவயாநகதிர்வக்தவ்யா)=பொதுவாகவே தேவயாந மார்க்கஞ் சொல்லவேண்டுமேயல்லாது] **अनियमः** (அநியம:)= எங்கு கதி சொல்லப்படுகிறதோ அங்குதான் என்ற நியமமில்லை. இவ்விதஞ்சொல்லுவதில் **अविरोधः** (அவிரோத:)=ப்ரகரண விரோதமும் கிடையாது. என்? **शब्दानुमानाभ्याम्** (ஶப்தாநுமாநாப்யாம்)=ஶ்ருதி ஸ்மிருதிகளிருப்பதே அதன் காரணமாகும். (31) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) மார்க்கமானது ஶ்ருதியிற் சொல்லிய இடங்களில் மட்டுந்தானா?

सगुणासु विद्यासु गतिरर्थवती न निर्गुणायां परमात्मविद्यायामित्युक्तम्। सगुणास्वपि विद्यासु कासुचिद्गतिः श्रूयते यथा पर्यङ्कविद्यायामुपकोसलविद्यायां पञ्चाग्निविद्यायां दहरविद्यायामिति। नान्यासु यथा मधुविद्यायां शाण्डिल्यविद्यायां षोडशकलविद्यायां वैश्वानरविद्यायामिति। तत्र संशयः—किं यास्वेवैषा गतिः श्रूयते तास्वेव नियम्येतोतानियमेन सर्वाभिरेवञ्जातीयकाभिर्विद्याभिरभिसंबध्येतेति। किं तावत्प्राप्तं, नियम इति। यत्रैव श्रूयते तत्रैव भवितुमर्हति। प्रकरणस्य नियामकत्वात्। यद्यन्यत्र श्रूयमाणापि गतिर्विद्यान्तरं गच्छेच्छ्रुत्यादीनां प्रामाण्यं हीयेत सर्वस्य सर्वार्थत्वप्रसङ्गात्। अपिचार्चिरादिकैकैव गतिरुपकोसलविद्यायां पञ्चाग्निविद्यायां च तुल्यवत्पठ्यते तत्सर्वार्थत्वेऽनर्थकं पुनर्वचनं स्यात्। तस्मान्नियम इत्येवं प्राप्ते पठति—अनियम इति। सर्वासामेवाभ्युदयप्राप्ति-

---

அல்லது எல்லா உபாஸ்திகளிலுமா? என்பது ஸந்தேஹம். வித்யா ப்ரகரணத்தைக்கொண்டு ஶ்ருதி சொல்லியவிடங்களில் மட்டுந்தான் மார்க்கம் சொல்லவேண்டும். அவ்விதஞ் சொல்லாவிடில் இந்த மார்க்கத்தை ஶ்ருதியில் இரண்டிடத்தில் படித்தது வீணுகிவிடும் என்பது பூர்வபக்ஷம். "யேசேமேரண்யேஶ்ரத்தாதப இத்யுபாஸதே" என்ற வாக்கியத்தினுல் வேறு வித்யையிலும் மார்க்கமானது சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல் வித்யா ப்ரகரணமானது பாதிக்கப்படுகிறது. இரண்டுதடவை படித்தலானது உபாஸகன் அந்த உபாஸனத்தில் மார்க்கத்தையும் சிந்தனம் செய்யவேண்டும் என்பதற்கு வேண்டியாம் என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—கதியானது ஸகுணவித்யைகளில் பயனுள்ளதேயொழிய நிர்க்குணமான பரமாத்மவித்யையில் பயனுள்ளதன்று எனச்சொல்லப்பட்டது. ஸகுணவித்யைகளான பர்யங்கவித்யை, உபகோஸலவித்யை, பஞ்சாக்னிவித்யை, தஹரவித்யை முதலிய சிலவிடங்களிலுங்கூட கதியானது சொல்லப்பட்டிருக்கிறது. மதுவித்யை, சாண்டில்யவித்யை, ஷோடஶகலவித்யை, வைஶ்வாநரவித்யை என்ற வேறு விடங்களில் (மார்க்கமானது) சொல்லப்படவில்லை. அங்கு ஸம்சயமுதயமாகிறது. அதாவது: இந்தக்கதியானது எந்தவித்யைகளில் மட்டும் சொல்லப்படுகிறதோ அங்குமட்டுந்தான் என நியமனஞ்செய்யப்படுகிறதா? அல்லது பொதுவாகவே இம்மாதிரிகளான எல்லா வித்யைகளுடனுமே ஸம்பந்தப்படுகிறதா? என்றும். முதலில் கிடைப்பதுயாதென்னில்? நியமமாகத்தான் கதி சொல்லவேண்டும் என்றும். எந்த விடத்தில் மட்டும் சொல்லப்படுகிறதோ அந்தவிடத்தில் மட்டுந்தான் ஏற்படுவது பொருந்துகிறது. ப்ரகரணமானது நியாமகமாக (வியவஸ்தையை செய்வதாக) இருப்பதே அதன் காரணமாகும். வேறிடத்தில் படிக்கப்படுங் கதி (மார்க்கம்) கூட வேறு வித்யையுடனும் ஸம்பந்தத்தை யடையுமானுல் அதுபோழ்து ஶ்ருதிலிங்காதிகளுக்கு ப்ராமாண்யமானது இல்லாமல் போகத்தெரியும். அத்துடன் எதுவும் எல்லா ப்ரயோஜனத்துக்கு வேண்டியுமாகும் என வந்துவிடத்தெரியும். மேலும் அர்ச்சிஸ்ஸை ஆதியாகவுடைய ஒரே மார்க்கமே உபகோஸல வித்யையிலும், பஞ்சாக்னி வித்யையிலும் துல்யமாகவே படிக்கப்படுகிறது. எதுவும் எல்லாவற்றுக்குமாகும் என்றுல் (ஒரு கதியையே) இரண்டு தடவைப்படித்தது வீணுக ஆகி

फलानां सगुणानां विद्यानामविशेषेणैषा देवयानाख्या गतिर्भवितुमर्हति। नन्वनियमाभ्युपगमे प्रकरणविरोध उक्तः। नैषोऽस्ति विरोधः। शब्दानुमानाभ्यां श्रुतिस्मृतिभ्यामित्यर्थः। तथाहि श्रुतिः—'तद्य इत्थं विदुः' (छा० ५। १०। १) इति पञ्चाग्निविद्यावतां देवयानं पन्थानमवतारयन्ती 'ये चेमेऽरण्ये श्रद्धातप इत्युपासते' (छा० ५। १०। १) इति विद्यान्तरशीलिनामपि पञ्चाग्निविद्याविद्भिः समानमार्गतां गमयति। कथं पुनरवगम्यते विद्यान्तरशीलिनामियं गतिरिति। ननु श्रद्धातपःपरायणानामेव स्यात्तन्मात्रश्रवणात्। नैष दोषः। नहि केवलाभ्यां श्रद्धातपोभ்यामन्तरेण विद्याबलमेषा गतिर्लभ्यते 'विद्यया तदारोहन्ति यत्र कामाः परागताः। न तत्र दक्षिणा यन्ति नाविद्वांसस्तपस्विनः' इति

---

விடத்தெரியும். ஆகவே நியமந்தான் சொல்லவேண்டும் என இவ்விதம் ப்ராப்த மாகவே அநியம: என (ஸித்தாந்தத்தை)ப் படிக்கிறார்—அப்யுதய ப்ராப்தியை (ப்ரம்ஹலோக ப்ராப்தியை) பலனாகவுடைய ஸகுணங்களான எல்லா வித்யைகளுக்குமே பொதுவிலே தேவயாநமெனப்பெயரிய இந்தக் கதியானது ஏற்படுவதுதான் பொருந்தும்.

சங்கை—அநியமஞ் சொன்னால் ப்ரகரண விரோதம் வருவதாகச் சொல்லப் பட்டதன்றோ எனின்?

உத்தரம்—இந்த விரோதமில்லை. ஏன்? சப்தாநுமானங்கள்=ஶ்ருதி ஸ்மிருதி கள் இருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—"வித்யா ப்ரவிருத்தி உள்ளவர் களுள் எவர் (கிருஹஸ்தர்) இவ்விதம் பஞ்சாக்னிகளை உபாஸ்தி செய்கின்றனரோ" என்றதால் பஞ்சாக்னி உபாஸனஞ் செய்பவர்க்குத் தேவயாநமார்க்கத்தைச் சொல் லுகின்ற ஶ்ருதியானது "யாதொரு இவர் அரண்யத்தில் (உபாஸனத்துக்கு எவ் வித இடையூறுமற்றவிடத்தில்) இருந்துகொண்டு சிரத்தை, தபஸ் இவற்றால் உபல க்ஷணை முறையால் குறிக்கப்பட்ட ப்ரம்ஹத்தை உபாஸிக்கின்றனரோ" என்ப தாய் வேறு உபாஸ்திப் பழக்கமுள்ளவர்க்குங்கூட பஞ்சாக்னி வித்யையுள்ளவர் களுடன் ஸமமான மார்க்கத்தைத் தெரிவிக்கிறது.

சங்கை—வேறு உபாஸ்தி செய்பவர்க்கு இந்த மார்க்கம் என்பது எவ்வித மறியப்படுகிறது. ஶ்ரத்தை தபஸ், இவற்றில் முக்கிய நோக்குடையவர்க்கு மட் டுமேதானிருக்கலாம். அவ்வளவுமட்டும் ஶ்ருதி சொல்லியிருப்பதே அதன் கார ணமாகும் எனின்?

உத்தரம்—இது தோஷமாகாது. வித்யையின் வலுவில்லாமல் தனித்த சிரத் தை தபஸ் இவற்றினால் மட்டும் இந்தக் கதியானது அடையமுடியாதன்றோ. "எவ் விடத்தில் காமங்கள் பராகதங்களோ (கிடையாவோ) அந்த ப்ரம்ஹலோகத்தை வித் யை (உபாஸனை) யினால் அடைகின்றனர். கேவலம் கர்மாநுஷ்டானத்தைமட்டும் செய்பவர் எத்துணை தபஸ்விகளாயினுங்கூட உபாஸனஞ் செய்யாமைபற்றி அவ் விடத்திற் செல்லுவதில்லை." என வேறு ஶ்ருதியிருப்பதே அதன் காரணமா

श्रुत्यन्तरात्। तस्माद्धि श्रद्धातपोभ्यां विद्यान्तरोपलक्षणम्। वाजसनेयिनस्तु पञ्चाग्निविद्याधिकारेऽधीयते—'य एवमेतद्विदुर्ये चामी अरण्ये श्रद्धां सत्यमुपासते' (बृ० ६।२।१५) इति। तत्र श्रद्धालवो ये सत्यं ब्रह्मोपासत इति व्याख्येयम्। सत्यशब्दस्य ब्रह्मण्यसकृत्प्रयुक्तत्वात्। पञ्चाग्निविद्याविदां चेत्थंवित्तयैवोपात्तत्वाद्विद्यान्तरपरायणानामेवैतदुपादानं न्याय्यम्। 'अथ य एतौ पन्थानौ न विदुस्ते कीटाः पतङ्गा यदिदं दन्दशूकम्' (बृ० ६।२।१६) इति च मार्गद्वयभ्रष्टानां कष्टामधोगतिं गमयन्ती श्रुतिर्देवयानपितृयाणयोरेवैनानन्तर्भावयति। तत्रापि विद्याविशेषादेषां देवयानप्रतिपत्तिः। स्मृतिरपि—'शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते। एकया यात्यनावृत्तिमन्ययावर्तते पुनः' (भ. गी. ८।२६) इति। यत्पुनर्देवयानस्य पथो द्विराम्नानमुपकोसलविद्यायां पञ्चाग्निविद्यायां च तदुभयत्राप्यनुचिन்तनार्थम्। तस्मादनियमः॥ ३१॥

---

கும். ஆனதுபற்றி சுருதியிலுள்ள ஶ்ரத்தை தபஸ் இவற்ருல் வேறு வித்யையானது உபலக்ஷணமுறையாற் சொல்லப்படுகிறது. வாஜஸநேயிகளோவெனில் பஞ்சாக்னி வித்யை சொல்லுமிடத்து "எவர் இவ்விதம் இதை உபாஸிக்கின்றனரோ, யாதொரு இவர் அரண்யத்தில் ஶ்ரத்தையையடைந்து ஸத்யத்தை (ப்ரம்ஹத்தை) உபாஸிக்கின்றனரோ" என்று படிக்கின்றனர். அவ்விடத்தில் எவர் ஶ்ரத்தையுள்ளவர்களாய் ஸத்யமான ப்ரம்ஹத்தை யுபாஸிக்கின்றனரோ என வியாக்கியானஞ் செய்து கொள்ளவேண்டும். ஸத்யம் என்ற சப்தமானது அடிக்கடி ப்ரம்ஹத்தினிடத்தில் ப்ரயோகஞ் செய்யப்படுவதுபற்றியே என்க. பஞ்சாக்னி வித்யோபாஸகர்களை "எவர் இவ்விதமுபாஸிக்கின்றனரோ" என்றதாலேயே சொல்லிவிட்டபடியால் வேறு வித்யோபாஸனஞ் செய்பவர்களே ஶ்ரத்தாம் ஸத்யம் உபாஸதே என்றதால் சொல்லப்படுகின்றனர் என்பதுதான் இங்கு நியாயமானதாகவாகிறது. "பின்னர் எவர் இவ்வழிகளை யுபாஸனையிற் சேர்த்துத் தியானிப்பதில்லையோ அவர் கீடங்களாகவும், வெட்டுப் பூச்சிகளாகவும், பாம்பாகவும்" ஜனிக்கின்றனர் என்பதாய் இரண்டு மார்க்கங்களினின்றும் நழுவினவர்களுக்குக்கஷ்டமான அதோகதியை (தாழ்ந்த பிறவியை)ச் சொல்லுகின்ற ஶ்ருதியானது தேவயான பிதிருயானங்களிலேயே இவர்களைச் சேர்த்து உபதேசஞ் செய்திருப்பதாகத் தெரிகிறது. அங்குங்கூட வித்யையின் விசேஷத்தால் இவர்க்கு தேவயாந ப்ராப்தியேற்படுகிறது. ஸ்மிருதியுங்கூட "இந்தச் சுக்ல கிருஷ்ணகதிகள் (அர்ச்சிராதி தூமாதி மார்க்கங்கள்) உலகுக்கு நிலைபெற்றவைகளென எண்ணப்படுகின்றன. அவற்றுள் ஒன்றினால் மறுபடியும் திரும்புதலில்லாதவாறு கார்யமான ப்ரம்ஹத்தையடைகிறான். மற்றென்றினால் மறுபடியும் திரும்புகிறான்" என உபதேசிக்கிறது. உபகோஸல வித்யையிலும், பஞ்சாக்னி வித்யையிலும் தேவயாநமார்க்கமானது இரண்டுதடவை படிக்கப்படுவது யாதுண்டோ அதுவும் இரண்டு வித்யைகளில் இம்மார்க்கத்தையும் உபாஸனையுடன் சேர்த்துத் தியானிப்பதற்குவேண்டியே எனக் கண்டுகொள்ளவேண்டும். ஆகவே நியமமானது கிடையாது. (31) (எ—று)

பதினெட்டாவது அநியமாதிகரணம் முற்றிற்று.

## १९ यावदधिकाराधिकरणम्। सू० ३२

## यावदधिकारमवस्थितिराधिकारिकाणाम् ॥ ३२ ॥

ब्रह्मतत्त्वविदां मुक्तिः पाक्षिकी नियताऽथवा। पाक्षिक्यपान्तरतमःप्रभृतेर्जन्मकीर्तनात् ॥ १ ॥

नानादेहोपभोक्तव्यमीशोपास्तिफलं बुधाः। भुक्त्वाधिकारिपुरुषा मुच्यन्ते नियता ततः ॥ २ ॥

विदुषो वर्तमान देहपातानन्तरं देहान्तरमुत्पद्यते नवेति चिन्त्यते—ननु विद्यायाः साधनभूतायाः संपत्तौ कैवल्यनिर्वृत्तिः स्यान्न वेति नेयं चिन्तोपपद्यते। नहि पाकसाधनसंपत्तावोदनो भवेन्न वेति चिन्ता संभवति। नापि भुञ्जानस्तृप्येन्न वेति चिन्त्यते।

---

### யாவததிகாராதிகரணம் 19.

(அ—கை) நிர்க்குண ப்ரம்ஹ ஸாக்ஷாத்கார விஷயத்தில் கதியானது பயனற்றது. அது முக்திரூப பலனைத் தருவதாகவிருப்பதே அதன் காரணமாகும். ஸகுண ப்ரம்ஹ வித்யைகளிலோவெனில் எல்லாவிடங்களிலும் கதியானது பயனுள்ளதாகவேதானாகும். அவை ப்ரம்ஹலோக ப்ராப்தியைப் பலனாகவுடையதாயிருப்பதே அதன் காரணமாகும் என வியவஸ்தை செய்யப்பட்டது. அது பொருந்தாது. தத்துவக்ஞானிகளுக்குங்கூட இதிஹாஸ புராணாதிகளில் புனர்ஜன்மமானது காணப்படுவதிலிருந்து க்ஞானத்துக்குச் சொல்லிய முக்திரூப பலநியமானது எவ்விதம் பொருந்தும் என ஆக்ஷேபம் ப்ராப்தமாகவே அதற்கு வேண்டி இந்த அதிகரணமானது ஆரம்பிக்கப்படுகிறது—

### (ஸூ) யாவததிகாரம் அவஸ்திதி: ஆதிகாரிகாணாம் (32)

(ப—ரை) आधिकारिकाणाम् (ஆதிகாரிகாணாம்)=லோகஸ்திதிக்கு ஹேதுக்களான வேத ப்ரவர்த்தனம் முதலிய அதிகாரத்தில் ஈஸ்வரனால் ஏவப்பட்ட அபாந்தரதமஸ் முதலிய மஹான்களுக்கு यावदधिकारम् (யாவததிகாரம்)=தமது அதிகார ப்ராப்தமுள்ளவரை अवस्थितिः (அவஸ்திதி:)=அதிகார ப்ராப்த சரீரத்துடனிருத்தல் ஏற்படுகிறது. (32) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ப்ரம்ஹதத்வ ஸாக்ஷாத்காரமுள்ளவர்க்கு முக்தியானது பாக்ஷிகியா? (அதாவது:—ஏதோவொரு ஸமயத்தில் மட்டும் வரக்கூடியதா?) அல்லது நியதமா? (அதாவது:—நித்தியமாகவுள்ளதா?) என்பது ஸந்தேஹம். அபாந்தரதமஸ் முதலியோருக்குப் பிறவி சொல்லியிருப்பதிலிருந்து முக்தியானது பாக்ஷிகியேயாகும் என்பது பூர்வபக்ஷம். ஆதிகாரிகர்களான ஞானிகள் பல தேஹங்களில் அநுபவிக்கவேண்டிய ஈஸ்வரோபாஸ்தி பலனை அநுபவித்துப்பின்னர் முக்தியையடைகின்றனர். ஆனதுபற்றி முக்தியானது நியதமேயாகும் என்பது ஸித்தாந்தம்.

பாஷ்யம்.—க்ஞானிகளுக்கு க்ஞானோதயகாலத்திலுள்ள தேஹம் போனபிறகு வேறு தேஹமுண்டாகிறதா? இல்லையா? என விசாரிக்கப்படுகிறது. அதாவது:—ஸாதனமாகவான வித்யையின் பூர்த்தியேற்பட்டதும் கைவல்ய நிர்விருத்தி (ப்ராப்தி) யானது உண்டாகின்றதா? அல்லது இல்லையா? என்றும்.

उपपन्ना त्वियं चिन्ता, ब्रह्मविदामपि केषाञ्चिदितिहास पुराणयोर्देहान्तरोत्पत्तिदर्शनात्। तथाह्यपान्तरतमा नाम वेदाचार्यः पुराणर्षिर्विष्णुनियोगात्कलिद्वापरयोः सन्धौ कृष्णद्वैपायनः संबभूवेति स्मरन्ति। वसिष्ठश्च ब्रह्मणो मानसः पुत्रः सन्निमिशापादपगतपूर्वदेहः पुनर्ब्रह्मादेशान्मित्रावरुणाभ्यां संबभूवेति। भृग्वादीनामपि ब्रह्मण एव मानसपुत्राणां वारुणे यज्ञे पुनरुत्पत्तिः श्रूयते। सनत्कुमारोऽपि ब्रह्मण एव मानसः पुत्रः स्वयं रुद्राय वरप्रदानात्स्कन्दत्वेन प्रादुर्बभूव। एवमेव दक्षनारदप्रभृतीनां भूयसी देहान्तरोत्पत्तिः कथ्यते तेन तेन निमित्तेन स्मृतौ। श्रुतावपि मन्त्रार्थवादयोः प्रायेणोपलभ्यते। ते च केचित्पतिते पूर्वदेहे देहान्तरमाददते केचित्तु स्थित एव तस्मिन्योगैश्वर्यवशादनेकदेहादानन्यायेन। सर्वे चैते समधिगतसकलवेदार्थाः स्मर्यन्ते तदेतेषां देहान्तरोत्पत्तिदर्शनात्प्राप्तं ब्रह्मविद्यायाः पाक्षिकं मोक्षहेतुत्वमहेतुत्वं वेति। अत उत्तरमुच्यते।

---

சங்கை—இந்த விசாரமானது பொருத்தமானதன்று. ஏன்? பாகத்துக்குரிய ஸாதனத்தின் பூர்த்தி நிகழ்ந்த காலத்து ஓதனம் (அன்னம்) உண்டாகுமா? அல்லது உண்டாகாதா? என்ற விசாரம் ஸம்பவிப்பதில்லையன்றோ, சாப்பிடுகிறவன் திருப்தியை அடைவானா? மாட்டானா? என்று விசாரிக்கப் படுவதில்லையன்றோ? எனின்?

உத்தரம்—இந்த விசாரமானது பொருந்தக் கூடியதேயாகும். ப்ரம்ஹ ஸாக்ஷாத்காரமுள்ளவர்களுக்குங்கூட சிலர்க்கு இதிஹாஸ புராணங்களில் தேஹோத்பத்தி காணப்படுவதே அதன் காரணமாகும். அதாவது:—அபாந்தர தமஸ் என்ற வேதாசாரியரான புராண ருஷியானவர் விஷ்ணுவினுடைய உத்தரவினால் கலியுகம், துவாபரயுகம் இரண்டினுடையவும் ஸந்தியில் கிருஷ்ணத்வைபாயனராக (வேதவியாஸராக) வந்தார் என்றும், வஸிஷ்டரும் ப்ரம்ஹ தேவனது மானஸ புத்திரராக இருந்தும் நிமி சக்கிரவர்த்தியின் ஶாபத்தினால் முந்தின தேஹத்தை இழந்து திரும்பவும் ப்ரம்ஹதேவனுடைய உத்தரவினால் மித்திரா வருணர்கள் மூலம் பிறவியை அடைந்தார் என்றும் ஸ்மிருதிகள் கூறுகின்றன. ப்ரம்ஹ தேவனுக்கே மானஸ புத்திரர்களான பிருகு முதலியவர்களுக்கு வாருணமான யாகத்தில் திரும்பவும் உத்பத்தியானது ஶ்ருதியில் காணப்படுகிறது. ப்ரம்ஹ தேவனுடைய மானஸ புத்திரராகவேயுள்ள ஸநத்குமாரருங்கூட தான் ருத்திரனுக்கு வரன் கொடுத்ததை முன்னிட்டு ஸ்கந்தனாக ப்ராதுர்பாவத்தை யடைந்தார். (அவதரித்தார்) இவ்விதமே தக்ஷர், நாரதர் முதலியோருக்கும் அந்தந்த நிமித்தத்தினால் பலவிதமான தேஹோத்பத்தியானது ஸ்மிருதியில் சொல்லப்படுகிறது. ஶ்ருதியிலும் மந்திரார்த்த வாதங்களில் பெரும்பாலும் காணப்படுகிறது. அவர்களில் சிலர் முன்னுள்ள தேஹம் போனதும் வேறு தேஹத்தை எடுக்கின்றனர். சிலரோ முன்னுள்ள தேஹமிருக்கும்பொழுதே யோகைஶ்வர்ய பலத்தால் அநேக தேஹத்தை எடுக்கும் நியாயத்தையொட்டி வேறு தேஹத்தை எடுக்கின்றனர். இவர்கள் யாவரும் எல்லாவேதார்த்தங்களையும் அறிந்தவர்களென ஸ்மிருதியிற் சொல்லப்படுகின்றனர். ஆகவே இவர்களுக்கு வேறு தேஹத்தினுத்பத்தி காணப்படுவ

न। तेषामपान्तरतमःप्रभृतीनां वेदप्रवर्तनादिषु लोकस्थितिहेतुष्वधिकारेषु नियुक्तानामधिकारतन्त्रत्वास्थितेः। यथासौ भगवान्सविता सहस्रयुगपर्यन्तं जगतोऽधिकारं चरित्वा तदवसान उदयास्तमयवर्जितं कैवल्यमनुभवति 'अथ तत ऊर्ध्व उदेत्य नैवोदेता नास्तमेतैकल एव मध्ये स्थाता' (छा० ३।११।१) इति श्रुतेः। यथाच वर्तमाना ब्रह्मविद आरब्धभोगक्षये कैवल्यमनुभवन्ति। 'तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ संपत्स्ये' (छा० ६।१४।२) इति श्रुतेः। एवमपान्तरतमःप्रभृतयोऽपीश्वराः परमेश्वरेण तेषु तेष्वधिकारेषु नियुक्ताः सन्तः सत्यपि सम्यग्दर्शने कैवल्यहेतावक्षीणकर्माणो यावदधिकारमवतिष्ठन्ते, तदवसाने चापवृज्यन्त इत्यविरुद्धम्। सकृत्प्रवृत्तमेव हि ते फलदानाय कर्माशयमतिवाहयन्तः स्वातन्त्र्येणैव गृहादिव गृहान्तरमन्यमन्यं देहं सञ्चरन्तः स्वाधिकारनिर्वर्तनायापरिमुषितस्मृतय एव देहेन्द्रियप्रकृतिवशित्वान्निर्माय देहान्युगपत्क्रमेण वाधितिष्ठन्ति॥

---

தால் ப்ரம்ஹவித்யைக்குப் பாக்ஷிகமான மோக்ஷ ஹேதுத்வமோ, மோக்ஷஹேதுவாக இல்லாமையோதான் ப்ராப்தமாகிறது எனப் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே (பதில்) ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது. அந்தத் தோஷமில்லை. என்? வேத ப்ரவர்த்தனம் முதலிய லோகஸ்திதி ஹேதுக்களான அதிகாரங்களில் நியுக்தர்களான அபாந்தர தமஸ் முதலிய அவர்களுக்கு அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டிருத்தல் அவஸ்யமாகவிருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—பகவானான இந்த ஸூரியன் ஆயிரம் யுகம் முடியும்வரை ஜகத்தினுடைய அதிகாரத்தை நடத்திக் கொண்டு அதன் முடிவில் உதயாஸ்தமனமில்லாத கைவல்யத்தை அனுபவிக்கிறான். "ப்ராரப்த க்ஷயத்துக்குப் பின்னர் பிறகு விலக்ஷணனாக=கேவல ப்ரம்ஹஸ்வரூபனாக விருந்துகொண்டு ப்ராரப்த தேஹத்தைவிட்ட பின்னர் உதயமாவதுமில்லை, அஸ்தமனமடைவதுமில்லை. ஏகலனாகவே=அத்விதீயனாகவே, உதாஸீனாத்ம ஸ்வரூபத்தில் இருக்கப் போகிறான்" எனச் சுருதியுமிருக்கிறது. இதுபோழ்துள்ள ப்ரம்ஹவித்துக்கள் ப்ராரப்த்த கர்மாநுபவம் முடிந்ததும் கைவல்யத்தை யடைகின்றனர். "அந்த ப்ரம்ஹவித்துக்கு அவ்வளவே (ப்ராரப்த கர்மமுள்ளவரைதான்) விளம்பம். பிறகு=ப்ராரப்தகர்மம் முடிந்ததும் ப்ரம்ஹத்துடன் இரண்டறக் கலக்கிறான்" எனச் சுருதியுமிருக்கிறது என்பது எவ்விதமோ, இவ்விதமே அபாந்தர தமஸ் முதலியோர் அணிமாத்யைஸ்வர்ய முள்ளவராயினுங்கூட பரமேஸ்வரனால் அந்தந்த அதிகாரங்களில் நியுக்தர்களாக விருந்துகொண்டு கைவல்யஹேதுவான ஸம்யக்தரிசனமிருந்தபோதிலுங்கூட கர்மத்தின் குறைவை யடையாதவர்களாய் தமது அதிகாரமுள்ளவரை இருக்கின்றனர். அக்கர்மத்தின் முடிவில் முக்தியை அடைகின்றனர் என்பது விரோதப்படமாட்டாது. அவர்கள் ஒரே தடவை ப்ரவிருத்தித்ததாகவே உள்ள கர்மவாஸனையை அநுபவிக்கின்றவர்களாய் வீட்டினின்றும் வேறுவீட்டைப் போல ஸ்வதந்திரமாகவே வேறு வேறுதேஹத்தில் தனது அதிகாரத்தை நடத்தவேண்டி ஸஞ்சரிக்கின்றவர்களாய் தமது பூர்வக் ஞான நினைவிற்குக் குறைவில்லாதவர்களாகவே தேஹம், இந்திரியம், இவற்றின்

नचैते जातिस्मरा इत्युच्यन्ते 'त एवैते' इति स्मृतिप्रसिद्धेः। यथाहि सुलभा नाम ब्रह्मवादिनी जनकेन विवदितुकामाऽव्युदस्य स्वं देहं जानकं देहमाविश्य व्युद्य तेन पश्चात्स्वमेव देहमाविवेशेति स्मर्यते। यदि ह्युपयुक्ते सकृत्प्रवृत्ते कर्मणि कर्मान्तरारम्भकारणमाविर्भवेत्ततोऽन्यदप्यदग्धबीजं कर्मान्तरं तद्वदेव प्रसज्येतेति ब्रह्मविद्यायाः पाक्षिकं मोक्षहेतुत्वमहेतुत्वं वाशङ्क्येत, नत्वियमाशङ्का युक्ता, ज्ञानात्कर्मबीजदाहस्य श्रुतिस्मृतिप्रसिद्धत्वात्। तथाहि श्रुतिः—'भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः। क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे' (मुण्ड० २। २। ८) इति। 'स्मृतिलम्भे सर्वग्रन्थीनां विप्रमोक्षः' (छा० ७। २६। २) इति चैवमाद्या। स्मृतिरपि—'यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन। ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा' (भ. गी. ४। ३७)

---

ப்ரகிருதி இவற்றைத் தன் வசமாக்கிக்கொண்டு தேஹங்களை ஸிருஷ்டித்துக் கொண்டு ஒரே ஸமயத்திலோ, முறையாகவோ வேறு தேஹத்தை யடைகின்றனர். இவர்கள் * ஜாதி ஸ்மரர் எனச் சொல்லவும் முடியாது. ஏன்? "அவர்களேதான் இவர்கள்" என ஸ்மிருதி ப்ரஸித்தியிருப்பதாலென்க. ஸுலபை என்ற ப்ரம்ஹவாதினியானவள் ஜனகருடன் விவாதிக்க வெண்ணங்கொண்டவளாய் தனது தேஹத்தைவிடாமலே ஜனகருடைய தேஹத்தில் நுழைந்து அவருடன் விவாதஞ்செய்து பிறகு சொந்தமாகவே உள்ள தேஹத்தில் பிரவேசித்தாள் என ஸ்மிருதியிலுபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஒருதடவை ப்ரவிருத்தித்த கர்மமானது உபயுக்தமாகவானதும் வேறு தேஹத்தினது ஆரம்பத்துக்குக் காரணமான வேறு கர்மமானது ஆவிர்பவிக்குமானல் அதற்குப் பிறகு பொசுக்கப்படாத பீஜத்தை (விதையை) யுடைய வேறு கர்மமானது அதுபோலவே ப்ரஸக்தமாகவாகும் என்பதுபற்றி ப்ரம்ஹ வித்யைக்குப் பாக்ஷிகமான மோக்ஷஹேதுத்வமோ, (மோக்ஷ) ஹேதுவாக இல்லாதிருத்தலோ ஆசங்கிக்கப்படும். ஆனலோ இந்த ஆசங்கை பொருத்தமுள்ளதாக வாகமாட்டாது. (ஏன்?) ஞானத்தினின்றும் (ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரத்தினின்றும்) ஸர்வ கர்மத்தினுடையவும் பீஜத்துக்கு நாசமுண்டாவது ஶ்ருதி ஸ்மிருதிகளில் ப்ரஸித்தமாகக் காணப்படுவதே அதன் காரணமென்க. அவ்விதமே பராவரமான அந்த ப்ரம்ஹமானது ஸாக்ஷாத்கரிக்கப்பட்டவுடன் "ஹிருதயத்தினது கிரந்தியானது (மூலாக்ஞானமானது) நாசத்தையடைகிறது. (அதனின்றும்) எல்லா ஸம்சயங்களும் நாசத்தையடைகின்றன. இவனது கர்மங்கள்யாவும் தேய்ந்தும் விடுகின்றன" என்றும், "ஸ்மிருதி ப்ராப்த்தியுண்டானதும் எல்லாவிதக் கிரந்திகளுடையவும் விடுதலேற்படுகிறது" என்ற தாதியுமான சுருதியுமிருக்கிறது. ஸ்மிருதியும் "ஹே அர்ஜுன! நன்கு வளர்க்கப்பட்ட நெருப்பானது விறகுகளை எவ்விதம் சாம்பலக்குகிறதோ அவ்விதமே க்ஞானக்னியானது ஸர்வகர்மங்களையும் சாம்பலாக்குகிறது"

---

* முன்னுள்ள தேஹத்தின் பெயர், அதுவேதானிது என்ற ஐக்யக்ஞானம் இவையற்றவர்களும், ஆனதுபற்றியே கர்ம பரதந்திரர்களும், தேஹாதிகளில் அபிமானத்துடன் கூடினவர்களுமே ஜாதிஸ்மரர் எனப்படுவர்.

'बीजान्यग्न्युपदग्धानि न रोहन्ति यथा पुनः। ज्ञानदग्धैस्तथा क्लेशैर्नात्मा संपद्यते पुनः' इति चैवमाद्या। नचाविद्यादिक्लेशदाहे सति क्लेशबीजस्य कर्माशयस्यैकदेशदाह एकदेशप्ररोहश्चेत्युपपद्यते। नह्यग्निदग्धस्य शालिबीजस्यैकदेशप्ररोहो दृश्यते। प्रवृत्तफलस्य तु कर्माशयस्य मुक्तेषोरिव वेगक्षयान्निवृत्तिः। 'तस्य तावदेव चिरम्' (छा० ६।१४।२) इति शरीरपातावधि क्षेपकरणात्। तस्मादुपपन्ना यावदधिकारमाधिकारिकाणामवस्थितिः॥

नच ज्ञानफलस्यानैकान्तिकता। तथाच श्रुतिरविशेषेणैव सर्वेषां ज्ञानान्मोक्षं दर्शयति 'तद्यो यो देवानां प्रत्यबुध्यत स एव तदभवत्तथर्षीणां तथा मनुष्याणाम्' (बृ० १।४।१०) इति। ज्ञानान्तरेषु चैश्वर्यादिफलेष्वासक्ताः स्युर्महर्षयः। ते पश्चादैश्वर्यक्षयदर्शनेन निर्विण्णाः परमात्मज्ञाने परिनिष्ठाः कैवल्यं प्रापुरित्युपपद्यते। 'ब्रह्मणा सह ते सर्वे संप्राप्ते प्रतिसञ्चरे। परस्यान्ते कृतात्मानः प्रविशन्ति परं पदम्' इति स्मरणात्। प्रत्यक्ष-

---

என்றும், "அக்னியினால் பொசுக்கப்பட்ட விதைகள் திரும்பவும் எவ்விதம் முளைப்பதில்லையோ அவ்விதமே க்ஞானத்தால் பொசுக்கப்பட்ட கிலேசங்களுடன் (அவித்யை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபிநிவேஸம், இவை கிலேசங்களெனப்படும்) திரும்பவும் ஸம்பந்தப்படுவதில்லை." என்றதாதியுமிருக்கிறது. அவித்யாதிகளான கிலேசங்களுக்குத் தாஹப்(நாசம்) ஏற்படுங்கால் கிலேசத்துக்குப் பீஜமான (காரணமான) கர்மாசயத்தினுடைய ஒரு பாகமானது பொசுக்கப்படுவதாகவும், ஒரு பாகமானது முளைக்கின்றதாகவும் சொல்லுவது பொருந்தமாட்டாதன்றோ. அக்னியினால் பொசுக்கப்பட்ட சம்பாநெல்விதையில் ஒருபாகம் முளைப்பதாகக் காணப்படவில்லையன்றோ. பலனைக்கொடுக்கவாரம்பித்த கர்மாசயத்துக்கோவெனில் (வில்லினின்றும்) விடுபட்ட அம்புக்குப்போல வேகக்குறைவால் நிவிருத்தியானது ஏற்பட்டுவிடுகிறது. "ஆத்மக்ஞானிக்கு அதுவரைதான் விளம்பம்" என்றதால் சரீரத்தினுடைய பாதத்தை எல்லையாகக்காட்டி (ப்ராரப்தகர்மத்துக்கு) நாசஞ் சொல்லப்பட்டுமிருக்கிறது. ஆகவே ஆதிகாரிக புருஷர்களுக்கு அதிகாரமுள்ளவரை இருப்புச் சொன்னது பொருத்தமுள்ளதேயாகும். அவ்விதமே ஸ்ருதியும் "ஆன்துபற்றி தேவர்களுக்குள்ளோ, அதுபோலவே ருஷிகளுக்குள்ளோ, அதுபோலவே மனிதர்களுக்குள்ளோ எவனெவன் ப்ரதிபோதத்தை (ப்ரம்ஹக்ஞானத்தை) யடைவானோ அவனே அதுவாக (ப்ரம்ஹமாக) ஆகிறான்" என்றதால் ஸ்ருதியானது பொதுவாகவே எல்லாருக்கும் க்ஞானத்தால் மோக்ஷத்தைத் தெரிவிக்கிறது. மஹருஷிகள் ஐஸ்வர்யாதிகளைப் பலனாகவுடைய வேறு உபாஸனங்களில் ஆஸக்தி(பற்று)உள்ளவர்களாக ஆயினர். அவர்களும் பின்னர் ஐஸ்வர்யாதிகளைக் கண்டதும் வைராக்யத்தையடைந்தவர்களாய்க் கொண்டு பரமாத்மக்ஞானத்தி லீடுபட்டவர்களாய்க் கைவல்யத்தை யடைகின்றனர் என்பதும் பொருத்தமுடையதே யாகின்றது. "அவர்கள் யாவரும் மஹாப்ரளயமானது ப்ராப்தமானதும் ப்ரம்ஹதேவனுடன் கூடவே ஹிரண்யகர்ப்பருடைய அதிகாரத்தின் முடிவில் ஆத்மஸாக்ஷாத்காரத்தை யடைந்தவர்களாய் பரமானபதத்தை (ப்ரம்ஹஸாக்ஷாத்காரத்தை) அடைகின்றனர்." என ஸ்மிருதியு மிருக்கிறது. க்ஞானத்தின்

फलत्वाच्च ज्ञानस्य फलविरहाशङ्कानुपपत्तिः। कर्मफले हि स्वर्गादावनुभवानारूढे स्यादाशङ्का भवेद्वा न वेति। अनुभवारूढं तु ज्ञानफलम् 'यत्साक्षादपरोक्षाद्ब्रह्म' (बृ० ३।४।१) इति श्रुतेः 'तत्त्वमसि' (६।८।७) इति च सिद्धवदुपदेशात्। नहि 'तत्त्वमसि' इत्यस्य वाक्यस्यार्थस्तत्त्वं मृतो भविष्यसीत्येवं परिणेतुं शक्यः। 'तद्धैतत्पश्यन्नृषिर्वामदेवः प्रतिपेदेऽहं मनुरभवं सूर्यश्च' (बृ० १।४।१०) इति च सम्यग्दर्शनकालमेव तत्फलं सर्वात्मत्वं दर्शयति। तस्मादैकान्तिकी विदुषः कैवल्यसिद्धिः॥ ३२॥

## २० अक्षरध्यधिकरणम्। सू० ३३

### अक्षरधियां त्ववरोधः सामान्यतद्भावाभ्यामौपसदवत्तदुक्तम्॥ ३३॥

---

பலன் ப்ரத்யக்ஷமாகையால் பலாபாவசங்கை செய்வது பொருந்தாது. அநுபவத்தில் வராத கர்மபலரூபமான ஸ்வர்க்காதிவிஷயத்திலோ வெனில் அது இருக்குமோ இருக்காதோ என்ற ஆசங்கைவருவது பொருந்தலாம். "எந்த ப்ரம்ஹமானது ஸாக்ஷாத் (எதனாலும் மறைக்கப்படாததாயும்) அபரோக்ஷாத் (அகௌணமாயும்) உள்ளதோ" எனச் சுருதியுமிருக்கிறது. "அதுவாக நீ இருக்கிறாய்" என சித்தவத்தான உபதேசமே இருக்கிறது "அதுவாக நீ இருக்கின்றாய்" என்ற இந்த வாக்யத்துக்குச் செத்த பிறகு நீ அதாகப்போகிறாய் எனப் பொருள் கொள்ளுவது பொருந்ாதன்றோ. "வாமதேவ ருஷியானவர் அந்த இந்த ப்ரம்ஹத்தை ஸாக்ஷாத்கரித்தவராய் நான் மனுவாகவும், ஸூரியனாகவும் ஆயினன்" என்றதாய் ஸம்யக்தரிசன காலத்திலேயே அதன் பலனான ஸர்வாத்மபாவத்தை ஶ்ருதி காண்பித்திருக்கிறது. ஆனதுபற்றி க்ஞானிகளுக்குண்டாகும் கைவல்ய ஸித்தியானது எவ்விதத் தடையுமற்றது என்றேற்பட்டது. (32) (எ-று)

பத்தொன்பதாவது யாவததிகாராதிகரணம் முற்றிற்று.



## அக்ஷராதிகரணம் 20.

### (ஸூ) அக்ஷரதியாந்த்வரோத: ஸாமாந்யதத்பாவாப்யாம் ஔபஸதவத்ததுக்தம் (33)

(ப-ரை) **अक्षरधियाम्** (அக்ஷரதியாம்)=**अक्षर** (அக்ஷர)=அக்ஷரமான ப்ரம்ஹத்தினது **धियाम्** (தியாம்)=புத்தியை=க்ஞானத்தை யுண்டுபண்ணும் "**अस्थूलमनणु**" (அஸ்தூலமநணு)=**यत्तदद्रेश्यमग्राह्यम्** (யத்தத்ரேஶ்யமக்ராஹ்யம்)=என்றாதி த்வைதநிஷேதஞ் செய்யும் சப்தங்களுக்கு **अवरोधः** (அவரோத:)=அக்ஷரத்தை யுபதேசிக்கும் எல்லாவிடங்களிலும் உபஸம்ஹாரமானது செய்து கொள்ளத்தக்கது. என்? **सामान्यतद्भावाभ्याम्** (ஸாமான்யதத்பாவாப்யாம்)=எல்லா ப்ரபஞ்சத்தையும் நிஷேதஞ்செய்யும் வாயிலாக ப்ரம்ஹத்தை யுபதேசித்தலென்பது எல்லாச் சாகைகளிலும் பொதுவாக விருப்பதும், அந்த அக்ஷரப்ராம்ஹமானது எல்

निषधानामसंहारः संहारो वा न संहृतिः। आनन्दादिवदात्मत्वं नैषां सम्भाव्यते यतः ॥ १ ॥
श्रुतानामश्रुतानाञ्च निषधानां समा यतः। आत्मलक्षणता तस्माद्दार्ढ्यायास्तूपसंहृतिः ॥ २ ॥

**वाजसनेयके श्रूयते—'एतद्वै तदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्त्यस्थूलमनण्वह्रस्वमदीर्घमलोहितमस्नेहम्' (बृ० ३। ८। ८) इत्यादि। तथाथर्वणे श्रूयते—'अथ परा यया तद॰**

---

லாச் சாகைகளிலும் ப்ரதிபாத்யமாகவிருப்பதுமே அதன் காரணமாகும். **औपसदवत्** (ஔபஸதவத்)=நான்கு தினங்கள் செய்து முடிக்கவேண்டிய ஜாமதக்ன்ய மென்ற அஹீநத்தில் (யாகத்தில்) **पुरोडाशिन्य उपसदो भवन्ति** (புரோடாசின்ய உபஸதோ பவந்தி) =உபஸத்துக்கள்=இஷ்டிகள் புரோடாசத்தினால் செய்யத்தக்கன வாகவாகின்றன என தைத்திரீயகத்தில் விதிக்கப்பட்ட விடத்தில் அந்த இஷ்டிகள் அத்வர்யுவினால் செய்யவேண்டுவதாக இருப்பதால் அந்த இஷ்டிகளில் ஸாமவேதோத்பன்னங்களான **अग्नेर्वेर्होत्रं वेरध्वरं** (அக்னேர்வேர்ஹோத்ரம் வேரத்வரம்)= என்றதாதி பன்னிரண்டு மந்திரங்களுக்குப் புரோடாசப்ரதானத்தில் விநியோகம் காணப்படினும் அவற்றை அத்வர்யு உச்சாரணஞ் செய்யவேண்டுமே யொழிய ஸாமவேதியான உத்காதா உச்சாரணஞ் செய்தல் கூடாது என்பது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காணவேண்டும். **तदुक्तम्** (ததுக்தம்)=அவ்விஷயம் பூர்வமீமாம்ஸையிலும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது:—அங்கங்கள் வேறு எந்த சாகையில் படிக்கப்படினும் கூட ப்ரதானத்தையொட்டியே அங்கத்தை நயனம் (நிர்ணயம்) செய்யவேண்டுமே யொழிய வேறு சாகையில் படிக்கப்பட்டிருப்பதற்காக அவை ப்ரதானத்துக்கு புறம்பட்டனவாக வொருபொழுதுமாகமாட்டா என்றும். (33) (எ—று)

குறிப்பு—மற்றும் இங்கு சொல்லவேண்டிய விஷயங்களை இந்த ஸூத்திரத்தின் பாஷ்யமொழிபெயர்ப்பின் முடிவில் எழுதியிருப்பதால் அங்கு காண்க.

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ஓரிடத்தில் ஶ்ருதியிற்சொல்லிய த்வைத நிஷேதங்களுக்கு எல்லாவிடங்களிலுமுபஸம்ஹாரமுண்டா? அல்லது இல்லையா? என்பது ஸந்தேஹம். யாதுகாரணம்பற்றி இந்த த்வைதநிஷேதங்களுக்கு ஆநந்தாதிகளுக்குப்போல ஆத்மத்துவமிருப்பதாக எண்ணப்படவில்லையோ அக்காரணம்பற்றி ஓரிடத்திற்சொல்லிய த்வைதநிஷேதங்களுக்கு வேறிடத்திலுபஸம்ஹாரம் கிடையாது என்பது பூர்வபக்ஷம். ஶ்ருதங்களாகவோ அஶ்ருதங்களாகவோ உள்ள த்வைத நிஷேதங்களுக்கு ஆத்மலக்ஷணமாக விருத்தல் ஸமமாக (பொதுவாக) இருப்பதால் ஆத்மஸ்வரூபத்தைப் பற்றிய திருடநிஶ்சய மேற்படுவதற்கு வேண்டி உபஸம்ஹார மேற்படத்தான் செய்கிறது என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—வாஜஸநேயகத்தில் "ஹேகார்க்கி! அதே இந்த அக்ஷரத்தை (ப்ரம்ஹத்தை) ப்ராம்ஹணர்கள் ஸ்தூலமற்றதென்றும், அணுவற்றதென்றும்,

क्षरमधिगम्यते यत्तदद्रेश्यमग्राह्यमगोत्रमवर्णम्' (मु० १।१।५) इत्यादि। तथैवान्यत्रापि विशेषनिराकरणद्वारेणाक्षरं परं ब्रह्म श्राव्यते। तत्र च क्वचित्केचिदतिरिक्ता विशेषाः प्रतिषिध्यन्ते। तासां विशेषप्रतिषेधबुद्धीनां किं सर्वासां सर्वत्र प्राप्तिरुत व्यवस्थेति संशये श्रुतिविभागाद्व्यवस्थाप्राप्तावुच्यते—अक्षरविषयास्तु विशेषप्रतिषेधबुद्धयः सर्वाः सर्वत्रावरोद्धव्याः सामान्यतद्भावाभ्याम्—समानो हि सर्वत्र विशेषनिराकरणरूपो ब्रह्मप्रतिपादनप्रकारः। तदेव च सर्वत्र प्रतिपाद्यं ब्रह्माभिन्नं प्रत्यभिज्ञायते। तत्र किमित्यन्यत्र कृता बुद्धयोऽन्यत्र न स्युः। तथाच 'आनन्दादयः प्रधानस्य' (ब्र० सू० ३।३।११) इत्यत्र व्याख्यातम्। तत्र विधिरूपाणि विशेषणानि चिन्तितानीह प्रतिषेधरूपाणीति विशेषः। प्रपञ्चार्थश्चायं चिन्ताभेदः। औपसदवदिति निदर्शनम्। यथा जामदग्न्येऽहीने पुरोडाशि-

---

ஹ்ரஸ்வமற்றதென்றும், தீர்க்கமற்றதென்றும், ரக்தமற்றதென்றும், ஸ்னேஹமற்றதென்றும் சொல்லுகின்றனர்" என்றதாதி படிக்கப்படுகிறது. அவ்விதமே ஆதர்வண (முண்டகோபநிடத)த்தில் "அத்ரேஶ்யமும், அக்ராஹ்யமும், அகோத்ரமும், அவர்ணமும் எதுவோ அந்த அக்ஷரம் (ப்ரம்ஹம்) எதனால் அறியப்படுமோ அந்தப் பரவித்யை பின்னருபதேசிக்கப் படுகிறது" எனப் படிக்கப்படுகிறது. அவ்விதமே வேறிடத்திலுங்கூட விசேஷத்தை (த்வைதப்ரபஞ்சத்தை) மறுக்கும் வாயிலாக பரம்ப்ரம்ஹமானது உபதேசிக்கப்படுகிறது. அவ்விடங்களுள் சிலவிடத்தில் அதிகமான சில விசேஷங்கள் (த்வைதப்ரபஞ்சங்கள்) மறுக்கப்படுகின்றன. விசேஷத்தை மறுக்கும் அந்த எல்லாப்புத்திகளுக்கும் எல்லாவிடத்திலும் ப்ராப்தி உண்டா? அல்லது அந்தந்தவிடத்திலுள்ளதை அந்தந்தவிடத்தில் தான் கொள்ள வேண்டும் என்ற வியவஸ்தை சொல்லப்படுகிறதா? என ஸந்தேஹமுதயமாகவே ஶ்ருதி வெவ்வேறாகவிருப்பதிலிருந்து வியவஸ்தைதான் சொல்லவேண்டும் என ப்ராப்தமாகவே சொல்லப்படுகிறது. அக்ஷர விஷயங்களான விசேஷப்ரதிஷேத புத்திகள் யாவும் எல்லாவிடங்களிலும் சேர்த்துக்கொள்ளக் கூடியனவேயாகும் ஸாமான்யதத்பாவமிருப்பதே அதன் காரணமாகும். எல்லாவிடங்களிலும் விசேஷத்தை மறுத்தல் ரூபமான ப்ரம்ஹோபதேச முறையானது ஸமானமாகவன்றோ இருக்கிறது. ப்ரதிபாத்யமான அந்த ப்ரம்ஹமும் எல்லாவிடங்களிலும் அபின்னமாகவே (ஒன்றாகவே) காணவும்படுகிறது. அவ்விதமிருக்க வேறிடத்திற் செய்யப்பட்ட புத்திகள் வேறிடத்தில் ஏன் வரமாட்டா. அவ்விதமே "ஆநந்தாதய: ப்ரதாநஸ்ய" (ப்ர. ஸூ. 3, 3, 11) என்றவிடத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் விதிரூபங்களான விசேஷணங்கள் சிந்திக்கப்பட்டன. இவ்விடத்தில் ப்ரதிஷேதரூபங்களான விசேஷணங்கள் சிந்திக்கப்பட்டன என விசேஷமிருக்கிறது. விரிவுக்குவேண்டி இந்தச் சிந்தாபேதமேற்பட்டது. "ஔபஸதவத்" என்பது திருஷ்டாந்தமாகும். அதாவது:—*ஜாமதக்ன்யமான (ஜமதக்னி மஹருஷி

---

* "ஜமதக்நி: புஷ்டிகாமச்சதூராத்ரேணயஜத" தேஹபுஷ்டியில் விருப்பங்கொண்ட ஜமதக்னி என்ற மஹருஷியானவர் நான்குதினங்களிற் செய்துமுடிக்கக்கூடிய அஹீனம் என்ற யாகத்தைச் செய்தார் என்று தொடங்கி சுருதியில் விதிக்கப்பட்டதும்,

नीषूपसत्सु चोदितासु पुरोडाशप्रदानमन्त्राणाम् 'अग्नेर्वैहोत्रं वेरध्वरम्' इत्येवमादीनामुद्गातृवेदोत्पन्नानामप्यध्वर्युभिरभिसंबन्धो भवति। अध्वर्युकर्तृकत्वात्पुरोडाशप्रदानस्य प्रधानतन्त्रत्वाच्चाङ्गानाम्। एवमिहाप्यक्षरतन्त्रत्वात्तद्विशेषणानां यत्र क्वचिदप्युत्पन्नानामक्षरेण सर्वत्राभिसंबन्ध इत्यर्थः। तदुक्तं प्रथमे काण्डे—'गुणमुख्यव्यतिक्रमे तदर्थत्वान्मुख्येन वेदसंयोगः' (जै० सू० ३।३।८) इत्यत्र ॥ ३३ ॥

---

யாற் செய்யப்பட்ட) † அஹீநத்தில் (நான்குதினங்களில் செய்துமுடிக்கக்கூடிய யாகத்தில்) விதிக்கப்பட்ட புரோடாசினிகளான=புரோடாச ஸாத்யங்களான, உபஸத்துக்களில்=இஷ்டிகளில் "அக்னேர்வேர்ஹோத்ரம் வேரத்வரம்" என்ற தாதிகளான ஸாமவேதோத்பன்ன மந்திரங்களுக்குக்கூட அத்வர்யுக்களுடன் ஸம்பந்தமானது (அத்வர்யுவினுல் உச்சரிக்கப்படுதலானது) காணப்படுகிறது. புரோடாச ப்ரதானமானது அத்வர்யுவினுல் (யஜுர்வேதியானருத்விக்கினுல்) செய்யக்கூடியதாக விருப்பதும், அங்கமானது ப்ரதானத்துக்கு அடங்கினதாக இருப்பதுமே அதன் காரணமாகும் என்பது எவ்விதமோ, இவ்விதமே இங்கும் (த்வைதநிஷேத ரூபமான) விசேஷணங்கள் (ப்ரதானமான) அக்ஷர(ப்ரம்ஹ)த்தை யொட்டியதாக விருப்பதால் யாதானுமொருவிடத்தில் படிக்கப்படினுங்கூட அக்ஷர (ப்ரம்ஹ) த்துடன் எல்லாவிடங்களிலும் ஸம்பந்தத்தை யடையத்தான் செய்யும் என்பது அதன் பொருள். அதுவிஷயம் முதல் காண்டத்தில் (பூர்வமீமாம்ஸையில்) "(1) குண

---

ஜமதக்னியினுல் செய்யப்பட்டதும், நான்கு தினங்கள் செய்யவேண்டுவதுமான யாகம் "ஜாமதக்ன்ய அஹீனம்" எனப்படும். அந்த யாகத்தில் "புரோடாசிந்ய: உபஸதோபவந்தி" உபஸத:–இஷ்டிகள் புரோடாசின்ய:–புரோடாச ஸாத்தியங்களாக பவந்தி–ஆகின்றன என இஷ்டிகள் தைத்திரீயக சாகையில் விதிக்கப்பட்டிருக்கின்றன. அந்த இஷ்டிகளில் "அக்நேர்வேர்ஹோத்ரம் வேரத்வரம்" வே:-தேவகணத்தினுடைய ஹோத்ரம்-ஹோத்ரமென்றகர்மாவும், வே:-தேவகணத்தினுடைய அத்வரம்-அத்வரமென்ற கர்மாவும் அக்நே:-அக்னியான உன்னிடமிருந்தே யேற்படுகிறது என்ற இந்த ஸாமவேதோக்பன்னமான புரோடாசப்ரதான மந்திரத்துக்கு அத்வர்யுவுடன் ஸம்பந்தமானது சொல்லப் படுகிறது. புரோடாச ப்ரதானமானது அத்வர்யுவினுல் செய்யக்கூடியதாகவிருப்பதே அதன் காரணமாகும்.

† பொதுவாய் அஹீநம் என்பது ஒருயாகத்தைச் சொல்லும். ஆனுல் அது ஏகதின ஸாத்ய அஹீநமென்றும், இரண்டுதின ஸாத்ய அஹீநமென்றும், மூன்றுதின ஸாத்ய அஹீநமென்றும், நான்குதின ஸாத்தியம், ஐந்துதின ஸாத்யம், ஆறுதின ஸாத்தியம், ஏழுதின ஸாத்யம், எட்டுதின ஸாத்தியம், ஒன்பதுதின ஸாத்தியம், பத்துதின ஸாத்யம், பதினேருதின ஸாத்யம், பன்னிரண்டுதின ஸாத்தியாம் எனப் பன்னிரண்டுவிதங்களாகப் பூர்வமீமாம்ஸையில் சொல்லப் பட்டிருக்கிறது. அதற்கு மேல்பட்ட தினங்களில் ஸாத்தியமாயுள்ளயாகம் ஸத்ரம் என்றும், 12தினங்களில் ஸாத்தியமாயுள்ள யாகம் ஸத்திரமென்றும், அஹீநமென்றும் சொல்லப்படுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

(1) "அக்நேர்வேர்ஹோத்ரம் வேரத்வரம் ஆவிதூரம் வைச்வாநரம் அவஸ்கேரிநீத்ராயதேவேப்யோ ஜுஷதாம் ஹவி:ஸ்வாஹா" என்றதாதிகளான 12மந்திரங்கள்

## २१ इयदधिकरणम् । सू० ३४

முக்யவ்யதிக்ரமேததர்த்தத்வாந் முக்யேந வேதஸம்யோக:" என்றவிடத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. (33) (எ—று)

இருபதாவது அக்ஷராதிகரணம் முற்றிற்று.

## இயததிகரணம் 21.

(அ-கை) முந்தின அதிகரணத்தில் ப்ரதானமான அக்ஷரம் (ப்ரம்ஹம்) எங்கும் ஒன்ருக விருப்பதால் அதைப்பற்றின விசேஷங்கள் வெவ்வேறு இடங்களில் படிக்கப்படினுங்கூட அவற்றை ப்ரதானமான அக்ஷரத்தைக்கூறும் எல்லாவிடங்களிலும் உபஸம்ஹாரஞ் செய்துகொள்ளல் வேண்டும் என நிர்ணயிக்கப்பட்டது. "த்வா ஸுபர்ண ஸயுஜா ஸகாயா" என்றவிடத்திலும், "ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே குஹாம் ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்யே" என்றவிடத்திலும், ப்ரதிபாத்யமானது ஒன்ருகக் காணப்படவில்லை. இரண்டாவது மந்திரத்தில் இரண்டுக்குப் பாதிருத்வமும் (பானஞ்செய்பவனுகவிருக்கும் தன்மையும்) ஆதியில்

ஸாமவேதத்தில் படிக்கப்பட்டிருக்கின்றன. அந்தமந்திரங்கள் உபஸத்துக்கு—இஷ்டிக்கு, அங்கமாகவான புரோடாசத்துடன் ஸம்பந்தமுள்ளனவாக இருப்பனபற்றி அவை ஸூத்திரத்திலுள்ள ஔபஸத என்ற பதத்திஞற் சொல்லப்படுகின்றன. ஆகவே இப்பன்னிரண்டுமந்திரங்கள் விஷயமாகவரும் ஸந்தேஹத்தைப் பின்வரும் ஸூத்திரம் விளக்கும் முறை பின்வருமாறு—அதாவது: அம்மந்திரங்கள் உத்காதாவினது வேதமான ஸாமவேதத்தில் படிக்கப்படுவதால் அவற்றை உத்காதாவானவன் உச்சரிக்கலாம் என்றும், யஜுர்வேதத்தில் விதிக்கப்பட்ட உபஸத்துக்கு (இஷ்டிக்கு) அங்கமாகவாவதால் ப்ரதானத்தையொட்டி யஜுர்வேதியான அத்வர்யு உச்சரிக்கலாம் என்றும் ஏற்படுகிறது. ஏன்? ஔத்காத்ரமானது ஸாமவேதோத்பன்னமென்றும், ஆத்வர்யவமானது யஜுர்வேதோத்பன்னமென்றும் வியவஸ்தை ஏற்பட்டிருப்பதே அதன் காரணமாகும். மந்திரங்களின் உத்பத்தியானது கர்மாவுக்கு முந்தியேற்பட்டதாயிருப்பதால் ஸாமவேதோத்பன்னங்களான இந்தப் பன்னிரண்டுமந்திரங்களேயும் உத்காதாதான் படிக்கவேண்டும் எனப் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே ஸூத்திரத்தாற் பின்வருமாறு ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது—குணமுக்யவ்யதிக்ரமே குணங்களாகவான முற்கூறிய 12மந்திரங்களுக்கும், முக்கியங்களான உபஸத்துக்களுக்கும் தர்மவிரோதம் ப்ராப்தமாகவே ததர்த்தத்வாத் ப்ரதானத்துக்கு வேண்டி குணங்கள் ஏற்பட்டனபற்றி முக்யேந ப்ரதானத்துடன் வேதஸம்யோக: வேதத்தின்சேர்க்கை யேற்படுகிறது. அதாவது:—ப்ரதாநத்துக்குரிய வேதத்தின் ஸம்பந்தமுள்ள கர்த்தா எவனே அவனேதான் இம்மந்திரோச்சாரணத்திலும் கர்த்தாவாகவ்வான் என்ரும். மந்திரங்களின் உத்பத்தி முதலிலேற்படுவது உண்மைதானுயினும் அவ்வுத்பத்தியானது ப்ரயோகவிதிக்கு அங்கமாகவாவதாலும், ப்ரயோகமானது யஜுர்வேதத்திலேயே செய்யப்பட்டிருப்பதாலும் யஜுர்வேதியான அத்வர்யுவேதான் மந்திரோச்சாரணத்தில் கர்த்தாவாகவாகிருன் என்பது ஸித்தாந்தியின்கருத்து. என ப்ரம்ஹவித்யாபரண வியாக்யானத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

## इयदामननात् ॥ ३४ ॥

पिबन्तौ द्वासुपर्णेति द्वे विद्ये अथवैकता । भोक्तारौ भोक्त्रभोक्ताराविति विद्ये उभे इमे ॥ १ ॥
पिबन्तौ भोक्त्रभोक्ताराविल्युक्तं हि समन्वये । इयत्ता प्रत्यभिज्ञानाद्विद्यैका मन्त्रयोर्द्वयोः ॥ २ ॥

**'द्वा सुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते । तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्न्यो अभिचाकशीति' (मु० ३ । १ । १) इत्यध्यात्माधिकारे मन्त्रमाथर्वणिकाः**

---

ஒன்றுக்கு அநசிதிருத்வமும்(அசனமற்றிருக்கும் தன்மையும்)சொன்னதிலிருந்து பேதம்(வேற்றுமை)காணப்படுகிறது. ஆகவே இரண்டு வித்யைகளுக்கும் ஐக்கியமானது ஸம்பவிக்காது எனப் பூர்வபக்ஷம். ப்ராப்த்தமாகவே அதை ஸித்தாந்தப்படுத்தவேண்டி ஒரே ஸூத்திரங்கொண்ட இந்த அதிகரணமாரம்பிக்கப் படுகிறது—

### (ஸூ) இயதாமனனுத் (34)

(ப-ரை) **इयदामननात्** (இயதாமனனுத்)=வித்யையின் உத்பத்தி ஸமயத்திலேயே இரண்டுமந்திரங்களிலும் "**द्वौ** (த்வௌ)=என்றும் "**पिबन्तौ** (பிபந்தௌ)= என்றுமாக த்வித்வரூபமான இயத்தையானது=இரண்டாக இருத்தலானது சொலப் பட்டிருப்பதால் அதன் மூலம் அறியப்பட்ட வித்யைக்யத்தை யொட்டி பிறவற்றை மாற்ற வேண்டுவது அவஸ்யமாகவாவதால் இங்கு வித்யைக்யம் கொள்ளுவது தான் பொருந்தும். (34) (எ-று)

வையாஸிக நியாயமாலை.

(க-ரை) "ருதம் பிபந்தௌ" என்றும் "த்வா ஸுபர்ணு" என்றும் சொல்லப்படுவது இரண்டு வித்யைகளா? அல்லது இரண்டும் ஒரேவித்யைதானு? என்பது ஸந்தேஹம். ஓரிடத்தில் இரண்டு போக்தாக்களென்றும், மற்றோரிடத்தில் ஒன்று போக்தா மற்றொன்று அபோக்தா வென்றும் காணப்படுவதால் இவ்விரண்டும் வெவ்வேறுவித்தைகளாகும் என்பது பூர்வபக்ஷம். முதலாவது ஸமன்வயாத்தியாயத்தில் போக்தா அபோக்தாஇரண்டுமே ஸுகிருதபலபோக்தாக்கள் எனச் சொல்லப்பட்டது. இரண்டிடத்திலும் த்வித்வரூப இயத்தையானது ஐக்யக்ஞானமுறையால் அறியப்படுவதால் இருமந்திரங்களிலும் வித்யையொன்றே சொல்லப்படுகிறது. என்பது ஸித்தாந்தம். (எ-று)

பாஷ்யம்.—ஆதர்வணிகர்களும், ஸ்வேதாஸ்வதரர்களும் ஆத்மாவைப்பற்றிச் சொல்லுமிடத்து "த்வா ஸுபர்ணு ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே, தயோ ரந்ய:பிப்பலம் ஸ்வாத்வத்தி அநஸ்நந் அந்யோ அபிசாகசீதி" (ஒன்றுடனென்று சேர்ந்தவைகளும், ஒன்றுக் கொன்று ஸகாக்களுமான இரண்டு கருடபக்ஷிகள் (ஜீவபரமாத்மாக்கள்) ஸமானமான விருக்ஷத்தை (தேஹத்தை)தழுவிக் கொண்டிருக்கின்றன. அவ்விரண்டனு ளொன்று கர்மபலனை ருசிபார்த்து அனுபவிக்கிறது. மற்றது கர்மபலனை அனுபவிக்காது ஸாக்ஷியாகப்பார்த்துக் கொண்டிருக்கிறது எனப் படிக்கின்றனர். அவ்விதமே கடர்கள் "கர்மபலனை அனுபவிப்பவர்களும், ஸுகிருதத்தின் பலபூதமான சரீரத்தில் ப்ரப்ஹத்தினது ஸ்தானங்

श्वेताश्वतराश्च पठन्ति । तथा कठाः 'ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ परमे परार्धे । छायातपौ ब्रह्मविदो वदन्ति पञ्चाग्नयो ये च त्रिणाचिकेताः' (क० ३ । १) इति। किमत्र विद्यैकत्वमुत विद्यानानात्वमिति संशयः । किं तावत्प्राप्तं, विद्यानानात्वमिति । कुतः । विशेषदर्शनात् । द्वा सुपर्णेत्यत्र ह्येकस्य भोक्तृत्वं दृश्यते एकस्य चाभोक्तृत्वं दृश्यते । ऋतं पिबन्तावित्यत्रोभयोरपि भोक्तृत्वमेव दृश्यते तद्वेद्यरूपं भिद्यमानं विद्यां भिन्द्यादित्येवं प्राप्ते ब्रवीति विद्यैकत्वमिति । कुतः—यत उभयोरप्यनयोर्मन्त्रयोरियत्तापरिच्छिन्नं द्वित्वोपेतं वेद्यरूपमभिन्नमामनन्ति । ननु दर्शितो रूपभेदः। नेत्युच्यते । उभावप्येतौ मन्त्रौ जीवद्वितीयमीश्वरं प्रतिपादयतो नार्थान्तरम् । 'द्वा सुपर्णा' इत्यत्र तावत् 'अनश्नन्नन्यो अभिचाकशीति' इत्यशनायाद्यतीतः परमात्मा प्रतिपाद्यते । वाक्यशेषेऽपि च स एव प्रतिपाद्यमानो दृश्यते । 'जुष्टं यदा पश्यत्यन्यमीशमस्य महिमानम्' (श्वे० ४ । ७)

---

களுக்குள் சிறந்த ஹிருதயகுஹையில் பிரவேசித்திருப்பனவுமான பொருளை த்ரிணாசிகேதர்களானயாதொரு பஞ்சாக்னிகள் நிழலும் வெய்யிலும் போல வெனச் சொல்லுகின்றனர்" எனப் படிக்கின்றனர். இவ்விரண்டிடத்திலுமுள்ள வித்யை ஒன்ரு? வித்யை வெவ்வேரு? என ஸம்சயமுதயமாகிறது. என்? வேற்றுமை காணப்படுவதே அதன் காரணமென்க. அதாவது:—"த்வா ஸுபர்ணா" என்ற இந்த விடத்திலோ வெனில் ஒன்றுக்குப் போக்த்திருத்வமும், மற்றொன்றுக்கு அபோக்திருத்வமும் காணக்கிடக்கின்றது. "ருதம்பிபந்தௌ" என்ற விந்த விடத்திலோ இரண்டுக்கும் போக்திருத்வமே காணக்கிடக்கின்றது. ஆனது பற்றி பேதப்படும் வேத்யத்தின் ரூபமானது வித்யையையும் பேதப்படுத்தத் தான் செய்யும் என ப்ராப்தமாகவே வித்யைகத்வமே சொல்லவேண்டு மெனச்சொல்லுகிறார். ஏன்? எக்காரணம் பற்றி இவ்விரண்டு மந்திரங்களிலும் இவ்வளவெனச் சொல்லப்பட்டதோ அதாவது:—த்வித்வத்துடன் கூடிய வேத்யத்தின் ரூபமானது அபின்னமாகவே (ஒன்ருகவே) சொல்லப்பட்டதோ (அக்காரணம் பற்றியே என்க.)

சங்கை—ரூபபேத மிருப்பதாகக் காண்பிக்கப் பட்டிருக்கிறதே எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை எனச் சொல்லப்படுகிறது. இவ்விரண்டு மந்திரங்களும் ஜீவனுக்கு இரண்டாவதாகவான ஈஶ்வரனைச் சொல்லுகின்றனவே அன்றி வேறுபொருளைச் சொல்லவில்லை. "த்வா ஸுபர்ணா" என்ற விடத்திலோ வெனில் "மற்றவன் கர்ம பலாநுபவமில்லாதவனாய் ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருக்கிறான்" என்றதால் அஶநாயாதிகளைக் கடந்த பரமாத்மா சொல்லப்படுகிறார். மேலுள்ள வாக்கியத்திலும் "தியானதிகளினால் ஸேவிக்கப்பட்ட வரும் தியானபரிபாகதசையில் ஈசனும் (உண்மையில்) விசிஷ்டரூபத்தை விட வேறுபட்டவரும், அதாவது:—சோதிக்கப்பட்ட சின்மாத்திரனுமான பொருளை ப்ரத்யக்காக எப்பொழுது அனுபவிக்கின்ருனே அப்பொழுது இவரது ஸ்வரூபத்தை யடைகிருன்" என்றதால் அவரே உபதேசிக்கப்படுவதாகத் தெரிகிறது. "ருதம் பிபந்தௌ" என்ற விடத்திலோ ஜீவன் பானஞ்செய்யுங்கால் அசனாயாதிகளைக் கடந்தவரான பரமாத்

इति। 'ऋतं पिबन्तौ' इत्यत्र तु जीवे पिबत्यशनायाद्यतीतः परमात्मापि साहचर्याच्छत्रिन्यायेन पिबतीत्युपचर्यते। परमात्मप्रकरणं ह्येतत् 'अन्यत्र धर्मादन्यत्राधर्मात्' (क० २। १४) इत्युपक्रमात्। तद्विषय एव चात्रापि वाक्यशेषो भवति 'यः सेतुरीजानानामक्षरं ब्रह्म यत्परम्' (क० ३। २) इति। 'गुहां प्रविष्टावात्मानौ हि—' (ब्र० सू० १। २। ११) इत्यत्र चैतत्प्रपञ्चितम्। तस्मान्नास्ति वेद्यभेदस्तस्माच्च विद्यैकत्वम्। अपिच त्रिष्वप्येतेषु वेदान्तेषु पौर्वापर्यालोचने परमात्मविद्यैवावगम्यते। तादात्म्यविवक्षयैव जीवोपादानं नार्थान्तरविवक्षया। नच परमात्मविद्यायां भेदाभेदविचारावतारोऽस्तीत्युक्तम्। तस्मात्प्रपञ्चार्थ एवैष योगः। तस्माद्याधिकधर्मोपसंहार इति॥ ३४॥

## २२ अन्तराधिकरणम्। सू० ३५–३६

## अन्तरा भूतग्रामवत्स्वात्मनः॥ ३५॥

---

மாவும் கூடவிருப்பதுபற்றி * சத்ரிந்யாயத்தினல் பானஞ்செய்கிருர் என உபசார முறையால் கூறப்படுகிறது. பரமாத்ம ப்ரகரணமன்ருே இது. "தர்மத்தை விட வேருனது "அதர்மத்தைவிட வேருனது" என உபக்கிரமமிருப்பதே அதன் காரணமாகும். "எது ஈஜானர்களுக்கு ஸேதுவோ எது பரம்ப்ரம்ஹமான அக்ஷரமோ" என்பதாய் இவ்விடத்திலுங் கூட பரமாத்மவிஷயமாகவே உள்ள வாக்ய சேஷமு மிருக்கிறது. "குஹாம்ப்ரவிஷ்டா வாத்மானௌஹி" என்ற விடத்தில் இது விரிக்கப்பட்டிருக்கிறது. ஆனது பற்றி வேத்யபேதமில்லை. ஆனது பற்றியும் வித்யை ஒன்ருகவே ஆகிறது. மேலும், இம்மூன்று வேதாந்தங்களிலும் முன்பின் பரியாலோசனஞ் செய்யுங்கால் பரமாத்ம வித்யையே அறியப்படுகிறது. தாதாத்மியம் சொல்லவெண்ணங் கொண்டு ஜீவோபாதானஞ் செய்யப்பட்டதே யொழிய வேறுபொருளைச் சொல்லவெண்ணங் கொண்டல்ல. பரமாத்மவித்யையில் பேதாபேதவிசாரத்துக்கு இடமில்லை யென்று சொல்லவும் பட்டிருக்கிறது. ஆகவே விஸ்தாரத்துக்குவேண்டியே இந்த ஸூத்திரமேற்பட்டது. ஆனதுபற்றியும் அதிகமான தர்மத்தின் உபஸம்ஹார மேற்படுகிறது.

இருபத்தோன்ருவது இயததிகரணம் முற்றிற்று.



## அந்தராதிகரணம்.

### (ஸூ) அந்தரா பூதக்ராமவத் ஸ்வாத்மநः (35)

(ப—ரை) स्वात्मन· (ஸ்வாத்மனः)=ஆத்மாவொருவனுக்கே, अन्तरा (அந்தரா)= ஸர்வாந்தரத்வமானது பொருந்தும். भूतग्रामवत् (பூதக்கிராமவத்)=எல்லாப் பூதங்

---

* "சத்ரிணோகச்சந்தி" குடையுள்ளவர் போகின்றனர் என்ற விடத்தில் ஒரு கூட்டத்தில் ஒருவனே குடைபிடித்துச் சென்றபோதிலும் யாவரும் குடைபிடித்துச் சொல்லுவதாகச் சொல்லப்படுவதே சத்ரிந்யாய மெனப்படும்.

विद्याभेदोऽथ विद्यैक्यं स्यादुषस्तकहोळयोः । समानस्य द्विराम्नानाद्विद्याभेदः प्रतीयते ॥ १ ॥
सर्वान्तरत्वमुभयोरस्ति विद्यैकता ततः । शङ्काविशेषनुत्यै द्विः पाठस्तत्त्वमसीतिवत् ॥ २ ॥

**'यत्साक्षादपरोक्षाद्ब्रह्म य आत्मा सर्वान्तरः' (बृ० ३ । ४ । १-३ । ५ । १) इत्येवं द्विरुषस्तकहोलप्रश्नयोर्नैरन्तर्येण वाजसनेयिनः समामनन्ति । तत्र संशयः—विद्यैकत्वं वा स्याद्विद्यानानात्वं वेति । विद्यानानात्वमिति तावत्प्राप्तम् । अभ्यासासामर्थ्यात् । अन्यथा ह्यन्यूनानतिरिक्तार्थे द्विराम्नानमनर्थकमेव स्यात् । तस्माद्यथाभ्यासात्कर्मभेद एवमभ्यासाद्विद्याभेद इत्येवं प्राप्ते प्रत्याह—अन्तराम्नानाविशेषात्स्वात्मनो विद्यैकत्वमिति । सर्वान्तरो हि स्वात्मोभयत्राप्यविशिष्टः पृच्छ्यते च प्रत्युच्यते च । नहि द्वावात्मानावेकस्मि-**

---

களிலும் ஆத்மாவொருவனே ஸர்வாந்தரனெனச் சொல்லப்படுவது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க (35) (எ—று)

---

வையாஸிக ந்யாயமாலே

(க—ரை) பிருஹதாரண்யகத்தில் உஷஸ்தர், கஹோளர், என்ற மஹருஷிகளின் ப்ரஶ்னத்தில் சொல்லப்படும் வித்யை வெவ்வேறு? அல்லது ஒன்று? என்பது ஸந்தேஹம். ஸமானமாயுள்ளவனையே இரண்டுதடவை சொல்லியிருப்பது கொண்டு வித்யை வெவ்வேறு என்றுதான் தோன்றுகிறது என்பது பூர்வபக்ஷம். இரண்டிடத்திலு முள்ள ஆத்மாவுக்கும் ஸர்வாந்தரத்வமிருக்கிறது. அதனால் வித்யை ஏகத்வமானது ஸித்திக்கிறது. சங்காவிசேஷத்தைப் போக்கவேண்டியே தத்த்வமஸி என்பது போல இரண்டுதடவை படிக்கப்பட்டது. என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—வாஜஸநேயிகள் உஷஸ்த கஹோளப்ரஶ்னங்களில் "எந்தப்ரம்ஹம் ஸாக்ஷாத்தாயும் (அகௌணமாயும்) அபரோக்ஷாத் (அவ்யவஹிதமாயும்) உள்ளதோ எந்த ஆத்மா ஸர்வாந்தரமோ" என இவ்விதம் இடையறாது இரண்டு தடவை படிக்கின்றனர். அங்கு ஸம்சய முண்டாகிறது அதாவது:—வித்யை ஒன்று? அல்லது வித்யை வெவ்வேறு? என்றும். வித்யை வெவ்வேறென்றே முதலில் ப்ராப்தமாகிறது. அப்யாஸம் (அடிக்கடி உபதேசம்) காணப்படுவதே அதன் காரணமாகும். இவ்விதமில்லாவிடிலோ ஏற்றத்தாழ்வற்ற பொருளில் இரண்டு தடவை படித்தலானது பயனற்றதாகவே ஆகிவிடும். ஆனதுபற்றி இரண்டுதடவை படிக்கப்படுவதை யொட்டி கர்மபேத மேற்படுவது எவ்விதமோ இவ்விதமே அப்யாஸத்தால் வித்யாபேதந்தான் சொல்லவேண்டும் என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே ஸித்தாந்தஞ் சொல்லுகிறார்—ஸ்வாத்மாவுக்கு ஸர்வாந்தரத்வம் சொன்னதில் விசேஷமெதுவு மில்லாதிருப்பதால் வித்யை ஒன்றென்றே ஏற்படுகிறது. ஸர்வாந்தரனான ஸ்வாத்மாவோ இரண்டிடத்திலும் பொதுவாகக் கேட்கவும் படுகிறது பதிலும் சொல்லப்படுகிறது. இரண்டு ஆத்மாக்கள் ஒரு தேஹத்தில் ஸர்வாந்தரர்களாக இருக்கமுடியாதன்றோ. அப்பொழுதோ ஒருவனுக்கே ஸர்வாந்தரத்வமானது முக்யமாக ஏற்படும். ஒருவனுக்கோ பூதஸமூஹத்துக்குப் போல ஸர்வாந்த

हि प्रत्यक्षा श्रुतिराश्रमान्तरम् 'वीरहा वा एष देवानां योऽग्निमुद्वासयते', 'आचार्याय प्रियं धनमाहृत्य प्रजातन्तुं मा व्यवच्छेत्सीः' (तै० १।११।१), 'नापुत्रस्य लोकोऽस्तीति तत्सर्वे पशवो विदुः' इत्येवमाद्या। तथा 'ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते' (छा० ५।१०।१) 'तपःश्रद्धे ये ह्युपवसन्त्यरण्ये' (मुण्ड० १।२।११) इति च देवयानोपदेशो नाश्रमान्तरोपदेशः। सन्दिग्धं चाश्रमान्तराभिधानम् 'तप एव द्वितीयः' (छा० २।२३।१) इत्येवमादिषु। तथा 'एतमेव प्रव्राजिनो लोकमिच्छन्तः प्रव्रजन्ति' (बृ० ४।४।२२) इति लोकसंस्तवोऽयं न पारिव्राज्यविधिः। ननु ब्रह्मचर्यादेव प्रव्रजेदिति विस्पष्टमिदं प्रत्यक्षं पारिव्राज्यविधानं जाबालानाम्। सत्यमेवमेतत्। अनपेक्ष्य त्वेतां श्रुतिमयं विचार इति द्रष्टव्यम्॥ १८॥

## अनुष्ठेयं बादरायणः साम्यश्रुतेः॥ १९॥

---

அக்னியை விடுகிறுனே இவன் தேவர்களுள் வீரஹத்தி செய்தவனுகவாகிறுன்" என்றும், "ஆசாரியனுக்குப் பிரியமான தனத்தைக் கொடுத்து வேறு ஆஶ்ரமக் கிரஹணத்திஞல் ப்ரஜையின் தொடர்பை யறுத்து விடாதிருப்பாயாக." என்றும், "புத்திரனில்லாதவனுக்கு லோகமில்லை. ஆகவே புத்திரனில்லாதவர் யாவரும் பசுக்களென்றே எண்ணுகின்றனர்" என்றுமாதிய ப்ரத்யக்ஷஶ்ருதியானது வேறு ஆஶ்ரமத்தை மறுத்துமிருக்கிறது. அவ்விதமே "யாதொரு இவர் அரண்யத்திலிருந்துகொண்டு ஶ்ரத்தை, தபஸ் இவற்றுடன் கூடினவர்களாய் உபாஸிக்கின்றனரோ" என்பதும் "எவர் தபஸ் ஶ்ரத்தை இவற்றுடன் கூட அரண்யத்தில் வஸிக்கின்றனரோ" என்பதும் தேவயாநமார்க்கத்தி னுபதேசமேயொழிய ஆஶ்ரமாந்தரோபதேசமாக வாகாது. "தபஸ்ஸே இரண்டாவதாக வாகும்" எனறதாதி விடங்களிலோ ஆஶ்ரமாந்தரவிதானமானது ஸந்திக்தமாக (நிர்ணயிக்கமுடியாததாக) வும் இருக்கிறது. அதுபோலவே "துறப்பவர் இதேலோகத்தை விரும்பினவராகவே துறக்கின்றனர்" என்பது லோகத்தைப் பற்றிய ஸ்துதியே யொழிய ஸன்யாஸத்தின் விதியன்று.

சங்கை—"ப்ரம்ஹ சரியத்திநின்றே துறவியாகவாக வேண்டும்" என்பதாய் ஜாபாலோபநிடதத்தில் ஸன்யாஸவிதானமானது கண்கூடாகவே தெளிவாகக் காணக் கிடக்கின்றதன்றோ எனின்?

உத்தரம்—இது உண்மைதான். இந்த ஶ்ருதியையபேக்ஷிக்காமலே இந்த விசாரமானது செய்யப்படுகிறது எனக் காணவேண்டும். (18) (எ—று)

## (ஸூ) அனுஷ்டேயம் பாதராயண: ஸாம்யசுருதே: (19)

(ப—ரை) **बादरायणः** (பாதராயண:)=பாதராயணரென்ற ஆசிரியர் **अनुष्ठेयम्** (அநுஷ்டேயம்)=ஆஶ்ரமாந்தரமானது அனுஷ்டிக்கத்தக்கதென்றே எண்ணுகிறுர். ஏன்? **साम्यश्रुतेः** (ஸாம்யஶ்ருதே:)=கிருஹஸ்தாஶ்ரமத்தைப் போலவே ஆஶ்ரமாந்தரத்தையும் சுருதிஅனுவாதம் செய்திருப்பதே அதன் காரணமாகும். (19)

अनुष्ठेयमाश्रमान्तरं बादरायण आचार्यो मन्यते। वेदे श्रवणात्। अग्निहोत्रादीनां चावश्यानुष्ठेयत्वात्तद्विरोधादनधिकृतानुष्ठेयमाश्रमान्तरमिति हीमां मतिं निराकरोति गार्हस्थ्यवदेवाश्रमान्तरमप्यनिच्छता प्रतिपत्तव्यमिति मन्यमानः। कुतः—साम्यश्रुतेः। समा हि गार्हस्थ्येनाश्रमान्तरस्य परामर्शश्रुतिर्दृश्यते 'त्रयो धर्मस्कन्धाः' (छा० २। २३। १) इत्याद्या। यथेह श्रुत्यन्तरविहितमेव गार्हस्थ्यं परामृष्टमेवमाश्रमान्तरमपीति प्रतिपत्तव्यम्। यथाच शास्त्रान्तरप्राप्तयोरेव निवीतप्राचीनावीतयोः परामर्श उपवीतविधिपरे वाक्ये। तस्मात्तुल्यमनुष्ठेयत्वं गार्हस्थ्येनाश्रमान्तरस्य। तथा 'एतमेव प्रव्राजिनो लोकमिच्छन्तः प्रव्रजन्ति, (बृ० ४। ४। २२) इत्यस्य वेदानुवचनादिभिः समभिव्याहारः। 'ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते' (छा० ५। १०। १) इत्यस्य च पञ्चाग्निविद्यया। यत्तूक्तम् 'तप एव द्वितीयः' (छा० २। २३। १) इत्यादिष्वाश्रमान्तराभिधानं सन्दिग्धमिति। नैष दोषः।

---

பாஷ்யம்.—ஆஶ்ரமாந்தரமும் அனுஷ்டிக்கத் தக்கதென்றே பாதராயண ரென்ற ஆசிரியர் எண்ணுகிறார். வேதத்திற் சொல்லப்படுவதே அதன் காரண மாகும். அதாவது:—இஷ்டமில்லாதவனுங்கூட கார்ஹஸ்த்யத்தைப் போலவே வேறு ஆஶ்ரமத்தையும் ஒப்பியே தீரவேண்டும் என எண்ணுகின்றவராய் அக்னி ஹோத்ராதிகள் அவஶ்யமனுஷ்டிக்கத் தக்கனவாக விருப்பதிலிருந்து அதற்கு விரோதப்படுவதுபற்றி வேறு ஆஶ்ரமமானது கர்மாவில் அதிகாரம் பெறாதவர் களாலேயே அனுஷ்டிக்கத்தக்கது என்ற இந்த எண்ணத்தை மறுத்துக் கூறுகிறார் என்றாம். என்? ஶ்ருதிஸாம்யமிருப்பதே அதன் காரணமாகும். அதாவது:— கார்ஹஸ்த்யத்துடன் ஆஶ்ரமாந்தரத்தையும் அனுவாதஞ் செய்துள்ள "த்ரயோதர் மஸ்கந்தா:" என்றதாதியான ஶ்ருதியானது ஸமானமாகவே யன்றோ காணப்படு கின்றது. வேறு சுருதியில் விதிக்கப்பட்டதாகவே யுள்ள கார்ஹஸ்த்யமானது இவ்விடத்தில் அனுவதிக்கப்படுவது எவ்விதமோ இவ்விதமே ஆஶ்ரமாந்தரமு மெனக்கண்டு கொள்ளவேண்டும். வேறு சாஸ்திரத்திற் விதிக்கப்பட்ட (1) நிவீத ப்ராசீனாவீதங்களுக்கு உபவீதத்தை விதிக்கும் வாக்கியத்தில் அனுவாதங்காணப் படுவது போலவே இங்கும் கொள்ளவேண்டும். ஆகவே அதற்கொப்பாகவே கிருஹஸ்தாஶ்ரமத்துடன் வேறுஆஶ்ரமத்துக்கு அனுஷ்டேயத்வமானது விதிக் கிறது. அதுபோலவே "துறவிகள் இதேலோகத்தை விரும்பிக் கொண்டே துறக் கின்றனர்" என்ற இதற்கு வேதாநுவசனாதிகளுடன் சேர்த்துப் பாடம் காணவும் படுகிறது. "எவர் அரண்யத்தில் ஶ்ரத்தை தபஸ் இவற்றுடன் கூடினவர்களாய் உபாஸிக்கின்றனரோ" என்ற வாக்கியத்துக்குப் பஞ்சாக்னி வித்யையுடன் சேர்த் துப் பாடமும் காணப்படுகிறது. "தபஸே இரண்டாவதாக வாகும்" என்ற தாதிவிடங்களில் வேறு ஆஶ்ரமாபிதானம் ஸந்திக்தம் என யாதொன்று சொல்லப்

---

(1) பூநூலைக் கழுத்தில் மாட்டித்தொங்கவிடுவது நீவீதமென்றும், வலதுதொளில் மாட்டி இடது தோள்பக்கமாகப் போட்டுக்கொள்வது ப்ராசீனாவீதமென்றும் வழக்கமாக இடதுதோளில் மாட்டி வலது தோள்பக்கமாகத் தொங்கவிடுவது உபவீதமென்றும் சொல்லப்படும்.

निश्चयकारणसद्भावात्। 'त्रयो धर्मस्कन्धाः' (छां० २। २३। १) इति हि धर्मस्कन्धत्रित्वं प्रतिज्ञातम्। नच यज्ञादयो भूयांसो धर्मा उत्पत्तिभिन्नाः सन्तोऽन्यत्राश्रमसंबन्धात्त्रित्वेऽन्तर्भावयितुं शक्यन्ते। तत्र यज्ञादिलिङ्गो गृहाश्रम एको धर्मस्कन्धो निर्दिष्टो ब्रह्मचारीति च स्पष्ट आश्रमनिर्देशस्तप इत्यपि कोऽन्यस्तपःप्रधानादाश्रमाद्धर्मस्कन्धोऽभ्युपगम्येत। 'ये चेमेऽरण्ये' (छां० ५। १०। १) इति चारण्यलिङ्गाच्छ्रद्धातपोभ्यामाश्रमगृहीतिः। तस्मात्परामर्शेऽप्यनुष्ठेयमाश्रमान्तरम्॥ १९॥

## विधिर्वा धारणवत्॥ २०॥

विधिर्वाऽयमाश्रमान्तरस्य न परामर्शमात्रम्। ननु विधित्वाभ्युपगम एकवाक्यताप्रतीतिरुपरुध्येत प्रतीयते चात्रैकवाक्यता पुण्यलोकफलास्त्रयो धर्मस्कन्धा ब्रह्मसंस्थता

---

பட்டதோ, இந்தத்தோஷமில்லை. நிஸ்சயிக்கக்கூடிய காரணமிருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—"த்ரயோ தர்மஸ்கந்தா:" (தர்மப்ரதானங்களான ஆஸ்ரமங்கள் மூன்று) என்றதாலோ மூன்று தர்மஸ்கந்தங்கள் ப்ரதிக்ஞை செய்யப்பட்டன. யக்ஞாதிகளான வெகுதர்மங்கள் உத்பத்தியிலேயே வேறுபட்டனவாயிருந்து கொண்டு ஆஸ்ரமஸம்பந்தத்தைத் தவிர்த்து வேறுமுறையினல் மூன்ருன எண்ணில் அந்தர்பாவஞ் செய்ய (அடக்கிக்கூற) முடியாதனவன்ருே? அவ்விடத்தில் யக்ஞாதிகளை அடையாளமாகக் கொண்ட கிருஹஸ்தாஸ்ரமமானது ஒருதர்மஸ்கந்தமாகக்கூறப்பட்டதாக வாகிறது. ப்ரம்ஹசாரி என்பதால் ஆஸ்ரமநிர்த்தேசமானது தெளிவாகவேயிருக்கிறது. "தப:" என்றதால் தபஸ்ஸை ப்ரதானமாகக் கொண்ட ஆஸ்ரமத்தைக்காட்டிலும் வேறு எந்த தர்மஸ்கந்தமானது அங்கீகரிக்கப் படும். "யே சேமே அரண்யே" என்றவிடத்தில் அரண்யலிங்கமிருப்பதைக் கொண்டு ஸ்ரத்தை தபஸ் இவற்ருல் (அவற்றை ப்ரதானமாகக்கொண்ட) ஆஸ்ரமத்தின் கிரஹணமே ஏற்படுகிறது. ஆகவே அனுவாதம் செய்திருப்பினுங் கூட வேறு ஆஸ்ரமமானது அனுஷ்டேயமாகவே தானகிறது. (19) (எ—று)

### (ஸூ) விதிர்வாதாரணவத் (20)

(ப—ரை) **विधिर्वा** (விதிர்வா)=இது வேறு ஆஸ்ரமத்தின் விதியேயொழிய அனுவாதம் மட்டுமன்று. ஏன்? **धारणवत्** (தாரணவத்)=**उपरिहि देवेभ्यो धारयति** (உபரிஹி தேவேப்யோ தாரயதி)=தேவதைகளைக்குறித்து ஹோமஞ்செய்யுமிடத்தில் ஸ்ருக்என்ற ஹோமபாத்திரத்தின் மேலே ஸமித்தை வைத்துக்கொள்ள வேண்டும் என்றுகூறிய விடத்தில் விதத்வநிர்த்தேச மிருப்பதைக் கொண்டு உபரிதாரணத்துக்கும் அபூர்வவிதியானது எவ்விதம் கொள்ளப்படுகிறதோ அவ்விதமே இங்கும் காணவேண்டும் என்ருும். (60) (எ—று)

பாஷ்யம்.—இது வேறு ஆஸ்ரமத்துக்கு விதியாகவாகுமேயொழிய அனுவாதமாக மட்டுமாகாது.

சங்கை—விதித்தன்மை யொப்புக்கொண்டால் ஏகவாக்யத்வ ப்ரதீதியானது (ஒற்ற ஒரேபொருளுள்ளதா யிருத்தலின் தோற்றமானது) தடுக்கப்பட்டதாகவாகி

त्वमृतत्वफलेति। सत्यमेतत्। सतीमपि त्वेकवाक्यताप्रतीतिं परित्यज्य विधिरेवाभ्युपगन्तव्योऽपूर्वत्वात्। विध्यन्तरस्यादर्शनात्। विस्पष्टाच्चाश्रमान्तरप्रत्ययाद्गुणवादकल्पनयैकवाक्यत्वयोजनानुपपत्तेः। धारणवत्। यथा 'अधस्तात्समिधं धारयन्ननुद्रवेदुपरि हि देवेभ्यो धारयति' इत्यत्र सत्यामप्यधोधारणेनैकवाक्यताप्रतीतौ विधीयत एवोपरिधारणमपूर्वत्वात्। तथाचोक्तं शेषलक्षणे—'विधिस्तु धारणेऽपूर्वत्वात्' इति। तद्वदिहाप्याश्रमपरामर्शश्रुतिर्विधिरेवेति कल्प्यते। यदापि परामर्श एवायमाश्रमान्तराणां तदापि ब्रह्म-

---

விடும். இவ்விடத்திலோ புண்யலோகத்தைப் பயனாகவுடைய தர்மஸ்கந்தங்கள் மூன்று. ப்ரம்ஹஸம்ஸ்தத்வமோ அமிருதத்வத்தைப் பயனாகவுடையது என்றதால் ஏகவாக்யதையின் தோற்றமேற்படவே செய்கிறது. எனின்?

உத்தரம்— இது வுண்மைதான். ஏகவாக்யதையின் தோற்றமானது இருப்பினுங் கூட அதை விடுத்து வேறு ப்ரமாணங்களால் கிடைக்காதது பற்றி விதியேதான் அங்கிகரிக்கவேண்டியதாக வாகிறது. வேறுவிதியானது காணப்படாமலிருப்பதே அதன் காரணமாகும். மிக்கதெளிவான ஆஶ்ரமாந்தரத் தோற்றமேற்படுவதிலிருந்து குணவாத (அர்த்தவாத) கல்பனமூலம் ஏகவாக்யத்வ யோஜனஞ் செய்வது பொருந்தவும் மாட்டாது. தாரணம் போலவாம் (1) "கீழில் ஸமித்தை வைத்துக்கொண்டு போகவேண்டும். தேவர்களையும் பொருட்டு மேலேயன்றோ தாரணஞ் செய்யவேண்டும்" என்றவிடத்தில் அதோதாரணத்துடன் (ஹவிஸ்ஸின் கீழ்பாகத்தில் ஸமித்தைத்தரிப்பதுடன்) ஏகவாக்யத்வ ப்ரதீதியானது இருந்தபோதிலுங்கூட அபூர்வமாக (வேறுப்ரமாணத்தினல் கிடைக்காததாக) இருப்பதுபற்றி ஸ்ருக்குக்கு மேல்பாகத்தில் ஸமித்தைத் தரித்தலே விதிக்கப்படுகிறது. அவ்விதமே பூர்வமீமாம்ஸையில் "அபூர்வமாக இருப்பது பற்றி உபரிதாரணத்தில் விதியேதான் சொல்லவேண்டும்" என்றதாற் சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோலவே இங்கும் ஆஶ்ரமத்தை அனுவாதஞ்செய்த ஶ்ருதியானது விதியென்றே கல்பிக்கப்படுகிறது. "த்ரயோதர்மஸ்கந்தா:" என்பது வேறு ஆஶ்ரமங்களுக்கு அனுவாதமாகமட்டும் இருந்தபோதிலுங் கூட ப்ரம்ஹஸம்ஸ்தத்வமானது அவஶ்யம் விதிக்கப்படுவதாகவே தான் கொள்ளவேண்டும். அதைப்பற்றிய ஸ்துதியிருப்பதே அதன் காரணமாகும்.

---

(1) மஹாபிதிருயக்ஞத்திலும் ப்ரேதாக்னிஹோத்திரத்திலும் ஸ்ருக் என்ற ஹோம பாத்திரத்தில் வைக்கப்பட்ட ஹவிஸ்ஸை ஆஹவனீயம் என்றஅக்னியைக் குறித்துக் கொண்டுபோகுங்கால் "அந்த ஸ்ருக்குக்குக் கீழ்பாகத்தில் ஸமித்தை வைத்துக்கொண்டு போகவேண்டும்" என்றதால் விதிக்கப்பட்ட அதோதாரணத்தை (ஸ்ருக்குக்குக்கீழில் ஸமித்தை தரிப்பதை) ஸ்துதிக்கவேண்டி "தேவர்களைக் குறித்துச் செய்யப்படும் ஹோமத்தில் ஸ்ருக்குக்கு மேல்பாகத்திலன்றோ ஸமித்தைத் தரிக்கவேண்டும்" என்றதற்கு ஏகவாக்யத்வத்தோற்றம் ஏற்படினுங்கூட அதை விடுத்து ஸ்ருக்குக்கு மேல்பாகத்தில் ஸமித்தைத்தரித்தலானது அபூர்வமாக (வேறுப்ரமாணத்தால் கிடைக்காததாக) இருப்பது பற்றி வாக்யபேதமானது ஜைமினி ஆசிரியரால் மூன்ருவது அத்தியாயத்தில் பூர்வமீமாஸையில் சொல்லப்பட்டிருக்கிறது.

संस्थता तावत्संस्तवसामर्थ्यादवश्यं विधेयाऽभ्युपगन्तव्या। सा च किं चतुर्ष्वाश्रमेषु यस्य कस्यचिदाहोस्वित्परिव्राजकस्यैवेति विवेक्तव्यम्। यदि च ब्रह्मचर्यान्तेष्वाश्रमेषु परामृश्यमानेषु परिव्राजकोऽपि परामृष्टस्ततश्चतुर्णामप्याश्रमाणां परामृष्टत्वाविशेषादनाश्रमित्वानुपपत्तेश्च यः कश्चिच्चतुर्ष्वाश्रमेषु ब्रह्मसंस्थो भविष्यति। अथ न परामृष्टस्ततः परिशिष्यमाणः परिव्राडेव ब्रह्मसंस्थ इति सेत्स्यति। तत्र तपःशब्देन वैखानसग्राहिणा परामृष्टः परिव्राडपीति केचित्। तदयुक्तम्। नहि सत्यां गतौ वानप्रस्थविशेषणेन परिव्राजको ग्रहणमर्हति। यथात्र ब्रह्मचारिगृहमेधिनावसाधारणेनैव स्वेन स्वेन विशेषणेन विशेषितावेवं भिक्षुवैखानसावपीति युक्तम्। तपश्चासाधारणो धर्मो वानप्रस्थानां कायक्लेशप्रधानत्वात्। तपःशब्दस्य तत्र रूढेः। भिक्षोस्तु धर्म इन्द्रियसंयमादिलक्षणो नैव तपःशब्देनाभिलप्यते। चतुष्ट्वेन च प्रसिद्धा आश्रमास्त्रित्वेन परामृश्यन्त इत्यन्याय्यम्॥

अपिच भेदव्यपदेशोऽत्र भवति 'त्रय एते पुण्यलोकभाज एकोऽमृतत्वभाक्' इति।

---

அந்த ப்ரம்ஹ ஸம்ஸ்தத்வமானது நான்கு ஆஶ்ரமங்களுள் யாதானு மொரு ஆஶ்ரமத்துக்கு மட்டும் சொல்லப்படுகிறதா? அல்லது ஸன்யாஸிக்கு மட்டுமே சொல்லப்படுகிறதா? எனப் பகுத்தறிய வேண்டும். ப்ரம்ஹசாரியை முடிவாகக் கொண்ட ஆஶ்ரமங்கள் அனுவதிக்கப்படுங்கால் ஸன்யாஸியும் அனுவதிக்கப்படுவானுயின் அப்பொழுது நான்கு ஆஶ்ரமங்களுக்கும் அனுவதிக்கப்பட்டிருத்தல் பொதுவாக விருப்பதாலும், யாதானுமொரு ஆஶ்ரமியாகவில்லாதிருத்தல் (ப்ரம்ஹஸம்ஸ்தனுக்கு) பொருந்தாதாகையாலும் அந்த நான்கு ஆஶ்ரமிகளுள் யாதானுமொரு ஆஶ்ரமியே ப்ரம்ஹஸம்ஸ்தனுக வாவான். அந்த ஆஶ்ரமங்களுள் ஸன்யாஸியானவன் "த்ரயோதர்மஸ்கந்தா:" என்றதால் அனுவதிக்கப் படாவிடில் அது போழ்து சொல்லவேண்டுவதாக எஞ்ஜியிருக்கின்ற ஸன்யாஸியே ப்ரம்ஹஸம்ஸ்தன் என ஸித்தித்துவிடுகிறது. அவ்விடத்தில் வைகானஸனைச் சொல்லுகின்ற "தப:" என்றசப்தத்தால் ஸன்யாஸியும் அனுவதிக்கப்படுகிறான் எனச் சிலர் சொல்லுகின்றனர். அது பொருந்தாது. வேறுவழியிருக்குங்கால் வானப்ரஸ்தனுடைய விசேஷணத்தினுல் ஸன்யாஸியைக் கிரஹிப்பது பொருந்தாது. ப்ரம்ஹசாரியும் கிருஹஸ்தனும் தத்தமக்குரியதாகவேயுள்ள விசேஷணத்தினுல் எவ்விதம் விலக்கிக் காட்டப்பட்டனரோ இவ்விதமே ஸன்னியாஸியும் வானப்ரஸ்தனும் காட்டப்பட வேண்டும் என்பது தான் பொருத்தமானது. தபஸ்ஸோ வானப்ரஸ்தர்களுக்கு இன்றியமையாத தர்மமாகும். அவர் காயக்லேசத்தை முக்கியமாகக் கொண்டிருப்பதே அதன் காரணமாகும். அந்தக் காயக்லேசத்திலேயே தபஸ் சப்தத்துக்கு ரூடியு மிருக்கிறது. இந்திரியங்களை அடக்குதல் முதலியவற்றை லக்ஷணமாகக் கொண்ட ஸன்யாஸியின் தர்மமோதபஸ் சப்தத்தாற் சொல்லப்படவே மாட்டாது. நான்காக ப்ரஸித்தங்களான ஆஶ்ரமங்கள் மூன்றாக அனுவதிக்கப்படுகின்றன என்பது அந்நியாயமானதாகும். மேலும் இவ்விடத்தில் "இந்த மூவரும் புண்ய லோகத்தை யடைகின்றனர் ஒருவன் அமிருதத்வத்தை (மோக்ஷத்தை) யடைகிறான்" எனத்தனியான வுபதேசமு மிருக்கிறது. தனிமையிருந்தால்தான் இந்த

पृथक्त्वे चैष भेदव्यपदेशोऽवकल्पते। न ह्येवं भवति देवदत्तयज्ञदत्तौ मन्दप्रज्ञावनयोरन्यतरो महाप्रज्ञ इति। भवति त्वेवं देवदत्तयज्ञदत्तौ मन्दप्रज्ञौ विष्णुमित्रस्तु महाप्रज्ञ इति। तस्मात्पूर्वे त्रय आश्रमिणः पुण्यलोकभाजः, परिशिष्यमाणः परिव्राडेवामृतत्वभाक्। कथं पुनर्ब्रह्मसंस्थशब्दो योगात्प्रवर्तमानः सर्वत्र संभवन्परिव्राजक एवावतिष्ठत। रूढ्यभ्युपगमे चाश्रममात्रादमृतत्वप्राप्तेर्ज्ञानानर्थक्यप्रसङ्ग इति। अत्रोच्यते—ब्रह्मसंस्थ इति हि ब्रह्मणि परिसमाप्तिरनन्यव्यापारतारूपं तन्निष्ठत्वमभिधीयते। तच्च त्रयाणामाश्रमाणां न संभवति। स्वाश्रमविहितकर्माननुष्ठाने प्रत्यवायश्रवणात्। परिव्राजकस्य तु सर्वकर्मसंन्यासात्प्रत्यवायो न संभवत्यननुष्ठाननिमित्तः। शमदमादिस्तु तदीयो धर्मो ब्रह्मसंस्थताया उपोद्बलको न विरोधी। ब्रह्मनिष्ठत्वमेव हि तस्य शमदमाद्युपबृंहितं स्वाश्रमविहितं

---

பேதநிர்த்தேசம் பொருந்தும். உலகில் தேவதத்தனும் யக்ஞதத்தனும் குறைந்த அறிவுடையவர் இவ்விருவருளொருவர் அதிகமான அறிவுடையவர் என இவ்விதம் சொல்லப்படுவதில்லையன்றோ. பின்னையோ வெனில் தேவதத்த யக்ஞதத்தர்கள் குறைந்த அறிவுடையவர். விஷ்ணுமித்திரனே அதிகமான அறிவுடையவன் எனச் சொல்லப்படுகின்றது. ஆகவே முன்னருள்ள மூன்று ஆஸ்ரமிகளும் புண்யலோகத்தை யடைபவர், எஞ்சியுள்ள ஸன்யாஸியே மோக்ஷத்தையடைபவன் என்றேற்படுகிறது.

சங்கை—ப்ரம்ஹஸம்ஸ்த:=ப்ரம்ஹத்திலிருப்பவன்=அதாவது ப்ரம்ஹத்தை இடையருது த்யானிப்பவன் என்ற அதன் பொருள் கொண்டு ப்ரவிருத்திக்கும் ப்ரம்ஹஸம்ஸ்த சப்தமானது எல்லா ஆஸ்ரமிகளிடத்தும் ஸம்பவிக்கக் கூடியது பற்றி ஸன்யாஸியினிடத்தில் மட்டுந்தான் ப்ரவிருத்திக்கும் என்பது எங்ஙனம்? ரூடியை யொப்புக்கொண்டாலோ ஆஸ்ரமத்தால் மட்டுமே மோக்ஷஸித்தி யேற்படலாமானதால் க்ஞானத்துக்குப் பயனின்மையும் வரத்தெரியும் எனின்?

உத்தரம்—இவ்விஷயத்திற் சொல்லப்படுகிறது. பொதுவாய் ப்ரம்ஹஸம்ஸ்த: என்ற சப்தத்தினுல் ப்ரம்ஹத்தினிடத்தில் ஸம்ஸ்தை=முடிவு அதாவது: வேறுவேலையற்று அதனிடத்திலேயே இருத்தல் என்பது சொல்லப்படுகிறது அதுவோ மூன்று ஆஸ்ரமங்களுக்கும் ஸம்பவிக்க முடியாது. அம்மூவர்க்கும் தமது ஆஸ்ரமங்களுக்கு விதிக்கப்பட்ட தர்மங்களை அனுஷ்டானஞ் செய்யாவிடில் தோஷம் கூறப்பட்டிருக்கிறது. ஸன்யாஸிக்கோ எல்லாக் கர்மங்களுடையவும் ஸன்யாஸஞ் சொல்லப்பட்டிருப்பதால் கர்மாவை அனுஷ்டிக்காதிருத்தல் மூலமான தோஷம் ஸம்பவிப்பதற்கிடமில்லை. ஸன்யாஸியினுடையதான சமதமாதிகளான தர்மமோ வெனில் ப்ரம்ஹஸம்ஸ்தைக்கு=வேறுவியாபாரத்தை யொழித்து ப்ரம்ஹானுஸந்தானஞ் செய்தற்கு, உபகாரியாகவாகுமே யொழிய விரோதியாக ஆகமாட்டாது. அவனுக்கோ=ஸன்யாஸிக்கோ, சமதமாதிகளின் உதவியைக் கொண்ட ப்ரம்ஹநிஷ்டத்வமே அவரது ஆஸ்ரமத்துக்கு விதிக்கப்பட்ட கர்மமாக வாகிறது. மற்றவர்க்கோ யாகாதிகள் ஆஸ்ரமவிஹிதமான கர்மங்களாகின்றன. ஆகையால் அவற்றை விடுவதில் அவர்க்குத் தோஷம் வரக்கூடும்.

कर्म, यज्ञादीनि चेतरेषां तद्व्यतिक्रमे च तस्य प्रत्यवायः। तथाच 'न्यास इति ब्रह्मा ब्रह्मा हि परः परो हि ब्रह्मा तानि वा एतान्यवराणि तपांसि न्यास एवात्यरेचयत्' (नारा० ७८), 'वेदान्तविज्ञानसुनिश्चितार्थाः संन्यासयोगाद्यतयः शुद्धसत्त्वाः' (मुण्ड० ३।२।६, नारा० १२।३, कैवल्य० ३) इत्याद्याः श्रुतयः। स्मृतयश्च—'तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः' (गी० ५।१७) इत्याद्या ब्रह्मसंस्थस्य कर्माभावं दर्शयन्ति ॥

तस्मात्परिव्राजकस्याश्रममात्रादमृतत्वप्राप्तेर्ज्ञानानार्थक्यप्रसङ्ग इत्येषोऽपि दोषो नावतरति। तदेवं परामर्शेऽपीतरेषामाश्रमाणां पारिव्राज्यं तावद्ब्रह्मसंस्थतालक्षणं लभ्यतैव। अनपेक्ष्यैव जाबालश्रुतिमाश्रमान्तरविधायिनीमयमाचार्येण विचारः प्रवर्तितः। विद्यत एव त्वाश्रमान्तरविधिश्रुतिः प्रत्यक्षा। 'ब्रह्मचर्यं परिसमाप्य गृही भवेद्गृही भूत्वा वनी भवेद्वनी भूत्वा प्रव्रजेत्। यदि वेतरथा ब्रह्मचर्यादेव प्रव्रजेद्गृहाद्वा वनाद्वा' (जाबा० ४) इति। न चेयं श्रुतिरनधिकृतविषया शक्या वक्तुम्। अविशेषश्रवणात्। पृथग्विधानाच्चानधि-

---

அவ்விதமே "ந்யாஸம் என்பது ப்ரம்ஹாவாகும். ப்ரம்ஹாவோ=ஹிரண்ய கர்ப்பரோ பரனுகிறுர், பரனன்றே ப்ரம்ஹா. அந்த இந்தத்தாழ்ந்ததபஸ்ஸுகளை ந்யாஸமே=ஸன்யாஸமே அதிகரித்து=மேல்நோக்கி நிற்கிறது" என்றும், "வேதாந்தவிக்ஞானத்தால் நன்கு நிஸ்சயிக்கப்பட்ட பயனுள்ளவர்களும், சுத்தமான மனதுள்ளவர்களும், ஸன்யாஸயோகத்தால் யதிகளுமானவர் முக்தியை யடைகின்றனர்" என்றுமாதிய சுருதிகளிருக்கின்றன. அவ்விதமே "தத்புத்தயஃ=ப்ரம்ஹத்தினிடத்தில் சித்தத்தைச் செலுத்தினவர்களும், ததாத்மானஃ=ப்ரம்ஹஸ்வரூபர்களும், தந்நிஷ்டாஃ=ஸ்ரவணுதிகளை யனுஷ்டிப்பவர்களும், தத்பராயணுஃ=ப்ரம்ஹத்தை யடையவிருப்பமுள்ளவர்களும் அதாவது:—நிஷ்காமர்களும்" என்றதாதிகளான ஸ்மிருதிகள் ப்ரம்ஹஸம்ஸ்தனுக்கு(ஸன்யாஸிக்கு)கர்மமின்மையைத் தெரிவிக்கின்றன. ஆகவே ஸன்யாஸிக்கு ஆஸ்ரமத்திஞல் மட்டும் அமிருதத்வப்ராப்தியேற்படுவதால் க்ஞானம் வேண்டுவதில்லை என்ற இந்தத் தோஷமும் வருவதற்கு இடமில்லை. ஆகவே இவ்விதம் பார்க்குங்கால் வேறு ஆஸ்ரமங்களின் அனுவாதம் காணப்படினுங்கூட ப்ரம்ஹஸம்ஸ்தத்வ ரூபமான ஸன்யாஸமானது கிடைக்கவே தான் செய்கிறது. வேறுஆஸ்ரமத்தை விதிக்கின்ற ஜாபாலஸ்ருதியை எதிர்பாருமலே ஆசிரியரால் இந்தவிசாரமானது தொடங்கப்பட்டது. வேறு ஆஸ்ரமத்தை விதிக்கின்ற சுருதியானது ப்ரத்யக்ஷமாகவே இருக்கின்றதன்றே. அதாவது:—"ப்ரம்ஹசர்யத்தை முடித்துக்கொண்டு கிருஹஸ்தனுகவாகவேண்டும். கிருஹஸ்தனுக வாகி வானப்ரஸ்தனுக வாகவேண்டும். வானப்ரஸ்தனுக விருந்து ஸன்யாஸியாக வாகவேண்டும். அவ்விதமில்லாவிடில் (ப்ரம்ஹசர்யத்திலிருக்கும் பொழுதே ஜன்மாந்தரபுண்ணியத்திஞல் வைராக்கியமுண்டாகுமாஞல்) ப்ரம்ஹசர்யத்தினின்றும் ஸன்யாஸியாகலாம், கிருஹஸ்தாஸ்ரமத்தினின்றும் ஸன்யாஸியாகலாம்" என்றும்.

இந்தஸ்ருதியானது கர்மாவில் அதிகாரம் பெருதவரை விஷயமாகக் கொண்டது என்று சொல்லமுடியாது. ஏன்? பொதுவாகக் கூறியிருப்பதே அதன்

कृतानाम् 'अथ पुनरेव व्रती वाऽव्रती वा स्नातको वाऽस्नातको वोत्सन्नाग्निरनग्निको वा' (जावा० ४) इत्यादिना। ब्रह्मज्ञानपरिपाकाङ्गत्वाच्च पारिव्राज्यस्य नानधिकृतविषयत्वम्। तच्च दर्शयति—'अथ परिव्राड्विवर्णवासा मुण्डोऽपरिग्रहः शुचिरद्रोहीभैक्षाणो ब्रह्मभूयाय भवति' (जावा० ५) इति। तस्मात्सिद्धा ऊर्ध्वरेतसामाश्रमाः। सिद्धं चोर्ध्वरेतःसु विधानाद्विद्यायाः स्वातन्त्र्यमिति ॥ २० ॥

## ३ स्तुतिमात्राधिकरणम्। सू० २१-२२

## स्तुतिमात्रमुपादानादिति चेन्नापूर्वत्वात् ॥ २१ ॥

---

காரணமாகும். "பின்னர், வ்ரதமுள்ளவனே, வ்ரதமில்லாதவனே, ஸ்நாதகனே, ஸ்நாதகனகவில்லாதவனே, நஷ்டமான அக்னியுள்ளவனே, அக்னியே இல்லாதவனே" என்றதாதியால் கர்மாவில் அதிகாரம் பெறுதவர்களுக்குத் தனியான விதி காணப்படுவதும் மற்றொரு காரணமாகும். ஸன்யாஸமானது ப்ரம்ஹக்ஞானத்தின் பரிபாகத்துக்கு அங்கமாக இருப்பது பற்றியும் கர்மாவில் அதிகாரம் பெறுதவரை விஷயமாகக்கொண்டதாகவு மாகமாட்டாது. அதையும் சுருதியானது "பிறகு ஸன்யாஸியானவன் நிறம்மாறின வஸ்திரமுள்ளவனகவும், தலையில் மயிரற்றவனகவும், பத்னியற்றவனகவும், சுத்தனகவும், துரோஹஞ் செய்யாதவனகவும், பிக்ஷை எடுத்துண்பவனுய்க் கொண்டு ப்ரம்ஹபாவத்தை யடைந்தவனகவாகிருன்" என்றதால் தெரிவித்து மிருக்கிறது. ஆனதுபற்றி ஊர்த்வரேதஸ்ஸுகளின் ஆஸ்ரமங்கள் ஸித்திக்கின்றன. ஊர்த்வரேதஸ்ஸுகளிடத்தில் விதிக்கப்பட்டிருப்பதுபற்றி வித்யைக்கு (ப்ரம்ஹக்ஞானத்துக்கு) ஸ்வாதந்திரியமும் ஸித்திக்கிறது. (20) (எ—று)

இரண்டாவது பராமர்சாதிகரணம் முற்றிற்று.



## ஸ்துதிமாத்ராதிகரணம். (3)

(அ—கை) சாந்தோக்யோபநிடதத்தில் "एषां भूतानां पृथिवी रसः, पृथिव्या आपो रसः, अपामोषधयो रसः, ओषधीनां पुरुषो रसः, पुरुषस्य वाग्रसः, वाच ऋग्रसः, ऋचः साम रसः, साम्न उद्गीथोरसः, स एष रसानां रसतमः परमः परार्ध्योऽष्टमो य उद्गीथः" இந்தப் பூதங்களுக்குள் ப்ருதிவிஸாரமானது,பூமிக்குள் ஜலம் ஸாரமானது ஜலத்துக்குள் ஓஷதிகள் ஸாரமானது, ஓஷதிக்குள் புருஷன் (தேஹம்) ஸாரமானது, புருஷனுக்குள் வாக்கு ஸாரமானது, வாக்குக்குள் ருக் ஸாரமானது, ருக்குக்குள் ஸாமம் ஸாரமானது, ஸாமத்துக்குள் உத்கீதம் ஸாரமானது, அந்த இந்த உத்கீதமானது (உத்கீதாவயமான ஓங்காரமானது) முற்கூறிய ஸாரமான ஏழுபதார்த்தங்களுக்குள்ளும் மிக்கஸாரமானது. அதுவே பரமாத்மாவுக்கு ப்ரதீகமாக இருப்பதுபற்றி பரமமுமாகும். அதுவே பரம்ப்ரம்ஹத்தினுடைய ஸ்தானத்தை யடைய அர்ஹமாக இருப்பதுபற்றி பரார்த்யமுமாகும். உத்கீதாவயவமான எட்டாவதான ஓங்காரம் யாதுண்டோ" என்றதாதி படிக்கப்படுகிறது. இந்தவாக்கியத்தில்

स्तोत्रं रसतमत्वादि ध्येयं वा गुणवर्णनात्। जुहूरादित्य इत्यादाविव कर्मांगसंस्तुतिः ॥ १ ॥
भिन्नप्रकरणस्थत्वान्नांगविध्येकवाक्यता। उपासीतेति विध्युक्तेर्ध्येयं रसतमादिकम् ॥ २ ॥

'स एष रसानां रसतमः परमः परार्ध्योऽष्टमो यदुद्गीथः' (छा० १।१।३)

---

ரஸதமத்வம் முதலிய குணங்களுடன் கூடின உத்கீதாவயவமான ஓங்காரத்தினுபாஸ்தி விதிக்கப்படுகிறதா? அல்லது ப்ரணவத்தினுடைய ஸ்துதிமட்டுமேதானா? (அதாவது:—இந்த வாக்கியம் ப்ரணவத்தை ஸ்துதிக்கவந்த அர்த்தவாதம் மட்டுந்தானா? என்றும்.) எனஸந்தேஹம் வரவே "ஜுஹூவானது (இது ஒருவகை ஹோமபாத்திரமாகும்) இந்த ப்ருதிவியே, சயனத்திலுள்ள கூர்மமானது ஆதித்யனே, ஆஹவனீயமென்ற அக்னியானது ஸ்வர்க்கலோகமே" என்றதாதிகள் ஜுஹூமுதலியவற்றின் ஸ்துதிக்குவேண்டி படிக்கப்படுவது எவ்விதமோ அவ்விதமேதான் ரஸதமத்வாதிகளும் உத்கீதாவயவமான ஓங்காரத்தின் ஸ்துதியாகும் எனப்ராப்தமாகவே ரஸதமத்வாதி குணங்களுடன் கூடின ப்ரணவோபாஸ்தியானது வேறுப்ரமாணத்தால் கிடைக்காதது பற்றி அபூர்வவிதிமுறையால் அவ்வுபாஸ்தி விதிக்கப்படுகிறது என ஸித்தாந்தப்படுத்தவேண்டி இரண்டு ஸூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணமானது ஆரம்பிக்கப்படுகிறது. அவற்றுள் முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

## (ஸூ) ஸ்துதிமாத்ரமுபாதாநாத் இதிசேத் ந அபூர்வத்வாத்()

(ப—ரை) स्तुतिमात्रम् (ஸ்துதிமாத்ரம்)="ஸ ஏஷ ரஸாநாம் ரஸதம:" என்றதாதி வாக்கியமானது ப்ரணவத்தின் ஸ்துதியாக மட்டுமாகுமேயொழிய உபாஸ்ய ஸமர்ப்பகமாகவாகாது. ஏன்? उपादानात् (உபாதாநாத்)="ஓமித்யேததக்ஷர முத்கீதமுபாஸீத" என்றதால் உத்கீதாதிகளான கர்மங்களை யெடுத்துக்கொண்டு ஸ்துதி காணப்படுவதே அதன் காரணமாகும். इति चेत् (இதிசேத்)=என்றாலோ न (ந)=அது பொருந்தாது. ஏன்? अपूर्वत्वात् (அபூர்வத்வாத்)=இந்த வாக்கியத்தாற் சொல்லப்படும் ரஸதமத்வாதி குணங்கள் வேறுப்ரமாணத்தினால் கிடைக்காதிருப்பது பற்றி உத்கீதாதி விசேஷபரத்வமானது ஸம்பவிக்கும் போழுது ஸ்துதியாக மட்டும் சொல்லுவது பொருந்தாததே அதன் காரணமாகும். (21) (எ—று)

### வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ரஸதமத்வம் முதலியன வெறும் ஸ்தோத்திரமா? அல்லது த்யானஞ் செய்யத்தகுந்தனவா? என்பது ஸந்தேஹம். "ஜுஹூவானது இந்தப் பூமியே. சயனத்திலுள்ள கூர்மமானது ஆதித்யனே" என்றதாதிகளிற்போல குணவர்ணனஞ் செய்திருப்பதால் கர்மாங்கத்தின் ஸ்துதியேயாகும் என்பது பூர்வபக்ஷம். வேறுப்ரகரணத்திலிருப்பதால் அங்கவிதியுடன் ஏகவாக்யத்வமானது ஸம்பவிக்காது. "உபாஸீத" என விதிசொல்லியிருப்பதாலும் ரஸதமத்வம் முதலியன த்யானஞ் செய்யத்தகுந்தனவேயாகும் என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—எட்டாவதான யாதொரு உத்கீதமுண்டோ (உத்கீதாவயமான

'इयमेवर्गग्निः साम' (छा० १।६।१) 'अयं वाव लोक एषोऽग्निश्चितः। तदिदमेवोक्थमियमेव पृथिवी' इत्येवञ्जातीयकाः श्रुतयः किमुद्गीथादेः स्तुत्यर्था आहोस्विदुपासनाविध्यर्था इत्यस्मिन्संशये स्तुत्यर्था इति युक्तम्। उद्गीथादीनि कर्माङ्गान्युपादाय श्रवणात्। यथा—'इयमेव जुहूरादित्यः कूर्मः स्वर्गो लोक आहवनीयः' इत्याद्या जुह्वादिस्तुत्यर्थास्तद्वदिति चेत्। नेत्याह। नहि स्तुतिमात्रमासां श्रुतीनां प्रयोजनं युक्तमपूर्वत्वात्। विध्यर्थतायां ह्यपूर्वोऽर्थो विहितो भवति स्तुत्यर्थतायां त्वानर्थक्यमेव स्यात्। विधायकस्य हि शब्दस्य वाक्यशेषभावं प्रतिपद्यमाना स्तुतिरुपयुज्यत इत्युक्तम् 'विधिना त्वेकवाक्यत्वात्स्तुत्यर्थेन विधीनां स्युः' इत्यत्र। प्रदेशान्तरविहितानां तूद्गीथादीनामियं प्रदेशान्तरपठिता स्तुतिर्वाक्यशेषभावमप्रतिपद्यमानानर्थिकैव स्यात्। इयमेव जुहूरित्यादि तु विधिसन्निधावेवाम्नातमिति वैषम्यम्। तस्माद्विध्यर्था एवैवञ्जातीयकाः श्रुतयः ॥ २१ ॥

---

ஓங்காரமுண்டோ) அந்த இது ரஸங்களுள் மிக்கஸாரமானதும், பரமாத்மாவுக்கு ப்ரதீகமாக இருப்பதுபற்றிப் பரமமும், பரப்ரஹ்மத்தினுடைய ஸ்தானத்தையடைவதற்குத் தகுதியுள்ளதாயிருப்பதுபற்றி பரார்த்யமுமாகும், என்றும் "இந்தப் பூமியே ருக், அக்னியே ஸாம" என்றும், சயனஞ் செய்யப் பட்ட இந்த அக்னியாதுண்டோ இது இந்தலோகமேயாகும். அந்த இதுவே உக்தமாகிறது, இதே ப்ருதிவியுமாகிறது" என்றதாதிகளான ஸ்ருதிகள் உத்கீதாதிகளின் ஸ்துதியை ப்ரயோஜனமாகக் கொண்டனவா? அல்லது உபாஸனவிதியைப் பயனாகக் கொண்டனவா? என்ற இந்த ஸம்சயம் வருங்கால் ஸ்துதியைப் பயனாகக் கொண்டன என்பதுதான் யுக்தமாகாகிறது. உத்கீதம் முதலிய கர்மாங்கங்களை எடுத்துக் கொண்டு சொல்லியிருப்பதே அதன் காரணமாகும். "ஜுஹூவானது இந்தப் பூமியே, சயனத்திலுள்ள கூர்மம் ஆதித்யனே, ஆஹவனீயமானது ஸ்வர்க்கலோகமே" என்றதாதிகள் ஜுஹ்வாதிகளின் ஸ்துதிக்கவேண்டி ஏற்பட்டன என்பது எவ்விதமோ அவ்விதமேயாகும் எனின்? இல்லை எனச் சொல்லுகிறார். இந்த ஸ்ருதிகளுக்கு ஸ்துதியைமட்டும் ப்ரயோஜனமாகச் சொல்லுவது பொருந்தாது. அபூர்வமாக(அபூர்வார்த்தத்தைப் போதிப்பதாக)விருப்பதே அதன் காரணமாகும். வித்யார்த்தத்வம் சொன்னாலோ அபூர்வமான (வேறுப்ரமாணத்தால் கிடைக்காத) பொருள் விதிக்கப்பட்டதாகவாகிறது. ஸ்துத்யர்த்தத்வம் சொன்னாலோ பயனில்லாத் தன்மையே வந்து விடுகிறது. ஸ்துதியானது விதிபோதக சப்தத்தின் வாக்கிய சேஷமாயிருத்தலை யடைந்து கொண்டு உபயோகத்தையடைகிறது என "(1) விதினா த்வேகவாக்யத்வாத் ஸ்துத்யர்த்தேன விதீநாம் ஸ்யு:" என்றவிடத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. வேறிடத்தில் விதிக்கப்பட்ட உத்கீதாதிகளுக்கு வேறிடத்தில் படிக்கப்பட்ட ஸ்துதியானது வாக்கிய சேஷத்தன்மையை யடையாததாய்க் கொண்டு பயனற்றதாகவே ஆகிவிடும். "ஜுஹூவானது இந்தப்ருதிவியே" என்றதாதியோவெனில் விதியின் ஸமீபத்திலேயே படிக்கப்பட்டிருப்பது பற்றி

---

(1) இதன் பொருளை முதலாவது அத்யாயம் 1-வதுபாதம் நான்காவது ஸூத்திர பாஷ்ய மொழிபெயர்ப்பிற் காண்க.

## भावशब्दाच ॥ २२ ॥

'उद्गीथमुपासीत' (छा० १।१।१), 'सामोपासीत' (छा० २।२।१), 'अहमुक्थमस्मीति विद्यात्' इत्यादयश्च विस्पष्टा विधिशब्दाः श्रूयन्ते, ते च स्तुतिमात्रप्रयोजनतायां व्याहन्येरन्। तथाच न्यायविदां स्मरणम्—'कुर्यात्क्रियेत कर्तव्यं भवेत्स्यादिति पञ्चमम्। एतत्स्यात्सर्ववेदेषु नियतं विधिलक्षणम्' इति। लिङाद्यर्थो विधिरिति मन्यमानास्त एवं स्मरन्ति। प्रतिप्रकरणं च फलानि श्राव्यन्ते—'आपयिता ह वै कामानां भवति' (छा० १।१।७) 'एष ह्येव कामागानस्येष्टे' (छा० १।७।९) 'कल्पन्ते हास्मै लोका ऊर्ध्वाश्चावृत्ताश्च' (छा० २।२।३) इत्यादीनि। तस्मादप्युपासनविधानार्था उद्गीथादिश्रुतयः ॥ २२ ॥

---

அந்தத் திருஷ்டாந்தம் முறண்பட்டதாகவே ஆகிறது. ஆகவே இம்மாதிரியான ஶ்ருதிகள் வித்யார்த்தங்களாகவே தானுகும். (21) (எ—று)

### (ஸூ) பாவசப்தாத்ச (22)

(ப—ரை) **भावशब्दाच** (பாவசப்தாத்ச)="வித்யாத்" "உபாஸீத" என்றதாதிகளான விதிபோதகசப்தங்கள் இவ்விடத்தில் தெளிவாகக் காணவும் படுகிறது. **च** (ச)=அவ்வுபாஸனைக் குரியபலன்களும் சுருதியிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

பாஷ்யம்.—"உத்கீதத்தை யுபாஸிக்கவேண்டும்" "ஸாமத்தை யுபாஸிக்கவேண்டும்" "நான் உக்தமாக விருக்கிறேன் என வுபாஸிக்கவேண்டும்" என்றதாதிகளான விதிபோதக சப்தங்கள் தெளிவாய் ஶ்ருதியில் காணப்படுகின்றன. அவை ஸ்துதியை மட்டும் ப்ரயோஜனமாகக் கொண்டன என்று சொல்லும் பக்ஷத்தில் வீணுகிவிடும். அவ்விதமேமீமாம்ஸா நியாயமறிந்த பெரியாரின் ஸ்மிருதியுமிருக்கிறது. அதாவது:—"குர்யாத், க்ரியேத, கர்த்தவ்யம், பவேத், ஸ்யாத் என்ற இது எல்லாவேதங்களிலும் மாறுதலற்ற விதியின் லக்ஷணமாகும்" என்றும். லிங், லோட், தவ்ய, ப்ரத்யயங்கள் விதியைத் தெரிவிக்கக்கூடியன என எண்ணுகின்றவர்களாய் அப்பெரியார் இவ்விதம் ஸ்மிருதி செய்திருக்கின்றனர். மேலும் ஒவ்வொரு உபாஸனு ப்ரகரணதிலும் பலன்கள் சொல்லவும் படுகின்றன. அவையாவன "காமங்களைக் கொடுப்பதாகவே யாகிறது" என்றும், "உபாஸகனுன இந்த ருத்விக்கானவன் கானத்தினுலேயே பயனை ஸம்பாதித்துத் தருவதற்குச் சக்தனுகவுமாகிறுன்" என்றும், "மேலுள்ளனவும் கதி (அடைதல்) ஆகதி (திரும்புதல்) இவற்றுடன் கூடினவுமான லோகங்கள் இவ்வுபாஸகனுக்கு வித்திக்கின்றன" என்றுமானவைகளாம். ஆனதுபற்றியும் உக்கீதாதி ஶ்ருதிகள் உபாஸனுவிதானத்தையே பயனுகவுடையன என்றேற்படுகிறது. (22) (எ—று)

குறிப்பு—அங்கத்தை யாஶ்ரயித்த வித்யைக்கே ஸ்வதந்திரமான பலனிருக்குமானுல் எதற்கும் அங்கமாகவில்லாத ஆத்மவித்யைக்கு ஸ்வதந்திரமான மோக்ஷ பலன் வித்திக்கும் எனச் சொல்லவும் வேண்டுமோ என்றேற்பட்டது. (எ—று)

**மூன்றுவது ஸ்துதிமாத்ராதிகரணம் முற்றிற்று.**

## ४ पारिप्लवाधिकरणम् । सू० २३-२४
## पारिप्लवार्था इति चेन्न विशेषितत्वात् ॥ २३ ॥

---

### பாரிப்லவாதிகரணம் 4.

(அ-கை) அஸ்வமேதயாக ப்ரகரணத்தில் புத்திராதிகளுடன்கூடின ராஜனுக்கு "**पारिप्लवमाचक्षीत** (பாரிப்லவமாசக்ஷீத)=பாரிப்லவத்தை பற்பலவிதமான கதைகளைச் சொல்லவேண்டும் என விதிக்கப்பட்டிருக்கிறது. அஸ்வமேதயாகமானது மூன்றுதினங்களில் செய்யக்கூடியது. அந்தத்தினங்களுள் முதல் தினத்தில் "**मनुर्वैवस्वतो राजा**" (மனுர்வைவஸ்வதோராஜா) என்றுதொடங்கிக் கூறப்படும் கதையையும், இரண்டாவதுதினத்தில் "**यमो वैवस्वत:**" (யமோவைவஸ்வத:) என்றுதொடங்கி படிக்கப்படும் கதையையும், மூன்ருவது தினத்தில் "**वरुण आदित्य:**" (வருண ஆதித்ய:) என்றுதொடங்கி படிக்கப்படும் கதையையும் சொல்லவேண்டும் என விதியிருக்கிறது. மேலும் உபக்ரமத்தில் "**सर्वाण्याख्यानानि पारिप्लवे शंसन्ति**" (ஸர்வாண்யாக்யாநாநி பாரிப்லவே ஶம்ஸந்தி) எல்லாக்கதைகளையும் பாரிப்லவத்திற் சொல்லவேண்டும் என்றும் காணப்படுகிறது. அங்கு எல்லாக்கதைகளையும் என்று சொல்லியிருப்பதிலிருந்து "**याज्ञवल्क्यस्य द्वे भार्ये बभूवतु:** (யாக்ஞவல்க்யஸ்ய த்வேபார்யே பபூவது:) யாக்ஞவல்க்யருக்கு இரண்டு மனையாளிருந்தனர் என்றதாதிகளான உபநிடதத்திற் சொல்லப்படும் கதைகளும் முற்கூறிய பாரிப்லவத்திற் சேர்ந்தனவா? அல்லது வேறானவைகளா? என ஸந்தேஹம்வர அங்கு உபக்கிரமத்தில் "**सर्वाण्याख्यानानि**" (ஸர்வாண்யாக்யாநாநி) எல்லாக்கதைகளையும் என்றிருப்பதால் உபநிடதத்திற் சொல்லப்படும் கதைகளும் பாரிப்லவத்திலேயே தான் சேருமேயொழிய தனியானதொரு பொருளைத் தெரிவிப்பதாக வாகமாட்டாது. எனப் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே அந்த மூன்று தினங்களுள் சுருதியில் ஆங்காங்கு சொல்லப்பட்ட எல்லாக்கதைகளையும் சொல்லுவதென்பது முடியாதகாரியமாகையாலும் உபக்கிரமத்திலுள்ள **सर्वाणि** (ஸர்வாணி) எல்லாக்கதையையும் என்றதை ஸங்கோசப்படுத்தி அஸ்வமேதயாகப்ரகரணத்தில் வாக்யசேஷத்தில் (உபஸம்ஹாரத்தில்=முடிவில்) படிக்கப்பட்ட "மனுர்வைவஸ்வத:" "யமோ வைவஸ்வத:" "வருண ஆதித்ய:" என்றதாதி கதைகளை மட்டுந்தான் பாரிப்லவத்திற் சொல்லவேண்டுவதாக வாவதாலும் உபநிடதத்திற் சொல்லப்படும் "யாக்ஞவல்க்யருக்கு இரண்டு மனையாளிருந்தனர்" என்றதாதிகளாற் சொல்லப்படுவது பாரிப்லவமாக ஒருபொழுது மாகமாட்டாது. ஆகவே அவை அடுத்துஸமீபத்தில் சொல்லப்படும் வித்யையின் ஸ்துதியாகவாகி அதைச் சுளுவாகக் கிரஹிப்பதில் தானுபயோகப்படும் என ஸித்தாந்தப்படுத்த வேண்டி இரண்டுஸூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணமாரம்பிக்கப்படுகிறது. அவற்றுள் முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

**(ஸூ) பாரிப்லவார்த்தா இதிசேத் ந விசேஷிதத்வாத் (23)**

(ப-ரை) "யாக்ஞவல்க்யருக்கு இரண்டு மனையாளிருந்தனர்" என்றதாதி

पारिप्लवार्थमाख्यानं किं वा विद्यास्तुतिः स्तुतेः । ज्यायोऽनुष्ठानशेषत्वं तेन पारिप्लवार्थता ॥ १ ॥
मनुर्वैवस्वतो राजेत्येवं तत्र विशेषणात् । अत्र विद्यैकवाक्यत्वभावाद्विद्यास्तुतिर्भवेत् ॥ २ ॥

'अथ ह याज्ञवल्क्यस्य द्वे भार्ये बभूवतुर्मैत्रेयी च कात्यायनी च' (बृ० ४।५।१), 'प्रतर्दनो ह वै दैवोदासिरिन्द्रस्य प्रियं धामोपजगाम' (कौषी० ३।१), 'जानश्रुतिर्ह पौत्रायणः श्रद्धादेयो बहुदायी बहुपाक्य आस' (छा० ४।१।१) इत्येवमादिषु वेदान्तपठितेष्वाख्यानेषु संशयः—किमिमानि पारिप्लवप्रयोगार्थान्याहोस्वित्सन्निहितविद्याप्रतिपत्त्यर्थानीति । पारिप्लवार्था इमा आख्यानश्रुतयः । आख्यानसामान्यात् । आख्यानप्रयो-

---

வேதாந்தத்திற் சொல்லப்படும் கதைகள் ஸமீபித்துள்ள வித்யையை ஸ்துதிப்பன வன்று. பின்னையோவெனில் **पारिप्लवार्थाः** (பாரிப்லவார்த்தாஃ)=பாரிப்லவத்தையே ப்ரயோஜனமாகக்கொண்டன **इति चेत्** (இதிசேத்)=என்றாலோ **न** (ந)=அது பொருந் தாது. ஏன்? ராஜஸூயப்ரகரணத்திலுள்ள வாக்கியசேஷத்தில் **विशेषितत्वात्** (விசேஷிதத்வாத்)="மனுர் வைவஸ்வதோ ராஜா" என்றதாதிகளைத் தனியாக அதற்கென வுபதேசித்திருப்பதா லெங்க. (23)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) "யாக்ஞவல்க்யருக்கு இரண்டுமனையா ளிருந்தனர்" என்றதாதி கதைகள் பாரிப்லவத்துக்கு வேண்டி சொல்லப்பட்டனவா? அல்லது அதே வாக் கியத்தில் சொல்லப்படும்வித்யையை ஸ்துதிக்கவேண்டி சொல்லப்படுகின்றனவா? என்பது ஸந்தேஹம். வெரும் ஸ்துதியாகச் சொல்லுவதைக்காட்டிலும் ஒரு அநுஷ்டானத்துக்குச்சேஷ (அங்க) மாகச் சொல்லுவதுதான் மேலானது. ஆனது பற்றி இம்மாதிரியான கதை பாரிப்லவத்துச்கு வேண்டியே ஏற்பட்டதாக வாகி றது என்பது பூர்வபக்ஷம். அந்த அஸ்வமேதயாக ப்ரகரணத்தின் வாக்கிய சே ஷத்தில் "மனுர்வைவஸ்வதோராஜா" என்றதாதிகளைத் தனித்து பாரிப்லவத் துக்குவேண்டி கூறியிருப்பதாலும், இவ்விடத்தில் மேலுள்ள வித்யையுடன் ஏக வாக்யத்தன்மை யேற்படுவதாலும் இந்தக்கதை வித்யையின் ஸ்துதியாகவே தானு கும் என்பது ஸித்தாந்தம்.

பாஷ்யம்.—"யாக்ஞவல்க்யருக்கு மைத்ரேயி என்றும் காத்யாயனி என்று மாக இரண்டு மனையாளிருந்தனர்" என்றும், "திவோதாஸர் என்பவரின் புத் திரரான ப்ரதர்த்தனன் என்பவர் இந்திரனது ப்ரியமான ஸ்தானத்தை யடைந் தார்" என்றும், "புத்திரன் என்பவரின் கோத்திரத்திற் பிறந்தவரும், ஜனஸ்ருதர் என்பவரின் புத்ரனுமான அரசன் ஸ்ரத்தையை முன்னிட்டு வெகுதானஞ் செய்பவ ராகவும், வெகு அன்னதானஞ் செய்கின்றவராகவும், கொடையாளியாகவும் இருந் தார்" என்றுமான இம்மாதிரியான வேதாந்தங்களிற் சொல்லப்படும் கதைகளிற் பின்வருமாறு ஸந்தேஹமுதயமாகிறது. அதாவது:—இக்கதை பாரிப்லவ ப்ரயோ கத்துக்குவேண்டி யேற்பட்டனவா? அல்லது ஸமீபத்திலுள்ள வித்யாப்ரதிபத்தி க்குவேண்டி யேற்பட்டனவா? என்றும். கதைசொல்லும் இந்த ஸ்ருதிகள் பாரி ப்லவத்துக்கு வேண்டியேற்பட்டனவே யாகும். கதையாகவிருத்தல் என்பது பொ

गस्य च पारिप्लवे चोदितत्वात्। ततश्च विद्याप्रधानत्वं वेदान्तानां न स्यात्, मन्त्रवत्प्रयोगशेषत्वादिति चेत्। तन्न। कस्मात्। विशेषितत्वात्। 'पारिप्लवमाचक्षीत' इति हि प्रकृत्य 'मनुर्वैवस्वतो राजा' इत्येवमादीनि कानिचिदेवाख्यानानि तत्र विशेष्यन्ते। आख्यानसामान्याच्चेत्सर्वगृहीतिः स्यादनर्थकमेवेदं विशेषणं भवेत्। तस्मान्न पारिप्लवार्था एता आख्यानश्रुतयः॥ २३॥

## तथा चैकवाक्यतोपबन्धात्॥ २४॥

असति च पारिप्लवार्थत्व आख्यानानां सन्निहितविद्याप्रतिपादनोपयोगितैव न्याय्या। एकवाक्यतोपबन्धात्। तथाहि तत्र तत्र सन्निहिताभिर्विद्याभिरेकवाक्यता दृश्यते प्ररोचनोपयोगात्प्रतिपत्तिसौकर्योपयोगाच्च। मैत्रेयीब्राह्मणे तावत्—'आत्मा वा अरे द्रष्टव्यः' (बृ० ४।५।६) इत्याद्यया विद्ययैकवाक्यता दृश्यते। प्रातर्दनेऽपि 'प्राणोऽस्मि प्रज्ञात्मा

---

துவாக விருப்பதே அதன் காரணமாகும். கதை சொல்லுவதோ பாரிப்லவத்தில் விதிக்கவும் பட்டிருக்கிறது. ஆகவே வேதாந்தங்கள் வித்யையை ப்ரதானமாக (முக்கியமாகக்) கொண்டன என்பது ஸம்பவிக்காது. மந்திரமானது போல ப்ரயோகத்துக்குச் சேஷமாக (அங்கமாக) இருப்பதே அதன் காரணமாகும். எனின்? அது பொருந்தாது. ஏன்? தனிப்படக் கூறப்பட்டிருப்பதாலென்க. அதாவது:—"பாரிப்லவத்தைச் சொல்லவேண்டும்" என்று தொடங்கி "மனுர்வைவஸ்வதோ ராஜா" என்றதாதிகளான சிலகதைகளே தனிப்பட அங்கு கூறப்படுகிறது என்றும். கதையாக இருப்பதைக் கொண்டு மட்டும் எல்லாக் கதைகளேயும் கிரஹிப்பதாயின் "மனுர்வைவஸ்வத:" என்றதாதிகளான தனித்த வுபதேசம் வீணாகவாகிவிடும். ஆகவே வேதாந்தத்திற் சொல்லப்படும் கதைகள் பாரிப்லவத்துக்கு வேண்டியவல்ல.

(ஸூ) ததாச ஏகவாக்யதோபபந்தாத் (24)

(ப—ரை) **तथा च** (ததா ச)=ஆக்யானங்களுக்கு பாரிப்லவார்த்தத்வமான தில்லாதிருப்பதால் ஸமீபத்திலுள்ள வித்யையைச் சொல்லுவதற்கு உபயோகப்படுந் தன்மைதான் நியாயமாகவாகிறது. ஏன்? **एकवाक्यतोपबन्धात्** (ஏகவாக்யதோபந்தாத்)=ஸமீபத்திலுள்ள வித்யைகளுடன் இவற்றுக்கு ஏகவாக்யத்வமேதான் காணப்படுகிறது. (24) (எ—று)

**பாஷ்யம்**—பாரிப்லவத்துக்கு வேண்டியதென்பது இல்லாதபொழுது ஆக்யானங் (கதை) களுக்கு ஸமீபத்திலுள்ள வித்யையின் ப்ரதிபாதனத்துக்கு உபயோகமாக விருக்கும் தன்மையே தான் நியாயமாக வாகிறது. என்? ஏகவாக்யதை காணப்படுவதாலென்க. அதாவது:—ஆங்காங்கு ஸமீபத்திலுள்ள வித்யைகளுடன் ஏகவாக்யத்வமானது காணப்படுகிறது. ப்ரரோசனையில் (ருசியையுண்டு பண்ணுவதில்) உபயோகமுள்ளதா யிருப்பதும், க்ஞானஸவுகரியத்தில் உபயோகமுள்ளதா யிருப்பதுமே அதன் காரணமாகும். மைத்ரேயீ ப்ராம்ஹணத்திலோ வெனில்—"ஹேமைத்ரேயி! ஆத்மாவேயன்றோ தர்சனார்ஹமானது" என்றதாதி

इत्याद्यया। जानश्रुतिरित्यत्रापि 'वायुर्वाव संवर्गः' (छां० ४। ३। १) इत्याद्यया। यथा 'स आत्मनो वपामुदखिदत्' इत्येवमादीनां कर्मश्रुतिगतानामाख्यानानां सन्निहितविधिस्तुत्यर्थता तद्वत्। तस्मान्न पारिप्लवार्थत्वम् ॥ २४ ॥

## ५ अग्नीन्धनाद्यधिकरणम्। सू० २५

## अत एव चाग्नीन्धनाद्यनपेक्षा ॥ २५ ॥

आत्मबोधः फले कर्मापेक्षो नोवाह्यपेक्षते। अङ्गिनोऽङ्गेष्वपेक्षायाः प्रयाजादिषु दर्शनात् ॥ १ ॥

अविद्यातमसोर्ध्वस्तौ दृष्टं हि ज्ञानदीपयोः। नैरपेक्ष्यं ततोऽत्रापि विद्या कर्मानपेक्षिणी ॥ २ ॥

'पुरुषार्थोऽतः शब्दात्' (ब्र० सू० ३। ४। १) इत्येतद्व्यवहितमपि संभवादत इति

---

வித்யையுடன் ஏகவாக்யத்வமானது காணப்படுகிறது. ப்ரதாதனுக்யாயிகை சொல்லு மிடத்திலோ வெனில் "ப்ரக்ஞாத்மாவான ப்ராணனாக விருக்கிறேன்" என்றதாதி வித்யையுடன் ஏகவாக்யத்வமானது காணப்படுகிறது. ஜாநஶ்ருதி என்ற இந்த விடத்திலுங்கூட "வாயுவேயல்ரோ ஸம்வர்க்கம்" என்றதாதி வித்யையுடன் ஏகவாக்யத்வமானது காணக்கிடைக்கிறது. "அவர் தன்னுடைய வபையைப் பிடுங் கினர்" என்பதாய் கர்மகாண்ட ஶ்ருதிகளிலுள்ள இம்மாதிரியான கதைகளுக்கு அதனருகிலுள்ள விதியை ஸ்தோத்திரஞ் செய்யுந்தன்மை சொல்லப்படுவது எவ் விதமோ அவ்விதமே இங்கும் காணவேண்டும். ஆனதுபற்றி ஆக்யானங்கள் பாரிப்லவத்துக்கு வேண்டியல்ல என்றேறப்பட்டது. (24) (எ—று)

நான்காவது பாரிப்லவாதிகரணம் முற்றிற்று.



## அக்னீந்தனாத்யதிகரணம் 5.

## (ஸூ) அதஏவ ச அக்னீந்தனாத்யநபேக்ஷா (25)

(ப—ரை) अत एव (அதஏவ)=வித்யையானது புருஷார்த்தஹேதுவாக வாவதி லிருந்து अग्नीन्धनाद्यनपेक्षा च (அக்னீந்தனாத்யநபேக்ஷாச)=அக்னீந்தனாதிகளின் (அவற்றை ஸாதனமாகக்கொண்ட கர்மாதிகளின்) அபேக்ஷை வித்யைக்கில்லை.

### வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ஆத்மக்ஞானமானது தனது பலனில் கர்மாவை யபேக்ஷிக்கிறதா? அல்லது அபேக்ஷிப்பதில்லையா? என்பது ஸந்தேஹம். அங்கத்தின் அபேக்ஷை அங்கிக்கிருப்பதை ப்ரயாஜாதிகளில் காண்பதால் ஆத்மக்ஞானமான அங்கியா னது தனது அங்கமான கர்மாவை அபேக்ஷிக்கத்தான் செய்யும் என்பது பூர்வ பக்ஷம். அவித்யை, இருள்இவற்றை நாசஞ்செய்யும் விஷயத்தில் முறையே க்ஞா னம் தீபம் இவற்றுக்குப் பிறவற்றின் அபேக்ஷயின்மையானது காணப்படுகிற தன்றோ? ஆனதுபற்றி இவ்விஷயத்திலும் ஆத்மக்ஞானமானது கர்மாவை யபே க்ஷிப்பதில்லை என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—"புருஷார்த்தோத: ஶப்தாத்" என்பது வெகுஅதிகரணங்களுக்கு முன் படிக்கப்பட்டிருப்பினும் இங்கு ஸம்பவமிருப்பதை யொட்டி ஸூத்திரத்தி

परामृश्यते। अत एव च विद्यायाः पुरुषार्थहेतुत्वादग्नीन्धनादीन्याश्रमकर्माणि विद्यया स्वार्थसिद्धौ नापेक्षितव्यानीत्याद्यस्यैवाधिकरणस्य फलमुपसंहरत्यधिकविवक्षया ॥ २५ ॥

## ६ सर्वापेक्षाधिकरणम्। सू० २६-२७

## सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत् ॥ २६ ॥

---

ளுள்ள "அத:" என்றதால் அனுவாதம் செய்யப்படுகிறது. அத ஏவச=வித்யையானது புருஷார்த்தத்துக்கு ஹேதுவாகவாவதால் அக்னீந்தனாதிகளை=ஆஸ்ரம கர்மங்களைத் தனதுபயன் ஸித்திக்கும் விஷயத்தில் வித்யையானது அபேக்ஷிப்பதில்லையென்பதாய் இந்தப் பாதத்தின் முதலாவது அதிகரணத்தினுடைய பயனை அதிகமான விஷயத்தைச் சொல்லக் கருத்துக்கொண்டவராய் முடிக்கிறார். (25)

குறிப்பு—கர்மங்களுக்கு ஸாமர்த்தியமில்லாததால் முக்தியில் அபேக்ஷையில்லையே யொழிய வித்யையுண்டாகும் விஷயத்தில் சித்தசுத்தி வாயிலாக கர்மாவின் அபேக்ஷையுண்டு என்பது பாஷ்யத்தின் கருத்து. (எ—று)

ஐந்தாவது அக்னீந்தனாத்யதிகரணம் முற்றிற்று



### ஸர்வாபேக்ஷாதிகரணம் 6.

(ஸூ) ஸர்வாபேக்ஷா ச யக்ஞாதிச்ருதே: அச்வவத்(26)

(ப—ரை) ஆத்மவித்யைக்குத் தனது உத்பத்தியில் **सर्वापेक्षा च** (ஸர்வாபேக்ஷாச)=எல்லா ஆஸ்ரமகர்மங்களின் அபேக்ஷையு மிருக்கிறது. ஏன்? **यज्ञादिश्रुतेः** (யக்ஞாதிஸ்ருதே:)="யக்ஞேந தானேன" என்றதாதி சுருதியிருப்பதே அதன் காரணமாகும். **अश्ववत्** (அஸ்வவத்)=குதிரையானது அதன் யோக்யதையை முன்னிட்டு தேர்முதலியவற்றில் கட்டப்படுகிறதே யொழிய கலப்பையுழுவதில் கட்டப்படுவதில்லை என்பது எவ்விதமோ அவ்விதமே இங்குங் காண்க. (26) (எ—று)

குறிப்பு—சிலதேசங்களில் குதிரையைக் கலப்பையிற் கட்டிஉழுவதிலேயே உபயோகப்படுத்துவதைநாம் அனுபவத்தில் காண்கிறோம். அவ்விதமிருக்க "அஸ்வவத்" என்றுசொன்னது எவ்விதம் பொருந்துமெனின்? கூறுவாம். பொதுவாய் குதிரையானது தேர் முதலியவற்றில் கட்டத்தகுதியுடையதே அன்றிக் கலப்பையிற் கட்டத் தகுதியுடையதன்று. என்றகருத்துக்கொண்டே இவ்விதஞ் சொல்லப்பட்டது. ஆனால் சிலதேசத்தில் கலப்பையில் கட்டுகின்றனரே எனின்? பெரும்பாலான வைதிகர்கள் பசுவைத்தைவமாக எண்ணிப் பூஜிக்கின்றனர். அவ்விதமே வைதிக சாஸ்திரமு மிருக்கிறது. சிலர் பசுவைவதை செய்கின்றனர் அதற்காக அவர்செய்வது தகுதியுள்ளதாகவாகுமோ? ஒருபொழுதும் தகுதியுள்ளதாகவாகமாட்டாது. அதுபோலவே குதிரையைக் கலப்பையில் கட்டுவது முற்றிலும் தகாதகாரியமே என்பது ஸூத்திரக்காரரின் கருத்து என்றேற்படுகிறது.

उत्पत्तावनपेक्षेय मुत कर्माण्यपेक्षते । फले यथानपेक्षैवमुत्पत्तावनपेक्षता ॥ १ ॥

यज्ञशान्त्यादिसापेक्षं विद्याजन्म श्रुतिद्वयात् । फलेऽनपेक्षितोऽप्यश्वो रथे यद्वदपेक्ष्यते ॥ २ ॥

इदमिदानीं चिन्त्यते किं विद्याया अत्यन्तमेवानपेक्षाश्रमकर्मणामुतास्ति काचिदपेक्षेति। तत्रात एवाग्नीन्धनादीन्याश्रमकर्माणि विद्या स्वार्थसिद्धौ नापेक्षन्त एवमत्यन्तमेवानपेक्षायां प्राप्तायामिदमुच्यते सर्वापेक्षा चेति। अपेक्षते च विद्या सर्वाण्याश्रमकर्माणि नात्यन्तमनपेक्षैव। ननु विरुद्धमिदं वचनमपेक्षते चाश्रमकर्माणि विद्या नापेक्षते चेति। नेति ब्रूमः। उत्पन्ना हि विद्या फलसिद्धिं प्रति न किञ्चिदन्यदपेक्षते, उत्पत्तिं प्रति त्वपेक्षते। कुतः—यज्ञादिश्रुतेः। तथाहि श्रुतिः—'तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति

---

வையாஸிக நியாயமாலை.

(க–ரை) ஆத்மஜ்ஞானமானது தனது உத்பத்தியில் கர்மாக்களையபேக்ஷிப்பதில்லையா? கர்மாக்களை அபேக்ஷிக்கின்றதா? என்பது ஸந்தேஹம். பலனில் எவ்விதமபேக்ஷிப்பதில்லையோ அவ்விதமே தனது உத்பத்தியிலுங் கூடகர்மாக்களையபேக்ஷிப்பதில்லை என்பது பூர்வபக்ஷம். "यज्ञेन दानेन" யஜ்ஞத்தாலும் தானத்தாலும் என்றும், "शान्तो दान्तः" சாந்தனுகவும் தாந்தனுகவும் என்றுமாக இரண்டு சுருதிகளிருப்பதால் வித்யையின் (ஆத்மக்ஞானத்தின்) உத்பத்தியானது யாகம், शान्ति (சமகுணம்) இவற்றை யபேக்ஷித்தே ஏற்படுகிறது. பலப்பையில் குதிரையானது அபேக்ஷிக்கப்படா விடினும் தேரில் எவ்விதம் அபேக்ஷிக்கப்படுகிறதோ அவ்விதமே இங்குமாகும் என்பது ஸித்தாந்தம். (எ–று)

பாஷ்யம்.—வித்யைக்கு முற்றிலும் ஆஶ்ரமகர்மங்களின் அபேக்ஷையேகிடையாதா? அல்லது யாதானுமொருவகையில் அவற்றின் அபேக்ஷயுண்டா? என்பது இதுபோழ்து விசாரிக்கப்படுகிறது. அவ்விடத்தில் ஆனதுபற்றியே அக்னீந்தனுதிகளான ஆஶ்ரமகர்மங்கள் வித்யையின் சொந்தப்பயன் (அவித்யாநிவிருத்தி) ஏற்படும் விஷயத்தில் அபேக்ஷிக்கப்படாததால் இவ்விதமே முற்றிலுமே அவற்றின் அபேக்ஷயில்லை எனப்ராப்தமாகவே "ஸர்வாபேக்ஷாச" என்ற இது சொல்லப்படுகிறது. அதாவது:—வித்யையானது எல்லா ஆஶ்ரமகர்மங்களையு மபேக்ஷிக்கிறதேயொழிய முற்றிலும் அவற்றின் அபேக்ஷயே இல்லை என்பதில்லை.

சங்கை—வித்யையானது ஆஶ்ரமகர்மங்களை யபேக்ஷிக்கவும் செய்கிறது அபேக்ஷிப்பதுமில்லை என்ற இந்தவசனம் முறண்பட்டதாகவாகுமன்றோ எனின்?

உத்தரம்—இல்லையென்று சொல்லுகிறோம். அதாவது:—உண்டானவித்யை ஆத்மக்ஞான) யானது பலஸித்தியைக் குறித்து வேறுஒன்றையு மபேக்ஷிப்பதில்லை. தனது உத்பத்தியைக் குறித்தோ வெனில் பிறவற்றை யபேக்ஷிக்கிறது. [illegible]? யக்ஞாதி ஶ்ருதியிருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—"அந்த [illegible]த ஆத்மாவை ப்ராம்ஹணர்கள் வேதாநுவசனத்தினுலும், யாகத்தாலும், தானத்[illegible]லும், தபஸ்ஸினுலும் விஷயங்களை விலக்குவதாலும் அறியவிரும்புகின்றனர்"

यज्ञेन दानेन तपसाऽनाशकेन' (बृ० ४। ४। २२) इति यज्ञादीनां विद्यासाधनभावं दर्शयति। विविदिषासंयोगाच्चैषामुत्पत्तिसाधनभावोऽवसीयते। 'अथ यद्यज्ञ इत्याचक्षते ब्रह्मचर्यमेव तत्' (छा० ८। ५। १) इत्यत्र च विद्यासाधनभूतस्य ब्रह्मचर्यस्य यज्ञादिभिः संस्तवाद्यज्ञादीनामपि हि साधनभावः सूच्यते। 'सर्वे वेदा यत्पदमामनन्ति तपांसि सर्वाणि च यद्वदन्ति। यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं सङ्ग्रहेण ब्रवीमि' (कठ० २। १५) इत्येवमाद्या च श्रुतिराश्रमकर्मणां विद्यासाधनभावं सूचयति। स्मृतिरपि—'कषायपक्तिः कर्माणि ज्ञानं तु परमा गतिः। कषाये कर्मभिः पक्वे ततो ज्ञानं प्रवर्तते' इत्येवमाद्या। अश्ववदिति योग्यतानिदर्शनम्। यथाच योग्यतावशेनाश्वो न लाङ्गलाकर्षणे युज्यते रथचर्यायां तु युज्यते। एवमाश्रमकर्माणि विद्यया फलसिद्धौ नापेक्ष्यन्त उत्पत्तौ चापेक्ष्यन्त इति ॥ २६ ॥

शमदमाद्युपेतः स्यात्तथापि तु तद्विधेस्तदङ्गतया
तेषामवश्यानुष्ठेयत्वात् ॥ २७ ॥

---

என்ற சுருதியானது யாகாதிகள் வித்யைக்கு ஸாதனமென்பதைத் தெரிவிக்கிறது. இந்த யக்ஞம் தானம் தபஸ் முதலியவற்றுக்கு விவிதிஷை (வேதநேச்சை) யுடன் ஸம்யோகமிருப்பதாலும் க்ஞானோத்பத்திக்கு ஸாதனமாக இருக்குந்தன்மை நிஸ்சயிக்கப்படுகிறது. "பின்னர் எதை யக்ஞமெனச் சொல்லுகின்றனரோ அது ப்ரம்ஹசர்யமே யாகும்" என்றவிடத்திலும் வித்யைக்கு ஸாதனமாகவான ப்ரம்ஹசர்யத்தை யாகாதிகளாக ஸ்துதிசெய்திருப்பதிலிருந்து யக்ஞாதிகளுக்கும் வித்யைக்கு ஸாதனமாக இருக்குந்தன்மை சூசிப்பிக்கப்படுகிறது. "எல்லாவேதங்களும் எந்தப் பதத்தைச் சொல்லுகின்றனவோ எல்லாத் தபஸ்ஸுகளும் எதைச் சொல்லுகின்றனவோ, எதில் இச்சை கொண்டவர்களாய் ப்ரம்ஹசர்யத்தை யனுஷ்டிக்கின்றனரோ அந்தப் பதத்தைச் சுருக்கமாக உமக்குச் சொல்லுகின்றேன்" என்றதாதி ஶ்ருதியும் ஆஶ்ரம கர்மங்களுக்கு வித்யையைக்குறித்து ஸாதனமாக விருத்தலைச் சூசிப்பிக்கின்றது. "கர்மங்களைச் செய்தால் சித்ததோஷம் விலகுகிறது. க்ஞானமே முடிவானபலனாகும். கர்மங்களால் கஷாயமானது (சித்த தோஷமானது) பக்குவத்தை யடைந்ததும் அதனின்றும் க்ஞானமானது ஏற்படுகிறது". என்றதாதி ஸ்மிருதியு மிருக்கிறது. ஸூத்திரத்தில் குதிரை போல என்றது தகுதியைக் காட்டுவதாகும். தகுதியை முன்னிட்டுக் குதிரையானது கலப்பையை இழுப்பதில் கட்டப்படாது தேரிழுப்பதிலே கட்டப்படுவது எவ்விதமோ அவ்விதமே ஆஶ்ரமகர்மங்கள் வித்யையினால் தனது பலனுண்டாகும் விஷயத்தில் அபேக்ஷிக்கப் படாது தனது (க்ஞானத்தினது) உத்பத்தியில் அபேக்ஷிக்கப்படுகிறது என்றும். (26) (எ—று)

(ஸூ) சமதமாத்யுபேதः ஸ்யாத் ததாபி து தத்விதேः ததங்கதயா தேஷாம் அவச்யானுஷ்டேயத்வாத் (27)

यदि कश्चिन्मन्येत यज्ञादीनां विद्यासाधनभावो न न्याय्यो विध्यभावात्। 'यज्ञेन विविदिषन्ति' इत्येवञ्जातीयका हि श्रुतिरनुवादस्वरूपा विद्याभिष्टवपरा न यज्ञादिविधिपरा। इत्थं महाभागा विद्या यद्यज्ञादिभिरेतामवाप्तुमिच्छन्तीति। तथापि तु शमदमाद्युपेतः स्याद्विद्यार्थी 'तस्मादेवंविच्छान्तो दान्त उपरतस्तितिक्षुः समाहितो भूत्वात्मन्येवात्मानं पश्यति' (बृ० ४।४।२३) इति विद्यासाधनत्वेन शमदमादीनां विधानाद्विहितानां चावश्यानुष्ठेयत्वात्। नन्वत्रापि शमाद्युपेतो भूत्वा पश्यतीति वर्तमानापदेश उपलभ्यते न

---

(ப—ரை) (யக்ஞாதிகளுக்கு வித்யாஸாதனத்தன்மை சொல்லுவது பொருந்தாதுஎன்றும், "யக்ஞத்தால் அறிவை யடையவிருப்புகின்றனர்" என்றது யாகாதிகளால் இதையடைய விரும்புகின்றன ரென்றால் வித்யையின் பெருமையைச் சொல்லவேண்டுமோ? என வித்யையை ஸ்துதிக்கவந்ததே யொழிய இந்த வாக்கியம் யாகாதிகளை விதிக்கவந்த தன்று என்றும் ஒருவன் எண்ணுவான்) तथापि तु (ததாபி து)=அவ்விதமெண்ணினபோதிலும், [विद्यार्थी (வித்யையில் விருப்பமுள்ளவன்]=शमदमाद्युपेतः स्यात् (ஶமதமாத்யுபேதஃ ஸ்யாத்)=சமம் தமம் முதலியவற்றுடன் கூடினவனாகவே இருக்கவேண்டும். तद्विधेः (தத்விதேஃ)=அந்தச் சமாதிகள் வித்யாஸாதனங்களென விதியிருப்பதே அதன் காரணமாகும். तदङ्गतया (ததங்கதயா)=அந்த வித்யைக்கு அங்கமாகும் முறையில் तेषाम् (தேஷாம்)=அந்தச் சமதமாதிகள் अवश्यानुष्ठेयत्वात् (அவஶ்யாநுஷ்டேயத்வாத்)=கட்டாயம் அனுஷ்டிக்க வேண்டியனவாகவு மிருக்கின்றன. (27) (எ—று)

பாஷ்யம்.—விதியில்லாமை பற்றி யக்ஞாதிகளுக்கு வித்யைக்குச் சாதனமாகுந்தன்மை சொல்லுவது பொருந்தாது. "யக்ஞேந விவிதிஷந்தி" யாகத்தால் அறிய விருப்புகின்றனர் என்ற இப்மாதிரியான சுருதியானது அனுவாத ஸ்வரூபமுள்ளதாய் வித்யையை ஸ்துதிக்கவந்ததாகுமே யொழிய யக்ஞாதிகளை விதிக்க வந்ததன்று. யக்ஞாதிகளைக் கொண்டும் இந்த வித்யையை அடையவிரும்புகின்கின்றனர் என்பது பற்றி இந்தவித்யையானது இத்தகைய மஹிமை யுள்ளது என வொருவன் எண்ணுவானேல் அவ்விதமவனெண்ணின போதிலும் வித்யையில் விருப்பமுள்ளவன் சமதமாதிகளுடன் கூடினவனாகவே இருத்தல்வேண்டும். "ஆனதுபற்றி இவ்வித அறிவுள்ளவன் சாந்தனாகவும், (அந்தரிந்திரிய ஜயமுள்ளவனாகவும்) தாந்தனாகவும் (பாஹ்யேந்திரிய ஜயமுள்ளவனாகவும்) உபரதனாகவும் (ஸன்யாஸியாகவும்) திதிக்ஷுவாகவும் (காமாதிகளை ஜயித்தவனாகவும்) ஸமாஹிதனாகவும் (ஒரேயிடத்தில் மனத்தை நெறுத்தினவனாகவும்) இருந்து கொண்டு தன்னிடத்திலேயே ஆத்மாவைப்பார்க்கிறான்" என்றதால் வித்யைக்கு ஸாதனமாக சமதமாதிகளின் விதியிருப்பதாலும் விதிக்கப்பட்டவை அவஶ்யமனுஷ்டேயமாகவிருப்பதாலுமேஎன்க.

சங்கை— இவ்விடத்திலுங்கூட சமாதிகளுடன் கூடினவனாகவிப்பார்க்கிறான் என்றதால் நிகழ்கால ப்ரயோகம் காணப்படுகிறதே யொழிய விதிகாணப்படவில்லை யன்றோ எனின்?

विधिः। नेति ब्रूमः। तस्मादिति प्रकृतप्रशंसापरिग्रहाद्विधित्वप्रतीतेः। पश्येदिति च माध्यन्दिना विस्पष्टमेव विधिमधीयते। तस्माद्यज्ञाद्यनपेक्षायामपि शमादीन्यपेक्षितव्यानि। यज्ञादीन्यपि त्वपेक्षितव्यानीति यज्ञादिश्रुतेरेव। ननूक्तं यज्ञादिभिर्विविदिषन्तीत्यत्र न विधिरुपलभ्यत इति। सत्यमुक्तं तथापि त्वपूर्वत्वात्संयोगस्य विधिः परिकल्प्यते। नह्ययं यज्ञादीनां विविदिषासंयोगः पूर्वं प्राप्तो येनानूद्येत 'तस्मात्पूषा प्रपिष्टभागोऽदन्तको हि' इत्येवमादिषु चाश्रुतविधिकेष्वपि वाक्येष्वपूर्वत्वाद्विधिं परिकल्प्य पौष्णं पेषणं विकृतौ प्रतीयेतेत्यादिविचारः प्रथमे तन्त्रे प्रवर्तितः। तथाचोक्तम् 'विधिर्वा धारणवत्' (ब्र० सू० ३।४।२०) इति। स्मृतिष्वपि भगवद्गीताद्यास्वनभिसन्धाय फलमनुष्ठितानि यज्ञादीनि मुमुक्षोर्ज्ञानसाधनानि भवन्तीति प्रपञ्चितम्। तस्माद्यज्ञादीनि शमदमादीनि च यथाश्रमं सर्वाण्येवाश्रमकर्माणि विद्योत्पत्तावपेक்षितव्यानि। तत्राप्येवंविदिति विद्यासंयो-

---

உத்தரம்—அவ்விதமில்லை யென்று சொல்லுகிறோம். சுருதியில் [யாதுகாரணத்தால் இவ்வித அறிவுள்ளவன் பாபமான கர்மத்தினால் லேபத்தை (ஸம்பந்தத்தை) அடைவதில்லையோ] "அக்காரணத்தினால்" என்றதால் முன்னர் கூறிய ப்ரஶம்ஸையைப் (புகழுரையைக்) கிரஹித்திருப்பதால் "पश्यति (பஶ்யதி)=என்றவிடத்தில் விதித்தன்மையின் தோற்றம் ஏற்படவேதான் செய்கிறது. மாத்யந்தினர்கள் (சுக்லயஜுர்வேதிகள்) पश्येत् (பஶ்யேத்)=என்பதாய்த் தெளிவாகவே விதியை (விதிபோதக சப்தத்தைப்) படிக்கின்றனர். ஆகவே யக்ஞாதிகளின் அபேக்ஷையில்லாவிடினுங்கூட ஶமாதிகள் அபேக்ஷிக்கக்கூடியனவாகவே தானாகின்றன. யக்ஞாதிகளுங் கூட அபேக்ஷிக்கத்தக்கனவே தானாகும். யக்ஞாதி ஶ்ருதி யிருப்பதினாலேயே என்க.

சங்கை—"யக்ஞாதிகளால் அறிவை யடையவிரும்புகின்றனர்" என்ற விடத்தில் விதிகாணப்படவில்லை எனச் சொல்லப்பட்டதன்றோ எனின்?

உத்தரம்—சொல்லப்பட்டது உண்மைதான். ஆயினுங்கூட அபூர்வமாக (வேறுப்ரமாணத்தாற் கிடைக்காததாக) இருப்பதால் யக்ஞாதி ஸம்பந்தத்தின் விதியானது கல்பிக்கப்படுகிறது. யக்ஞாதிகளுக்கு வேதநேச்சையுடன் ஸம்பந்தமானது முன்னர் ப்ராப்த்தமன்று. எதுகொண்டு அது அனுவதிக்கப்படுமோ. "ஆகவே பூஷா என்றதேவதை பிஷ்டத்தை (மாவைத்) தனது பாகமாகவுடையது. அது தந்தங்களற்றதன்றோ" என்றதாதிகளான விதிகாணப்படாத வாக்கியங்களிலுங்கூட அபூர்வமாக (வேறுப்ரமாணத்தாற் கிடைக்காததாக) இருப்பது பற்றி விதியைக் கல்பிக்கவேண்டும் என "பௌஷ்ணம் பேஷணம் விக்ருதௌ ப்ரதீயேத" என்றதாதி விசாரமானது பூர்வமீமாம்ஸையில் செய்யப்பட்டிருக்கிறது. அவ்விதமே "விதிர்வா தாரணவத்" என்ற விடத்திற் சொல்லவும் பட்டிருக்கிறது. பகவத்கீதாதிகளான ஸ்மிருதிகளில் பலனை எதிர்பாராது செய்யப்பட்ட யக்ஞாதிகள் முமுக்ஷுவுக்குக் ஞானஸாதனங்களாகவாகின்றன என விளக்கவும் பட்டிருக்கிறது. ஆகவே யக்ஞாதிகளும் சமதமாதிகளுமான அந்தந்த ஆஶ்ரமத்துக்குத்

गात्प्रत्यासन्नानि विद्यासाधनानि शमादीनि, विविदिषासंयोगात्तु बाह्यतराणि यज्ञादीनीति विवेक्तव्यम् ॥ २७ ॥

७ सर्वान्नानुमत्यधिकरणम् । सू० २८-३१

सर्वान्नानुमतिश्च प्राणात्यये तद्दर्शनात् ॥ २८ ॥

---

தக்கபடிக்குள்ள எல்லா ஆச்ரம கர்மங்களுமே வித்யையினுத்பத்தியில் அபேக்ஷிக்கத் தக்கனவாகவே தானுகின்றன. அதிலுங்கூட "ஏவம் வித்" இவ்விதமறிபவன் என்பது வித்யையுடன் ஸம்பந்தத்தை யடைவதால் சமாதிகள் அந்தரங்கங்களான வித்யாஸாதனங்களென்றும், வேதநேச்சையுடன் ஸம்பந்தத்தை யடைவதால் யக்ஞாதிகள் பஹிரங்கஸாதனங்களென்றும் பகுத்தறியவேண்டும். (27)

ஆருவது ஸர்வாபேக்ஷாதிகரணம் முற்றிற்று.



## ஸர்வான்னுநுமத்யதிகரணம் 7.

(அ-கை) சாந்தோக்கியத்தில் இந்திரியங்கள் ஒன்றுக்கொண்டு விவாதிக்கத் தொடங்கின என்றவிடத்தில் முக்யப்ராணன் அந்த இந்திரியங்களைப் பார்த்து எனக்கு எது அன்னமாகப் போகிறது என்றது. அதுகேட்ட இந்திரியங்கள் "நாயீருகவும், பக்ஷிகளீருகவுமுள்ள எல்லாப்ராணிகளுக்கும் எது அன்னமோ அதுவே உனது அன்னமாகும்" என்றன. ஆகவே இம்முறையால் ஸர்வமும் ப்ராணனுடைய அன்னம் எனச் சிந்திக்கவேண்டும் என்றுவிதித்துச் சுருதி சொல்லுவதாவது:—" இவ்வித ப்ராணேபாஸகன் விஷயத்தில் அன்னமாகவில்லாதது ஒன்றுமே இல்லை" என்றும். அதாவது:—எல்லாமே ப்ராணனுக்கு அன்னமாகவாவதால் எல்லாவற்றையுமே அன்னமாகக் கொண்ட ப்ராணேபாஸகன் விஷயத்தில் அன்னமாகவாகாதது ஒன்றுமே இல்லையென்றும். அங்கு ஸம்சயமுதயமாகிறது. அதாவது:—ப்ராணேபாஸகனுக்குச் சொன்ன இந்த ஸர்வான்ன அநுமதியானது சமதமாதிகள் போல வித்யைக்கு அங்கமாகச் சொல்லப்படுகிறதா? அல்லது ஸ்துதிக்கு வேண்டி சொல்லப்படுகிறதா? என்றும். இவ்விதம் ஸந்தேஹம் வரவே ஸர்வான்ன அநுமதியானது வித்யாங்கமாகத் தான் விதிக்கப்படுகிறது என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே வித்யையை ஸ்துதிக்கவேண்டியே ஸர்வான்னுநுமதி சொல்லப்படுகிறது என்று ஸித்தாந்தப் படுத்தவேண்டி நான்கு ஸூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணம் ஆரம்பிக்கப் படுகிறது. அவற்றுள் முதலாவது ஸூத்திரம் பின்வருமாறு.—

(ஸூ) ஸர்வன்னுநுமதி: ச ப்ராணுத்யயே தத்தர்சனுத் (28)

(ப-ரை) सर्वान्नानुमतिश्च (ஸர்வான்னுநுமதிஸ் ச)=ப்ராணேபாஸகனுக்குச் சொன்ன ஸர்வான்னுநுமதியும், प्राणात्यये (ப்ராணுத்யயே)=ப்ராணனுக்கே (உயிர்க்கே) ஆபத்து நேருங்காலத்திற்றுன் என்று கண்டுகொள்ள வேண்டும். ஏன்? तद्दर्शनात् (தத்தர்ஸனுத்)=அவ்விதம் சுருதியில் காணப்படுவதாலென்க. (28)

सर्वाशनविधिः प्राणविदोऽनुज्ञाऽथवाऽऽपदि । अपूर्वत्वेन सर्वान्नभुक्तिर्धर्मार्थं विधीयते ॥ १ ॥

श्वाद्यन्नभोजनाशक्तेः शास्त्राच्चाभोज्यवारणम् । आपदि प्राणरक्षार्थमेवानुज्ञायतेऽखिलम् ॥ २ ॥

प्राणसंवादे श्रूयते छन्दोगानाम्—'न ह वा एवंविदि किञ्चनानन्नं भवति' (छा० ५। २। १) इति। तथा वाजसनेयिनाम्—'न ह वा अस्यानन्नं जग्धं भवति नानन्नं प्रतिगृहीतम्' (बृ० ६। १। १४) इति। सर्वमेवास्यादनीयमेव भवतीत्यर्थः। किमिदं सर्वान्नानुज्ञानं शमादिवद्विद्याङ्गं विधीयत उत स्तुत्यर्थं सङ्कीर्त्यत इति संशये विधिरिति तावत्प्राप्तम्। तथाहि—प्रवृत्तिविशेषकर उपदेशो भवत्यतः प्राणविद्यासन्निधानात्तदङ्गत्वेनेयं नियमनिवृत्तिरुपदिश्यते। नन्वेवं सति भक्ष्याभक्ष्यविभागशास्त्रव्याघातः स्यात्। नैष दोषः,

---

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ப்ராணோபாஸகனுக்கு ஸர்வான்னாசனம் விதிக்கப்படுகிறதா? அல்லது ஆபத்தில் ஸம்மதி மட்டுமா? என்பது ஸந்தேஹம். அபூர்வமாக (வேறுப்ரமாணத்தால் கிடைக்காததாக) இருப்பதுபற்றி ப்ராணோபாஸகனுக்கு ஸர்வான்னபோஜனம் விதிக்கத்தான் படுகிறது என்பது பூர்வபக்ஷம். நாய் முதலியவற்றைப் புஜிப்பதென்பது முடியாததாகையாலும் சாஸ்திரத்தினால் அபோஜ்யான்னமானது மறுக்கப்பட்டிருப்பதாலும், ப்ராணாபத் காலத்தில் ப்ராணனை ரக்ஷிக்கவேண்டி எல்லாம் ஸம்மதிக்கப்படுகிறது. என்பது ஸித்தாந்தம் (எ—று)

பாஷ்யம்.—சந்தோகர்களுடைய (உபநிடதத்தில்) ப்ராணஸம்வாதஞ் சொல்லுமிடத்தில் "இவ்வித ப்ராணோபாஸகன் விஷயத்தில் அன்னமாகவில்லாதது ஒன்றுமே இல்லையன்றோ" எனப் படிக்கப்படுகிறது. அவ்விதமே வாஜஸநேயிகளுடைய (சுருதியிலும்) "இவ்வித ப்ராணோபாஸகனுக்கு அன்னமாகவில்லாதது (நிஷித்தமான அன்னமானது) சாப்பிடப்பட்டதாகவுமாகாது அன்னமாக இல்லாதது ப்ரதிக்ரஹமாகப் பெறப்பட்டதாகவுமாகாது" எனப்படிக்கப்படுகிறது. எல்லாமே இவனால் சாப்பிடக்கூடியதாகவே தானாகிறது என்பது அதன் பொருள். இந்த ஸர்வான்னாநுமதியானது சமதமாதிகள் போல வித்யாங்கமாக விதிக்கப்படுகிறதா? அல்லது வித்யாஸ்துதிக்கு வேண்டி சொல்லப்படுகிறதா? என ஸந்தேஹம் வரவே முதலில் கிடைத்தது யாதென்னில் ப்ரவிருத்தி விசேஷத்தைச் செய்வதாக உபதேசமிருக்கிறது. * ஆகவே ப்ராணோபாஸனத்தின் ஸன்னிதியில் பாடமிருப்பதைக் கொண்டு அந்த ப்ராணோபாஸனத்துக்கு அங்கமாகவே இந்த ஆஹாரநியமத்தின் நிவிருத்தியானது உபதேசிக்கப்படுகிறது என்றும்.

சங்கை—இவ்விதமாயின் சாப்பிடத்தக்கதையும் சாப்பிடத்தகாததையும் பிரித்து உபதேசிக்கும் சாஸ்திரம் வீணாகிவிடுமன்றோ எனின்?

உத்தரம்—இந்தத்தோஷமில்லை. பொதுவிதி விலக்குவிதி என்ற முறையில் அந்தப் பக்ஷ்யாபக்ஷ்ய சாஸ்திரத்துக்குப் பாதம் ஸம்பவிக்கலாம். ஒருப்ராணியை

---

* விதியை அங்கீகரித்தால் இந்த வாக்கியத்துக்கு ப்ரவிருத்தியில் விசேஷத்தைப் போதிக்கும் தன்மை ஏற்படுகிறது. ஆதலால் விதாயகத்வத்தை அங்கீகரிக்க வேண்டும் என்று கருத்து.

न। 'वाल्मीकिर्मुनिपुङ्गवः' इत्यादिषु व्यभिचारदर्शनात्। इतराश्रमसन्निधानात्तु पारिशेष्यात्तत्रोत्तमाश्रमोपादानं ज्ञानप्रधानत्वादुत्तमाश्रमस्य। तस्माद्बाल्यपाण्डित्यापेक्षया तृतीयमिदं मौनं ज्ञानातिशयरूपं विधीयते। यत्तु बाल्य एव विधेः पर्यवसानमिति तथाप्यपूर्वत्वान्मुनित्वस्य विधेयत्वमाश्रीयते मुनिः स्यादिति। निर्वेदनीयत्वनिर्देशादपि मौनस्य बाल्यपाण्डित्यवद्विधेयत्वाश्रयणम्। तद्वतो विद्यावतः संन्यासिनः। कथञ्च विद्यावतः सन्न्यासिन इत्यवगम्यते। तदधिकारात् 'आत्मानं विदित्वा पुत्राद्येषणाभ्यो व्युत्थायाथ भिक्षाचर्यं चरन्ति' इति। ननु सति विद्यावत्त्वे प्राप्नोत्येव तत्रातिशयः किं मौनविधिनेत्यत आह—पक्षेणेति। एतदुक्तं भवति—यस्मिन्पक्षे भेददर्शनप्राबल्याच्च प्राप्नोति तस्मि-

---

சங்கை—"கார்ஹஸ்த்யம், ஆசார்யகுலம், மௌனம், வானப்ரஸ்தம்" என்ற விடத்தில் முனிசப்தமானது ஸன்னியாஸாஸ்ரமத்தைச் சொல்லுவதாகவும் காணப் படுகின்றதன்றோ எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. "வால்மீகி என்ற முனிபுங்கவர் (முனிகளுட்சிறந்தவர்)" என்றதாதிகளில் வ்யபிசாரம் வருகிறது (அதாவது முனிசப்தம் ஸன்னியாஸாஸ்ரமத்தையே சொல்லுமாயின் ஸன்னியாஸியாக இல்லாத வால்மீகியை முனி சிரேஷ்டர் என்றது விரோதிவிடும் என்றும்) ஆனால் சுருதியில் வேறு ஆஸ்ரமங்களின் ஸமீபபாடமிருப்பதைக் கொண்டு 'எஞ்சியிருப்பதைக்காணும் முறையில் முனிசப்தத்தால் ஸன்னியாஸாஸ்ரமம் கிரஹிக்கப்படுகிறது. ஸன்னியாஸாஸ்ரமமானது க்ஞானத்தை ப்ரதானமாகக்கொண்டதாகவுமிருக்கிறது. ஆகவே பால்யம் பாண்டித்யம் இவற்றை யபேக்ஷித்து க்ஞானாதிசயரூபமான மூன்றாவதான இந்த மௌனமானது (நிதித்யாஸனமானது) விதிக்கப்படுகிறது. ("பால்யேன திஷ்டாஸேத்" என்றதால்) பால்யத்திலேயேதான் விதியின் முடிவேற்படுகிறது என்றாலோ அவ்விதமாயினுங்கூட முனியாக விருத்தலானது அபூர்வமாக (வேறுப்ரமாணத்தால் கிடைக்காததாக) இருப்பதால் முனியாக இருக்கவேண்டும் என அதற்கே விதேயத்வமானது ஆஸ்ரயிக்கப் படுகிறது. ("மௌனம்ச நிர்வித்ய" என்றதால்) நிஸ்சயமாக அடையவேண்டியதாக விருத்தல் சொல்லியிருப்பதைக்கொண்டு பால்யம் பாண்டித்யம் இவற்றுக்குப் போல மௌனத்துக்கு விதேயத்வமானது ஆஸ்ரயிக்கப்படுகிறது. (ஸூத்திரத்திலுள்ள) தத்வத: என்றதற்கு வித்யையுள்ள ஸன்னியாஸிக்கு என்று பொருள். வித்யையுள்ளஸன்னியாஸிக்கு என எவ்விதம் கிடைக்கிறது எனின்? "ஆத்மாவை யறிந்து புத்திராதி எஷணைகளினின்றும் விடுபட்டவனாய் பிக்ஷாடனத்தைச் செய்கின்றனர்" என்றதால் ஸன்னியாஸியைச் சொல்லத்தொடங்கி யிருப்பதே அதன் காரணமாகும்.

சங்கை—வித்யையுள்ளவனாக விருத்தல் இருக்குங்கால் அதில் ஒரு அதிசயமும் தானே கிடைத்துவிடக்கூடும். இவ்விதமிருக்க மௌனவிதியினால் யாது பயன் எனின்?

உத்தரம்—இதற்கு வேண்டியே ஸூத்திரத்தில் "பக்ஷேண" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் இவ்விதம் சொல்லப்பட்டதாக வாகிறது. அதா

नैष विधिरिति । विध्यादिवत् । यथा—'दर्शपूर्णमासाभ्यां स्वर्गकामो यजेत' इत्येवञ्जातीयके विध्यादौ सहकारित्वेनाऽग्न्यन्वाधानादिकमङ्गजातं विधीयते । एवमविधिप्रधानेऽप्यस्मिन्विद्यावाक्ये मौनविधिरित्यर्थः ॥ ४७ ॥

एवं बाल्यादिविशिष्टे कैवल्याश्रमे श्रुतिमति विद्यमाने कस्माच्छान्दोग्ये गृहिणोपसंहारः 'अभिसमावृत्य कुटुम्बे' (छा० ८ । १५ । १) इत्यत्र । तेन ह्युपसंहरंस्तद्विषयमादरं दर्शयतीति । अत उत्तरं पठति—

**कृत्स्नभावात्तु गृहिणोपसंहारः ॥ ४८ ॥**

तुशब्दो विशेषणार्थः । कृत्स्नभावोऽस्य विशेष्यते । बहुलायासानि हि बहून्याश्रम-

---

வது:—எந்தப் பக்ஷத்தில் பேதக்ஞானம் வலுவாக விருப்பதுபற்றி மௌனம் ப்ராப்த்தமாகவாவதில்லையோ அந்தப் பக்ஷத்தில் 'மௌனத்தை விதிக்க வேண்டியே என்றும். * வித்யாதிபோலவாம். "ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் தர்சபூர்ண மாஸங்களால் யஜிக்கவேண்டும்" என்ற இம்மாதிரியான விதியின் ஆதியில் ஸஹகாரியாக இருப்பதுபற்றி அக்னியின் அந்வாதானம் முதலிய அங்கஸமூஹமானது விதிக்கப்படுவது போலவாம். இவ்விதமே விதியை ப்ரதானமாகக் கொள்ளாவிடினுங்கூட இந்த வாக்கியத்தில் மௌனமானது விதிக்கப்படுகிறது என்பதுபொருள்.

அவதாரிகா பாஷ்யம்.—இவ்விதம் பால்யாதிகளுடன் கூடின ஸன்யாஸாஸ்ரமமானது சாஸ்திரத்தில் சொல்லப்படுவதாக இருக்கும் பொழுது சாந்தோக்கியத்தில் "ஆசாரிய குலத்தினின்றும் திரும்பிவந்து குடும்பத்திலிருக்கவேண்டும்" என கிருஹஸ்தனுடன் முடிவு செய்தது யாது காரணம் பற்றி எனின்? கிருஹஸ்தனுடன் முடிவு பெறும் வேதமானது கிருஹஸ்தன் விஷயத்தில் தனக்குள்ள ஆதரவைத் தெரிவிப்பதற்கன்றோ எனின்? இவ்விஷயத்தில் பதில் சொல்லவேண்டி மேல் ஸூத்திரம் படிக்கப்படுகிறது—

**(ஸூ) கிருத்ஸ்னபாவாத்து கிருஹிணா உபஸம்ஹார: ()**

(ப—ரை) **कृत्स्नभावात्तु** (கிருத்ஸ்னபாவாத்து) வெகு ஆயாஸத்துடன் செய்ய வேண்டிய யாகாதிகர்மங்களுள்ளதா யிருப்பதுபற்றியும், வேறு ஆஸ்ரமத்துக்குரிய அஹிம்ஸை இந்திரியஜயம் இவையுள்ளதா யிருப்பதுபற்றியுமே **गृहिणा** (க்ருஹிணா)=கிருஹஸ்தனுடன் **उपसंहारः** (உபஸம்ஹார:)=முடிவானது செய்யப்பட்டது. (48) (எ—று)

பாஷ்யம்.—ஸூத்திரத்திலுள்ள து என்ற சப்தமானது வேறு ஆஸ்ரமத்தைக் காட்டிலும் இந்த ஆஸ்ரமத்தை பிரித்துக் காட்டுகிறது. இந்த ஆஸ்ரமத்துக்கு கிருத்ஸ்னபாவமானது விசேஷித்துச் சொல்லப்படுகிறது. வெகு ஆயாஸ

---

* ப்ரதானம் தொடங்கி அங்கத்தை முடிவாகக் கொண்டது விதி எனப்படும். அதில் ப்ரதானமான யாகமானது விதியின் ஆதியாகவும், அங்கமானது விதியின் அந்தமாகவும் கொள்ளப்படுகிறது.

कर्माणि यज्ञादीनि तं प्रति कर्तव्यतयोपदिष्टान्याश्रमान्तरकर्माणि च यथासंभवमहिंसेन्द्रियसंयमादीनि तस्य विद्यन्ते। तस्माद्गृहमेधिनोपसंहारो न विरुध्यते ॥ ४८ ॥

मौनवदितरेषामप्युपदेशात् ॥ ४९ ॥

यथा मौनं गार्हस्थ्यं चैतावाश्रमौ श्रुतिमन्तावेवमितरावपि वानप्रस्थगुरुकुलवासौ। दर्शिता हि पुरस्ताच्छ्रुतिः—'तप एव द्वितीयो ब्रह्मचार्याचार्यकुलवासी तृतीयः' (छा० २। २३। १) इत्याद्या। तस्माच्चतुर्णामप्याश्रमाणामुपदेशाविशेषात्तुल्यवद्विकल्पसमुच्चयाभ्यां प्रतिपत्तिः। इतरेषामिति द्वयोराश्रमयोर्बहुवचनं वृत्तिभेदापेक्षयाऽनुष्ठातृभेदापेक्षया वेति द्रष्टव्यम् ॥ ४९ ॥

१५ अनाविष्काराधिकरणम्। सू० ५०

अनाविष्कुर्वन्नन्वयात् ॥ ५० ॥

---

முள்ள யாகம் முதலிய வெகு ஆஶ்ரமகர்மங்கள் அந்தக் கிருஹஸ்தாஶ்ரமத்தைக் குறித்து செய்யவேண்டுவனவாக உபதேசிக்கப்பட்டிருப்பதுடன், அஹிம்ஸை, இந்திரியஜயம் முதலிய வேறு ஆஶ்ரமகர்மங்களும் அவருக்குச் செய்யவேண்டுவனவாக விருக்கின்றன. ஆனதுபற்றியே கிருஹஸ்தனுடன் உபஸம்ஹாரம் செய்தது விரோதப்படமாட்டாது. (48) (எ-று)

(ஸூ) மௌனவத் இதரேஷாமபி உபதேசாத் (49)

(ப-ரை) मौनवत् (மௌனவத்)=ஸன்னியாஸம், கார்ஹஸ்த்யம் என்ற இரண்டு ஆஶ்ரமங்கள்போல, इतरेषामपि (இதரேஷாமபி)=வேறு ஆஶ்ரமங்களுக்கும் उपदेशात् (உபதேசாத்)=உபதேசமானது சுருதியில் காணவும்படுகிறது. (49)

பாஷ்யம்.—மௌனம், கார்ஹஸத்யம் என்ற இந்த இரண்டு ஆஶ்ரமங்களும் சுருதியில் எவ்விதம் கூறப்படுகின்றனவோ இவ்விதமே வானப்ரஸ்தம், குருகுலம் (ப்ரம்ஹசர்யம்) என்ற ஆஶ்ரமங்களுமாகும். "தபஸ்ஸே இரண்டாவதாகும். ப்ரம்ஹசாரி ஆசாரியகுலவாஸீ மூன்றாவதாகும்" என்றதாதியான சுருதியும் முன்னர் காண்பிக்கப்பட்டதன்றோ? ஆகவே நான்கு ஆஶ்ரமங்களுக்கும் உபதேசம் பொதுவாக விருப்பதால் துல்யமாகவே விகல்பமாகவும் ஸமுச்சயமாகவும் அவற்றின்ப்ராப்தி ஏற்படுகிறது. ஸூத்திரத்தில் இதரேஷாம் என இரண்டு ஆஶ்ரமங்களுக்கு பஹுவசனம் (பன்மை) சொன்னதானது அவற்றின்விருத்திபேதத்தை யொட்டியோ, அவற்றை யனுஷ்டிப்பவரின் பேதத்தை யொட்டியோ சொல்லப்பட்டதெனக் கண்டுகொள்ள வேண்டும். (49) (எ-று)

பதினான்காவது ஸஹகார்யந்தரவித்யதிகரணம் முற்றிற்று



## அனாவிஷ்காராதிகரணம் 15.

(ஸூ) அநாவிஷ்குர்வன் அன்வயாத் (50)

(ப-ரை) अनाविष्कुर्वन् (அனாவிஷ்குர்வன்)=ஞானம் அத்யயனம் தார்மி

बाल्यं वयः कामचारो धीशुद्धिर्वा प्रसिद्धितः । वयस्तस्याविधेयत्वे कामचारोऽस्तु नेतरः ॥ १ ॥
मननस्योपयुक्तत्वाद्भावशुद्धिर्विवक्षिता । अत्यन्तानुपयोगित्वाद्विरुद्धत्वाच्च न द्वयम् ॥ २ ॥

'तस्माद्ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य बाल्येन तिष्ठासेत्' (बृ० ३।५।१) इति वाक्यमनुष्ठेयतया श्रूयते । तत्र बालस्य भावः कर्म वा बाल्यमिति तद्धिते सति बालभावस्य वयोविशेषस्येच्छया संपादयितुमशक्यत्वाद्यथोपपादं मूत्रपुरीषत्वादिबालचरितमन्तर्गता वा भावविशुद्धिरप्ररूढेन्द्रियत्वं दम्भदर्पादिरहितत्वं वा बाल्यं स्यादिति संशयः । किं तावत्प्राप्तं कामचारवादभक्षणता यथोपपादमूत्रपुरीषत्वं च प्रसिद्धतरं लोके बाल्यमिति तद्ग्रहणं युक्तम् । ननु पतितत्वादिदोषप्राप्तेर्न युक्तं कामचारताद्याश्रयणम् । न । विद्यावतः

---

கத்வம் முதலியவற்றால் தன்னை ப்ரகடனப்படுத்திக் கொள்ளாதவனாக இருக்க வேண்டும். अन्वयात् (அன்வயாத்)=இவ்விதம் பொருள் கொண்டால் தான் வாக்கியத்துக்குத் தொடர்ந்த பொருள் ஏற்படும். (50) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) சுருதியில் "பால்யேந திஷ்டாஸேத்" என்றதால் சொல்லப்படும் பால்யமானது இளமைவயதைச் சொல்லுகிறதாய் காமசாரத்தை (இஷ்டப்படி நடத்தலை) ச் சொல்லுகிறதா? அல்லது சித்தத்தின் தெளிவைச் சொல்லுகிறதா? என்பது ஸந்தேஹம். ப்ரஸித்தியைக் கொண்டு பால்யம் என்பது வயோவிசேஷத்தையே தான் சொல்லும். அந்த வயோவிசேஷமானது விதிக்கவேண்டுவதாக இல்லாதபடியால் காமசாரமானது (இஷ்டப்படி நடத்தலானது) விதேயமாக வாகுமே யொழிய பிறவொன்றுமாகாது என்பது பூர்வபக்ஷம். மனனத்துக்கு உபயோகப்படுவதுபற்றி சித்த சுத்தியானது சொல்ல விரும்பப்பட்டது. முற்றிலும் உபயோகப்படாதிருப்பது பற்றியும், விருத்தப் படுவதுபற்றியும், வயோவிசேஷமும், காமசாரமும் பால்ய என்ற சப்தத்தால் சொல்லப்படமாட்டாது. என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—" ஆனதுபற்றி ப்ராம்ஹணன் பாண்டித்யத்தை யடைந்து பால்யத்துடன் இருக்க விரும்பவேண்டும்" என்றதால் பால்யமானது அனுஷ்டேயமாகச் சொல்லப்படுகிறது. அவ்விடத்தில் बाल्यम् (பால்யம்)=என்பதற்கு பாலனுடையதன்மையோ கர்மமோ, பால்யம் எனப்படும் என்பதாய் பால=என்ற சப்தத்தின் மேல் ய என்ற தத்தித ப்ரத்யயம் வைக்கும் பொழுது பால்ய சப்தமேற்படுவதிலிருந்து பால்ய என்றதால் பாலபாவமான வயோவிசேஷமானது (இளமைப் பருவமானது) இச்சையினால் ஸம்பாதிக்க முடியாதிருப்பது பற்றி தனது இஷ்டப்படி மூத்திரபுரீஷாதிகளை விடுதலாகிற பாலனுடைய சரித்திரம் சொல்லப்படுகிறதா? அல்லது அப்பாலனின் உள்ளிருக்கின்ற சித்தசுத்தியும், இந்திரியங்களுக்கு விஷயப்பற்றில்லாமையும், தம்பம் தர்ப்பம் முதலியன அற்றிருத்தலும் ஆகிற தர்ம விசேஷம் சொல்லப்படுகிறதா? என ஸம்சய முதயமாகிறது, முதலில் கிடைப்பது யாதென்னில் இஷ்டப்படி நடத்தல் இஷ்டப்படி பேசல் இஷ்டப்படி பக்ஷித்தல் என்ன, இஷ்டப்படி மூத்திர புரீஷாதிகளை விடுதல் என்ன இவையுள்ளதாயிருத்தல்

सन्न्यासिनो वचनसामर्थ्याद्दोषनिवृत्तेः पशुहिंसादिष्विवेति । एवं प्राप्तेऽभिधीयते । न । वचनस्य गत्यन्तरसंभवात् । अविरुद्धे ह्यन्यस्मिन्बाल्यशब्दाभिलप्ये लभ्यमाने न विध्यन्तरव्याघातकल्पना युक्ता । प्रधानोपकाराय चाङ्गं विधीयते । ज्ञानाभ्यासश्च प्रधानमिह यतीनामनुष्ठेयम् । नच सकलायां बालचर्यायामङ्गीक्रियमाणायां ज्ञानाभ्यासः संभाव्यते । तस्मादान्तरो भावविशेषो बालस्याप्ररूढेन्द्रियत्वादिरिह बाल्यमाश्रीयते । तदाह—अनाविष्कुर्वन्निति । ज्ञानाध्ययनधार्मिकत्वादिभिरात्मानमविख्यापयन्दम्भदर्पादिरहितो भवेत् । यथा बालोऽप्ररूढेन्द्रियतया न परेषामात्मानमाविष्कर्तुमीहते तद्वत् । एवं ह्यस्य वाक्यस्य प्रधानोपकार्यर्थानुगम उपपद्यते । तथाचोक्तं स्मृतिकारैः—'यं न सन्तं न चासन्तं नाश्रुतं

---

பால்யம் என்பதாய் உலகில் பிரஸித்தமாக விருப்பதால் அதைக் கிரஹிப்பது தான் பொருத்த முள்ளதாக வாகிறது.

சங்கை—பதிதத்வம் முதலிய தோஷப்ராப்தி யேற்படுமாதலால் காமசாரதை (இஷ்டப்படி நடத்தல்) முதலியதைக் கிரஹித்தல் பொருத்தமாக வாகாது என்கிறோம் எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. கிருஹஸ்தனுக்கு வசனத்தைக்கொண்டு யாகத்தில் பசுஹிம்ஸாதிகளில் தோஷம் ஸம்பவிக்காதது போல க்ஞானமுள்ள ஸன்னியாஸிக்கு வசனமிருப்பதைக் கொண்டு தோஷநிவிருத்தி யேற்படலாமென்கிறோம். என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது. அவ்விதமில்லை. வசனத்துக்கு வேறுகதி ஸம்பவிப்பதாகவே இருக்கிறது. அதாவது:—பால்ய சப்தத்தால் சொல்லப்படக்கூடிய முரண்படாத பொருள் கிடைக்குங்கால் அதை விடுத்து விதியைப் பாதிக்கக்கூடிய வேறு பொருளைக் கல்பிப்பது பொருந்தக் கூடியதன்று. ப்ரதானத்துக்கு உபகாரஞ் செய்யவேண்டி அங்கமானது விதிக்கப்படுகிறது. இவ்விடத்திலோ ஸன்னியாஸிகளுக்கு அனுஷ்டேயமான க்ஞானப்யாஸமானது ப்ரதானமாக இருக்கிறது. பாலனுடைய நடத்தை முழுதுமே அங்கீகரிக்கப் படுமானல் க்ஞானப்யாஸம் ஸம்பவிக்கவும் மாட்டாது. ஆகவே விஷயத்தை நோக்கிச் செல்லாத இந்திரியங்களையுடைத்தா யிருத்தல் முதலிய சித்தத்திலுள்ள அவனது பாவவிசேஷமானது இங்குள்ள பால்யம் என்ற சப்தத்தால் கிரஹிக்கப்படுகிறது. அதையே "அனுவிஷ்குர்வன்" என்றதால் சொல்லுகிருர். க்ஞானம், அத்யயனம், தார்மிகத்வம் முதலியவற்ருல் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொள்ளாதவனுகவும், தம்பம் தர்ப்பம் முதலியனவற்றவனுகவும் இருத்தல் வேண்டும். இந்திரியங்கள் விஷயத்தை நோக்கிச்செல்லாதிருத்தல் காரணமாய் பிறர்க்குத் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொள்ள பாலன் எவ்விதம் விரும்புவதில்லையோ அவ்விதமே இங்குமாகும். இவ்விதம் பொருள் கொண்டாலன்ரோ இந்த வாக்கியத்துக்கு ப்ரதானத்துக்கு உபகாரப்படும் அர்த்தத்தின் தொடர்பு பொருத்தமுள்ளதாகவாகும். அவ்விதமே ஸ்மிருதிக் காரர்களாலும் "எவனை ஒருவன் ஸாதுவாக அறியமாட்டானே, அஸாதுவாகவுமறியாட்டானே, வித்யை

न बहुश्रुतम् । न सुवृत्तं न दुर्वृत्तं वेद कश्चित्स ब्राह्मणः ॥ गूढधर्माश्रितो विद्वानज्ञातचरितं चरेत् । अन्धवज्जडवच्चापि मूकवच्च महीं चरेत् ॥' 'अव्यक्तलिङ्गोऽव्यक्ताचारः' इति चैवमादि ॥ ५० ॥

## १६ ऐहिकाधिकरणम् । सू० ५१

## ऐहिकमप्यप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात् ॥ ५१ ॥

इहैव नियतं ज्ञानं पाक्षिकं वा नियम्यते । तथाभिसन्धेर्यज्ञादिः क्षीणो विविदिषाजनौ ॥ १ ॥

असति प्रतिबन्धेऽत्र ज्ञानं जन्मान्तरेऽन्यथा । श्रवणायेत्यादिशास्त्राद्वामदेवोद्भवादपि ॥ २ ॥

---

யற்றவனுகவுமறியமாட்டானே, வெகுவித்தையுள்ளவனுகவுமறியமாட்டானே, நன்னடத்தையுள்ளவனுகவுமறிய மாட்டானே, கெட்ட நடத்தையுள்ளவனுகவுமறிய மாட்டானே அவனே ப்ரம்ஹத்தை யறிந்தப்ராம்ஹணனுவான்" "என்றும் வித்வான் (ப்ரம்ஹத்தை யறிந்தவன்) மறைந்த தர்மத்தை யாஶ்ரயித்தவனுக இருந்து கொண்டு பிறர் அறியமுடியாத முறையில் நடக்கவேண்டும். பொட்டையன் போலும், மூடன்போலும், ஊமைபோலும் பூமியில் ஸஞ்சரிக்கவேண்டும்" என்றும், "தெளிவான அடையாள மற்றவனுகவும் தெளிவான ஆசரமற்றவனுகவும் இருக்கவேண்டும்" என்றும் உபதேசிக்கப் பட்டிருக்கிறது. (50)

பதினைந்தாவது அனுவிஷ்காராதிகரணம் முற்றிற்று.



## ஐஹிகாதிகரணம் 16.

## (ஸூ) ஐஹிகமபி அப்ரஸ்துதப்ரதிபந்தே தத்தர்சனுத் (51)

(ப-ரை) विद्याजन्म (வித்யாஜன்ம)=வித்யையினுத்பத்தியானது अप्रस्तुतप्रतिबन्धे (அப்ரஸ்துதப்ரதிபந்தே)=வேறுகர்மங்கள் மூலம் தடை யேற்படாவிடில் ऐहिकमपि (ஐஹிகமபி)=இதேபிறவியிலும் ஏற்படலாம். तद्दर्शनात् (தத்தர்ஶனுத்)= அவ்விதமே சுருதிஸ்மிருதிகளிருப்பதே அதன் காரணமாகும். (51) (எ-று)

வையாஸிக நியாயமாலை.

(க-ரை) க்ஞானமானது நிஶ்சிதமாக இதே பிறவிலேயேதானுண்டாகிறதா? அல்லது இப்பிறவியிலாவது மறுபிறவியிலாவது உண்டாகலாம் என விகல்பித்துக் கூறப் படுகின்றதா? என்பது ஸந்தேஹம். இதேபிறவியில் தானுண்டாகிறது என நிஶ்சிதமாகக் கூறப்படுகிறது. ஸாதனுனுஷ்டானஞ் செய்பவனுக்கு அவ்விதமே எண்ணமுமிருக்கக் கூடும். க்ஞானேத்பத்திக்கு ஹேதுவான யாகாதிகள் விவிதிஷையை உண்டுபண்ணினவுடன் தேய்ந்தும் விடுகிறது என்பது பூர்வபக்ஷம். வேறுகர்மங்கள் மூலம் ப்ரதிபந்தமானது (தடையானது) இல்லாவிடில் இப்பிறவியிலும், ப்ரதிபந்தமிருக்குமாயின் வேறுபிறவியிலும் க்ஞானமுண்டாகலாம். "கேட்டும் (ஶ்ரவணஞ்செய்துங்கூட) சிலர் அறிவதில்லை" என்ற சாஸ்திரவசனமிருப்பதும், அவ்விதமே வாமதேவர் என்பவருக்கு வேறுபிறவியிற் செய்த ஸாதன

'सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत्' (ब्र० सू० ३ । ४ । २६) इत्यत आरभ्योच्चावचं विद्यासाधनमवधारितं, तत्फलं विद्या सिद्ध्यन्ती किमिहैव जन्मनि सिद्ध्यत्युत कदाचिदमुत्रापीति चिन्त्यते। किं तावत्प्राप्तम्। इहैवेति। किं कारणम्। श्रवणादिपूर्विका हि विद्या। न च कश्चिदमुत्र मे विद्या जायतामित्यभिसन्धाय श्रवणादिषु प्रवर्तते। समान एव तु जन्मनि विद्याजन्माभिसन्धायैतेषु प्रवर्तमानो दृश्यते। यज्ञादीन्यपि श्रवणादिद्वारेणैव विद्यां जनयन्ति प्रमाणजन्यत्वाद्विद्यायाः। तस्मादैहिकमेव विद्याजन्मेति। एवं प्राप्ते वदामः—ऐहिकं विद्याजन्म भवत्यसति प्रस्तुतप्रतिबन्ध इति। एतदुक्तं भवति—यदा प्रक्रान्तस्य विद्यासाधनस्य कश्चित्प्रतिबन्धो न क्रियत उपस्थितविपाकेन कर्मान्तरेण तदेहैव विद्योत्पद्यते, यदा तु खलु तत्प्रतिबन्धः क्रियते तदामुत्रेति। उपस्थितविपाकत्वं च कर्मणो देशकालनिमित्तोपनिपाताद्भवति। यानि चैकस्य कर्मणो विपाचकानि देशकाल-

---

னுஷ்டானத்தினுல் அப்பிறவியிலுண்டாகாமல் தாயின் கர்ப்பத்திலிருக்கும் பொழுது க்ஞானமுண்டானதாகச் சுருதியில் கூறியிருப்பதுமே அதன் காரணமாகும். என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—"ஸர்வாபேக்ஷாச யக்ஞாதிச்ருதே ரச்வவத்" என்று தொடங்கி உயர்வுதாழ்வுள்ள வித்யா (க்ஞான) ஸாதனம் சொல்லப்பட்டது. அதன் பலனுக ஏற்படும் க்ஞானமானது இதேஜன்மத்திலுண்டாகிறதா? அல்லது ஒருஸமயம் அடுத்தஜன்மத்திலு முண்டாகிறதா? என விசாரிக்கப்படுகிறது. முதலில் கிடைப்பது யாதென்னில்? இப்பிறவியிலேயே என்றும். என்னகாரணம்? ச்ரவணுதிகளை முன்னிட்டன்றே வித்யையேற்படுகிறது. ஒருவனும் அடுத்த பிறவியில் எனக்கு க்ஞானமுண்டாகட்டு மென எண்ணங் கொண்டவனுய் ச்ரவணுதிகளில் ப்ரவிருத்திக்க பாட்டானன்றே. ஸமானமான பிறவியிலேயே (ஸதானுஷ்டானஞ்செய்யும் பிறவியிலேயே) வித்யோத்பத்தியை விரும்பிக்கொண்டு இந்த ஸாதனங்களில் ப்ரவிருத்தி செய்வதாகவன்றே காணப்படுகிறுன். யாகாதிகளும் ச்ரவணுதிகள் வாயிலாகவே வித்யையை உண்டுபண்ணுகின்றன. வித்யை ப்ரமாணமூலமேற்படுவதே அதன் காரணமாகும். ஆகவே இதே ஜன்மத்திற்றுன் வித்யையின்உத்பத்தியேற்படுகிறது. என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே ஸித்தாந்தத்தைச் சொல்லுகிறேம். ப்ரதிபந்த மில்லாவிடில் வித்யையினுத்பத்தியானது இதே பிறவியிலுண்டாகிறது என்றும். இதனுல் பின்வருமாறு சொல்லப்பட்டதாக வாகிறது. அதாவது:—எதுபோழ்து ஆரம்பிக்கப்பட்ட வித்யாஸாதனத்துக்கு உபஸ்திதமான பலனையுடைய வேறுகர்மத்தினுல் எவ்விதத் தடையும் செய்யப்படவில்லையோ அது போழ்து இப்பிறவியிலேயே வித்யையானது உண்டாகிறது. எதுபோழ்து கர்மாந்தரத்தினுல் தடையானது செய்யப்படுமோ அதுபோழ்து அடுத்த பிறவியிற்றுன் உண்டாகிறது. கர்மத்துக்கு உபஸ்திதவிபாகத்வமானது (ஸமீபத்தில் பலன் தரத்தக்க தன்மையானது) தேசம், காலம், நிமித்தம் இவற்றின் சேர்க்கையால் உண்டாகிறது. ஒரு கர்மத்தைப் பலன் தரத்தக்கதாகச் செய்யக்கூடிய தேசகால நிமித்தங்கள் எவையுண்டோ அவைகளேதான் மற்றவற்றுக்கும் எனக்கட்டாயப்

निमित्तानि तान्येवान्यस्यापीति न नियन्तुं शक्यते। यतो विरुद्धफलान्यपि कर्माणि भवन्ति। शास्त्रमप्यस्य कर्मण इदं फलं भवतीत्येतावति पर्यवसितं न देशकालनिमित्तविशेषमपि सङ्कीर्तयति। साधनवीर्यविशेषात्त्वतीन्द्रिया कस्यचिच्छक्तिराविर्भवति तत्प्रतिबद्धा परस्य तिष्ठति॥

मन्त्राविशेषेण विद्यायामभिसन्धिर्नोत्पद्यत इहामुत्र वा मे विद्या जायतामिति, अभिसन्धेर्निरङ्कुशत्वात्। श्रवणादिद्वारेणापि विद्योत्पद्यमाना प्रतिबन्धक्षयापेक्षैवोत्पद्यते। तथाच श्रुतिर्दुर्बोधत्वमात्मनो दर्शयति—'श्रवणायापि बहुभिर्यो न लभ्यः शृण्वन्तोऽपि बहवो यं न विद्युः। आश्चर्योऽस्य वक्ता कुशलोऽस्य लब्धाश्चर्यो ज्ञाता कुशलानुशिष्टः' (क० २।७) इति। गर्भस्थ एव च वामदेवः प्रतिपेदे ब्रह्मभावमिति वदन्ती जन्मान्तरसञ्चितात्साधनाज्जन्मान्तरे विद्योत्पत्तिं दर्शयति। नहि गर्भस्थस्यैवैहिकं किञ्चित्साधनं संभाव्यते। स्मृतावपि—'अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति' (गी० ६। ३७) इत्यर्जुनेन पृष्टो भगवान्वासुदेवः 'नहि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति' (गी० ६। ४०) इत्यु-

---

படுத்தமுடியாது. சாஸ்திரமும் இந்தக்கர்மத்துக்கு இந்தப்பலன் உண்டாகிறது எனத்தெரிவிப்பதோடு மட்டும் முடிகிறதே யொழிய (பயனுண்டாகும்) தேசகால நிமித்தங்களையும் சொல்லவில்லை. ஸாதனத்தின் சக்திவிசேஷத்தை யொட்டி இந்திரியங்களுக்குப் புலப்படக்கூடாதபடி ஒன்றுக்குச் சக்தியானது தோன்றலாம், அதனால் தடுக்கப்பட்டதாகப் பிறவற்றின் சக்தியானது(பலன் தராமல்)நிற்கலாம். இப்பிறவியிலோ அப்பிறவியிலோ எனக்கு வித்யையுண்டாகட்டும் என்பதாய் வித்யோத்பத்தியில் விசேஷமின்றி ஆசையானது உண்டாகாதென்றும் (கூறமுடியாது)ஏன்? ஆசையானது தடை செய்யமுடியாததாக விருப்பதுபற்றியே என்க. வித்யையானது ப்ரவணாதிகள் வாயிலாக உண்டாவதாயினும் கூட ப்ரதிபந்தத்தின் தேயதலை முன்னிட்டே தான் உண்டாகிறது. அவவிதமே ஸ்ருதியும் கூட ஆத்மா அறிதற்கரிதானது என்பதைத் தெரிவிக்கிறது அதாவது:—"எது பலரால் கேட்பதற்கும்முடியாததோ,பலர் கேட்பினும் எதை அறிகின்றனரில்லையோ,இதை யுபதேசிப்பவர் ஆஸ்சரியமானவர். உபதேசத்தை யடைபவர் ஆஸ்சரியமானவர். நற்கர்மங்களால் தயாராக்கப்பட்டவராய் இதை அறிபவர் ஆஸ்சரியமானவர்" என்றும். கர்ப்பத்தி லிருப்பவராகவே உள்ள வாமதேவரானவர் ப்ரம்ஹபாவத்தை யடைந்தார் எனச் சொல்லும் சுருதியானது வேறு ஜன்மத்தில் சேர்த்து வைக்கப்பட்ட ஸாதனத்தினால் வேறு ஜன்மத்தில் வித்யையினுத்பத்தியைக் காண்பிக்கிறது. கர்ப்பத்திலிருக்கும் பொழுதே அவர்க்கு ஐஹிகமான ஸாதனம் கொஞ்சமும் ஸம்பவிக்கமுடியாதன்றோ? ஸ்மிருதியிலுங் கூட "ஹே கிருஷ்ண! யோகபலனை யடையாதவன் எந்தக் கதியை யடைகிறான்" என அர்ஜுனனால் கேட்கப்பட்ட பகவான் வாஸுதேவன் "அப்பனே! நற்காரியத்தைச் செய்தவன் ஒருவனும் கெட்டகதியை யடையமாட்டான்" என்று சொல்லிப் பிறகு அவனுக்குப் புண்ணியலோக ப்ராப்த்தியையும், பிறகு ஸாதுக்களின் குலத்தில் பிறவியை

त्वा पुनस्तस्य पुण्यलोकप्राप्तिं साधुकुले संभूतिं चाभिधायानन्तरम् 'तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदैहिकम्' (गी० ६। ४३) इत्यादिना 'अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम्' (गी० ६। ४५) इत्यन्तेनैतदेव दर्शयति। तस्मादैहिकमामुष्मिकं वा विद्याजन्म प्रतिबन्धक्षयापेक्षयेति स्थितम्॥ ५१॥

## १७ मुक्तिफलानियमाधिकरणम्। सू० ५२

एवं मुक्तिफलानियमस्तदवस्थावधृतेस्तदवस्थावधृतेः॥ ५२॥

मुक्तिः सातिशया नोवा फलत्वाद्ब्रह्मलोकवत्। स्वर्गवच्च नृभेदेन मुक्तिः सातिशयैव हि॥ १॥
ब्रह्मैवमुक्तिर्न ब्रह्म क्वचित्सातिशयं श्रुतम्। अत एकविधा मुक்तिः वेधसो मनुजस्य वा॥ २॥

---

யும் சொல்லிப் பிறகு "அங்கு அவன் முன்தேஹத்தில் கிடைத்த அந்த ஞ்ஞான ஸம்யோகத்தையடைகிறான்" என்றது முதல் "அனேகம் ஜன்மங்களில் ஸம்ஸித்தியை யடைந்தவனாய் அதனின்றும் மேலான கதியை யடைகிறான்" என்றது முடியவுள்ள வுபதேசத்தினால் இதையே காண்பித்து மிருக்கிறார். ஆகவே ப்ரதிபந்தம் தேய்வதை முன்னிட்டு வித்யையினுத்பத்தியானது இப்பிறவியிலோ வேறு பிறவியிலோ ஏற்படுகிறது என்பது ஸித்திக்கிறது. (51).(எ—று)

பதினாறாவது ஐஹிகாதிகரணம் முற்றிற்று.



## முக்திபலாநியமாதிகரணம் 17.

(ஸூ) ஏவம் முக்திபலாநியம: ததவஸ்தாவதிருதே: ததவஸ்தாவதிருதே: (52)

(ப—ரை) **एवम्** (ஏவம்)= முமுக்ஷுவுக்கு வித்யாரூபமான பலனில் ஐஹிகத்வம் ஆமுஷ்மிகத்வம் இவற்றால் செய்யப்பட்ட விசேஷநியமமானது போல, **मुक्तिफलानियमः** (முக்திபலாநியமः)=முக்திரூபமான பலனிலும் இதுபோன்ற நியமம் ஒன்றும் கிடையாது. ஏன்? **तदवस्थावधृते:** (ததவஸ்தாவதிருதே:)=முக்தி அவஸ்தையை ஒரேரூபமுள்ளதாக எல்லாவேதாந்தங்களிலும் உறுதிபடுத்தியிருப்பதே அதன் காரணமாகும். **तदवस्थावधृते:** (ததவஸ்தாவதிருதேः)=என்றுமறுபடியும் சொன்னது பாதத்தின் முடிவைக்காட்டுகிறது. (52) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) முக்தியானது யாதானுமொரு அதிசயத்துடன் (உயர்வு தாழ்வுடன்) கூடினதா? அல்லது இல்லையா? என்பது ஸந்தேஹம். பலனாகவிருப்பது பற்றி ப்ரம்ஹலோகம் போலும், ஸ்வர்க்கம்போலும், மனுஷ்யபேதத்தை யொட்டி முக்தியானது ஸாதிசயமாகவே(உயர்வுதாழ்வுடன் கூடினதாகவே) தானாகும் என்பது பூர்வபக்ஷம். ப்ரம்ஹமேதான் முக்தியாகும். ப்ரம்ஹமானது ஸாதிசயமாக(உயர்வு தாழ்வுடன் கூடினதாக) ஒரிடத்திலும் சுருதியில் சொல்லப்படவில்லை. ஆகவே மனுஷ்யனுக்காகட்டும் ப்ரம்ஹதேவனுக்காகட்டும் முக்தியானது ஒரே விதமாகவே தானாகும் என்பது ஸித்தாந்தம். (எ—று)

यथा मुमुक्षोर्विद्यासाधनावलम्बिनः साधनवीर्यविशेषाद्विद्यालक्षणे फल ऐहिकामुष्मिकफलत्वकृतो विशेषप्रतिनियमो दृष्टः। एवं मुक्तिलक्षणेऽप्युत्कर्षापकर्षकृतः कश्चिद्विशेषप्रतिनियमः स्यादित्याशङ्क्याह—एवं मुक्तिफलानियम इति। न खलु मुक्तिफले कश्चिदेवंभूतो विशेषप्रतिनियम आशङ्कितव्यः। कुतः—तदवस्थावधृतेः। मुक्त्यवस्था हि सर्ववेदान्तेष्वेकरूपैवावधार्यते। ब्रह्मैव हि मुक्त्यवस्था नच ब्रह्मणोऽनेकाकारयोगोऽस्ति। एकलिङ्गत्वावधारणात् 'अस्थूलमनणु' (बृ० ३।८।८), 'स एष नेति नेत्यात्मा' (बृ० ३।९।२६), 'यत्र नान्यत्पश्यति' (छा० ७।२४।१), 'ब्रह्मैवेदममृतं पुरस्तात्' (मुण्ड० २।२।११), 'इदं सर्वं यदयमात्मा' (बृ० २।४।६), 'स वा एष महानज आत्माजरोऽमरोऽमृतोऽभयो ब्रह्म' (बृ० ४।४।२५), 'यत्र त्वस्य सर्वमात्मैवाभूत्तत्केन कं पश्येत्' (बृ० ४।५।१५) इत्यादिश्रुतिभ्यः। अपिच विद्यासाधनं स्ववीर्यविशेषात्स्वफल एव विद्यायां कश्चिदतिशयमासञ्जयेन्न विद्याफले मुक्तौ। तद्ध्यसाध्यं नित्यसिद्ध-

---

பாஷ்யம்.— வித்யைக்குரிய ஸாதனத்தை அவலம்பித்திருக்கிற முமுக்ஷுவுக்கு ஸாதனத்தினுடைய வீரியவிசேஷத்தை முன்னிட்டு வித்யாரூபமான பலனில் ஐஹிகாமுஷ்மிகபலனுக இருத்தல் மூலமேற்பட்ட விசேஷநியமமானது எவ்விதம் காணப்பட்டதோ இவ்விதம் முக்திரூபத்திலும் உத்கர்ஷாபகர்ஷத்தால் (உயர்வு தாழ்வு களால்) செய்யப்பட்ட ஒருவிசேஷ நியமமிருக்கலாம் என ஆசங்கித்து "ஏவம் முக்திபாலநியம:" என்ற ஸூத்திரத்தைச் சொல்லுகிறுர். முக்திரூபமான பலனில் இம்மாதிரியான விசேஷநியமம் ஒன்றும் ஆசங்கிக்க இடமில்லையன்றோ. ஏன்? "ததவஸ்தாவதிருதே:" முக்தியவஸ்தையோ வெனில் எல்லாவேதாந்தங்களிலும் ஏகரூபமுள்ளதாகவே நிர்த்தாரணஞ் செய்யப்படுகிறது. ப்ரம்ஹமேயன்றோ முக்தியவஸ்தையாகிறது. ப்ரம்ஹத்துக்கு அனேக ஆகாரத்துடன் (ஸ்வரூபத்துடன்) சேர்க்கையானது கிடையாதன்றோ. ஏகரூபமுள்ளதாகவே நிர்த்தாரணஞ் செய்யப்பட்டுமிருக்கிறது. "ஸ்தூலமாகவில்லாதது அணுவாக இல்லாதது" என்றும், "இதன்றிதன்றெனச் சேஷித்த அந்த இந்த ஆத்மா" என்றும், "என்னிலையில் வேருக வொன்றையும் பார்க்கிறுனில்லையோ" என்றும், "அமிருத ஸ்வரூபமான இந்த ப்ரம்ஹமே முன்னும்" என்றும், "இந்த ஆத்மாவே இவை யாவுமாகும்" என்றும், "அதே இந்த ஆத்மா மஹானும் அஜனும் அஜரனும் அமிருதனும் அமரனும் அபயனும் ப்ரம்ஹமுமாகும்" என்றும், "என்னிலையில் இவனுக்கு எல்லாம் ஆத்மாவாகவே ஆகுமோ அந்நிலையில் எதைக் கொண்டு எதைப் பார்க்கக்கூடும்" என்றுமாகிய சுருதிகளிருப்பதே அதன் காரணமாகும்.

மேலும் வித்யையின் ஸாதனமானது தனது சக்திவிசேஷத்தால் தனது பலனுன வித்யையில் மட்டும் ஒரு அதிசயத்தை உண்டுபண்ணுமே யொழிய வித்யையின் பலனுன முக்தியில் உண்டுபண்ணமாட்டாது. அந்த வித்யையின் பலன் ஒரு ஸாதனத்தினுல் ஸாத்யமன்றென்றும் நித்யஸித்தஸ்வபாவமாகவே உள்ளதென்றும் வித்யையினுல் அடையப்படுகிறதென்றும் அடிக்கடி சொல்லியிருக்கின்றோமன்றோ. அந்த வித்யையிலுங் கூட உயர்வு தாழ்வு ரூபமான அதிசயமா

स्वभावमेव विद्याधिगम्यत इत्यसकृदवादिष्म। नच तस्यामप्युत्कर्षनिकर्षात्मकोऽतिशय उपपद्यते निकृष्टाया विद्यात्वाभावादुत्कृष्टैव हि विद्या भवति। तस्मात्तस्यां चिराचिरोत्पत्तिरूपोऽतिशयो भवन्भवेत्। नतु मुक्तौ कश्चिदतिशयसंभवोऽस्ति। विद्याभेदाभावादपि तत्फलभेदनियमाभावः कर्मफलवत्। नहि मुक्तिसाधनभूताया विद्यायाः कर्मणामिव भेदोऽस्तीति। सगुणासु तु विद्यासु—'मनोमयः प्राणशरीरः' (छा० ३।१४।२) इत्याद्यासु गुणावापोद्वापवशाद्भेदोपपत्तौ सत्यामुपपद्यते यथास्वं फलभेदनियमः कर्मफलवत्। तथाच लिङ्गदर्शनम्—'तं यथा यथोपासते तदेव भवति' इति। नैवं निर्गुणायां विद्यायां गुणाभावत्। तथाच स्मृतिः—'नहि गतिरधिकास्ति कस्यचित्सति हि गुणे प्रवदन्त्यतुल्यताम्' इति। तदवस्थावधृतेस्तदवस्थावधृतेरिति पदाभ्यासोऽध्यायपरिसमाप्तिं द्योतयति॥ ५२॥

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्य श्रीमच्छंकरभगवत्पूज्यपादकृतौ शारीरकमीमांसाभाष्ये

तृतीयाध्यायस्य चतुर्थः पादः॥ ४॥

**तृतीयाध्यायश्च समाप्तः॥**

---

னது பொருந்தமாட்டாது. தாழ்வுள்ளது வித்யையாகவாகாதாகையால் உயர்வுள்ளதேயன்றோ வித்யையாகவாகிறது. ஆகவே அந்த வித்யையில் விளம்பித்து உண்டாகுதல் சீக்கிரமுண்டாகுதல் ரூபமான அதிசயம்வேண்டுமானால் ஸம்பவிக்கலாம். முக்தியிலோ ஒருவித அதிசயமும் ஸம்பவிப்பதற்கில்லை. வித்யையில் பேதமில்லாதிருப்பதைக் கொண்டும் அதன் பலனில் பேதநியமம் கிடையாது. கர்மபலன் போலவாம். முக்திக்கு ஸாதனமாகவான வித்யைக்குக் கர்மங்களுக்குப் போல பேதமானது இல்லையன்றோ. "மனோமய: ப்ராணசரீர:" என்றதாதி ஸகுணங்களான வித்யைகளிலோவெனில் குணங்களைச் சேர்த்தல் விலக்குதல் இவைமூலம் பேதமானது பொருந்தக்கூடியதாக இருக்கும்கால் அதற்குத் தக்கபடி பலனுடைய பேதமும் நியமாக ஸம்பவிக்கலாம். கர்மத்தின் பலன் போலவாம். அவ்விதமே சுருதியில் "அதை எவ்வித முபாஸிக்கின்றனரோ அவ்விதமாகவே ஆகின்றனர்" என லிங்கதரிசனமு மிருக்கிறது. நிர்க்குணவித்யையில் இவ்விதம் ஸம்பவிக்காது. குணமில்லாதிருப்பதாலென்க. அவ்விதமே ஸ்மிருதியும் "நிர்க்குண ப்ரம்ஹத்தை யறிந்தவர்க்கு அதிகமான (உயர்வு தாழ்வுள்ள) மார்க்கமானது கிடையாதன்றோ. குணமிருந்தாலன்றோ துல்லியமாக இல்லாதிருத்தலைச் சொல்லுகின்றனர்" எனக் கூறுகிறது. ஸூத்திரத்தில் 'ததவஸ்தாவதிருதே:, ததவஸ்தாவதிருதே:' என்ற பதத்தை இரண்டுதடவை கூறினது அத்தியாத்தின் முடிவைத் தெரிவிக்கிறது. (52) (எ-று)

பதினேழாவது முக்திபலாநியமாதிகரணம் முற்றிற்று.

இவ்விதம் பரமஹம்ஸபரிவ்ராஜகாசாரியர்களான ஸ்ரீமத் சங்கரபகவத்பூஜ்யபாதர் அவர்களின் கிருதியான சாரீரகமீமாம்ஸாபாஷ்யத்தில் மூன்றாவது அத்தியாயத்தின் நான்காவது பாதம் முற்றிற்று.

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.



## तृतीयाध्यायस्थसूत्राणामकारादिक्रमः ॥



अकारादिक्रमस्समाप्तः ॥





श्रीः

॥ श्रीराधाकृष्णपरब्रह्मणे नमः ॥



# ब्रह्मसूत्रशाङ्करभाष्यम् ॥

चतुर्थः फलाध्यायः ॥

# ப்ரம்ஹஸூத்ர சாங்கர பாஷ்யம்.

நான்காவது பலாத்தியாயம்

(தமிழுரையுடன்)

இச்சிறந்த உரை

மஹாமஹோபாத்யாய வேதாந்த கேஸரி பங்கானாடு, ப்ரம்ம ஸ்ரீ கணபதி சாஸ்திரிகள் அவர்களின் முக்கிய சிஷ்யரும், வ்யாகரண வேதாந்த சாஸ்திர பாரங்கதரும், பாகவத பகவத் கீதோபன்யாஸகரும், ஜோதிட மந்திர சாஸ்திர வித்வானுமான


வ்யாகரண வேதாந்த சாஸ்திர பாரங்கத: குலபதி:

## ப்ரம்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள்


அவர்களால் இந்நூலில் தேவநாகரலிபியில் பாஷ்யமும், தமிழில் மொழி பெயர்ப்பும், ஒவ்வொரு சூத்திரமும் தமிழிலும் வெளியிடப்பட்டுள்ளது. அன்னாரால் பாமதீ, கல்பதரு, பரிமள ப்ரம்ஹவித்தியாபரணம், ராமாநந்தியம், நியாயரக்ஷாமணி முதலிய பாஷ்ய வியாக்யானங்களை யொட்டி ஆங்காங்கே குறிப்பு எழுதியும் விளக்கியும் அத்வைத சித்தாந்தத்தை யொட்டி ஆங்காங்கே சூத்திரார்த்தங்களைத் தெளிவாக விளக்கியும் ஒவ்வொரு அதிகாரத்திலும் வித்யாரண்ய சுவாமிகளால் இயற்றப்பட்ட வையாஸிக நியாயமாலையை எழுதி அதற்குக் கருத்துரை எழுதியும் வெளியிடப்பட்டது.


தொகுப்பாசிரியர் : **Dr. K.N. சரஸ்வதி**

**M.A., M.S., M.Ed., Doctorate in Counselling, Diplomas in Naturopathy, Art, Yoga and Computer**



பதிப்பாசிரியர் : **M.A. ஜெய்சங்கர் B.A., M.B.A**

"கடலங்குடி பப்ளிகேஷன்ஸ்"

38, நடேச அய்யர் தெரு,

தி.நகர், மெட்ராஸ் – 600 017

✆ : 4343406 E-Mail : sara@giasmd01.vsnl.net.in.

Web Site: http://www.indiayellowpages.com/K.N.Saraswathy.htm

# ப்ரம்ஹ ஸூத்ர சாங்கரபாஷ்யம்.

## நான்காவது அத்தியாயம்.



### முகவுரை.

இந்த நான்காவது அத்தியாயத்தில் ஜீவன்முக்தியும், சரீரத்தினின்றும் உபாஸகஜீவன் வெளிக்கிளம்பி உத்தராயணமார்க்கம்வழியாக ஸகுணப்ரம்ஹத்தையடையும் முறையும், ப்ரம்ஹலோகமின்னதென்பதும் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. மற்றுமுள்ளவிசேஷங்களை அந்தந்தப்பாதங்களிலுள்ள அதிகரணங்களின் அவதாரிகைகளில் எழுதியிருப்பதால் அவ்விடத்தில் அவற்றைக்கண்டுகொள்க.

இதுவரை இம்முறையில் தமிழில் பெயர்த்து வெளியிடப்படாத இந்தச் சாங்கர பாஷ்யத்தைத் தமிழில் பெயர்த்து வெளியிட ஆரம்பித்தபொழுது சுளுவில் இதை முடித்து விடலாமெனநான் எண்ணினதுண்டு. அவ்விதம் எண்ணினதற்கேற்ப இடையிடையே சில மஹான்கள் செய்த பொருளுதவியானது எனக்குச் சற்று ஆறுதலையளித்திருந்தபோதிலும் போகப்போக அகழந் தெரியாமல் இதில் ஏன் இரங்கினேமென இரவுபகலாய் கவலை கொண்டு ஏங்கி இதை முடித்துக் கண்ணால் பார்ப்போமா எனப் பல ஸமயங்களில் பலவிதமான துக்கத்தை யடைந்ததுண்டு. இவ்விதம் நானடைந்த கவலையைப் போக்கி இதைமுடிக்கும்படி அருள்புரிந்த ஸர்வேஸ்வரனும் பக்தபக்ஷபாதியுமான ஸ்ரீகோபாலனை இடைவிடாது ஸ்துதித்துக் கொண்டிருக்கிறேன்.

பொதுவாய் உலகில் இதுபோன்ற வேதாந்தசாஸ்திரத்தைப்படித்து அதிலுள்ள விஷயத்தை யறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவலுள்ள ஜனங்கள் வெகுசிலரே என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. அதிலும் படிக்க விரும்புபவர்க்குப் போதியபடி உபதேசிக்கும் குரு கிடைப்பதில்லை. தக்கபடி உபதேசிக்கும் திறமையுடையவர்க்கு அவரது ஸமயம் பார்த்து படிக்கும் சிஷ்யர் கிடைப்பதில்லை. இவ்விரண்டும் நேர்ந்தாலும் வடமொழியிலுள்ள இந்த பாஷ்யத்தைத் தமது தாய் பாஷையான தமிழில் ஆசிரியர் பாடம் சொன்ன போதிலும் வேறு சாஸ்திர பாண்டித்யமில்லாது வேதாந்த சாஸ்திராப்யாஸம் செய்பவர்க்கு அவர்செய்யும் உபதேசம் மனதில் நன்கு பதிவதில்லை. அப்பொழுது அவர் தாமறிந்த பாஷையில் பாஷ்யத்தின் கருத்தை வெளியிட்டிருந்தால் தமக்கு மிக்க உபகாரமாக இருக்குமே என எண்ணுவர். அப்படியே எண்ணினர் என்பது எனக்குத் தெரியும். அத்தகைய மஹா ஜனங்களுக்கு இம்மொழிபெயர்ப்பு அவரது இஷ்டத்தைப் பூர்த்தி செய்யக் கூடும் என்பதை நான் அதிகம் சொல்லத் தேவையில்லை. மேலும் ஏதோ ஜீவனார்த்தம் பல வழிகளிலும் வேலை செய்யும்படி நேர்ந்த சில ஆஸ்திகர்கள் தமது இஷ்டத்தைப் பூர்த்தி செய்துவைக்கக் கூடிய உத்தம குருக்களிருக்

குமிடம் போய் அவர்களது ஸ்பயத்தை எதிர்பார்த்து வேதாந்த சாஸ்திராப்யா ஸம் செய்ய மனமிருந்தும் போதிய அவகாசமும் ஸவுகரியமு மில்லாமையால் இந்த ஜன்மாவில் சங்கர பாஷ்யத்தின் பொருளை ஸ்தூலமாகவாவது நாம் எப்படி அறிந்துகொள்ளுவது என வெண்ணுகின்றவராய் போதிய ஸாதனமின்மையால் ஆங்கில பாஷையில் பெயர்க்கப்பட்ட புஸ்தகத்தைக்கொண்டு அதன் பொருளை யறிய வெண்ணங்கொண்டவராய் பாஷ்யத்தின் பொருள் கஷ்ட மொருபுறமிருக்க ஆங்கில பாஷையின் பொருளுக்காக அகராதிப் புஸ்தகங்களை வைத்துக்கொண்டு பாடும்படுகின்றனர். எனது மொழிபெயர்ப்பானது அவரறிந்த தாய் பாஷை யான தமிழிலேயே ஏற்பட்டிருப்பதுடன் ஆங்காங்கு குறிப்பெழுதி விளக்கப் பட்டுமிருப்பதால் இவ்விதம் பாடுபடும் இம்மாதிரியான மஹான்களுக்கு இது மிக்கவுதவியாகவே தானிருக்கும் என்பது சொல்லாமலே விளங்கும்.

ஆனால் இந்த பாஷ்யத்தைத் தமிழில் பெயர்த்து வெளியிட்டது முற்றிலும் தவறான காரியமெனச் சிலப் போலிபண்டிதரும், அவரைப் பின்பற்றும் சிலப்ரபுக் களும் எண்ணுகின்றனர் என்பது எனக்குத் தெரியும். ஆயினும் அதில் எனக்கு அணுவும் கவலையில்லை. ஆங்கில மொழிபெயர்ப்பைக் கொண்டு படிப்பதை ஆக்ஷேபிக்காத இவர் தமிழில் வெளியிட்டதை ஏன் ஆக்ஷேபிக்க வேண்டுமோ தெரியவில்லை. ஆங்கிலத்தில் வெளியிட்டதும் அதைப்படிப்பதும் தப்புத்தான் அதுபோலவே தானிதுவுமாகுமென்கிறோம் என்பாரேல், இவரிடம் வந்து நாம் தர்ம சாஸ்திரம் கேட்கும் போதல்லவா இவர் நமக்கு உபதேசிக்க வேண்டும். ஆகவே நாம் கேட்டால் இவர் அப்பொழுது உபதேசிக்கட்டும். ஆனால் தமிழில் பெயர்த்து வெளியிட்டது நியாயந்தானோ எனின்? நியாயமென்பதில் யாதும் தடையில்லை என்றே நாம் எண்ணுகிறோம். ஏன்? தக்க குருவினிடம் சாந்தி சொல்லி தக்ஷிணாமூர்த்தி அஷ்டகஞ்சொல்லி வந்தன வழிபாடுகளெல்லாம் செய்து விட்டுப் பாஷ்யபாடம் கேட்கும் பொழுது அந்த ஆசிரியர் எந்தப் பாஷையில் பாஷ்யத்தை உபதேசிக்கிறார் என்பதைக் கவனிப்போம். அவர் தமிழராகவிருந் தால் தமிழிலேயே தானுபதேசிக்கிறார். அவ்விதமவர் தமிழிலுபதேசிப்பதைக் கொண்டு பாஷ்யத்தின் பொருளை யறிவது நியாயமாகுமானால் பாடஞ் சொல்லுங் காலத்தில் சொல்லப்படும் தமிழ் பாஷையிலேயே பெயர்த்து வெளியிட்டதில் தவறு என்ன இருக்கிறது என்பதை ஏன் இவர் உணரக் கூடாது? என்றும். மேலும் வேறு சாஸ்திர க்ஞானமில்லாதவர் எவ்வளவு ஸாவதானமாகப் பாடம் கேட்டபோதிலும் அவர்க்கு எமது மொழிபெயர்ப்பு மூலம் எவ்வளவு அறிவேற் படுமோ அவ்வளவு அறிவு பாடம்கேட்பதால் மட்டும் ஏற்படாது என்பது எனது எண்ணமாயினும் ஆசிரியர் மூலம் கிடைத்த பொருளை இதனுதவியால் மனனம் செய்து கொண்டு தமது இஷ்டபூர்த்தி செய்து கொள்ளலாம் என நாமெண்ணு வதில் தவறு எதுவுமில்லை என்பதே எமது கருத்தாகும். இதுவரை தமிழில்பெ யர்த்து வெளியிடப்படாத அபூர்வமான பலசாஸ்திரக்கிரந்தங்களை சுமார் 10-வருஷ காலமாக நான் தமிழில் பெயர்த்து வெளியிட்டுவருவதில் இன்றுவரை சுமார் 8000 எட்டாயிரம்பக்கங்கள்வரை வெளிவந்திருக்கிறது. இதற்கு எவ்வளவுரூபாய் செல

வாகிஇருக்கும்' எவ்வளவு பாடுபட்டிருக்கவேண்டும் என்பது நான் சொல்லாமலே விளங்கக்கூடும். அவற்றுள் இந்தச் சூத்ரபாஷ்யவிஷயமாக எனக்கேற்பட்ட பொருள் நஷ்டமும் சரீரக்கஷ்டமும் தான் அதிகம். இவ்விஷயமாக இன்றுவரை சில மஹான்களுதவியதுபோகச் சுமார் 5000 ஐந்து ஆயிரம் ரூபாய்வரை வெளியில் நான் கொடுக்கவேண்டியதாக டாக்கியிருக்கிறது. இப்புஸ்தகமோ பொதுவாய் நாவல்கள் போல யாவரும் சுளுவில் படிக்கக்கூடியதன்று. அவ்விதமிதில் சிரத்தை கொண்டு படிக்க விரும்புகின்றவரில் பலர் பணங்கொடுத்துப் புஸ்தகத்தை வாங்கிப் படிக்கப் போதிய சக்தியற்றவராக இருக்கின்றனர். பணங்கொடுத்துவாங்கச் சக்தியுள்ளவர்களோ இப்பொழுது என்ன வேதாந்தம் வேண்டியிருக்கிறது. எல்லாம் பின்னால் பார்த்துக் கொள்வோம் எனச் சாக்குப்போக்குச் சொல்லிவிடுகின்றனர். இந்நிலையில் எவரைநம்பி நாமிந்தவேலையி லிரங்கினேமோ அவரின் ஆதரவு இல்லாமல் போகவே அச்சிட்ட புஸ்தகங்கள் அப்படியே வைக்க இடமில்லாமல் ஓரேகுப்பலாய் குவிந்து கிடக்கின்றன. ஆகவே மீதம் வெளியார்க்குக் கொடுக்கவேண்டிய தொகையை எப்படி கொடுப்பது என்று ஏக்கமுமுள்ளவனாக இருந்து வருகிறேன் ஆகவே ஸத்வித்யா ப்ரியர்களும் ஸத்வித்யாப்ரசாரத்தில் ஆவலுள்ளவர்களுமான மஹான்கள் எனது ஶ்ரமத்தைப்போக்கி உதவ வேண்டுமாய் அவர்களை ப்ரார்த்திக்கிறேன்.

மற்றுமொரு விஷயத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதாவது:—இந்தச் சாங்கரபாஷ்யத்தை நானே மொழிபெயர்த்தும் நானே அதற்கு வேண்டிய பொருளைத்தேடியும், நானேப்ரூப் பார்த்தும் சொந்தமான அச்சாபீஸில் நானே அச்சிட்டும் வெளியிட்டிருப்பதில் இடையிடையே ஏதேனும் சொற்பிழையோ பொருட்பிழையோஇருக்கலாம். அவற்றை எந்த மஹான்களேனும் எனக்குத் தெரிவித்தால் நியாயமானால் அடுத்தபதிப்பில் அதை த்திருத்திவெளியிட ஒருபொழுதும் பின்வாங்கமாட்டேன் என்றும்—

இங்ஙனம் ஸத்வித்யாப்ரியர்களான மஹான்களின் பரிபூர்ணமானவுதவியை ஆவலுடன் எதிர்பார்க்கும்

**கடலங்குடி நடேசசாஸ்திரிகள்,**

**சங்கரகிங்கரன்,**

**கஸ்தூரிரங்கவிலாஸ், நடேசய்யர்தெரு, மாம்பலம், சென்னை.**

**(20–7–1932)**

## விஷய அட்டவணை

## இரண்டாவது பாதம்.

விஷய அட்டவணை முற்றிற்று.



ओं तत्सद्ब्रह्मणे नमः ॥

# ब्रह्मसूत्र शाङ्करभाष्यम् ॥

अथ चतुर्थोऽध्यायः ।

[अस्मिन् फलाध्याये प्रथमपादे जीवन्मुक्तिनिरूपणम्]

१ आवृत्त्यधिकरणम् । सू० १-२

आवृत्तिरसकृदुपदेशात् ॥ १ ॥

---

## ப்ரம்ஹ ஸூத்திர சாங்கரபாஷ்யம்.

நான்காவது பலாத்தியாயம்.

முதற்பாதம். ஆவிருத்யதிகரணம் 1.

यं वेदाः प्रवदन्ति देवनिवहा जाता यतो यद्गताः

ब्रह्माद्याः सनकादियोगिभिरहोरात्रं य आस्वाद्यते ।

यं संश्रित्य शरण्यपादकमलं प्रेम्णाऽञ्जसा संसृते

मुक्ता भ्रान्तिमपोह्य, सोऽत्र मधुहा दद्यात्परां मे मतिम् ॥ १ ॥

அவதாரிகை—மூன்ருவது ஸாதனத்யாயத்தின் முதல் பாதத்தால் வைராக்ய மும், இரண்டாவது பாதத்தால் தத்த்வம் பதார்த்தசோதனமும், மூன்ருவது பாதத் தால் குணேபஸம்ஹாரஞ் சொல்லும்வாயிலாக ஸகுணப்ரம்ஹோபாஸனமும், நான்காவது பாதத்தால் ஆத்மக்ஞானவிஷயத்தில் பஹிரங்க ஸாதனங்களான கர் மங்களும், அந்தரங்க ஸாதனங்களான சமாதிகளும் சொல்லப்பட்டன. இந்நான் காவது பலாத்யாயத்தின் முதற்பாதத்தில் ஜீவன் முக்தியும், இரண்டாவது பாதத் தில் சரீரத்தினின்று முத்க்ராந்தியும், (ஜீவன் வெளிக்கிளம்பும் முறையும்) மூன்ரு வது பாதத்தில் உத்தராயணமார்க்கப்ராப்த்தியும், நான்காவது பாதத்தில் ப்ரம்ஹ ப்ராப்தி, ப்ரம்ஹலோகம் இவையும் சொல்லப்படுகின்றன. இந்த நான்காவது அத்தியாயம் முதல்பாதத்தில் 19ஸூத்திரங்கள்கொண்ட 14அதிகரணங்களடங்கி இருக்கின்றன. அவற்றுள் சில அதிகரணங்களில் மூன்ருவது அத்தியாயமுடி விற் சொல்லப்பட்ட ஸாதன விசாரத்தில் எஞ்ஜியுள்ள சிலவிஷயம் விசாரிக்கப்படு கிறது. இரண்டு ஸூத்திரங்கள் கொண்ட முதலாவது ஆவிருத்தி அதிகரணத்தில் ஶ்ரவணதி ஸாதனவிஷயத்தை அனுவாதம் செய்து கொண்டு அவ்விஷயமாக வரும் ஸந்தேஹம் நிவிருத்தி செய்யப்படுகிறது. அவற்றுள் முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

(ஸூ). ஆவிருத்திः அஸக்ருதுபதேசாத் (1)

श्रवणाद्याः सकृत्कार्या आवर्त्या वा सकृद्यतः । शास्त्रार्थस्तावता सिद्ध्येत्प्रयाजादौ सकृत्कृतेः ॥ १ ॥
आवर्त्या दर्शनान्तास्ते तण्डुलान्तावघातवत् । दृष्टेऽत्र संभवत्यर्थे नादृष्टं कल्प्यते बुधैः ॥ २ ॥

**तृतीयेऽध्याये परापरासु विद्यासु साधनाश्रयो विचारः प्रायेणात्यगात् । अथेह चतुर्थे फलाश्रय आगमिष्यति । प्रसङ्गागतं चान्यदपि किञ्चिच्चिन्तयिष्यते । प्रथमं तावत्कतिभिश्चिदधिकरणैः साधनाश्रयविचारशेषमेवानुसरामः । 'आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः' (बृ० ४ । ५ । ६), 'तमेव धीरो विज्ञाय प्रज्ञां कुर्वीत' (बृ० ४ । २१), 'सोऽन्वेष्टव्यः स विजिज्ञासितव्यः' (छा० ८ । ७ । १), इति चैवमादिश्रवणेषु संशयः—किं सकृत्प्रत्ययः कर्तव्य आहोस्विदावृत्त्येति । किं तावत्प्राप्तं सकृत्प्रत्ययः**

---

(ப–ரை) **आवृत्तिः** (ஆவிருத்திः)=ப்ரத்யயாவிருத்தியானது [**कर्त्तव्या** (கார்த்தவ்யா)=செய்யத்தகுந்தது.] ஏன்? **असकृदुपदेशात्** (ஆஸகிருதுபதேசாத்)=அடிக்கடி உபதேசம் காணப்படுவதே அதன் காரணமாகும். (1) (எ–று)

வையாஸிக நியாயமாலை.

(க–ரை) ஶ்ரவணம் முதலியன ஒரேதடவை செய்யவேண்டுவனவா? அல்லது ஆவிருத்தி (அனேகந்தடவை) செய்யவேண்டுவனவா? என்பது ஸந்தேஹம் ஒரேதடவைதான் செய்யவேண்டும். ஏன்? அவ்வளவினாலேயே சாஸ்திரார்த்தம் ஸித்தித்து விடக்கூடியதாயிருப்பதாலென்க. ப்ரயாஜாதிகள் ஒரேதடவைதான் செய்யப்படுவதைக் காண்கிறோம் என்பது பூர்வபக்ஷம். அரிசி வெளியாகும் வரை நெல்லைக்குத்துவதுபோல ஶ்ரவணாதிகள் அபரோக்ஷஸாக்ஷாத்காரம் வரும் வரை அடிக்கடி செய்யவேண்டுவனவே யாகும், திருஷ்டமான பலன் ஸம்பவிக்கும்பொழுது இவ்விஷயத்தில் அதிருஷ்டமான பலன் வித்வான்களால் கல்பிக்கப்படுவதில்லை என்பது ஸித்தாந்தம். (எ–று)

பாஷ்யம்.—மூன்றாவது அத்தியாயத்தில் பரவித்யை, அபரவித்யை இவற்றின் ஸாதனத்தைப்பற்றிய விசாரமானது பெரும்பாலும் செய்யப்பட்டது. பிறகு இந்த நான்காவது அத்தியாயத்தில் பலனைப்பற்றிய விசாரமானது செய்யப்படப் போகிறது. அதையொட்டிவரும் வேறுவிஷயமும் விசாரிக்கப்படப் போகிறது. முதலில் சில அதிகரணங்களால் ஸாதனத்தைப்பற்றிய விசாரத்தின் சேஷத்தையே தொடங்குகிறோம். "ஹேமைத்ரேயி! ஆத்மாவானது ஸாக்ஷாத்கரிக்கத்தகுந்தது. (அதற்கு வேண்டி அது) ஶ்ரவணம் பண்ணத்தகுந்தது. மனனம் பண்ணத்தகுந்தது. நிதித்யாஸனஞ் செய்யத்தகுந்தது" என்றும், "அதையே (ஆத்மாவையே) தீரனுயுள்ளவன்=புத்தியைத் தன்வசமாக்கினவன், நன்கு அறிந்து ப்ரக்ஞையைத் தேடிக்கொள்ளுவானுக" என்றும் இது முதலான சுருதிவாக்கியங்களில் ஸம்சய முதபமாகிறது. அதாவது: ஶ்ரவணாதிகளை ஒரேதடவை செய்யவேண்டுமா? அல்லது அனேகந்தடவை செய்யவேண்டுமா? என்றும். முதலில் கிடைப்பது யாதென்னில்? ப்ரயாஜாதிகள் போல ஒரேதடவை தான் செய்யவேண்டும் என்றும். அவ்வளவினாலேயே சாஸ்திரம் பயனுள்ளதாக வாகிவிடுவதாலென்க. சாஸ்திரத்

स्यात्प्रयाजादिवत्। तावता शास्त्रस्य कृतार्थत्वात्। अश्रूयमाणायां ह्यावृत्तौ क्रियमाणायामशास्त्रार्थः कृतो भवेत्। नन्वसकृदुपदेशा उदाहृताः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्य इत्येवमादयः। एवमपि यावच्छब्दमावर्तयेत्सकृच्छ्रवणं सकृन्मननं सकृन्निदिध्यासनं चेति नातिरिक्तम्। सकृदुपदेशेषु तु वेदोपासीतेत्येवमादिष्वनावृत्तिरिति। एवं प्राप्ते ब्रूमः— प्रत्ययावृत्तिः कर्तव्या। कुतः— असकृदुपदेशात् 'श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः' इत्येवञ्जातीयको ह्यसकृदुपदेशः प्रत्ययावृत्तिं सूचयति। ननूक्तं यावच्छब्दमेवावर्तयेन्नाधिकमिति। न। दर्शनपर्यवसितत्वादेषाम्। दर्शनपर्यवसानानि हि श्रवणादीन्यावर्त्यमानानि दृष्टार्थानि भवन्ति। यथावघातादीनि तण्डुलादिनिष्पत्तिपर्यवसानानि तद्वत्। अपि चोपासनं निदिध्यासनं चेत्यन्तर्णीतावृत्तिगुणैव क्रियाभिधीयते। तथाहि—लोके गुरुमुपास्ते

---

திற் சொல்லப்படாத ஆவிருத்தியானது செய்யப்படுமாயின் அசாஸ்திரீயமான அர்த்தமானது செய்யப்பட்டதாக வாகிவிடும்.

சங்கை—"ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" என்ற இதுமுதலான பலதடவைசெய்யப்பட்ட உபதேசங்கள் உதாஹரிக்கப்பட்டன வன்றோ எனின்?

உத்தரம்—இவ்விதமிருப்பினும் ஒருதடவை ஶ்ரவணம் ஒருதடவை மனனம் ஒருதடவை நிதித்யாஸனம் என ஶப்தம் எவ்வளவிருக்கிறதோ அவ்வளவு தான் ஆவிருத்தி செய்யவேண்டுமே யொழிய இதற்கு மேல் அதிகமாக ஆவிருத்தி செய்தல் கூடாது. "வேத" "உபாஸீத" என இதுமுதலான ஒரேதடவை உபதேசஞ் செய்துள்ள விடங்களில் ஆவிருத்தி கிடையாது என்க. என இவ்விதம் (பூர்வபக்ஷம்) ப்ராப்த்தமாகவே (ஸித்தாந்தத்தைச்) சொல்லுகிறோம். ப்ரத்யயாவிருத்தியானது செய்யத்தக்கது. ஏன்? பலதடவை உபதேசங்காணப்படுவதாலென்க. "ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" என்ற இம்மாதிரியான பலதடவை செய்துள்ள உபதேசமே ப்ரத்யயாவிருத்தியை ஸூசிப்பிக்கிறது.

சங்கை—சப்தத்தில் எவ்வளவுதடவை சொல்லப்பட்டிருக்கிறதோ அவ்வளவேதான் ஆவிருத்தி செய்யவேண்டுமே யொழிய அதற்குமேல் ஆவிருத்தி செய்தல் கூடாது எனச் சொல்லப்பட்டதன்றோ எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. இவை அபரோக்ஷஸாக்ஷாத்காரத்தை முடிவாகவுடையனவாக இருப்பதே அதன் காரணமாகும். ஶ்ரவணாதிகள் அபரோக்ஷஸாக்ஷாத்காரம் வரும்வரை பலதடவை செய்யப்படுவனவாய்க் கொண்டல்லவோ திருஷ்டமான பயனுள்ளனவாக வாகின்றன. அரிசி வெளியாவதை முடிவாகக் கொண்ட நெல்குத்துதல் முதலியன எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க. மேலும் அந்தர்நீதமான (உள்ளடங்கினதான) ஆவிருத்திரூபமான குணத்தையுடைய க்ரியையே உபாஸனமென்றும், நிதித்யாஸனமென்றும் சொல்லப்படும். அதாவது:—உலகில் குருவை உபாஸிக்கிறான் அரசனை உபாஸிக்கிறான் என்றவிடத்தில் எவன் தாத்பரியத்துடன் இடையறாது, குருமுதலியோரை உபாஸிக்

राजानमुपास्त इति च यस्तात्पर्येण गुर्वादीननुवर्तते स एवमुच्यते। तथा ध्यायति प्रोषितनाथा पतिमिति या निरन्तरस्मरणा पतिं प्रति सोत्कण्ठा सैवमभिधीयते। विद्युपास्त्योश्च वेदान्तेष्वव्यतिरेकेण प्रयोगो दृश्यते। क्वचिद्विदिनोपक्रम्योपासिनोपसंहरति यथा—'यस्तद्वेद यत्स वेद स मयैतदुक्तः' (छा० ४।१।४) इत्यत्र 'अनु म एतां भगवो देवतां शाधि यां देवतामुपास्से' (छा० ४।२।२) इति। क्वचिच्चोपासिनोपक्रम्य विदिनोपसंहरति यथा—'मनो ब्रह्मेत्युपासीत' (छा० ३।१८।१) इत्यत्र 'भाति च तपति च कीर्त्या यशसा ब्रह्मवर्चसेन य एवं वेद' (छा० ३।१८।३) इति। तस्मात्सकृदुपदेशेष्वप्यावृत्तिसिद्धिः। असकृदुपदेशस्त्वावृत्तेः सूचकः ॥१॥

## लिङ्गाच्च ॥२॥

लिङ्गमपि प्रत्ययावृत्तिं प्रत्याययति। तथा ह्युद्गीथविज्ञानं प्रस्तुत्य 'आदित्य उद्गीथः' (छा० १।५।१) इत्येतदेकपुत्रतादोषेणापोद्य 'रश्मींस्त्वं पर्यावर्तयात्' (छा०

---

கின்றுனே அவனே இவ்விதம் சொல்லப்படுகிருன். அவ்விதமே 'வெளியிற்சென்ற கணவனையுடைய ஸ்திரீயானவள் கணவனைத்தியானிக்கிறுள்' என்ற விடத்தில் இடையருதகினைவுள்ளவளும், பர்த்தாவினிடத்தில் மிக்க ஆவலுள்ளவளும் எவளோ அவளே இவ்விதம் சொல்லப்படுகிருள். வேதாந்தங்களில் "விதி"=வேதனம், "உபாஸ்தி"=உபாஸனம் இரண்டுக்கும் வேற்றுமையில்லாமலே ப்ரயோகமானது காணப்படுகிறது. சிலவிடத்தில் "அந்தரைக்வர் எதை அறிகிருரே, அந்தப்ராண தத்துவத்தை ரைக்வரை விட வேருன எவனொருவன் அறிவானே அவன் இவ்விதம் (ரைக்வரைப்போல எல்லாநற்கர்மங்களும், அதன் பயன்களுமுடையவனென) என்னுல் சொல்லப்பட்டான்" என்றவிடத்தில் "ஓ பெரியீர்! உபாஸிக்கப்பட்ட தேவதை எதுவோ அதை எனக்கு உபதேசிப்பீராக" என ஜானஸ்ருதிசொன்னுன் எனக் காணப்படுகிறது. சிலவிடத்தில் (உபாஸியினுல்) உபாஸ்தியினுல் தொடங்கி விதியினுல் (வேத என்றதினுல்) உபஸம்ஹாரம் காணப்படுகிறது. அதாவது:—"மனஸ்ஸை ப்ரம்ஹமாக உபாஸிப்பாயாக" என்ற விடத்தில் "எவனொருவன் இவ்விதம் வேதனம் செய்வானே அவன் கீர்த்தியுடனும், யஸஸ்ஸுடனும், ப்ரம்ஹ சரியத்துடனும் ப்ரகாசிக்கிருன். விளங்கவும் செய்கிருன்" என்றும். ஆகவே ஒரேதடவை உபதேசம் காணுமிடங்களிலும் கூட ஆவிருத்தியானது ஏற்படத்தான் செய்கிறது. பலதடவை செய்துள்ள உபதேசமோ ஆவிருத்திக்கு ஸூசகமாகவே தானுகிறது. (1) (எ—று)

## (ஸூ) லிங்காத்ச (2)

(ப—ரை) **लिङ्गाच्च** (லிங்காத்ச)=சுருதியில் ப்ரத்யயாவிருத்தியைத் தெரிவிக்கும் அறிகுறி யிருப்பதும் மற்றொரு காரணமாகும். (2) (எ—று)

பாஷ்யம்.—(சுருதியிலுள்ள) லிங்கமும்=அறிகுறியும் ப்ரத்யயத்தினுடைய ஆவிருத்தியைத் திருடப்படுத்திக் காட்டுகிறது. அதாவது:—உத்கீத விக்ஞானத்

१।५।२) इति रश्मिबहुत्वविज्ञानं बहुपुत्रतायै विदधत्सिद्धवत्प्रत्ययावृत्तिं दर्शयति। तस्मात्तत्सामान्यात्सर्वप्रत्ययेष्वावृत्तिसिद्धिः। अत्राह—भवतु नाम साध्यफलेषु प्रत्ययेष्वावृत्तिः। तेष्वावृत्तिसाध्यस्यातिशयस्य संभवात्। यस्तु परब्रह्मविषयः प्रत्ययो नित्यशुद्धबुद्धमुक्तस्वभावमेवात्मभूतं परं ब्रह्म समर्पयति तत्र किमर्थावृत्तिरिति। सकृच्छ्रुतौ च ब्रह्मात्मत्वप्रतीत्यनुपपत्तेरावृत्त्यभ्युपगम इति चेत्। न। आवृत्तावपि तदनुपपत्तेः। यदि हि 'तत्त्वमसि' (छा० ६।८।७) इत्येवञ्जातीयकं वाक्यं सकृच्छ्रूयमाणं ब्रह्मात्मत्वप्रतीतिं नोत्पादयेत्ततस्तदेवावर्त्यमानमुत्पादयिष्यतीति का प्रत्याशा स्यात्। अथोच्येत न केवलं वाक्यं कश्चिदर्थं साक्षात्कर्तुं शक्नोत्यतो युक्त्यपेक्षं वाक्यमनुभावयिष्यति ब्रह्मात्मत्वमिति। तथाप्यावृत्त्यानर्थक्यमेव। साऽपि हि युक्तिः सकृत्प्रवृत्तैव स्वमर्थमनुभावयिष्यति। अथापि स्याद्युक्त्या वाक्येन च सामान्यविषयमेव विज्ञानं क्रियते न विशेषविषयम्।

---

தைச் சொல்லத் தொடங்கி "ஆதித்யன் உத்கீதமாகும்" என வுபதேசித்து அவ் வுபாஸனபானது ஒரே புத்திரனைத் தான் தரும் என அதில் தோஷம் கூறி அதை விலக்கி "நீர் கிரணங்களை ஆவிருத்தியுடன் தியானஞ் செய்வீராக" என்பதாய் வெகு கிரணங்களின் விக்ஞானமானது வெகுபுத்திர ப்ராப்த்தியைத் தருகிறது என விதிக்கும்வேதமானது ப்ரத்யயாவிருத்தியை நிலைத்ததாகவே காண்பிக்கிறது. ஆகவே அத்துடன் ஒத்திருப்பதால் எல்லாப்ரத்யயங்களிலும் ஆவிருத்தியானது ஸித்தமாகவே ஏற்படுகிறது.

இவ்விடத்தில் பூர்வபக்ஷி சொல்லுகிறார்.—ஸாத்யமான பலனை யுடைய ப்ரத்யயங்களில்=உபாஸனங்களில் ஆவிருத்தியானது இருக்கட்டும். பரப்ரம்ஹ விஷயமான எந்தப்ரத்யயமானது நித்ய சுத்த புத்த முக்தஸ்வபாவமும், ஆத்மாவாகவுமே யுள்ளதுமான பரப்ரம்ஹத்தையே விஷயமாகக்கொண்டதோ அதில் ஆவிருத்தியானது எதற்கு? என்றும். ஒருதடவை கேட்பதால் ப்ரம்ஹாத்மத்வ ப்ரதீதி யேற்படமாட்டாததலால் ஆவிருத்தி ஒப்பப்படுகிறது என்றாலோ, அது பொருந்தாது ஆவிருத்தி செய்தபோதிலுங் கூட அது ஏற்படமாட்டாதுதான். "தத்வமஸி" என்ற இம்மாதிரியான வாக்கியமானது ஒரேதடவை ஶ்ரவணஞ் செய்யப்படுவதாய்க் கொண்டு ப்ரம்ஹாத்மத்வக்ஞானத்தை உண்டுபண்ணவிடில் அப்பொழுது அந்த வாக்கியமே ஆவிருத்தி செய்யப்படுவதாய்க் கொண்டு உண்டுபண்ணும் என எவ்விதம் நம்பிக்கை ஏற்படும்.

சங்கை—கேவலம் (தனித்த) வாக்கியம்மட்டுமே ஒரு அர்த்தத்தை ஸாக்ஷாத்கரிக்கச் செய்யச் சக்தியுடையதாகவாகமாட்டாது. ஆகவே யுக்தியை யபேக்ஷித்த வாக்கியமானது ப்ரம்ஹாத்மத்வத்தை அனுபவிக்கச் செய்யக்கூடும் எனின்?

உத்தரம்—அவ்விதமாயினுங் கூட ஆவிருத்தியானது பயனற்றதாகவே தானுகிறது. அந்த யுக்தியும் ஒரேதடவை பிரவிருத்தித்ததாய்க்கொண்டு தனது அர்த்தத்தை அனுபவிக்கச் செய்துவிடக்கூடும்.

சங்கை—யுக்தியினாலும் வாக்கியத்தினாலும் பொதுப்படையான பொருளை விஷயமாகக்கொண்ட விக்ஞானம்மட்டும் உண்டுபண்ணப்படுமேயொழிய விசேஷ

यथास्ति मे हृदये शूलमित्यतो वाक्याद्गात्रकम्पादिलिङ्गाच्च शूलसद्भावसामान्यमेव परः प्रतिपद्यते न विशेषमनुभवति यथा स एव शूली। विशेषानुभवश्चाविद्याया निवर्तकस्तदर्थावृत्तिरिति चेत्। न। असकृदपि तावन्मात्रे क्रियमाणे विशेषविज्ञानोत्पत्त्यसंभवात्। नहि सकृत्प्रयुक्ताभ्यां शास्त्रयुक्तिभ्यामनवगतो विशेषः शतकृत्वोऽपि प्रयुज्यमानाभ्यामवगन्तुं शक्यते। तस्माद्यदि शास्त्रयुक्तिभ्यां विशेषः प्रतिपाद्यते यदि वा सामान्यमेवोभयथापि सकृत्प्रवृत्ते एव ते स्वकार्यं कुरुत इत्यावृत्त्यनुपयोगः। नच सकृत्प्रयुक्ते शास्त्रयुक्ती कस्यचिदप्यनुभवं नोत्पादयत इति शक्यते नियन्तुं विचित्रप्रज्ञत्वात्प्रतिपत्तॄणाम्। अपि चानेकांशोपेते लौकिके पदार्थे सामान्यविशेषवत्येकेनावधानेनैकमंशमवधारयत्यपरेणापरमिति स्यादप्यभ्यासोपयोगो यथा दीर्घप्रपाठकग्रहणादिषु। ननु निर्विशेषे ब्रह्मणि सामान्यविशेषरहिते चैतन्यमात्रात्मके प्रमोत्पत्तावभ्यासापेक्षा युक्तेति॥

---

மானபொருளை விஷயமாகக்கொண்ட க்ஞானம் உண்டுபண்ணப்பட மாட்டாது. "எனது மார்பில்வலி" என்ற இந்தவாக்கியத்தினின்றும், சரீரத்தின் ஆட்டம் முதலிய லிங்கத்தைக்கொண்டும் வலியிருப்பதாகமட்டும் பொதுப்படையாக பிறன் அறிகின்றனேயொழிய அதேவலியுள்ளவன் எவ்விதம் தெளிவாக அனுபவிக்கின்றனே அவ்விதம் பிறன் அறிவதில்லை என்பது எவ்விதமோ அவ்விதமே இங்குமாகும். விசேஷமான அனுபவமும் அவித்யையை நிவிருத்தி செய்வதாகவாகும். அதற்குவேண்டி ஆவிருத்தி அவஶ்யமாகிறது என்கிறோம் எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. அவ்வளவுமட்டும் அனேகந்தடவை செய்யப்படினுங்கூட விசேஷவிக்ஞானம் ஸம்பவிப்பதில்லை. ஒருதடவை உபயோகிக்கப்பட்ட சாஸ்திரயுக்திகளால் அறியப்படாத விசேஷமானது நூறுதடவை உபயோகிக்கப்படினும் அவைகளால் அறியப்படமாட்டாதன்றே. ஆகவே சாஸ்திரம் யுக்தி இவைகளால் விசேஷமானது ப்ரதிபாதிக்கப்படினும், அல்லது ஸாமான்யமானது ப்ரதிபாதிக்கப்படினும் இரண்டுவிதத்திலும் ஒரேதடவை பிரயோகிக்கப்பட்ட அந்தச்சாஸ்திரம் யுக்தி இவைகள் தனது காரியத்தைச் செய்யும் என்பதுபற்றி ஆவிருத்தியானது உபயோகமற்றதாகவாகிறது. சாஸ்திரம் யுக்தி இவைகள் ஒரேதடவை உபயோகிக்கப்படின் ஒருவனுக்கும் அனுபவத்தை உண்டுபண்ணமாட்டா எனக் சட்டுபடுத்தமுடியாது. அறிந்துகொள்ளுபவர் விசித்ரப்ரக்ஞையுள்ளவராகக் காணப்படுவதாலென்க.

மேலும் பல அம்சங்களுடன் கூடினதும் ஸாமான்ய விசேஷமுள்ளதுமான லௌகிக பதார்த்தத்தில் ஒரு அவதானத்தால் (புத்தியைச்செலுத்தலால்) ஒரு அம்சத்தையும் மற்றொரு அவதானத்தால் மற்றொரு அம்சத்தையும் நிஶ்சயிக்கிறான் என்பது ஸம்பவிக்கலாம். ஆனதுபற்றி அங்கு அப்யாஸம் (ஆவிருத்தி) உபயோகப்படும். நீண்டப்ரபாடகத்தை (இது வேதத்தின் ஒருபாகத்தினது பெயராகும்) க்கிரஹணம் செய்தல் முதலியவற்றில் இவ்விதமே காணப்படுகிறது. ஸாமான்ய விசேஷமற்றதும் நிர்விசேஷமும் சைதன்யமாத்ரஸ்வரூப முள்ளதுமான

अत्रोच्यते—भवेदावृत्त्यानर्थक्यं तं प्रति यस्तत्त्वमसीति सकृदुक्तमेव ब्रह्मात्मत्वमनुभवितुं शक्नुयात्। यस्तु न शक्नोति तं प्रत्युपयुज्यत एवावृत्तिः। तथाहि छान्दोग्ये 'तत्त्वमसि श्वेतकेतो' (छा० ६। ८। ७) इत्युपदिश्य 'भूय एव मा भगवान्विज्ञापयतु' (छा० ६। ८। ७) इति पुनः पुनः परिचोद्यमानस्तत्तदाशङ्काकारणं निराकृत्य तत्त्वमसीत्येवासकृदुपदिशति। तथाच 'श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः' (बृ० ४। ५। ६) इत्यादि दर्शितम्। ननूक्तं सकृच्छ्रुतं चेत्तत्त्वमसिवाक्यं स्वमर्थमनुभावयितुं न शक्नोति तत आवर्त्यमानमपि नैव शक्ष्यतीति। नैष दोषः। नहि दृष्टेऽनुपपन्नं नाम। दृश्यन्ते हि सकृच्छ्रुताद्वाक्यान्मन्दप्रतीतं वाक्यार्थमावर्तयन्तस्तत्तदाभासव्युदासेन सम्यक्प्रतिपद्यमानाः। अपिच तत्त्वमसीत्येतद्वाक्यं त्वंपदार्थस्य तत्पदार्थभावमाचष्टे। तत्पदेन च प्रकृतं सद्ब्रह्मेक्षितृ जगतो जन्मादिकारणमभिधीयते 'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म' (तै० २। १। १), 'वि-

---

ப்ரம்ஹவிஷயத்தில் யதார்த்தஞ்ஞானத்தையுண்டுபண்ணும் விஷயத்தில் ஆவிருத்திக்கு அபேக்ஷை சொல்லுவது யுக்தமாகவாகாது. எனின்.

உத்தரம்—* இவ்விஷயத்தில் பதில் சொல்லப்படுகிறது. எவன் தத்த்வமஸி என்றதால் ஒரேதடவை சொல்லப்பட்டதும் ப்ரம்ஹாத்மத்வத்தை அனுபவிக்கச் சக்தியுள்ளவனோ அவனுச்கு ஆவிருத்திபயனற்றதுதான். எவன் சக்தியற்றவனோ அவனுக்கு ஆவிருத்தியானது உபயோகப்படவே செய்கிறது. அதாவது:—சாந்தோக்கியத்தில் "ஹேஶ்வேதகேதோ! நீ அதாக இருக்கிறாய்" என உபதேசித்து "பெரியார் திரும்பவுமே எனக்கு உபதேசிக்கட்டும்" எனத்திரும்பவும் திரும்பவும் கேட்கப்படும் ஆசிரியர் அவனுடைய ஆசங்கைக்குரிய காரணத்தை நிராகரணஞ்செய்து "நீஅதாகஇருக்கிறாய்" என்றே அனேகந்தடவை உபதேசிக்கிறார். அவ்விதமே "ஶ்ரோதவ்ய: மந்தவ்ய: நிதித்யாஸிதவ்ய:" என்றதாதியும் காண்பிக்கப்பட்டது.

சங்கை—ஒரேதடவை கேட்கப்பட்ட தத்த்வமஸ்யாதிவாக்கியமானது தனது அர்த்தத்தை நிர்த்தாரணஞ்செய்யாவிடில் அப்பொழுது ஆவிருத்தி செய்யப்படினுங்கூட அதுநிர்த்தாரணஞ் செய்யச் சக்தியுள்ளதாக வாகாதுஎன முன்னர் சொல்லப்பட்டதன்றோ எனின்?

உத்தரம்—இது தோஷமாகாது. கண்கூடாகக் காணப்படும் விஷயத்தில் பொருந்தாதது ஒன்றுமில்லையன்றோ? ஒரேதடவை கேட்கப்பட்ட வாக்கியத்தினின்றும் அற்பமறியப்பட்ட வாக்யார்த்தத்தை ஆவிருத்தி செய்கின்றவர்களாய்க் கொண்டு அந்தந்த ஸந்தேஹத்தைவிலக்கும் வாயிலாக நன்கு அதையறிந்துகொள்ளுகின்றவர் உலகில் காணப்படுகின்றனர் அன்றோ? மேலும் "தத்த்வமஸி" என்ற இந்தவாக்கியமானது த்வம் பதார்த்தத்துக்கு தத்பதார்த்தத்தன்மையை உபதேசிக்கிறது. தத் என்ற பதத்தினாலோ தொடர்ந்துவருவதும் ஈக்ஷிதாவும், ஜகத்தின்

---

* இதுவரைசொன்ன பூர்வபக்ஷத்துக்கு இதுமுதல் ஸித்தாந்தத்தில் பதில் சொல்லப்படுகிறது.

ज्ञानमानन्दं ब्रह्म' (बृ० ३।९।२८), 'अदृष्टं द्रष्टृ' (बृ० ३।८।११), 'अविज्ञातं विज्ञातृ' (बृ० ३।८।११), 'अजमजरममरम्' 'अस्थूलमनण्वह्रस्वमदीर्घम्' (बृ० ३।८।८) इत्यादिशास्त्रप्रसिद्धम्। तत्राजादिशब्दैर्जन्मादयो भावविकारा निवर्तिताः। अस्थूलादिशब्दैश्च स्थौल्यादयो द्रव्यधर्माः। विज्ञानादिशब्दैश्च चैतन्यप्रकाशात्मकत्वमुक्तम्। एष व्यावृत्तसंसारधर्मकोऽनुभवात्मको ब्रह्मसंज्ञकस्तत्पदार्थो वेदान्ताभियुक्तानां प्रसिद्धः। तथा त्वंपदार्थोऽपि प्रत्यगात्मा श्रोता देहादारभ्य प्रत्यगात्मतया संभाव्यमानश्चैतन्यपर्यन्तत्वेनावधारितः। तत्र येषामेतौ पदार्थावज्ञानसंशयविपर्ययप्रतिबद्धौ तेषां तत्त्वमसीत्येतद्वाक्यं स्वार्थे प्रमां नोत्पादयितुं शक्नोति पदार्थज्ञानपूर्वकत्वाद्वाक्यार्थस्येत्यतस्तान्प्रत्येष्टव्यः पदार्थविवेकप्रयोजनः शास्त्रयुक्त्यभ्यासः॥

---

ஜன்மாதிகளுக்குக் காரணமுமான ஸ்வரூபப்ரம்ஹமானது சொல்லப்படுகிறது. அது "‡ ஸத்யம் க்ஞானம் அனந்தம் ப்ரம்ஹ" "என்றும், விக்ஞானம் ஆனந்தம் ப்ரம்ஹ" "அதிருஷ்டம் த்ரஷ்ட்ரு" என்றும், "அவிக்ஞாதம் விக்ஞாத்ரு" என்றும், அஜம் அஜரம் அமரம்" என்றும், "அஸ்தூலம் அநணு அஹ்ரஸ்வம் அதீர்க்கம்" என்றுமாகிய சாஸ்திரப்ரஸித்தமாகவுமிருக்கிறது. அவற்றுள் அஜ என்றதாதிசப்தங்களால் (1) ஜன்மா முதலிய பொருளுக்குரிய விகாரங்கள் விலக்கப்பட்டன. அஸ்தூலம் முதலியசப்தங்களால் ஸ்தௌல்யம்=பெருத்திருத்தல், முதலிய திரவியதர்மங்கங்களும், விலக்கப்பட்டன. விக்ஞானம் முதலிய சப்தங்களினால் சைதன்ய ப்ரகாசரூபமாக இருத்தலும் சொல்லப்பட்டது. ஸர்வஸம்ஸாரதர்மங்களுமற்றதும், அனுபவரூபமானதும் ப்ரம்ஹம் எனப் பெயருள்ளதுமான தத்பதார்த்தமானது வேதாந்தப்பயிர்ச்சியுள்ள பெரியார்க்குள் ப்ரஸித்தமாக இருக்கிறது. அதுபோலவே த்வம் பதார்த்தமும் ப்ரத்யகாத்மாவாகவும், ஸ்ரோதாவாகவும், தேஹந்தொடங்கி ப்ரத்யகாத்மாவாக இருப்பதாகநன்கு அறியப்படுவதாகவும், முடிவில் சைதன்யவடிவமாக விருப்பதாகவும் நிர்த்தாரணஞ் செய்யப்பட்டிருக்கிறது. அவற்றுள் எவர்க்கு இந்த தத்பதார்த்தத்வம் பதார்த்தங்கள் அக்ஞான ஸம்சயவிபர்யயங்களால் உள்ளபடி அறியப்படாததாகவிருக்கின்றனவோ அவர்க்கு தத்த்வமஸி என்ற இந்தவாக்கியமானது தனது அர்த்தவிஷயமான உண்மையான க்ஞானத்தை உண்டுபண்ணச் சக்தியுள்ளதாகவாவதில்லை. பதார்த்தக்ஞானத்தை முன்னிட்டு வாக்கியார்த்தக்ஞான மேற்படுவதுபற்றியே என்க. ஆகவே அவர்களைக் குறித்து தத்த்வம் பதார்த்தவிவேகத்தை (பகுத்தறிவை) பிரயோஜனமாக உடையசாஸ்திரம் யுக்தி இவற்றின் ஆவிருத்தியானது எதிர்பார்க்க வேண்டுவதாக வாகிறது. அறியவேண்டுவதான ஆத்மாவானது எவ்வித அம்ச

---

‡ "ஸத்யம்"......என்றதுமுதல் "அதீர்க்கம்" என்றதுவரையுள்ள சுருதியின் பொருள் பலவிடங்களில் எழுதப்பட்டிருப்பதால் இங்கு எழுதப்படவில்லை.

(1) முதலில் மறைந்திருத்தல், வெளிவருதல், ஓங்கிவளர்தல், வளர்தலின் முடிவையடைதல், தேயவாரம்பித்தல், முற்றிலும் தேய்ந்துவிடல் என்பன பொருள்களுக்குரிய 6 விகாரங்களாகும்.

उपास्तीनां यावदिच्छमावृत्तिः स्यादुताऽऽमृति । उपास्त्यर्थाभिनिष्पत्तेर्यावदिच्छं न तूपरि ॥ १ ॥
अन्त्यप्रत्ययतो जन्म भाव्यतस्तत्प्रसिद्धये । आमृत्यावर्तनं न्याय्यं सदा तद्भाववाक्यतः ॥ २ ॥

आवृत्तिः सर्वोपासनेष्वादर्तव्येति स्थितमाद्येऽधिकरणे। तत्र यानि तावत्सम्यग्दर्शनार्थान्युपासनानि तान्यवघातादिवत्कार्यपर्यवसानानीति ज्ञातमेवैषामावृत्तिपरिमाणम्। नहि सम्यग्दर्शने कार्ये निष्पन्ने यत्नान्तरं किञ्चिच्छासितुं शक्यम्। अनियोज्यब्रह्मात्मत्वप्रतिपत्तेः शास्त्रस्याविषयत्वात्। यानि पुनरभ्युदयफलानि तेष्वेषा चिन्ता किं कियन्तञ्चित्कालं प्रत्ययमावर्त्योपरमेदुत यावज्जीवमावर्तयेदिति। किं तावत्प्राप्तम्। कियन्तञ्चित्कालं प्रत्ययमभ्यस्योत्सृजेदावृत्तिविशिष्टस्योपासनाशब्दार्थस्य कृतत्वादिति। एवं प्राप्ते ब्रूमः—आप्रायणादेवावर्तयेत्प्रत्ययम्। अन्त्यप्रत्ययवशाददृष्टफलप्राप्तेः। कर्माण्यपि हि

---

வையாஸிக நியாயமாலே.

(க—ரை) உபாஸ்திகளுக்கு இஷ்டமுள்ளவரை ப்ரத்யயாவிருத்தி செய்யவேண்டுமா? அல்லது மரணம் வரும் வரை செய்யவேண்டுமா? என்பது ஸந்தேஹம். உபாஸ்தியினது அர்த்தம் ஸித்தித்துவிடுவதிலிருந்து இஷ்டமுள்ளவரை ப்ரத்யயாவிருத்தி செய்யவேண்டுமே யல்லாது அதற்குமேல் செய்யவேண்டுவதில்லை என்பது பூர்வபக்ஷம். முடிவிலுள்ள ப்ரத்யயத்தினுல் அடுத்த பிறவியானது வரக்கூடியதாக விருக்கிறது. ஆனதுபற்றி அடுத்தபிறவி யேற்படுவதற்கு வேண்டி மரணம் வரும்வரை ஆவிருத்தி செய்வதுதான் நியாயமானது. "எப்பொழுதும் உபாஸ்யவிஷயமான சித்தவிருத்தியுள்ளவனுக இருக்கவேண்டும்" என்ற ஸ்மிருதிவாக்கிய மிருப்பதே அதன் காரணமாகும் என்பது ஸித்தாந்தம்.

பாஷ்யம்—எல்லா உபாஸ்திகளிலும் ஆவிருத்தியை ஆதரிக்கவேண்டும் என முதலாவது அதிகரணத்தில் சொல்லப்பட்டது. அவற்றுள் ஸம்யக்தர்சனத்துக்கு வேண்டிய யாதொரு உபாஸனங்களுண்டோ அவை அவகாதாதிகள் (குத்துதல் முதலியன) போல கார்யத்தை (பலனை) முடிவாகக் கொண்டனபற்றி இவற்றின் (ஆவிருத்தியின்)அளவானது அறியப்பட்டதாகவே ஆகிறது. ஸம்யக்தர்சனரூபமான காரியமானது உண்டானதும் வேறுமுயற்சியொன்றும் விதிக்கமுடியாதன்றே? விதிக்கு விஷயமாகாத ப்ரம்ஹத்தை ஆத்மாவாக வறிந்தவன் மாஸ்திரத்துக்கு விஷயமாக இல்லாதிருப்பதே அதன் காரணமாகும். அப்யுதயத்தை (பரலோகசுகத்தை)ப் பலனுகக்கொண்ட யாதொரு உபாஸனங்களுண்டோ அவற்றில் சில காலம் ப்ரத்யயத்தை ஆவிருத்திசெய்து ஓய்வையடையவேண்டுமா? அல்லது உயிருள்ளவரை ப்ரத்யயத்தின் ஆவிருத்தியைச் செய்யவேண்டுமா? என இந்த விசாரமானது ஏற்படுகிறது. முதலில் கிடைப்பது யாதென்னில் சிலகாலம்வரை ப்ரத்யயத்தை அப்யஸித்துப் பிறகு அதை விட்டுவிடவேண்டும். ஏன்? ஆவிருத்தியுடன் கூடின உபாஸனசப்தத்தின் பொருளானது செய்யப்பட்டதாக வாவதாலென்க. என இவ்விதம் ப்ராப்தமாகவே சொல்லுகிறோம். அதாவது:—மரணம் வரும் வரை ப்ரத்யயத்தை ஆவிருத்தி செய்யவேவேண்டும். முடிவிலுள்ள ப்ரத்யயவசத்தாலேயே அதிருஷ்டமான (பரலோக சுகரூபமான) பலன் ப்ராப்த

जन्मान्तरोपभोग्यं फलमारभमाणानि तदनुरूपं भावनाविज्ञानं प्रायणकाल आक्षिपन्ति, 'सविज्ञानोभवति सविज्ञानमेवान्ववक्रामति,' 'यच्चित्तस्तेनैष प्राणमायाति, प्राणस्तेजसा युक्तः सहात्मना यथासङ्कल्पितं लोकं नयति' इति चैवमादिश्रुतिभ्यः। तृणजलूकानिदर्शनाच्च। प्रत्ययास्त्वेते स्वरूपानुवृत्तिं मुक्त्वा किमन्यत्प्रायणकालभावि भावनाविज्ञानमपेक्षेरन्। तस्माद्ये प्रतिपत्तव्यफलभावनात्मकाः प्रत्ययास्तेष्वाप्रायणादावृत्तिः। तथाच श्रुतिः—'स यावत्क्रतुरयमस्माल्लोकात्प्रैति' इति प्रायणकालेऽपि प्रत्ययानुवृत्तिं दर्शयति। स्मृतिरपि—'यं यं वाऽपि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम्। तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः' (गी० ८। ६) इति, 'प्रयाणकाले मनसाऽचलेन' (गी० ८। १०) इति च। 'सोऽन्तवेलायामेतत्त्रयं प्रतिपद्येत' इति च मरणवेलायामपि कर्तव्यशेषं श्रावयति॥

## ९ तदधिगमाधिकरणम्। सू० १३

## तदधिगम उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ तद्व्यपदेशात्॥ १३॥

---

மாகவாவதே அதன் காரணமாகும். கர்மாக்களுமே வேறுபிறவியில் அனுபவிக்
கக்கூடியபலனை ஆரம்பிக்கின்றவனாய் அதற்கு அனுரூபமான பாவனாவிக்ஞானத்
தை (அடுத்தஜன்மத்தில் வருப்பலனுடைய தோற்றத்தை) மரணகாலத்தில் தரு
கின்றன. "பின்னர்வரும் பலத்தோற்றத்துடன் கூடினவனாக வாகிறான்" "அத்
தகைய தோற்றத்துடனேயே கிளம்புகிறான்" என்றும், "எவ்விஷயமான சித்த
முள்ளவனாக முடிவிலிருந்தானோ அதனுடனேயே இவன் ப்ராணனை அடைகிறான்"
என்றும், "ப்ராணன் தேஜஸ்ஸுடன் கூடினதாய் ஆத்மாவுடன் கூட ஸங்கல்பம்
செய்யப்பட்டபடிக்கான லோகத்தை அடைவிக்கிறது." என இம்மாதிரியான
சுருதிகளிருக்கின்றன. புல்லிலுள்ள அட்டையென்ற புழுவின் திருஷ்டாந்தமு
மிருக்கிறது. இந்த ப்ரத்யயங்களோ வெனில் ஸ்வரூபத்தின் அனுவிருத்தியை
விட்டு மரணகாலத்தில் நேரக்கூடிய வேறு எந்தப்பலனைப் பற்றிய தோற்றத்தைத்
தரக்கூடியனவாகவாகும். ஆகவே அடையத்தக்கதான பலனைப்பற்றிய பாவனா
ரூபமான ப்ரத்யயங்கள் எவையுண்டோ அவற்றில் மரணம் வரும்வரை ஆவிருத்தி
யானது யேற்படுகிறது. அவ்விதமே ஶ்ருதியும் "இவன் எவ்வளவு ஸங்கல்பமுள்
ளவனாக இருந்து இந்த லோகத்தைவிட்டுப் போகிறானோ" என்பதாய் மரணகாலத்
திலும் ப்ரத்யயத்தின் ஆவிருத்தியைக் காண்பிக்கிறது. ஸ்மிருதியும் "ஹே குந்தீ
புத்ரனே! உயிருள்ளவரை எப்பொழுதும் அதே விஷயமான பாவனையுடன்
கூடினவனாய் முடிவில் எந்தெந்தப் பொருளை நினைவிற்கொண்டு சரீரத்தை விடுகி
றானோ அததை அடையவே அடைகிறான்" என்றும், "சரீரத்தினின்றும் நீங்குங்
காலத்தில் அசைவற்ற மனத்துடன்" என்றும் சொல்லுகிறது. "அந்த உபாஸ
கன் மரணகாலத்திலுங் கூட ("அக்ஷிதமஸி, அச்யுதமஸி, ப்ராணஸம்சிதமஸி")
என்ற இந்த மூன்றுமந்திரங்களையும் ஸ்மரிக்கவேண்டும்" என்பதாய் மரணகாலத்
திலுங்கூட செய்யவேண்டிய காரியத்தின் சேஷத்தைத் தெரிவிக்கிறது. (12)

எட்டாவது ஆப்ராயணாதிகரணம் முற்றிற்று.

ज्ञानिनः पापलेपोऽस्ति नास्ति वाऽनुपभोगतः। अनाश इति शास्त्रेषु घोषाल्लेपोऽस्य विद्यते ॥ १ ॥
अकर्त्रात्मधिया वस्तुमहिम्नैव न लिप्यते। अश्लेषनाशावप्युक्तावज्ञे घोषस्तु सार्थकः ॥ २ ॥

गतस्तृतीयशेषः। अथेदानीं ब्रह्मविद्याफलं प्रति चिन्ता प्रतायते। ब्रह्माधिगमे सति तद्विपरीतफलं दुरितं क्षीयते न क्षीयते वेति संशयः। किं तावत्प्राप्तम्। फलार्थत्वात्कर्मणः फलमदत्त्वा न संभाव्यते क्षयः। फलदायिनी ह्यस्य शक्तिः श्रुत्या समधिगता। यदि तदन्तरेणैव फलोपभोगमपवृज्येत श्रुतिः कदर्थिता स्यात्। स्मरन्ति च 'नहि कर्म

---

## ததகிகமாதிகரணம் 9.

(ஸூ) ததகிகமே உத்தரபூர்வாகயோ: அச்லேஷவிநாசௌ தத்வ்யபதேசாத் (13)

(ப—ரை) **तदधिगमे** (ததகிகமே)=ப்ரம்ஹஸாக்ஷாத்காரப்வந்ததும், **उत्तरपूर्वाघयोः** (உத்தரபூர்வாகயோ:)=ஞ்ஞானத்துக்குப்பின்னரும் முன்னருமுள்ளபாபங்களின் **अश्लेषविनाशौ** (அஸ்லேஷவிநாசௌ)=முறையே ஸம்பந்தமின்மையும் விநாசமும் ஏற்படுகின்றன. ஏன்? **तद्व्यपदेशात्** (தத்வ்யபதேசாத்)=அவ்விதம் சுருதி சொல்லுவதே அதன் காரணமாகும். (13) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ஞானிக்குப் பாபகர்மத்தின் லேபம் (ஸம்பந்தம்) உண்டா? அல்லது இல்லையா? என்பது ஸந்தேஹம். அநுபவமில்லாது கர்மமானது நாசமடையாது எனச் சாஸ்திரம் கோஷிப்பதால் ஞ்ஞானிக்குக் கர்மலேபமுண்டு என்பது பூர்வபக்ஷம். நான் கர்த்தாவன்று என்ற ஞ்ஞானத்தினலும், வஸ்துவின் மஹிமையினலும் ஞ்ஞானிக்குக் கர்மலேபம் கிடையாது. முந்தின கர்மம் ஸம்பந்திப்பதில்லை யென்றும், பிந்தினகர்மம் நாசத்தை யடைந்து விடுகிறது என்றும் சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. அநுபவிக்காவிடில் கர்மம் தேயாது என்ற சுருதியிலுள்ள கோஷமானது ஆத்மஞ்ஞானமில்லாதவன் விஷயத்தில் ஸபலமாகவாகிறது. (எ—று)

பாஷ்யம்.—மூன்ருவது அத்தியாயத்தைச் சார்ந்த விசாரமானது முடிந்தது. பிறகு இப்பொழுது ப்ரம்ஹவித்யையின் பலனைக்குறித்து விசாரமானது தொடங்கப்படுகிறது. ப்ரம்ஹவித்யையின் ப்ராப்த்தி யேற்பட்டதும் அதற்குநேர் எதிரிடையான பலனை யுடைய பாபமானது தேய்கிறதா? அல்லது இல்லையா? என ஸம்சயமுதயமாகிறது. முதலில் கிடைப்பது யாதென்னில்? கர்மமானது பலனுக்கு வேண்டி யேற்பட்டிருப்பதால் பலனைக் கொடுக்காமல் அதற்குத் தேய்வு ஸம்பவிக்க முடியாது. இக்கர்மத்துக்குப் பலனைத்தரும் சக்தியானது சுருதியினலறியப்படுகின்றதன்ருே? அந்தக்கர்மமானது பலானுபவமில்லாமலே நாசமடையுமானல் சுருதியானது வீணுகச் செய்யப்பட்டதாகவாகும். "கர்மம் (பலனைத் தராது) தேய்வதில்லை" என ஸ்மிருதிகளுமிருக்கின்றன. இவ்விதமாயின் ப்ராயஸ்சித்தத்தை யுபதேசித்தது பயனற்றதாக வாகிவிடுமன்ருே எனின்? இந்தத்

क्षीयते' इति। नन्वेवं सति प्रायश्चित्तोपदेशोऽनर्थकः प्राप्नोति। नैष दोषः। प्रायश्चित्तानां नैमित्तिकत्वोपपत्तेर्गृहदाहेष्ट्यादिवत्। अपिच प्रायश्चित्तानां दोषसंयोगेन विधानाद्भवेदपि दोषक्षपणार्थता, नत्वेवं ब्रह्मविद्यायां विधानमस्ति। नन्वनभ्युपगम्यमाने ब्रह्मविदः कर्मक्षये तत्फलस्यावश्यंभोक्तव्यत्वादनिर्मोक्षः स्यात्। नेत्युच्यते। देशकालनिमित्तापेक्षो मोक्षः कर्मफलवद्भविष्यति। तस्मान्न ब्रह्माधिगमे दुरितनिवृत्तिरिति। एवं प्राप्ते ब्रूमः—तदधिगमे ब्रह्माधिगमे सत्युत्तरपूर्वयोरघयोरश्लेषविनाशौ भवतः उत्तरस्याश्लेषः पूर्वस्य विनाशः। कस्मात्। तद्व्यपदेशात्। तथाहि ब्रह्मविद्याप्रक्रियायां संभाव्यमानसंबन्धस्यागामिनो दुरितस्यानभिसंबन्धं विदुषो व्यपदिशति—'यथा पुष्करपलाश आपो न श्लिष्यन्त एवमेवंविदि पापं कर्म न श्लिष्यते' (छा० ४।१४।३) इति। तथा विनाशमपि

தோஷமில்லை. (1) கிருஹதாஹேஷ்டி முதலியதுபோல ப்ராயஸ்சித்தங்கள் நிமித்தத்தை முன்னிட்டு ஏற்படுவனவாக விருக்கின்றன.

மேலும் ப்ராயஸ்சித்தங்கள் தோஷநிவிருத்தியை உத்தேசித்து விதிக்கப்பட்டிருப்பதால் அவற்றுக்குத்தோஷநிவிருத்தி செய்யுந்தன்மை ஸம்பவித்தாலும் ஸம்பவிக்கலாம். இவ்விதம் ப்ரம்ஹவித்யா விஷயத்தில் விதி கிடையாது.

சங்கை—ப்ரம்ஹத்தை யறிந்தவனுக்கு கர்மக்ஷபத்தை அங்கீகரிக்காவிடில் அதன்பலன் அவஸ்யமனுபவிக்கக்கூடியதாகவிருப்பதால் மோக்ஷமின்மை வரத் தெரியும் எனின்?

உத்தரம்—இல்லை யெனச் சொல்லப்படுகிறது. அதாவது:—மோக்ஷமானது கர்மத்தின் பலன்போல தேசகால நிமித்தங்களைய பேக்ஷித்து உண்டாகிறது. ஆகவே ப்ரம்ஹக்ஞானமுண்டானதும் பாபநிவிருத்தியானது ஏற்படுகிறதில்லை என்றும். என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகவே ஸித்தாந்தத்தைச் சொல்லுகிறோம். **தததிகமே**=ப்ரம்ஹக்ஞானம் வந்ததும், பின்னரும் முன்னருமுள்ள பாபங்களுக்கு முறையே ஒட்டாமையும் நாசமும் ஏற்படுகின்றன. அதாவது: மேலுள்ள வற்றுக்கு ஒட்டாமையும், முன்னுள்ளவற்றுக்கு நாசமும் ஏற்படுகிறது என்றும். ஏன்? அவ்வித முபதேசம் காண்பதாலென்க. அதாவது:—ப்ரம்ஹவித்யையைச் சொல்லுமிடத்து ஊஹிக்கப் படும் ஸம்பந்தத்தை யுடைய ஆகாமியான பாபத்துக்கு வித்வானிடத்தில் ஸம்பந்தமின்மையை "தாமரை இலையில் ஜலமானது எவ்விதம் ஒட்டுவதில்லையோ இவ்விதமே இத்தகையப்ரம்ஹக்ஞானமுள்ளவரிடத்தில் பாபமான கர்மமானது ஒட்டுவதில்லை" என்பதாய்ச் சுருதி சொல்லுகிறது என்றும். அவ்விதமே முன்னர் ஸம்பாதிக்கப் பட்டபாபத்தினுடைய

(1) ஆஹிதாக்னியின் வீடு நெருப்புப் பற்றி எறிந்து விடுமாயின் அத்தகைய நிமித்தம் நேருங்கால் "க்ஷாமவத்வம் என்ற குணமுள்ளஅக்னியின் பொருட்டு அஷ்டாகபால புரோடாசத்தை நிர்வாபம் செய்யவேண்டும்" என ஓர் இஷ்டியானது (யாகமானது) விதிக்கப்பட்டிருக்கிறது. அது போல நிமித்தம் ஸம்பவிக்கும் கால் ப்ராயச்சித்தத்தைச் சாஸ்திரம் விதிப்பதால் ப்ராயச்சித்தத்துக்கு தோஷநிவிருத்தி செய்யும் தன்மை கிடையாது என்பது பூர்வபக்ஷியின் கருத்து.

पूर्वोपचितस्य दुरितस्य व्यपदिशति—'तद्यथेषीकातूलमग्नौ प्रोतं प्रदूयेतैवं हास्य सर्वे पाप्मानः प्रदूयन्ते' (छां० ५।२४।३) इति। अयमपरः कर्मक्षयव्यपदेशो भवति—'भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः। क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे' (मु० २।२।८) इति। यदुक्तमनुपभुक्तफलस्य कर्मणः क्षयकल्पनायां शास्त्रं कदर्थितं स्यादिति। नैष दोषः। नहि वयं कर्मणः फलदायिनीं शक्तिमवजानीमहे, विद्यत एव सा, सा तु विद्यादिना कारणान्तरेण प्रतिबध्यत इति वदामः। शक्तिसद्भावमात्रे च शास्त्रं व्याप्रियते न प्रतिबन्धाप्रतिबन्धयोरपि। नहि कर्म क्षीयत इत्येतदपि स्मरणमौत्सर्गिकं न भोगादृते कर्म क्षीयते तदर्थत्वादिति। इष्यत एव तु प्रायश्चित्तादिना तस्य क्षयः 'सर्वं पाप्मानं तरति,' 'तरति ब्रह्महत्यां योऽश्वमेधेन यजते य उ चैनमेवं वेद' इत्यादि श्रुतिस्मृतिभ्यः। यत्तूक्तं नैमित्तिकानि प्रायश्चित्तानि भविष्यन्तीति। तदसत्। दोषसंयोगेन चोद्यमानानामेषां दोषनिर्घातफलसंभवे फलान्तरकल्पनानुपपत्तेः। यत्पुनरेतदुक्तं न प्रायश्चित्तवद्दोषक्षयोद्देशेन विद्याविधानमस्तीति॥

---

விநாசத்தையும் "அக்னியிலிடப்பட்ட சீவீர்க்கின் பஞ்ஜானது எவ்விதம் நாசமடைகிறதோ இவ்விதமே யன்றோ இந்தப்ரப்ஹக்ஞானியினுடைய எல்லாப்பாபங்களும் நாசமடைகின்றன" என்றதால் சுருதி சொல்லியிருக்கிறது.

கார்மத்தின் நாசத்தை யுபதேசிக்கும் மற்றொரு முறை பின்வருமாறு—அதாவது:—பராவரமான (பர=ஸர்வகாரணமான பொருளும், அவர=எதற்குக் கீழ்பட்டதோ அத்தகைய) அந்த நிர்க்குண ப்ரப்ஹமானது ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதும் ஹிருதயக்ரந்தியானது (மூலாக்ஞானமானது) நாசத்தை யடைகிறது. எல்லா ஸம்சயங்களும் நாசமடைகின்றன. இவனது கர்மங்களும் தேய்ந்து விடுகின்றன' என்றும். பலானுபவமில்லாத கர்மத்துக்குத் தேய்வுகல்பிக்கப்படுமானல் சாஸ்திரம் வீணுகிவிடும் என யாதொன்று சொல்லப்பட்டதோ இந்தத் தோஷமில்லே. நாம் கர்மத்துக்குப்பலன்தரும் சக்தியை மறுக்கின்றேமில்லே. அந்தச்சக்தியானது இருக்கவே இருக்கின்றது. அந்தச் சக்தியானது வித்யைமுதலிய வேறுகாரணத்தினல் தடைசெய்யப்படுகிறது என்கிறேம். சக்தியின் ஸத்பாவத்தில் மட்டும் சாஸ்திரம் வியாபாரமுள்ளதாக விருக்கிறதேயொழிய தடை அஃதின்மை இவ் விஷயங்களிலில்லே. "கர்மமானது தேய்வதில்லே" என்ற ஸ்மிருதியானது பொதுப்படையாகக் கூறினதாகும். அனுபவமின்றிக் கர்மம் தேய்வதில்லே. அனுபவத்துக்கு வேண்டியே அவை யேற்பட்டதால் என்றும். "எல்லாப் பாபத்தையும் கடக்கிறுன்" என்றும், "எவன் அஸ்வமேதத்தால் யஜிக்கிறுனே எவன் இவ்விதம் அஸ்வவிஷயமான உபாஸ்தியைச் செய்கிறுனே அவன் ப்ரப்ஹஹத்திருபமான தோஷத்தைக் கடக்கிறுன்" என்றுமான ஶ்ருதிஸ்மிருதிகளிருப்பதால் ப்ராயஸ்சித்தாதிகளினல் தோஷத்தின் நிவிருத்தியானது இச்சிக்கப்பட்டே இருக்கிறது. ப்ராயஸ்சித்தங்கள் நைமித்திகங்களாகும் என யாதொன்று சொல்லப்பட்டதோ, அது அஸாதுவாகும். தோஷஸம்பந்தத்தை முன்னிட்டு விதிக்கப்படும்

अत्र ब्रूमः—सगुणासु तावद्विद्यासु विद्यत एव विधानम्। तासु च वाक्यशेष ऐश्वर्यप्राप्तिः पापनिवृत्तिश्च विद्यावत उच्यते। तयोश्चाविवक्षाकारणं नास्तीत्यतः पाप्मप्रहाणपूर्वकैश्वर्यप्राप्तिस्तासां फलमिति निश्चीयते। निर्गुणायां तु विद्यायां यद्यपि विधानं नास्ति तथाप्यकर्त्रात्मत्वबोधात्कर्मप्रदाहसिद्धिः। अश्लेष इति चागामिषु कर्मसु कर्तृत्वमेव न प्रतिपद्यते ब्रह्मविदिति दर्शयति। अतिक्रान्तेषु तु यद्यपि मिथ्याज्ञानात्कर्तृत्वं प्रतिपेद इव तथापि विद्यासामर्थ्यान्मिथ्याज्ञाननिवृत्तेस्तान्यपि प्रविलीयन्त इत्याह विनाश इति। पूर्वसिद्धकर्तृत्वभोक्तृत्वविपरीतं हि त्रिष्वपि कालेष्वकर्तृत्वाभोक्तृत्वस्वरूपं ब्रह्माहमस्मि नेतः पूर्वमपि कर्ता भोक्ता वाहमासं नेदानीं नापि भविष्यत्काल इति ब्रह्मविदवगच्छति। एवमेव च मोक्ष उपपद्यते। अन्यथा ह्यनादिकालप्रवृत्तानां कर्मणां क्षयाभावे

ப்ராயஸ்சித்தங்களுக்கு தோஷநிவிருத்திசெய்தல் ரூபமான பலன் ஸம்பவிக்குங்கால் அவற்றுக்கு வேறுபலன் கல்பிப்பது பொருந்தக்கூடியதாகவுமாகாது.

ப்ராயஸ்சித்தமானது போல தோஷநிவிருத்திக்கு வேண்டி ப்ரம்ஹவித்யையின் விதாநம் கிடையாது எனயாதொன்று சொல்லப்பட்டதோ, இவ்விஷயத்தில் சொல்லுகிறோம். ஸகுணமான வித்யைகளி (உபாஸனங்களி) லோ விதி இருக்கவே இருக்கிறது. அவ்வுபாஸனங்களில் மேலுள்ள வாக்கியத்தில் ஐஸ்வர்யப்ராப்த்தியும், பாபநிவிருத்தியும் சொல்லப்படுகிறது. அவற்றில் அவிவக்ஷைக்குறிய காரணமானது கிடையாதாதலால் பாபநிவிருத்தியை முன்னிட்ட ஐஸ்வரியப்ராப்த்தியானது அந்த ஸகுண ப்ரம்ஹவித்யைகளுடைய பலனென நிஸ்சயிக்கப்படுகிறது. நிர்க்குணமான ப்ரம்ஹவித்யையிலோ பாபநிவிருத்தி விதியில்லை என்பது உண்மைதானாயினும் அகர்த்தாவான (கர்த்திருத்வாதிகளற்ற) ஆத்ம விஷயகமான க்ஞானமுண்டாவதால் கர்மங்களின் நாசமானது ஸித்தித்து விடுகிறது. ஸூத்திரத்தில் "அஸ்லேஷ:" என்றதால் இனி வரும் கர்மங்களில் ப்ரம்ஹவித்தானவன் கர்த்திருத்வத்தையே அடையமாட்டான் என்பது காண்பிக்கப்படுகிறது. சென்ற கர்மங்களிலோ மித்யாக்ஞானத்தினால் கர்த்திருத்வத்தை அடைந்தவன் போலாயினான் என்பது உண்மைதானாயினும் ப்ரம்ஹவித்யையின் ஸாமர்த்யத்தினால் மித்யாக்ஞானத்தின் நிவிருத்தி யேற்பட்டதும் அந்தக்கர்மங்களும் லயித்து விடுகின்றன என்பதை ஸூத்திரத்திலுள்ள "விநாச:" என்றதால் தெரிவிக்கிறார். ப்ரம்ஹவித்தானவன் க்ஞானோத்பத்திக்கு முன்னிருந்த கர்த்திருத்வ போக்திருத்வத்துக்கு நேர்விபரீதமானதும் மூன்றுகாலங்களிலும் அகர்த்ருத்வ, அபோக்த்ருத்வஸ்வரூபமாயுள்ளதுமான ப்ரம்ஹமாக நானிருக்கிறேன் இதற்கு முன்னரும் கர்த்தாவாகவோ பேக்தாவாகவே நானிருந்தேனில்லை, இதுபோழ்துமில்லை, இனிவருங்காலத்திலு மிருக்கப்போவதில்லை என எண்ணுகிறான். இவ்விதமிருந்தால் தான் மோக்ஷமானது பொருந்தக்கூடியதாக வாகிறது. இல்லாவிடில் அனாதிகாலந்தொடங்கி ப்ரவிருத்தங்களான கர்மங்களின் தேய்வில்லாமையால் மோக்ஷமின்மை வரத்தெரியும். மோக்ஷமானது கர்மபலன் போல தேசகாலநிமித்தங்களை யபேக்ஷித்து உண்

**मोक्षाभावः स्यात्। नच देशकालनिमित्तापेक्षो मोक्षः कर्मफलवद्भवितुमर्हति। अनित्यत्वप्रसङ्गात्। परोक्षत्वानुपपत्तेश्च ज्ञानफलस्य। तस्माद्ब्रह्माधिगमे दुरितक्षय इति स्थितम्॥**

**१० इतरासंश्लेषाधिकरणम्। सू० १४**

**इतरस्याप्येवमसंश्लेषः पाते तु॥ १४॥**

पुण्येन लिप्यते नोवा लिप्यतेऽस्य श्रुतत्वतः। नहि श्रौतेन पुण्येन श्रौतं ज्ञानं विरुध्यते॥ १॥
अलेपो वस्तुसामर्थ्यात् समानः पुण्यपापयोः। श्रुतं पुण्यं पापतया तरणञ्च समं श्रुतम्॥ २॥

**पूर्वस्मिन्नधिकरणे बन्धहेतोरघस्य स्वाभाविकस्याश्लेषविनाशौ ज्ञाननिमित्तौ शास्त्रव्यपदेशान्निरूपितौ। धर्मस्य पुनः शास्त्रीयत्वाच्छास्त्रीयेण ज्ञानेनाविरोध इत्याशङ्क्य**

---

டாகக்கூடியதன்றன்றோ? அநித்யத்வம் வருவதே அதன் காரணமாகும். ஜ்ஞான பலனுக்குப் பரோக்ஷத்தன்மை ஸம்பவிக்கவும் மாட்டாது. ஆகவே ப்ரம்ஹஜ்ஞானமுண்டானதும் பாபக்ஷயமேற்படுகிறது என்பது நிலைக்கிறது. (13)

ஒன்பதாவது தததிகமாதிகரணம் முற்றிற்று



## இதராஸம்ச்லேஷாதிகரணம் 10.

(ஸூ) இதரஸ்யாப்யேவமஸம்ச்லேஷ: பாதே து (14)

(ப-ரை) **इतरस्यापि** (இதரஸ்யாபி)=புண்யகர்மத்துக்குக்கூட **एवम्** (எவம்)=பாபகர்மத்துக்குப்போல **असंश्लेषः** (அஸம்ஶ்லேஷஃ)=ஸம்பந்தமின்மையும் விநாசமும் ஏற்படுகிறது. **पाते तु** (பாதே து)=பந்தஹேதுக்களான தர்மாதர்மங்களுக்கு ஸம்பந்தமின்மையும் விநாசமும் ஸித்தித்ததும் ஜ்ஞானிக்குச் சரீரபாதமேற்பட்டவுடனேயே முக்தியானது ஸித்தித்துவிடுகின்றது. (14) (எ-று)

வையாஸிக நியாயமாலை.

(க-ரை) ஜ்ஞானிக்கும் புண்ணியகர்மத்துடன் லேபமுண்டா? அல்லது இல்லையா? என்பது ஸந்தேஹம். இந்தப் புண்ணியகர்மமானது சுருதியினால் விதிக்கப்பட்டிருப்பதுபற்றி சுருதியிலுள்ள புண்ணியத்துடன் சுருதியிற் சொல்லிய ஜ்ஞானமானது விரோதத்தை யடையமாட்டாது என்பது பூர்வபக்ஷம். வஸ்துவின் ஸாமர்த்தியத்தை யொட்டி புண்ணியபாபங்களுக்கு லேபமில்லை என்பது ஸமானமாகவே இருக்கிறது. புண்ணியமும் பாபமென்றே சுருதியிதிற் சொல்லப்பட்டு பாபத்துக்குப்போல புண்ணியத்துக்கும் தரணமானது சுருதியிற் சொல்லப்பட்டு மிருக்கிறது என்பது ஸித்தாந்தம். (எ-று)

பாஷ்யம்.—முந்தின அதிகரணத்தில் பந்தத்துக்கு ஹேதுவானதும் ஸ்வாபாவிகமானதுமான (சாஸ்திரவிஹிதமாக இல்லாததுமான) பாபகர்மத்துக்குச் சாஸ்திரஞ் சொல்லியிருப்பதை முன்னிட்டு ஜ்ஞானநிமித்தங்களான அஸ்லேஷ விநாசங்கள் நிரூபிக்கப்பட்டன. தர்மமோ சாஸ்திரவிஹிதமாக இருப்பதுபற்றி சாஸ்திரீயமான ஜ்ஞானத்துடன் அதற்கு விரோதம் வருவதற்கிடமில்லை என ஆசங்

तन्निराकरणाय पूर्वाधिकरणन्यायातिदेशः क्रियते। इतरस्यापि पुण्यस्य कर्मण एवमघव-
दसंश्लेषो विनाशश्च ज्ञानवतो भवतः। कुतः—तस्यापि स्वफलहेतुत्वेन ज्ञानफलप्रति-
बन्धित्वप्रसङ्गात्। 'उभे उ हैवैष एते तरति' (बृ० ४।४।२२) इत्यादिश्रुतिषु च
दुष्कृतवत्सुकृतस्यापि प्रणाशव्यपदेशात्। अकर्त्रात्मत्वबोधनिमित्तस्य च कर्मक्षयस्य
सुकृतदुष्कृतयोस्तुल्यत्वात् 'क्षीयन्ते चास्य कर्माणि' (मु० २।२।८) इति चाविशेष-
श्रुतेः। यत्रापि केवल एव पाप्मशब्दो दृश्यते तत्रापि तेनैव पुण्यमप्याकलितमिति द्रष्ट-
व्यम्। ज्ञानफलापेक्षया निकृष्टफलत्वात्। अस्ति च श्रुतौ पुण्येऽपि पाप्मशब्दः 'नैनं सेतु-
महोरात्रे तरतः' (छा० ८।४।१) इत्यत्र सह दुष्कृतेन सुकृतमप्यनुक्रम्य सर्वे पाप्मा-
नोऽतो निवर्तन्त इत्यविशेषेणैव प्रकृते पुण्ये पाप्मशब्दप्रयोगात्। पाते त्विति तुशब्दोऽव-
धारणार्थः। एवं धर्माधर्मयोर्बन्धहेत्वोर्विद्यासामर्थ्यादश्लेषविनाशसिद्धेरवश्यंभाविनी वि-
दुषः शरीरपाते मुक्तिरित्यवधारयति ॥ १४ ॥

---

கித்து அதைப் போக்கவேண்டி முந்தின அதிகரணத்திலுள்ள ந்யாயத்தி (யுக்தியி)
னுடைய அதிதேசமானது செய்யப்படுகிறது. இதரத்துக்கும் அதாவது:—புண்
ணியகர்மத்துக்கும் இவ்விதப் (பாபகர்மத்துக்குப் போல) அஶ்லேஷமும் (ஒட்டா
மையும்) விநாசமும் க்ஞானமுள்ளவனுக்கு ஏற்படுகின்றன. ஏன்? அந்தப் புண்
ணியகர்பமுங்கூட தனக்குரிய பலனுக்கு ஹேதுவாக விருப்பதன்மூலம் க்ஞான
பலனான மோக்ஷத்துக்கு ப்ரதிபந்தியாக (விரோதியாக) ஆவதே அதன் காரண
மாகும். "இந்த க்ஞானியானவன் இந்த இரண்டுகளையுமே (புண்ணியம் பாபம்
இரண்டையுமே) கடக்கிறான் அன்றோ" என்றதாதி சுருதிகளில் பாபத்துக்குப்
போல புண்ணியத்துக்கும் விநாசம் சொல்லப்பட்டுமிருக்கிறது. நான் கர்த்தா
வன்று என்ற ஆத்மக்ஞானத்தை நிமித்தமாகக் கொண்ட கர்மநாசமானது புண்ணி
யம் பாபம் இரண்டுக்கும் துல்லியமாக இருப்பதும், "இவனது கர்மங்கள் தேய்
ந்து விடுகின்றன" எனப்பொதுவாகச் சுருதி கூறியிருப்பதுமே அதன் காரண
மாகும். எந்த விடத்தில் தனித்த பாபசப்தம் மட்டுமே காணப்படுகிறதோ அவ்
விடத்திலுங்கூட அந்த சப்தத்தால் புண்ணியமும் சேர்த்துக் கூறப்பட்டது எனக்
கண்டுகொள்ளவேண்டும். க்ஞானத்தின் பலனை யபேக்ஷித்துப் புண்ணியமானது
தாழ்ந்த பலனுள்ளதாக இருப்பதே அதன் காரணமாகும். சுருதியில் புண்ணி
யத்திலும் பாபசப்தப் பிரயோக மிருக்கிறது. அதாவது:—"இந்த ஸேதுவை
(ஆத்மாவை) இரவுபகல்கள் கடப்பதில்லை" என்ற விடத்தில் பாபகர்மத்துடன்
கூட புண்ணியத்தையும் சேர்த்துக்குக் கொண்டு "எல்லாப்பாபங்களும் இவனிட
மிருந்து விலகுகின்றன" என்பதாய் பொதுவாகவே ப்ரகிருதமான புண்ணியத்
தில் பாபசப்தப்பிரயோகம் காணப்படுவதாலென்க. சூத்திரத்திலுள்ள பாதேது
என்ற விடத்திலுள்ள து என்றதற்கு அவதாரணம்=நிஶ்சயமென்று பொருள்.
அதாவது:—இவ்விதம் பந்தத்துக்குக் காரணங்களான தர்மாதர்மங்களுக்கு வித்
யையின் ஸாமர்த்தியத்தினால் அஶ்லேஷமும் விநாசமும் ஸித்தித்ததும் வித்வா
னுக்கு (ப்ரம்ஹவித்துக்கு) சரீரபாதத்துக்குப் பின்னர் முக்தியானது அவஶ்யம்
வந்தேதீருகிறது என்பதை உறுதியாகக் கூறுகிறது என்றும். (14) (எ—று)

பத்தாவது இதராஸம்ஶ்லேஷாதிகரணம் முற்றிற்று.

## ११ अनारब्धकार्याधिकरणम्। सू० १५

### अनारब्धकार्ये एव तु पूर्वे तदवधेः ॥ १५ ॥

आरब्धे नश्यतो नोवा सञ्चिते इव नश्यतः। उभयत्राप्यकर्तृत्वतद्बोधौ सदृशौ खलु ॥ १ ॥
आदेहपातसंसारश्रुतेरनुभवादपि। इषुचक्रादिदृष्टान्तान्नैवारब्धे विनश्यतः ॥ २ ॥

पूर्वयोरधिकरणयोर्ज्ञाननिमित्तः सुकृतदुष्कृतयोर्विनाशोऽवधारितः स किमविशेषेणारब्धकार्ययोरनारब्धकार्ययोश्च भवत्युत विशेषेणानारब्धकार्ययोरेवेति विचार्यते। तत्र 'उभे उ हैवैष एते तरति' (बृ० ४।४।२२) इत्येवमादिश्रुतिष्वविशेषश्रवणादविशेषेणैव क्षय इति। एवं प्राप्ते प्रत्याह—अनारब्धकार्ये एव त्विति। अप्रवृत्तफले एव पूर्वे

---

## அநாரப்தகார்யாதிகரணம் 11.

### (ஸூ) அநாரப்தகார்யே ஏவது பூர்வே ததவதே: (15)

(ப—ரை) अनारब्धकार्ये एव (அநாரப்தகார்யேஏவ)=தனது பலனைக்கொடுக்க ஆரம்பிக்காதவைகளாகவே யுள்ளனவும் पूर्वे (பூர்வே)=முந்தின ஜன்மங்களிலுள்ளனவும், ஜ்ஞானோத்பத்திக்கு முந்திஉள்ளனவுமான புண்ணியபாபங்களே [ज्ञानाधिगमात्क्षीयेते (ஜ்ஞானாதிகமாத்க்ஷீயேதே)=ஜ்ஞானம் வந்தபிறகு நசிக்கின்றன.] என்? तदवधेः (ததவதே:)=முக்திகிடைப்பதற்கு ப்ராரப்தகர்மாயத்தமான சரீர பாதத்தை எல்லையாகச் சுருதிகாட்டியிருப்பதாலென்க. (15) (எ—று)

#### வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ப்ராரப்தகர்மங்களும் ஜ்ஞானமுண்டானதும் நசிக்கின்றனவா? அல்லது இல்லையா? என்பது ஸந்தேஹம். ஸஞ்சிதகர்மங்கள் போல ப்ராரப்தங்களும் நசிப்பனவாகத் தான் சொல்லவேண்டும். இரண்டிடத்திலும் கர்த்திருத்வமின்மையும் ஆத்மபோதமும் ஸமானமாகவன்றோ இருக்கின்றன என்பது பூர்வபக்ஷம். தேஹபாதம் வரை ஸம்ஸாரமிருப்பதாக ஶ்ருதிசொல்லுவதாலும், அநுபவமிருப்பதைக் கொண்டும் பாணம், குயவனுடைய சக்கிரம் இவை ரூபமான திருஷ்டாந்தமிருப்பதாலும் ப்ராரப்தகர்மங்கள் தேஹபாதம்வரை நாசத்தை யடைவதே இல்லை என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—முந்தின அதிகரணங்களில் ஜ்ஞானநிமித்தமாக புண்ணியபாபங்களின் விநாசமானது சொல்லப்பட்டது. அந்தவிநாசமானது ப்ராரப்தம் ஸஞ்சிதம் ஆகிய இரண்டுகர்மங்களுக்கும் பொதுவாக ஏற்படுகிறதா? அல்லது ஸஞ்சிதங்களுக்குமட்டுமே தான் ஏற்படுகிறதா? என விசாரிக்கப்படுகிறது. அவற்றுள் "இந்த ஆத்மஜ்ஞானியானவன் ஸுக்ருததுஷ்க்ருதங்கள் இரண்டையுமே கடக்கிறான்" என்ற இம்மாதிரியான சுருதிகளில் பொதுவாகவே சொல்லப்பட்டிருப்பதால் பொதுவாகவே தான் விநாசஞ் சொல்லவேண்டும் என ப்ராப்த்தமாகிறது. இவ்விதம் ப்ராப்தமாகவே "அநாரப்தகார்யே ஏவது" என்றதால் பதில் சொல்லுகிறார். பலனைத் தர ஆரம்பம் செய்யாதனவும், பூர்வங்களும் வேறுஜன்மங்களில் ஸஞ்சிதங்

जन्मान्तरसञ्चिते अस्मिन्नपि च जन्मनि प्राग्ज्ञानोत्पत्तेः सञ्चिते सुकृतदुष्कृते ज्ञानाधिगमात्क्षीयेते नत्वारब्धकार्ये सामिभुक्तफले याभ्यामेतद्ब्रह्मज्ञानायतनं जन्मनिर्मितम्। कुत एतत्—'तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ संपत्स्ये' (छा० ६। १४। २) इति शरीरपातावधिकरणात्क्षेमप्राप्तेः। इतरथा हि ज्ञानादशेषकर्मक्षये सति स्थितिहेत्वभावाज्ज्ञानप्राप्त्यनन्तरमेव क्षेममश्नुवीत, तत्र शरीरपातप्रतीक्षां नाचक्षीत। ननु वस्तुबलेनैवायमकर्त्रात्मावबोधः कर्माणि क्षपयन्कथं कानिचित्क्षपयेत्कानिचिच्चोपेक्षेत। नहि समानेऽग्निबीजसंपर्के केषाञ्चिद्बीजशक्तिः क्षीयते केषाञ्चिन्न क्षीयत इति शक्यमङ्गीकर्तुमिति। उच्यते—न तावदनाश्रित्यारब्धकार्यं कर्माशयं ज्ञानोत्पत्तिरुपपद्यते। आश्रिते च तस्मिन्कुलालचक्रवत्प्रवृत्तवेगस्यान्तराले प्रतिबन्धासंभवाद्भवति वेगक्षयप्रतिपालनम्। अकर्त्रात्मबोधोऽपि हि मिथ्याज्ञानबाधनेन कर्माण्युच्छिनत्ति। बाधितमपि तु मिथ्याज्ञानं द्विचन्द्र-

---

களும், இதே ஜன்மத்திலுங் கூட க்ஞானமுண்டாவதற்கு முந்தி ஸஞ்சிதங்களுமான புண்ணியபாபங்கள் க்ஞான ப்ராப்த்தியினால் நசிக்கின்றனவே அன்றி எந்தப் புண்ணியபாபங்களினால் ப்ரம்ஹக்ஞானத்துக்கு இருப்பிடமான இந்த ஜன்மமானது ஆரம்பிக்கப்பட்டதோ பகுதி அனுபவிக்கப்பட்ட அந்த ப்ராரப்தகர்மங்கள் நசிப்பதில்லை. ஏன்? "அவனுக்கு அவ்வளவே விளம்பமேற்படுகிறது. ப்ராரப்தத்தினின்றும் எதுவரை விடுபடுவதில்லையோ, ப்ராரப்தம் நீங்கினதும் ப்ரம்ஹத்தையடைகிறான்" என்றச் சுருதியில் க்ஷேமப்ராப்திக்குச் சரீரபாதத்தை அவதியாயாக்கி (எல்லையாக்கி) இருப்பதே அதன் காரணமாகும். இவ்விதமில்லாவிடில் க்ஞானத்தினால் எல்லாக்கர்மங்களுக்கும் தேய்வேற்பட்டதும் சரீரத்தின் இருப்புக்குரிய காரணமில்லாமைபற்றி க்ஞானப்ராப்திக்கு அடுத்தபடியாகவே க்ஷேமத்தை யடைவானாதலால் அவ்விஷயத்தில் சரீரபாதத்தின் எதிர்பார்த்தலை சுருதி சொல்லியிருக்க மாட்டாது.

சங்கை—கர்த்திருத்வாதிகளற்ற ஆத்மவிஷயமானஇந்தக்ஞானமானது தனது சக்தியினாலேயே கர்மங்களைத் தேய்ப்பதாய்க்கொண்டு சிலவற்றை நாசப்படுத்தவும் சிலவற்றை உபேக்ஷிக்கவும் செய்கிறது என்பது எங்ஙனம். நெருப்புக்கும் விதைக்கும் சேர்க்கையானது ஸமானமாக இருக்குங்கால் சிலவற்றுக்குப் பீஜசக்திபோகிறது சிலவற்றுக்குப் போவதில்லை என்பதை அங்கீகரிக்க முடியாதன்றோ எனின்?

உத்தரம்—இவ்விஷயத்தில் சொல்லப்படுகிறது. ஆரம்பிக்கப்பட்ட காரியத்தை யுடைய கர்மாசயத்தை ஆஶ்ரயிக்காமல் க்ஞானோத்பத்தியானது உண்டாக மாட்டாது. அந்தக் கர்மாசயமானது ஆஶ்ரயிக்கப்பட்டதும், குயவனது சக்கிரத்துக்குப் போல ப்ரவிருத்தித்த வேகத்தையுடைய அதற்கு இடையில் ப்ரதிபந்தம் ஸம்பவிக்கமுடியாதாதலால் வேகத்தின் தேய்வை எதிர்பார்த்தல் ஸம்பவிக்கிறது கர்த்திருத்வாதிகளற்ற ஆத்மக்ஞானமோ வெனில் மித்யாக்ஞானத்தைப் பாதிக்கும் வாயிலாகக் கர்மங்களை அடியோடு நாசமாக்குகிறது. மித்யாக்ஞானமோ வெனில் பாதிக்கப்படினுங்கூட த்விசந்திர (சந்திரன் இரண்டு என்ற) க்ஞானம் போல ஸம்ஸ்காரவசத்தால் கொஞ்சகாலம் அனுவர்த்திக்கவே செய்கிறது. மேலும் ப்ரம்

ज्ञानवत्संस्कारवशात्कञ्चित्कालमनुवर्तत एव। अपिच नैवात्र विवदितव्यं ब्रह्मविदा कञ्चित्कालं शरीरं ध्रियते न वा ध्रियत इति। कथं ह्येकस्य स्वहृदयप्रत्ययं ब्रह्मवेदनं देहधारणं चापरेण प्रतिक्षेप्तुं शक्येत। श्रुतिस्मृतिषु च स्थितप्रज्ञलक्षणनिर्देशेनैतदेव निरुच्यते। तस्मादनारब्धकार्ययोरेव सुकृतदुष्कृतयोर्विद्यासामर्थ्यात्क्षय इति निर्णयः॥ १५॥

## १२ अग्निहोत्राद्यधिकरणम्। सू० १६-१७

## अग्निहोत्रादि तु तत्कार्यायैव तद्दर्शनात्॥ १६॥

नश्येन्नोवाग्निहोत्रादि नित्यं कर्म विनश्यति। यतोऽस्य वस्तुमहिमा न क्वचित्प्रतिहन्यते॥ १॥

अनुषक्तफलांशस्य नाशेऽप्यन्यो न नश्यति। विद्यायामुपयुक्तत्वाद्ब्राह्मणश्लेषस्तु काम्यवत्॥ २॥

---

ஹவித்தினல் சிலகாலம் வரை சரீரம் தரிக்கப்படுகிறதா? அல்லது இல்லையா? என்ற இவ்விஷயத்தில் விவாதிக்கவே வேண்டுவதில்லை. தனது மனத்தால் மட்டு மறியக்கூடிய ப்ரப்ஹச்ஞானமோ தேஹதாரணமோ பிறரால் எவ்விதமாக்ஷேபிக்கப் படக்கூடும். சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் ஸ்திதப்ரச்ஞனுடைய லக்ஷணத்தைச் சொல்லும் வாயிலாக இவ்விஷயமே தெளிவாக்கப் பட்டிருக்கிறது. ஆகவே ஆரம் பிக்கப்படாத காரியத்தை (பயனை) யுடையதாகவேயுள்ள புண்ணியபாபங்களுக்கு வித்யையின் (ச்ஞானத்தின்) ஸாமர்த்தியத்தால் நாசமேற்படுகிறது என்ற நிர்ணய மேற்படுகிறது. (15) (எ-று)

பதினேன்றுவது அனாரப்தகார்யாதிகரணம் முற்றிற்று.



## அக்னிஹோத்ராத்யதிகரணம் 12.

(ஸூ) அக்னிஹோத்ராதிது தத்கார்யாயைவ தத்தர்சனாத் ()

(ப-ரை) अग्निहोत्रादि तु (அக்னிஹோத்ராதி து)=அக்னிஹோத்ரம் முதலிய புண்யகாரியமோ வெனில் तत्कार्यायैव (தத்கார்யாயைவ)=ச்ஞானத்துக்கு எதுகாரி யமோ அதன் பொருட்டே ஏற்பட்டதாகவாகும். ஏன்? तद्दर्शनात् (தத்தர்சனாத்)= அவ்விதம் சுருதியில் காணப்படுவதாலென்க. (16) (எ-று)

வையாஸிக நியாயமாலை.

(க-ரை) அக்னிஹோத்ராதியான நித்யகர்மமானது நசிக்கிறதா? அல்லது இல்லையா? என்பது ஸந்தேஹம். யாதுகாரணத்தால் வஸ்துவின் மஹிமையா னது ஒருபொழுதும் மாறுதலேயடையமாட்டாதோ அக்காரணம்பற்றி அக்னி ஹோத்ராதி நித்யகர்மமும் நாசத்தையடையத்தான் செய்கிறது என்பது பூர்வ பக்ஷம். अनुषक्तफलांशस्य (அனுஷக்தபலாம்சஸ்ய) பலஸம்பந்தம் பெற்ற கர்மத் தினது அம்சமான காம்யபுண்ணியகர்மத்துக்கு வித்யையினல் நாசமேற்பட்ட போதிலும், பலஸம்பந்தம் பெறுதகர்மத்தினது மற்றெரு அம்சமானது=அக்னி ஹோத்ராதியான நிஷ்காம நித்யகர்மமானது நாசத்தையடைவதில்லை. அத்த

पुण्यस्याप्यश्लेषविनाशयोरघन्यायोऽतिदिष्टः सोऽतिदेशः सर्वपुण्यविषय इत्याशङ्क्य प्रतिवक्ति–अग्निहोत्रादि त्विति। तुशब्द आशङ्कामपनुदति। यन्नित्यं कर्म वैदिकमग्निहोत्रादि तत्तत्कार्यायैव भवति, ज्ञानस्य यत्कार्यं तदेवास्यापि कार्यमित्यर्थः। कुतः—'तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन' (बृ० ४।४।२२) इत्यादिदर्शनात्। ननु ज्ञानकर्मणोर्विलक्षणकार्यत्वात्कार्यैकत्वानुपपत्तिः। नैष दोषः। ज्वरमरणकार्ययोरपि दधिविषयोर्गुडमन्त्रसंयुक्तयोस्तृप्तिपुष्टिकार्यदर्शनात्। तद्वत्कर्मणोऽपि ज्ञानसंयुक्तस्य मोक्षकार्योपपत्तेः। नन्वनारभ्यो मोक्षः कथमस्य कर्मकार्यत्वमुच्यते। नैष दोषः। आरादुपकारकत्वात्कर्मणः। ज्ञानस्यैव हि प्रापकं सत्कर्म प्रणाड्या मोक्षकारणमित्युपचर्यते। अत एव

---

கைய நிஷ்காமநித்யகர்மமானது வித்யையிலுபயோகப்பட்டு விடுவதே அதன் காரணமாகும். ஞானோத்பத்திக்குப் பிறகு அக்கர்மத்துக்கும் ஸம்பந்தமின்மையோ வெனில் காம்யகர்மம்போலவாம் என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—புண்ணியகர்மத்துக்கும் அஸ்லேஷமும் விநாசமும் உண்டு என்பதில் பாபகர்மத்துக்குச் சொல்லிய நியாயமானது அதிதேசிக்கப்பட்டது. அந்த அதிதேசமானது எல்லாப்புண்ணியத்தையும் விஷயமாகக்கொண்டது எனவாசங்கித்து "அக்னிஹோத்ராதிது" என்றதால் பதில் சொல்லுகிறார். ஸூத்திரத்திலுள்ள து என்ற சப்தமானது ஆசங்கையை நிவிருத்திசெய்கிறது. அக்னிஹோத்ரம் முதலிய நித்யமான யாதொரு வைதிககர்மமுண்டோ அது அதன் காரியத்தின் பொருட்டே ஆகிறது. க்ஞானத்துக்கு எதுகாரியமோ அதுவே இதற்கும் காரியம் என்பது அதன் பொருள். ஏன்? "அந்த இந்த ஆத்மாவை ப்ராம்ஹணர்கள் வேதாநுவசனத்தாலும், யக்ஞத்தாலும், தானத்தாலும் அறிய விரும்புகின்றனர்" என்றதாதி சுருதியிருப்பதே அதன் காரணமாகும்.

சங்கை—க்ஞானம் கர்மம் இவற்றுக்குக் காரியம் விலக்ஷணமாக (மாறுபட்டதாக) இருப்பதால் காரியஏகத்வமானது (ஒரேகாரியத்தை யுடையதாயிருத்தலானது) பொருந்தமாட்டாது. எனின்?

உத்தரம்—இந்தத் தோஷமில்லை. தயிரும் விஷமும் முறையே ஜ்வரத்தையும் மரணத்தையும் தருவனவாயினுங்கூட வெல்லம், மந்திரம் இவற்றுடன் கூடுமாயின் திருப்தியையும் புஷ்டியையும் தருவனவாகக் காணக்கிடக்கின்றன. அதுபோலவே க்ஞானத்துடன் சேர்ந்த கர்மத்துக்கு மோக்ஷரூபமான பலனைத்தருதல் பொருந்தலாம்.

சங்கை—மோக்ஷமானது ஒன்றினுல் ஆரம்பிக்கப்படாததாக விருப்பதால் இது கர்மத்தின் காரியமென எவ்விதம் சொல்லப்படலாம் எனின்?

உத்தரம்—இது தோஷமாகாது. கர்மமானது பரம்பரையாக உபகாரம் செய்வதாக விருப்பதாலென்க. கர்மமானது க்ஞானத்தையே உண்டுபண்ணுவதாக இருந்துகொண்டு முறையே மோக்ஷத்துக்கும்காரணமென உபசாரமுறையால் சொல்லப்படுகிறது. ஆனதுபற்றியே தான் இந்த காரியஏகத்வம் சொன்னதானது க்ஞானோத்பத்திக்குமுன்செய்த அக்னிஹோத்ராதிகளை விஷயமாகக்கொண்டதாக

चातिक्रान्तविषयमेतत्कार्यैकत्वाभिधानम्। नहि ब्रह्मविद आगाम्यग्निहोत्रादि संभवति। अनियोज्यब्रह्मात्मत्वप्रतिपत्तेः शास्त्रस्याविषयत्वात्। सगुणासु तु विद्यासु कर्तृत्वानतिवृत्तेः संभवत्यागाम्यप्यग्निहोत्रादि। तस्यापि निरभिसन्धिनः कार्यान्तराभावाद्विद्यासङ्गत्युपपत्तिः॥ १६॥

किंविषयं पुनरिदमश्लेषविनाशवचनं किंविषयं वाऽदो विनियोगवचनमेकेषां शाखिनाम् 'तस्य पुत्रा दायमुपयन्ति सुहृदः साधुकृत्यां द्विषन्तः पापकृत्याम्' इति। अत उत्तरं पठति—

**अतोऽन्यापि ह्येकेषामुभयोः॥ १७॥**

अतोऽग्निहोत्रादेर्नित्यात्कर्मणोऽन्यापि ह्यस्ति साधुकृत्या या फलमभिसन्धाय क्रियते तस्या एष विनियोग उक्त एकेषां शाखिनाम् 'सुहृदः साधुकृत्यामुपयन्ति' इति। तस्या

---

ஏற்படுகிறது. ப்ரம்ஹவித்துக்கு ஆகாமியான அக்னிஹோத்ராதியானது ஸம்ப விக்காதன்றோ. விதிக்குவிஷயமாகாத ப்ரம்ஹாத்மத்வக்ஞானமேற்பட்டபடியால் சாஸ்திரத்துக்கு அவன் (ப்ரம்ஹவித்) விஷயமாக ஆகாதிருப்பதே அதன் காரண மாகும். ஸகுணங்களான வித்யைகளிலோ வெனில் கர்த்திருத்வ நிவிருத்தி யேற் படாதபடியால் ஆகாமியான அக்னிஹோத்திரம் முதலியன ஸம்பவிக்கலாம். பலே ச்சையில்லாத அந்த ஸகுண ப்ரம்ஹோபாஸகனின் கர்மத்துக்குங்கூட வேறு காரியமில்லாதபடியால் வித்யையின் ஸங்கதியேற்படலாம். (16) (எ—று)

அவதாரிகாபாஷ்யம்.—இந்த அஸ்லேஷ விநாச வசனமானது எதை விஷய மாகக்கொண்டது. "அவனது புத்திரர்கள் தாயத்தையும் (சொத்தின் பாகத்தை யும்) ஸுஹ்ருத்துக்கள் புண்ணியகர்மத்தையும், த்வேஷிப்பவர் பாபகர்மத்தை யும் அடைகின்றனர்" என்ற சிலசாகிகளுடைய இந்த விபாகவசனமானது எதை விஷயமாகக் கொண்டது எனின்? இதற்குப்பதில் அடுத்த ஸூத்திரத்தால் படிக் கிறார்—

**(ஸூ) அதோ அன்யாபி ஹி ஏகேஷா முபயோ: (17)**

(ப—ரை) **अतः** (அத:)=இந்த அக்னிஹோத்ராதியான நித்யகர்மத்தைக்காட் டிலும் **अन्यापि** (அந்யாபி)=வேறான ஸாதுகர்மமும் அதாவது: காம்யகர்மமும், யா துண்டோ அதற்கு விநியோகமானது **एकेषाम्** (ஏகேஷாம்)=சில சாகிகளுக்கு **हि** (ஹி)=சொல்லப்பட்டிருக்கின்றதன்றோ. (அவற்றுக்கே அஸ்லேவிநாசங்களைச் சொ ல்லவேண்டும் என்றும்.) **उभयोः** (உபயோ:)=அம்மாதிரியான காம்யகர்மமானது வித்யையிலுபயோகப்படுவதில்லை என்ற விஷத்தில் ஜைமினிபாதராயணர் இருவர் க்கும் ஒத்துமையு மிருக்கிறது. (17) (எ—று)

பாஷ்யம்.—இந்த அக்னிஹோத்ராதியான நித்யமான கர்மத்தைக் காட்டிலும் வேறான பலாபிஸந்தியுடன் செய்யப்படும் ஸாதுகிருத்யையானது (ஸாதுகர்மமா னது) யாதொன்றுண்டோ அந்தக் கர்மத்துக்கே "ஸுஹ்ருத்துக்கள் ஸாதுகர்மத்

एव चेदमघवदश्लेषविनाशनिरूपणमितरस्याप्येवमश्लेष इति। तथाजातीयकस्य काम्यस्य कर्मणो विद्यां प्रत्यनुपकारकत्वे संप्रतिपत्तिरुभयोरपि जैमिनिबादरायणयोराचार्ययोः॥

## १३ विद्यासाधनत्वाधिकरणम्। सू० १८

## यदेव विद्ययेति हि॥ १८॥

किमङ्गोपास्तिसंयुक्तमेव विद्योपयोग्युत। केवलं वा प्रशस्तत्वात् सोपास्त्यैवोपयुज्यते॥ १॥

केवलं वीर्यवद्विद्यासंयुक्तं वीर்யवत्तरम्। इति श्रुतेस्तारतम्यादुभयं ज्ञानसाधनम्॥ २॥

---

தையடைகின்றனர்” என்பதாய் சிலசாகிகளுக்குள் இந்தவிநியோகமானது சொல்லப்பட்டது. அந்தஸாதுகர்மத்துக்கே “இதரஸ்யாப்யேவமஶ்லேஷ:” என்றதால் பாபத்துக்குப் போல இந்த அஶ்லேஷவிநாசத்தின் நிரூபணம் செய்யப்பட்டது. அம்மாதிரியான காம்யகர்மத்துக்கு வித்யையைக்குரித்து உபகாரகத்வம் இல்லை என்ற விஷயத்தில் ஜைமினிபாதராயணர் என்ற இரண்டு ஆசிரியர்களுக்கும் ஒத்துமை யிருக்கிறது. (17) (எ—று)

குறிப்பு—ப்ராரப்தத்தைவிட வேறான புண்ணியபாப கர்மங்களுக்கு வித்யையினால் நாசமானது சொல்லப்பட்டது. அவற்றுள் வித்யையிலுபயோகத்தையடையும் புண்ணிய கர்மமானது ப்ராரப்தத்தைவிட வேறுபட்டதாயினும் அதற்கு மட்டும் வித்யையினால் நாசமேற்படுவதில்லை என்பதைச் சொல்லவேண்டி இந்த அதிகரணம் ஆரம்பிக்கப்பட்டது—பொதுவாய் புண்ணியகர்மமானது வித்யையிலுபயோகப்படக்கூடியதென்றும், வித்யையிலுபயோகப்படாததென்றும் இருவகைப்படும். நித்யமான ஆக்னிஹோத்ராதியான புண்யகர்மமானது வித்யையிலுபயோகப்படுவதுபற்றியும் இவை வித்யையினுத்பத்திக்குமுந்தி இருப்பதுபற்றியும் மோக்ஷஸாதனமான க்ஞானத்தை யுண்டுபண்ணுவதில் உபயோகப்பட்டுவிடுவது பற்றியும் இதற்கு வித்யையினால் நாசமேற்படுவதில்லை. வித்யையிலுபயோகத்தையடையாத காம்யமான புண்யகர்மம் யாதுண்டோ அதற்கே வித்யையினால் நாசமேற்படுவதாகக் கொள்ளவேண்டும். (எ—று)

பன்னிரண்டாவது அக்னிஹோத்ராத்யதிகரணம் முற்றிற்று.



## வித்யாஸாதனத்வாதிகரணம் 13.

## (ஸூ) யதேவ வித்யயேதி ஹி. (18)

(ப—ரை) “यदेव विद्यया (யதேவவித்யயா)=எதைவித்யையுடனும் சிரத்தையுடனும் செய்கின்றானோ” इति (இதி)=என்ற ஶ்ருதியானது வித்யாதிகளுடன் கூடின அந்தக் கர்மத்துக்கு वीर्यवत्तरत्वम् (வீர்யவத்தரத்வம்)=அதிகம் வீர்யமுள்ளதாகவிருத்தலை आहहि (ஆஹஹி)=சொல்லுகின்றதன்றோ. (18) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) அங்காவபத்த உபாஸ்தியுடன் கூடின கர்மமே வித்யோபயோகியாகவாகுமா? அல்லது கேவல (உபாஸ்தியில்லாததனித்த) கர்மம் வித்யோபயோகியாக

समभिगतमेतदनन्तराधिकरणे नित्यमग्निहोत्रादिकं कर्म मुमुक्षुणा मोक्षप्रयोजनोद्देशेन कृतमुपात्तदुरितक्षयहेतुत्वद्वारेण सत्त्वशुद्धिकारणतां प्रतिपद्यमानं मोक्षप्रयोजनब्रह्माधिगमनिमित्तत्वेन ब्रह्मविद्यया सहैककार्यं भवतीति। तत्राग्निहोत्रादि कर्माङ्गव्यपाश्रयविद्यासंयुक्तं केवलं चास्ति। 'य एवं विद्वान्यजति', 'य एवं विद्वाञ्जुहोति', 'य एवं विद्वाञ्छंसति', 'य एवं विद्वान्गायति', 'तस्मादेवंविदमेव ब्रह्माणं कुर्वीत नानेवं विदं' (छा० ४।१७।१०), 'तेनोभौ कुरुतो यश्चैतदेवं वेद यश्च न वेद' (छा० १।१।१०) इत्यादिवचनेभ्यो विद्यासंयुक्तमस्ति केवलमप्यस्ति। तत्रेदं विचार्यते—किं विद्यासंयुक्तमेवाग्निहोत्रादिकं कर्म मुमुक्षोर्विद्याहेतुत्वेन तया सहैककार्यत्वं प्रतिपद्यते न केवलमुत

---

வாகுமா? என்பது ஸந்தேஹம். சிறந்ததாகவாவது பற்றி உபாஸ்தியுடன் கூடின கர்மமேதான் வித்யையிலுபயோகத்தை யடையும். என்பது பூர்வபக்ஷம். கேவலமான=உபாஸ்தியுடன் சேராத தனித்தகர்மமானது வீர்யவத்=வீர்யமுள்ளது. உபாஸ்தியுடன்கூடினதோ அதிகம் வீர்யமுடையது என ஶ்ருதியினின்றும் தாரதம்யம் காணப்படுவதால் இரண்டும் (உபாஸ்தியுடன் கூடினதும், உபாஸ்தியுடன் கூடாததுமான கர்மமும்,) க்ஞானத்துக்கு ஸாதனமே யாகும். (எ—று)

பாஷ்யம்—இதற்கடுத்துள்ள முந்தின அதிகரணத்தில் நித்யமான அக்னிஹோத்ராதி கர்மமானது மோக்ஷரூபமான ப்ரயோஜனோத்தேசத்துடன் மோக்ஷத்தை யடையவிருப்பமுள்ளவனால் செய்யப்பட்டதாய்க் கொண்டு உபாத்தமான பாபத்தைத் தேய்க்கும் வாயிலாக சித்த சுத்திக்குக் காரணமாக விருத்தலையடைவதாய் மோக்ஷத்தைப் பயனாகவுடைய ப்ரம்ஹப்ராப்திக்கு நிமித்தமாகும் முறையில் ப்ரம்ஹவித்யையுடன் கூட ஒத்த ஒரே காரியமுள்ளதாகவாகிறது எனச் சொல்லப்பட்டது. அங்கு அக்னிஹோத்ராதி கர்மமானது அங்காவபத்த உபாஸ்தியுடன் கூடினதென்றும், உபாஸ்தியுடன் கூடாததென்றும் இரண்டுவிதமாகக் காணக்கிடக்கிறது. "இவ்வித உபாஸனமுள்ள எவன் யஜிக்கின்றானோ" என்றும், "இவ்வித வுபாஸனமுள்ள எவன் ஹோமஞ் செய்கின்றானோ" என்றும், "இவ்விதவுபாஸனமுள்ள எவன் ஶஸ்திரஞ் சொல்லுகின்றானோ" என்றும், "இவ்வித வுபாஸனமுள்ள எவன் ஸாமகானஞ் செய்கின்றானோ" என்றும், "ஆனதுபற்றி இவ்வித வுபாஸனமுள்ளவனையே ப்ரம்ஹாவாகச் செய்யவேண்டுமே யொழிய இவ்வித உபாஸனமில்லாதவனை ப்ரம்ஹாவாகச் செய்யக்கூடாது" என்றும், "ஆதலால் எவன் இவ்வித முபாஸிப்பானோ எவன் இவ்வித முபாஸிப்பதில்லையோ அவ்விருவருமே (அக்னிஹோத்ராதிகர்மத்தைச்) செய்கின்றனர்" என்றுமாதிய வசனங்களால் உபாஸ்தியுடன் கூடினதாகவும் உபாஸ்தியுடன் கூடாததாகவுமாகக் கர்மமானதிருக்கிறது. அவ்விஷயத்தில் உபாஸ்தியுடன் கூடினதாகவே உள்ள அக்னிஹோத்ராதியான கர்மமானது முமுக்ஷுவுக்கு க்ஞானஹேதுவாகவாவதன் மூலம் அந்தவித்யையுடன் கூட ஒத்த ஒரேகாரியமுள்ளதாக இருக்குந்தன்மையை அடைகிறதா? அல்லது உபாஸ்தியில்லாத தனித்தகர்மம் மட்டுமேயா? அல்லது உபாஸ்தியுடன் கூடினதும் உபாஸ்தியுடன் கூடாததுமான இரண்டும் பொதுவாக க்ஞா

विद्यासंयुक्तं केवलं चाविशेषेणेति । कुतः संशयः—'तमेतमात्मानं यज्ञेन विविदिषन्ति' इति यज्ञादीनामविशेषेणात्मवेदनाङ्गत्वेन श्रवणात् । विद्यासंयुक्तस्य चाग्निहोत्रादेर्विशिष्टत्वावगमात् । किं तावत्प्राप्तं विद्यासंयुक्तमेव कर्माग्निहोत्राद्यात्मविद्याशेषत्वं प्रतिपद्यते न विद्याहीनम् । विद्योपेतस्य विशिष्टत्वावगमाद्विद्याविहीनात् । 'यदहरेव जुहोति तदहः पुनर्मृत्युमपजयत्येवंविद्वान्' इत्यादिश्रुतिभ्यः । 'बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि' (गी० २ । ३९), 'दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनञ्जय' (गी० २ । ४९) इत्यादिस्मृतिभ्यश्चेति ॥

एवं प्राप्ते प्रतिपद्यते—यदेव विद्ययेति हि । सत्यमेतत् । विद्यासंयुक्तं कर्माग्निहोत्रादिकं विद्याविहीनात्कर्मणोऽग्निहोत्रादेर्विशिष्टं विद्वानिव ब्राह्मणो विद्याविहीनाद्ब्राह्मणात् । तथापि नात्यन्तमनपेक्षं विद्याविहीनं कर्माग्निहोत्रादिकम् । कस्मात्—'तमेतमात्मानं यज्ञेन विविदिषन्ति' इत्यविशेषेणाग्निहोत्रादेर्विद्याहेतुत्वेन श्रुतत्वात् । ननु विद்யாसंयुक्तस्याग्नि-

---

னத்துடன் ஒத்த காரியமுள்ளதாயிருத்தலை யடைகிறதா? என விசாரிக்கப்படுகிறது. எதனுல் ஸம்சயமுண்டாகிறது எனின்? "அந்த இந்த ஆத்மாவை யாகத்தால் அறிய விருப்புகின்றனர்" என்ற ஸ்ருதியில் யக்ஞாதிகளுக்குப் பொதுவாகவே ஆத்மக்ஞானங்கத்வமானது சொல்லப்படுவதாலும், உபாஸ்தியுடன் கூடின அக்னிஹோத்ராதி கர்மமானது சிறப்புடையதாகவறியக்கிடக்கிறபடியாலும் என்க. முதலில் கிடைப்பது யாதென்னில்? உபாஸ்தியுடன் கூடின அக்னிஹோத்ராதி கர்மம் ஆத்மவித்யைக்கு அங்கமாகவாகுதலை அடைகிறதேயொழிய உபாஸ்தியுடன் கூடாதது இல்லை. உபாஸ்தியுடன் கூடாததைக் காட்டிலும் உபாஸ்தியுடன் கூடினதற்கே விசிஷ்டத்வம்=சிறப்புள்ளதாகவிருத்தல், காணவும் படுகிறது. "இவ்விதவுபாஸகன் எந்த தினத்தில் ஹோமஞ் செய்கிருனே அந்ததினத்திலேயே அபமிருத்யுவை ஜயிக்கிருன்" என்றதாதி ஸ்ருதிகளு மிருக்கின்றன. "ஹேபார்த்த! எந்தப் புத்தியுடன் கூடினவனுய் கர்மபந்தத்தை விலக்கப்போகிருயோ" என்றும், "ஹேதனஞ்ஜய! புத்தியோகத்தை விடக்கர்மம் வெகுதூரம் தாழ்ந்ததன்ருே" என்றுமாதிய ஸ்மிருதிகளுமிருக்கின்றன. என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்த்தமாகவே "யதேவ வித்யயேதிஹி" என்றதால் பதில் சொல்லுகிருர்—இதுவுண்மைதான். உபாஸ்தியுடன் கூடின அக்னிஹோத்ராதி கர்மமானது உபாஸ்தியுடன் கூடாத அக்னிஹோத்ராதி கர்மத்தைக்காட்டிலும் வித்வானுயுள்ள ப்ராம்ஹணன் வித்யையில்லாத ப்ராம்ஹணனைக் காட்டிலும் போல மிக்கவுயர்ந்தது என்பது உண்மைதான். ஆயினும் உபாஸ்தியுடன் கூடாத அக்னிஹோத்ராதி கர்மமானது முற்றிலுமே அபேக்ஷிக்கப்படுவதில்லை என்பதில்லை. ஏன்? "அந்த இந்த ஆத்மாவை யாகத்தினுல் அறிய விரும்புகின்றனர்" என்ற ஸ்ருதியில் பொதுவாகவே அக்னிஹோத்ராதி கர்மத்துக்கு வித்யா (ஆத்மக்ஞான) ஹேதுத்வம் சொல்லியிருப்பதாலென்க.

சங்கை—உபாஸ்தியுடன் கூடின அக்னிஹோத்ராதிகர்மத்துக்கு உபாஸ்தியுடன் கூடாதவற்றைக் காட்டிலும் விசிஷ்டத்வமானது=மேம்பாடுடையதா யிருத்

होत्रादेर्विद्याविहीनाद्विशिष्टत्वावगमाद्विद्याविहीनमग्निहोत्राद्यात्मविद्याहेतुत्वेनानपेक्षमेवेति युक्तम्। नैतदेवम्। विद्यासहायस्याग्निहोत्रादेर्विद्यानिमित्तेन सामर्थ्यातिशयेन योगादात्मज्ञानं प्रति कश्चित्कारणत्वातिशयो भविष्यति न तथा विद्याविहीनस्येति युक्तं कल्पयितुम्। ननु 'यज्ञेन विविदिषन्ति' इत्यत्राविशेषेणात्मज्ञानाङ्गत्वेन श्रुतस्याग्निहोत्रादेरनङ्गत्वं शक्यमभ्युपगन्तुम्। तथाहि श्रुतिः—'यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरं भवति' (छा० १।१।१०) इति विद्यासंयुक्तस्य कर्मणोऽग्निहोत्रादेर्वीर्यवत्तरत्वाभिधानेन स्वकार्यं प्रति कश्चिदतिशयं ब्रुवाणा विद्याविहीनस्य तस्यैव तत्प्रयोजनं प्रति वीर्यवत्त्वं दर्शयति। कर्मणश्च वीर्यवत्त्वं तद्यत्स्वप्रयोजनसाधनप्रसहत्वम्। तस्माद्विद्यासंयुक्तं नित्यमग्निहोत्रादि विद्याविहीनं चोभयमपि मुमुक्षुणा मोक्षप्रयोजनोद्देशेनेहजन्मनि जन्मान्तरे च प्राग्ज्ञानोत्पत्तेः कृतं यत्तद्यथासामर्थ्यं ब्रह्माधिगमप्रतिबन्धकारणोपात्तदुरित-

---

தலானது சொல்லியிருப்பதால் உபாஸ்தியுடன் கூடாத அக்னிஹோத்ராதியானது ஆத்மவித்யைக்கு ஹேதுவாக அபேக்ஷிக்கப்படுவதே இல்லை என்பதுதான் பொருந்துமெனின்?

உத்தரம்—இது இவ்விதமில்லை. உபாஸ்தியினுதவிகொண்ட அக்னிஹோத்ராதிக்கு வித்யாநிமித்தமான சிறந்த ஸாமர்த்தியத்துடன் யோகம் (சேர்க்கை) இருப்பதால் ஆத்மக்ஞானத்தை குரித்து காரணத்தன்மையில் ஒரு அதிசயம் ஏற்படுவதுபோல உபாஸ்தியுடன் கூடாததற்கு ஏற்படமாட்டாது என்று கல்பிப்பதுதான் பொருத்தமானது. "யாகத்தால் அறியவிருப்புகின்றனர்" என்ற இந்த விடத்தில் பொதுவாக ஆத்மக்ஞானங்கமாகச் சுருதியிற் சொல்லப்பட்ட அக்னிஹோத்ராதிகர்மத்துக்கு அனங்கத்வத்தை (வித்யாங்கமின்மையை) கல்பிப்பது ஒப்பக்கூடியதன்று. அவ்விதமேயன்றோ சுருதியும் "எதையே உபாஸ்தியுடனும் ஶ்ரத்தையுடனும் ரஹஸ்யவிக்ஞானத்துடனும் செய்கிறானோ அதுவே அதிகம் வீர்யமுள்ளதாக வாகிறது" என்பதாய் உபாஸ்தியுடன் கூடின அக்னிஹோத்ராதிகர்மத்துக்கு சிறந்த வீர்யமுள்ளதாக இருத்தல் சொல்லும் வாயிலாகத் தனது கார்யத்தைக் குரித்து ஒரு அதிசயத்தை=மேம்பாட்டைச் சொல்லுகின்றதாய்க் கொண்டு உபாஸ்தியுடன் கூடாத அந்த அக்னிஹோத்ராதிக்கே அதன்ப்ரயோஜனத்தைக் குரித்து வீர்யவத்வத்தை=(வீர்யமுள்ளதாக இருத்தலை) க் காண்பிக்கிறது. தனதுப்ரயோஜனத்தை ஸாதிப்பதில் சக்தியுடன் கூடியிருத்தல் என்பது யாதுண்டோ அதுவேகர்மத்தின் வீர்யவத்வமாகும். ஆகவே உபாஸ்தியுடன் கூடின நித்யமான அக்னிஹோத்ராதியும், உபாஸ்தியுடன் கூடாததும் ஆகிய இரண்டும் முமுக்ஷுவினால் மோக்ஷரூபமான ப்ரயோஜனோத்தேசத்துடன் இந்தஜன்மத்திலோ வேறுஜன்மத்திலோ ஜ்ஞானோத்பத்திக்குமுந்தி செய்யப்பட்டது யாதுண்டோ அது தனது சக்திக்கேற்றவாறு ப்ரஹ்மஜ்ஞானப்ராப்திக்குத் தடைசெய்யும் காரணமான தன்னாற்தேடப்பட்ட பாபம்யாதுண்டோ அதைத்தேய்ப்பதற்கு ஹேதுவாகவாகும் வாயிலாக ப்ரஹ்மப்ராப்திக்குக்காரணமாக வாகுந்தன்மையை

**क्षयहेतुत्वद्वारेण ब्रह्माधिगमकारणत्वं प्रतिपद्यमानं श्रवणमननश्रद्धातात्पर्याद्यन्तरङ्गकारणापेक्षं ब्रह्मविद्यया सहैककार्यं भवतीति स्थितम् ॥ १८ ॥**

## १४ भोगाधिकरणम् । सू० १९

## भोगेन त्वितरे क्षपयित्वा संपद्यते ॥ १९ ॥

बहुजन्मप्रदारब्धयुक्तानां नास्त्युतास्ति मुक् । विद्यालोपे कृतं कर्म फलदं तेन नास्ति मुक् ॥ १ ॥

प्रारब्धं भोजयेदेव नतु विद्यां विलोपयेत् । सुप्तबुद्धवदश्लेषतादवस्थ्यात् कुतो न मुक् ॥ २ ॥

**अनारब्धकार्ययोः पुण्यपापयोर्विद्यासामर्थ्यात्क्षय उक्तः । इतरे त्वारब्धकार्ये पुण्यपापे उपभोगेन क्षपयित्वा ब्रह्म संपद्यते 'तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ संपत्स्ये'**

---

அடைகின்றதாய்க் கொண்டு சிரவணம், மனனம், சிரத்தை, அதிலே இடையரு முயற்சி முதலிய அந்தரங்ககாரணத்தை யபேக்ஷிப்பதாய் கொண்டு ப்ரம்ஹவித்யையுடன் கூட ஒத்த ஒரேகாரிய முள்ளதாகவே ஆகிறது என்பது ஸித்திக்கிறது.

பதின்மூன்ருவது யதேவ வித்யாதிகரணம் முற்றிற்று.



## போகாதிகரணம் 14.

### (ஸூ) போகேநது இதரே க்ஷபயித்வா ஸம்பத்யதே. (19)

(ப-ரை) **इतरे तु** (இதரேது)=தனதுகாரியத்தை யாரம்பித்த புண்ணியபாபங்களேயோ வெனில் **भोगेन** (போகேந)=அனுபவத்தினல் **क्षपयित्वा** (க்ஷபயித்வா)= தேயச்செய்து **संपद्यते** (ஸம்பத்யதே)=ப்ரம்ஹஸம்பத்தியை யடைகிருன். (அதாவது ப்ரம்ஹமாகவாகிருன் என்ரும்.) (19) (எ-று)

வையாஸிக நியாயமாலே

(க-ரை) வெகுஜன்மங்களைத் தரும் ப்ராரப்த்தகர்மங்களுடன் கூடினவர்களுக்கு மோக்ஷமானது இல்லையா? அல்லது இருக்கின்றதா? என்பது ஸந்தேஹம். வித்யைக்கு லோபம் வருங்கால் செய்யப்பட்ட கர்மமானது பலனைத்தந்துவிடும். அதனல் அவர்களுக்கு மோக்ஷம் கிடையாது என்பது பூர்வபக்ஷம். ப்ராரப்த்த கர்மமானது தனது பலனைமட்டும் அனுபவிக்கச்செய்யுமே யல்லாது வித்யையை நாசப்படுத்தமாட்டாது. தூங்கினவனுக்கும் விழித்தெழுந்தவனுக்கும் போல ஒட்டாமையானது அதேநிலையிலிருப்பதால் மோக்ஷமானது எவ்விதமில்லாமலிருக்கும் என்பது ஸித்தாந்தம். (எ-று)

பாஷ்யம்.—தனது காரியத்தை யாரம்பிக்காத புண்ணியபாபங்களுக்கு வித்யையின் ஸாமர்த்யத்தினல் தேய்வானது சொல்லப்பட்டது. மற்றவைகளான ஆரம்பிக்கப்பட்ட தனது காரியத்தையுடைய புண்ணியபாபங்களேயோ வெனில் போகத்தினல் தேயச்செய்து ப்ரம்ஹத்தை யடைகிருன். "அவனுக்கு அவ்வளவேதான் தாமதம் எதுவரை ப்ராரப்த்த சரீரத்தினின்றும் விடுபடவில்லையோ

(छान्दो० ६।१४।२) इति 'ब्रह्मैव सन्ब्रह्माप्येति' इति चैवमादिश्रुतिभ्यः। ननु सत्यपि सम्यग्दर्शने यथा प्राग्देहपाताद्भेददर्शनं द्विचन्द्रदर्शनन्यायेनानुवृत्तमेवं पश्चादप्यनुवर्तेत। न। निमित्ताभावात्। उपभोगशेषक्षपणं हि तत्रानुवृत्तिनिमित्तं नच तादृशमत्र किंचिदस्ति। नन्वपरः कर्माशयोऽभिनवमुपभोगमारप्स्यते। न। तस्य दग्धबीजत्वात्। मिथ्याज्ञानावष्टम्भं हि कर्मान्तरं देहपात उपभोगान्तरमारभते तच्च मिथ्याज्ञानं सम्यग्ज्ञानेन दग्धमित्यतः साध्वेतदारब्धकार्यक्षये विदुषः कैवल्यमवश्यं भवतीति॥१९॥

इति श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्य श्रीमच्छङ्करभगवत्पादकृतौ शारीरक मीमांसाभाष्ये चतुर्थाध्यायस्य प्रथमः पादः॥१॥



---

ப்ராரப்த்த சரீரத்தினின்றும் விடுபட்டதும் ஸம்பத்தியை=(ப்ரம்ஹத்துடன் இரண்டறக் கலத்தலை) அடைகிறான்" என்றும், "ப்ரம்ஹமாகவே இருந்து கொண்டு ப்ரம்ஹத்தை யடைகிறான்" என்றுமாதிய சுருதிகளு மிருக்கின்றன.

சங்கை—ஸம்யக்தர்சனமானது இருந்த போதிலுங்கூட தேஹம் விழுவதற்கு முந்தி பேததர்சனமானது இரண்டு சந்திரனைத் தோன்றுதல் என்ற நியாயத்தை யொட்டி எவ்விதம் தொடர்ந்து வருகிறதோ இவ்விதமே சரீரபாதத்துக்குப் பிறகுங்கூட பேததர்சனமானது அனுவர்த்திக்கட்டுமே எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. நிமித்தமின்மையே அதன் காரணமாகும். அனுபவசேஷத்தைத் தேய்த்தலன்றோ அவ்விடத்தில் அனுவிருத்தியில் நிமித்தமாக வாகவேண்டும். அத்தகையதொன்றும் இங்கில்லை யன்றோ.

சங்கை—வேறு ஒருகர்மாசயமானது புதிதான உபபோகத்தை (அனுபவத்தை) ஆரம்பிக்கக்கூடும் எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. அத்தகைய கர்மாசயத்தின் பீஜமானது பொசுக்கப்பட்டதாக விருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—மித்யாக்ஞானத்தை ஆஸ்ரயமாகவுடைய கர்மாந்தரமானது தேஹபாதமேற்பட்டதும் வேறு உபபோகத்தையாரம்பிக்க வேண்டும். அந்த மித்யாக்ஞானமோ ஸம்க்ஞானத்தினால் போக்கப்பட்டிருக்கிறது. என்ற இக்காரணத்தால் ஆரப்த்தகாரியத்தின் நாசமேற்பட்டதும் வித்வானுக்குக் கைவல்யமானது அவஸ்யம் வந்துவிடுகிறது என்றும். (19)

பதிநான்காவது போகாதிகரணம் முற்றிற்று.

இவ்விதம் கோவிந்தபகவத்பூஜ்யபாதரின் சிஷ்யர்களான ஸ்ரீமத்சங்கர பகவத்பாதர்களின் கிருதியான சாரீரக மீமாம்ஸாபாஷ்யத்தின் நான்காவது அத்தியாயத்தின் முதலாவது பாதம் முற்றிற்று.



## चतुर्थाध्याये द्वितीयः पादः।

[अत्र पादे उत्क्रान्तिगतिनिरूपणम्]

## १ वागधिकरणम्। सू० १–२

## वाङ्मनसि दर्शनाच्छब्दाच्च॥ १॥

वागादीनां स्वरूपेण वृत्त्या वा मानसे लयः। श्रुतिर्वाङ्मनसीत्याह स्वरूपविलयस्ततः॥ १॥

न लीयतेऽनुपादाने कार्यं वृत्तिस्तु लीयते। वह्निवृत्तेर्जले शान्तेर्वाक्छब्दो वृत्तिलक्षकः॥ २॥

---

## நான்காவது அத்தியாயத்தின் இரண்டாவதுபாதம்.

## வாகதிகரணம் 1.

(அ—கை) ஆத்மக்ஞானத்தின் பயனை ஸத்யோமுக்தியைச் சொன்னபிறகு ப்ரம்ஹலோகப்ராப்த்தி ரூபமான உபாஸனத்தின் பயன் சொல்லப்படவேண்டும். அப்பயனே அர்ச்சிராதிமார்க்கத்தினல் அடையக்கூடியதாக விருக்கிறது. மார்க்கப்ராப்த்தியோ உத்க்ராந்தியினல் ஸாத்யமாக விருக்கிறது. ஆகவே இந்தப் பாதத்தில் உத்க்ராந்தியானது சொல்லப்படுகிறது. இந்தப் பாதத்தில் 21ஸூத்திரங்கள் கொண்ட 11 அதிகரணங்களிருக்கின்றன. அவற்றுள் 2ஸூத்திரங்கள்கொண்ட முதலாவது அதிகரணத்தில் வாக்விருத்திக்கு மனத்தில் லயமேற்படும் முறை சொல்லப்படுகிறது. அதன் முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

### (ஸூ) வாங்மனஸி தர்சனத் சப்தாச் ச (1)

(ப—ரை) **वाक्** (வாக்)=வாகிந்திரியத்தின் விருத்தியானது **मनसि** (மனஸி)= மனத்தில் லயத்தையடைகிறது. ஏன்? **दर्शनात्** (தர்சனத்)=அவ்விதமனுபவமிருப்பதும், **शब्दाच्च** (சப்தாச்ச)=சுருதி அவ்விதம் கூறியிருப்பதுமே அதன் காரணமாகும். (1) (எ—று)

வையாஸிக நியாயமாலே.

(க—ரை) வாக் முதலியவற்றுக்கு ஸ்வரூபத்தால் மனத்தில் லயமேற்படுகிறதா? அல்லது அவற்றின் விருத்தியினல் லயமேற்படுகிறதா? (அதாவது:—வாகாதி இந்திரியங்களே மனத்திலொடுங்குகின்றனவா? அல்லது அவற்றின் விருத்திகள் மனத்திலொடுங்கு கின்றனவா? என்றும்.) என்பது ஸந்தேஹம். சுருதியானது "வாக் மனத்தில் லயத்தை யடைகிறது" என்று சொல்லுகிறது. ஆகவே வாகாதிகளின் ஸ்வரூபலயந்தான் சொல்லவேண்டும் என்பது பூர்வபக்ஷம். பொதுவாய் காரியமானது தனது உபாதான காரணமாக இல்லாதவற்றில் லயத்தையடைவதில்லை. விருத்தியோ உபாதானகாரணமாக இல்லாதவற்றிலுங் கூட லயத்தையடைகிறது. நெருப்பின் விருத்திக்கு ஜலத்தில் லயமேற்படுவதைக் காண்கிறோம். ஆகவே ஸூத்திரத்திலுள்ள வாக் என்ற சப்தமானது லக்ஷணை முறையால் விருத்தியைச் சொல்லுகிறது. என்பது ஸித்தாந்தம். (எ—று)

अथापरासु विद्यासु फलप्राप्तये देवयानं पन्थानमवतारयिष्यन्प्रथमं तावद्यथाशास्त्रमुत्क्रान्तिक्रममन्वाचष्टे। समाना हि विद्वदविदुषोरुत्क्रान्तिरिति वक्ष्यति। अस्ति प्रायणविषया श्रुतिः 'अस्य सोम्य पुरुषस्य प्रयतो वाङ्मनसि संपद्यते मनः प्राणे प्राणस्तेजसि तेजः परस्यां देवतायाम्' (छा० ६। ८। ६) इति। किमिह वाच एव वृत्तिमत्या मनसि संपत्तिरुच्यत उत वाग्वृत्तेरिति विशयः। तत्र वागेव तावन्मनसि संपद्यत इति प्राप्तम्। तथाहि श्रुतिरनुगृहीता भवति। इतरथा लक्षणा स्यात्। श्रुतिलक्षणाविशये च श्रुतिर्न्याय्या न लक्षणा। तस्माद्वाच एवायं मनसि प्रलय इति। एवं प्राप्ते ब्रूमः—वाग्वृत्तिर्मनसि संपद्यत इति। कथं वाग्वृत्तिरिति व्याख्यायते यावता वाङ्मनसीत्येवाचार्यः पठति। सत्यमेतत्। पठिष्यति तु परस्तात् 'अविभागो वचनात्' (ब्र० सू० ४। २। १६) इति।

---

பாஷ்யம்.—பிறகு அபரவித்யையில் (ஸகுணப்ரம்ஹோபாஸனத்தில்) பயனை யடைவதற்கு வேண்டி தேவயானமார்க்கத்தைச் சொல்லப் போகின்றவராய் முதன் முதலில் சாஸ்திரத்திற் சொல்லியபடி உத்க்ராந்திக்கிரமத்தைச் சொல்லுகிறார். வித்வானுக்கும் அவித்வானுக்கும் உத்க்ராந்தியானது (சரீரத்தினின்றும் கிளம்புதலானது) ஸமானமாகவன்றோ இருக்கின்றது என்று சொல்லப்போகிறார். ப்ராயணத்தை (மரணத்தை) விஷயமாகக்கொண்ட ஶ்ருதியானது பின்வருமாறு இருக்கிறது. அதாவது:—"ஹேஸோம்ய! மரணத்தையடைந்த இந்தப்புருஷனுடைய வாக்கானது மனத்தில் ஸம்பத்தியை (லயத்தை) யடைகிறது. மனஸ் ப்ராணனிலும், ப்ராணன் தேஜஸ்ஸிலும் (பௌதிகமான ஆத்யாத்மிகதேஜஸ்ஸிலும்) தேஜஸ்ஸானது (பௌதிகமான ஆத்யாத்மிகதேஜஸ்ஸானது) பரதேவதையினிடத்திலும் ஸம்பத்தியை [லயத்தை] அடைகிறது" என்றும். இங்கு விருத்தியுடன் கூடினதான வாக்குக்கே மனத்தில் ஸம்பத்தியா (லயமா) னது சொல்லப்படுகிறதா? அல்லது வாக்கின் விருத்திக்கு மட்டுமே (மனத்தில் லயம்சொல்லப்படுகிறதா?) என்பது ஸந்தேஹம். அங்கு வாக்குமட்டுமே தான் மனத்தில் லயமடைகிறது என ப்ராப்த்தமாகிறது. அவ்விதம் சொன்னாலன்றோ சுருதியானது (வாகிந்திரியத்தைச் சொல்லும் வாக்சப்தத்திலுள்ள சக்திஎன்ற விருத்தியானது) பாதிக்கப்படாததாகவாகிறது. இல்லாவிடில் வாக் என்ற சப்தத்தில் லக்ஷணை சொல்லவேண்டி வந்துவிடுகிறது. சுருதி (நேரில் பொருளைக்கூறும் சக்தி) க்கும், லக்ஷணைக்குமாக ஸந்தேஹம் வருமிடத்தில் சுருதியைக் கொள்ளுவது நியாயமாகவாகுமே யொழிய லக்ஷணையைக் கொள்ளுவது நியாயமாக வாகாது. ஆகவே வாக்குக்கேதான் இந்த மனத்தில் லயம் சொல்லப்படுகிறது. என இவ்விதம் (பூர்வபக்ஷம்) ப்ராப்த்தமாகவே வாக்கின் விருத்தியானது மனத்தில் லயத்தை யடைகிறது என்று சொல்லுகிறோம். ஆசிரியர் வாக்கே மனத்தில் (லயமடைகிறது) எனச் சொல்லியிருக்க வாக்கின்விருத்தியென உரைசெய்யப் படுவதுஎங்ஙனம் எனின்? இது உண்மைதான். இதேபாதம் 16-வது ஸூத்திரத்தில் "* அவிபாகோவசநாத்"

---

* தத்த்வவித்தினுடைய இந்திரியங்களுக்கு ப்ரம்ஹத்தினிடத்தில் ஸ்வரூபலயமேற்படுகிறது என்பது அந்த ஸூத்திரத்தின் கருத்து.

तस्मादत्र वृत्त्युपशममात्रं विवक्षितमिति गम्यते। तत्त्वप्रलयविवक्षायां तु सर्वत्रैवाविभागसाम्यात्किं परत्रैव विशिंष्यादविभाग इति। तस्मादत्र वृत्त्युपसंहारविवक्षा। वाग्वृत्तिः पूर्वमुपसंह्रियते मनोवृत्तावविस्थतायामित्यर्थः। कस्मात्। दर्शनात्। दृश्यते हि वाग्वृत्तेः पूर्वोपसंहारो मनोवृत्तौ विद्यमानायाम्। नतु वाच एव वृत्तिमत्या मनस्युपसंहारः केनचिदपि द्रष्टुं शक्यते। ननु श्रुतिसामर्थ्याद्वाच एवायं मनस्यप्ययो युक्त इत्युक्तम्। नेत्याह। अतत्प्रकृतित्वात्। यस्य हि यत उत्पत्तिस्तस्य तत्र प्रलयो न्याय्यो मृदीव शरावस्य। नच मनसो वागुत्पद्यत इति किञ्चन प्रमाणमस्ति। वृत्त्युद्भवाभिभवौ त्वप्रकृतिसमाश्रयावपि दृश्येते। पार्थिवेभ्यो हीन्धनेभ्यस्तैजसस्याग्नेर्वृत्तिरुद्भवत्यप्सु चोपशाम्यति। कथं तर्ह्यस्मिन्पक्षे शब्दो वाङ्मनसि संपद्यत इति। अत आह शब्दाच्चेति। शब्दोऽप्यस्मिन्पक्षेऽवकल्पते वृत्तिवृत्तिमतोरभेदोपचारादित्यर्थः ॥ १ ॥

## अतएव च सर्वाण्यनु ॥ २ ॥

---

எனப் படிக்கப்போகிறார். ஆகவே இங்கு விருத்தியின் உபஶமம் (ஒடுக்கம்) மட்டுமே என வறியக்கிடக்கிறது. இந்திரிய தத்துவத்துக்கே லயஞ் சொல்லவிருப்பமிருக்கும்பக்ஷத்தில் எல்லாவிடத்திலுமே ஏகீபாவமானது ஸமானமாக விருக்குங்கால் மேலுள்ள விடத்தில் மட்டும் “அவிபாக:” என அடைமொழிகொடுத்து எதற்காகக்கூறவேண்டும். ஆதலால் இவ்விடத்தில் வாக்விருத்தியின் உபஸம்ஹாரத்தைச் சொல்ல எண்ணமிருப்பதாகத் தெரிகிறது. மனோவிருத்தியானது இருக்குங்கால் முதலில் வாக்கின் விருத்தியானது ஒடுங்குகிறது என்பது அதன் பொருள். ஏன்? தர்சனமிருப்பதாலென்க. அதாவது:—மனோவிருத்தியானது இருக்குங்கால் வாக்விருத்திக்கு முதலில் உபஸம்ஹாரமானது காணப்படுகின்றதன்றோ? விருத்தியுடன் கூடின வாக்குக்கு மனத்தி லுபஸம்ஹாரமானது ஒருவனாலும் பார்க்கமுடியாதன்றோ.

சங்கை—சுருதி சொல்லியிருப்பதைக் கொண்டு வாக்குக்கே மனத்தில் இந்த லயம் சொல்லுவது பொருந்தும் எனச் சொல்லப்பட்டதன்றோ எனின்?

உத்தரம்—இல்லையென்கிறார். மண்ணில் மடக்குக்குப்போல எதற்கு எதனிடமிருந்து உத்பத்தியோ அதற்கு அதனிடத்தில் லயஞ்சொல்லுவது நியாயமானதாகும். மனத்திலிடமிருந்து வாக்கு உண்டாகிறது என்பதில் எவ்விதப்பிரமாணமுமில்லை யன்றோ? விருத்தியின் உத்பத்தியும் லயமும் காரணமாக இல்லாதவற்றை யாஸ்ரயித்ததாகவும் கூட காணக்கிடக்கின்றன. பார்த்திவங்களான விறகுகளினின்றும் தைஜஸமான அக்னியினுடைய விருத்தியானது உண்டாகிறது. ஜலத்தில் லயத்தையுமடைகிறது. அவ்விதமாயின் இந்தப்பக்ஷத்தில் “வாக்கு மனத்தில் ஒடுங்குகிறது” என்ற சப்தமானது எவ்விதம் பொருந்தும் எனின்? அதற்கு வேண்டியே “சப்தாச் ச” என்று சொல்லுகிறார். விருத்திக்கும், விருத்தியுள்ளவற்றுக்கும் உபசாரமுறையால் அபேதமானது கொள்ளப்படுவதால் சப்தமும் இந்தப்பக்ஷத்தில் பொருந்துகிறது என்பது பொருள். (1) (எ—று)

अहन्येव मृतो रश्मिं याति निश्यपि वा निशि। सूर्यरश्मेरभावेन मृतोऽहन्येव याति तम् ॥ १ ॥
यावद्देहं रश्मिनाड्योर्योगो ग्रीष्मक्षपास्वपि। देहदाहाच्छ्रुतत्वाच्च रश्मीन्निश्यपि यात्यसौ ॥ २ ॥

**अस्ति हार्दविद्या—'अथ यदिदमस्मिन्ब्रह्मपुरे दहरं पुण्डरीकं वेश्म' (छा० ८।१।१) इत्युपक्रम्य विहिता। तत्प्रक्रियायाम् 'अथ या एता हृदयस्य नाड्यः' (छा० ८।६।१) इत्युपक्रम्य सप्रपञ्चं नाडीरश्मिसंबन्धमुक्त्वोक्तम् 'अथ यत्रैतदस्माच्छरीरादुत्क्रामत्यथैतैरेव रश्मिभिरूर्ध्वमाक्रमते' (छा० ८।६।५) इति। पुनश्चोक्तम् 'तयोर्ध्वमायन्नमृतत्वमेति' (छा० ८।६।६) इति। तस्माच्छताधिकया नाड्या निष्क्रामन्रश्म्यनुसारी निष्क्रामतीति गम्यते। तत्किमविशेषेणैवाहनि रात्रौ वा म्रियमाणस्य रश्म्यनुसारित्वमाहोस्विदहन्येवेति संशये सत्यविशेषश्रवणादविशेषेणैव तावद्रश्म्यनुसारीति प्रतिज्ञायते ॥**

---

(ப—ரை) நூற்றொராவது நாடிவழியாகச் செல்லுபவன் **रश्म्यनुसारी** (ரஸ்ம்யனுஸாரீ)=சூரியனுடைய கிரணத்தை யனுஸரித்தவனாய் ஆதித்யமண்டலத்தை யடைகிறான். (18) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) பகலில்மட்டும் மரணத்தை யடைந்தவன் ஸூரியரஸ்மியை யடைகின்றானா? இரவில் மரணத்தை யடைந்தவனும் ஸூரியரஸ்மியை யடைகின்றானா? என்பது ஸந்தேஹம். இரவில் ஸூரியனுடைய ரஸ்மியானது இல்லாமையால் பகலில் மரணத்தையடைந்தவன் மட்டுந்தான் ஸூரியரஸ்மியை யடைகிறான் என்பது பூர்வபக்ஷம். தேஹமுள்ளவரை ரஸ்மிக்கும் நாடிக்கும் சேர்க்கை யிருக்கிறது. க்ரீஷ்மருதுவில் இரவுகளிலுங் கூட தேஹதாஹம் ஸம்பவிப்பதாலும் சுருதியில் சொல்லியிருப்பதைக் கொண்டும் இரவில் மரித்தவனுங்கூட ரஸ்மிகளை யடையவே அடைகிறான்என்பது ஸித்தாந்தம். (எ—று)

**பாஷ்யம்.**—சுருதியில் ஹார்த்த வித்யையானது "பிறகு ப்ரம்ஹபுரத்தில் யாதொரு இந்த ஸூக்ஷ்மமானதும் புண்டரீகவடிவமானதுமான இடமுண்டோ" என்றுதொடங்கி விதிக்கப்பட்டிருக்கிறது. அதை விளக்கும் பொழுது "பிறகு ஹிருதயத்தினுடைய யாதொரு இந்த நாடிகளுண்டோ" என்று தொடங்கி விரிவாக நாடிகளுக்கும் ரஸ்மிகளுக்கும் ஸம்பந்தத்தைச்சொல்லி "பிறகு எப்பொழுது இவ்விதம் இந்தச் சரீரத்தினின்றும் வெளிக்கிளம்புகிறானோ அப்பொழுது இந்த ரஸ்மிகளுடனேயே உயரக்கிளம்புகிறான்" எனக்கூறப்பட்டிருக்கிறது. திரும்பவும் "அந்த நாடியினால் உயரக்கிளம்புகின்றவனாய் அமிருதத்வத்தை யடைகிறான்" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே நூற்றொராவது நாடியினால் வெளியேறுபவனாய்க் கொண்டு ரஸ்மிகளையனுஸரித்து வெளியேறுகிறான் எனக் கிடைக்கிறது. அங்கு பகலிலோ இரவிலோ மரிப்பவர் எவர்க்கும் பொதுவாக ரஸ்மியை யனுஸரித்தல் சொல்லப்படுகிறதா? அல்லது பகலில் மரிப்பவர்க்குமட்டுமேதானா? என ஸம்சயம் வரவே பொதுவாகவே சொல்லி இருப்பதால் பொதுவாகவேதான் (பகலில் மரித்தவன் இரவில் மரித்தவன் என்றதாரதம்மியமில்லாமலேதான்) ரஸ்மியை அனுஸரிக்கிறான் என்று சொல்லப்படுகிறது. (18) (எ—று)

**निशि नेति चेन्न संबन्धस्य यावद्देहभावित्वाद्दर्शयति च ॥ १९ ॥**

अस्त्यहनि नाडीरश्मिसंबन्ध इत्यहनि मृतस्य स्याद्रश्म्यनुसारित्वं रात्रौ तु प्रेतस्य न स्यात्। नाडीरश्मिसंबन्धविच्छेदादिति चेन्न। नाडीरश्मिसंबन्धस्य यावद्देहभावित्वात्। यावद्देहभावी हि शिराकिरणसंपर्कः। दर्शयति चैतमर्थं श्रुतिः—'अमुष्मादादित्यात्प्रतायन्ते ता आसु नाडीषु सृप्ता आभ्यो नाडीभ्यः प्रतायन्ते तेऽमुष्मिन्नादित्ये सृप्ताः' (छा० ८। ६। २) इति। निदाघसमये च निशास्वपि किरणानुवृत्तिरुपलभ्यते प्रतापादिकार्यदर्शनात्। स्तोकानुवृत्तेस्तु दुर्लक्ष्यत्वमृत्वन्तररजनीषु शैशिरेष्विव दुर्दिनेषु। 'अहरेवैतद्रात्रौ दधाति' इति चैतदेव दर्शयति। यदि च रात्रौ प्रेतो विनैव रश्म्यनुसारेणोर्ध्वमाक्र-

---

(ஸூ) நிசிநேதிசேத் நஸம்பந்தஸ்ய யாவத்தேஹபாவித்வாத் தர்சயதிச (19)

(ப-ரை) निशि (நிசி)=இரவில் மரித்தவனுக்கு नेति चेन् (நேதிசேத்)=ரஸ்மியையனுஸரித்துச் செல்லுதல் கிடையாது எனின்? न (ந)=அதுபொருந்தாது. संवन्धस्य (ஸம்பந்தஸ்ய)=ரஸ்மியின் ஸம்பந்தமானது यावद्देहभावित्वात् (யாவத்தேஹபாவித்வாத்)=தேஹமுள்ளவரை இருப்பது பற்றியே என்க. दर्शयति च (தர்சயதி ச)=சுருதியும் அவ்விதமே சொல்லுகிறது. (19) (எ-று)

பாஷ்யம்.—பகலில் நாடிகளுக்கும் ரஸ்மிகளுக்கும் ஸம்பந்தமிருப்பது பற்றி பகலில் மரணத்தை யடைந்தவருக்கு ரஸ்மியை அனுஸரித்தல் ஸம்பவிக்குமே யொழிய இரவில் மரணத்தை யடைந்தவருக்கு ஸம்பவிக்க முடியாது. நாடிகளுக்கும் ரஸ்மிகளுக்கும் ஸம்பந்தமில்லாதிருப்பதே அதன் காரணமாகும் எனின்? அவ்விதம் சொல்லமுடியாது. ஏன்? நாடிகளுக்கும் ரஸ்மிகளுக்கும் தேஹமுள்ளவரை ஸம்பந்தமிருப்பதே அதன் காரணமாகும். நரம்புகளுக்கும் கிரணங்களுக்கும் சேர்க்கையானது தேஹமுள்ளவரை இருக்கக் கூடியதன்றோ? இந்த அர்த்தத்தைச் சுருதியிலும் "அந்தக் கிரணங்கள் இந்தச் சூரியனிடமிருந்து விரிந்து நிற்கின்றன. இந்த நாடிகளில் ஸம்பந்தத்தையடைந்தனவாய்க் கொண்டு நாடிகளினின்றும் விரிவை யடைகின்றன. அவை அந்தச் சூரியனிடத்திலும் ஸம்பந்தத்தை யடைகின்றன" என்றதால் சொல்லப்பட்டிருக்கிறது. கோடைகாலத்தில் இரவிலுங்கூட கிரணங்களின் அனுவிருத்தியானது காணப்படுகிறது. ப்ரதாபம் (உஷ்ணம்) முதலிய அதன்காரியம் காணப்படுவதே அதன் காரணமாகும். வேறு ருதுக்களிலுள்ள இரவுகளில் ஸ்வல்பம் அனுவிருத்தியிருப்பதை யொட்டி மேகத்தால் மறைக்கப்பட்ட சிசிரருதுக்களிலுள்ள பகல்களில் போல அது காணுதற்கரிதாக இருக்கிறது. "சூரியன் இந்தப் பகலையே இரவில் தரிக்கிறான்" என்ற சுருதியும் இவ்விஷயத்தைத் தெரிவிக்கிறது (அதாவது: ராத்ரியிலும் ஸ்வல்பரஸ்மிகளை அனுவிருத்திக்கச் செய்கிறான் என்பது அதன் பொருள்) ராத்திரியில் மரணத்தை யடைந்தவன் ரஸ்மியை யனுஸரிக்காமலே உயரக்கிளம்புவானேல் ரஸ்மியின் அனுஸாரணத்தைச் சொன்னது வீணாகிவிடும். எவன் பகலில் மரிக்கின்றானே அவன்

मेत रश्म्यनुसारानर्थक्यं भवेत्। नह्येतद्विशिष्याधीयते यो दिवा प्रैति स रश्मीनपेक्ष्योर्ध्वमाक्रमते यस्तु रात्रौ सोऽनपेक्ष्यैवेति। अथतु विद्वानपि रात्रिप्रायणापराधमात्रेण नोर्ध्वमाक्रमेत पाक्षिकफलाविद्येत्यप्रवृत्तिरेव तस्यां स्यात्। मृत्युकालानियमात्। अथापि रात्रावुपरतोऽहरागममुदीक्षेत। अहरागमेऽप्यस्य कदाचिद्रश्मिसंबन्धार्हं शरीरं स्यात्पावकादिसंपर्कात्। 'स यावत्क्षिप्येन्मनस्तावदादित्यं गच्छति' (छा० ८। ६। ५) इति च श्रुतिरनुदीक्षां दर्शयति। तस्मात्तदविशेषेणैवेदं रात्रिंदिवं रश्म्यनुसारित्वम्॥ १९॥

## ११ दक्षिणायनाधिकरणम्। सू० २०-२१

## अतश्चायनेऽपि दक्षिणे॥ २०॥

---

ரஶ்மிகளை யபேக்ஷித்து உயரக்கிளம்புகிறுன். எவன் இரவில் மரிக்கின்றுனே அவன் ரஶ்மிகளை அபேக்ஷிப்பதில்லை என்று பிரித்து உபதேசிக்கப்படவுமில்லை யன்றே? வித்வானுக (உபாஸகனுக) இருப்பவனுங்கூட ராத்திரியில் மரித்த அபராதத்தைக் கொண்டுமட்டும் மேல்லோகத்தை யடையானுயின் உபாஸனையானது ஒருஸமயத்தில் மட்டும்தான் பலன் தரக்கூடியது எனவாகி அவ்வுபாஸனத்தில் ப்ரவிருத்தியே ஏற்படாமல் போகத்தெரியும். இன்னகாலத்திற்றுன் மரணம் நேரும் என்ற நியமமு மில்லாதிருக்கிறது. ராத்திரியில் மரித்தவன் பகலின் வரவை எதிர்பார்ப்பானுயின், இவனுடைய சரீரமானது *அக்னியாதிகளின் ஸம்பந்தமேற்படுவதை முன்னிட்டு பகல் வந்தபோதிலுங்கூட ஒருஸமயம் ரஶ்மியின் ஸம்பந்தத்துக்கு அர்ஹமில்லாததாகவும் ஆகிவிடக்கூடும். "மனஸ்ஸானது எவ்வளவுக்குள் கிளம்புமோ அவ்வளவுக்குள் அவன் ஆதித்யனை அடைகிறுன்" என்பதாய் சுருதியும் கிரணத்தின் எதிர்பாராமையைத் தெரிவித்திருக்கிறது. ஆனதுபற்றிப் பொதுவாகவே இரவிலோ பகலிலோ இந்த ரஶ்மியை அனுஸரித்தல் ஸித்தித்து விடுகிறது. (19) (எ-று)

பத்தாவது ரஶ்ம்யனுஸார்யதிகரணம் முற்றிற்று.



## தக்ஷிணயனுதிகரணம் 11.

(ஸூ) அத: ச அயனேபி தக்ஷிணே. (20)

(ப-ரை) अतश्च (அதஶ்ச)=ரஶ்மியை எதிர்பார்த்தலில்லாமை முதலிய காரணங்களைக் கொண்டும் दक्षिणे अयनेऽपि (தக்ஷிணே அயனேபி)=தக்ஷிணயனத்தில் மரித்தபோதிலுங் கூட உபாஸகன் வித்யை (உபாஸனை) யின் பலனை யடைந்து விடுகிறுன். (20) (எ-று)

---

* ஸூரியனுதயமாவதற்குமுன் இவனுடைய சரீரத்தை நெருப்பிலிட்டுப் பொசிக்கியோ, குழியில் புதைத்தோ விடுவாராயின் அப்பொழுது ரச்மியின் ஸம்பந்தமேற்படுவதற்கு இடமில்லாமலாகிவிடும் என்று கருத்து.

अयने दक्षिणे मृत्वा धीफलं नैत्यथेतिवा । नैत्युत्तरायणाध्वोक्तेर्भीष्मस्यापि प्रतीक्षणात् ॥ १ ॥
आतिवाहिव देवोक्तेर्वरख्यात्यै प्रतीक्षणात् । फलैकान्त्याच्च विद्यायाः फलं प्राप्नोत्युपासकः ॥ २ ॥

**अत एव चोदीक्षानुपपत्तेरपाक्षिकफलत्वाच्च विद्याया अनियतकालत्वाच्च मृत्योर्दक्षिणायनेऽपि म्रियमाणो विद्वान्प्राप्नोत्येव विद्याफलम् । उत्तरायणमरणप्राशस्त्यप्रसिद्धेर्भीष्मस्य च प्रतीक्षादर्शनात् 'आपूर्यमाणपक्षाद्यान्षडुदङ्ङेति मासांस्तान्' (छां० ४।१५।५) इति च श्रुतेरपेक्षितव्यमुत्तरायणमितीमामाशङ्कामनेन सूत्रेणापनुदति । प्राशस्त्यप्रसिद्धिरविद्वद्विषया । भीष्मस्य प्रतिपालनमाचारप्रतिपालनार्थं पितृप्रसादलब्धस्वच्छन्दमृत्युताख्यापनार्थं च । श्रुतेस्त्वर्थं वक्ष्यति 'आतिवाहिकास्तल्लिङ्गात्' (ब्र० सू० ४।३।४) इति ॥ २० ॥**

---

வையாஸிக நியாயமாலே.

(க—ரை) தக்ஷிணாயனத்தில் மரித்தவன் உபாஸனாபலனை யடைகின்றானா? அல்லது அடைவதில்லையா? என்பது ஸந்தேஹம். உத்தராயணமார்க்கம் சொல்லப்பட்டிருப்பதாலும் பீஷ்மருக்கு உத்தராயணப்ரதீக்ஷணம், சொல்லப்பட்டிருப்பதாலும் தக்ஷிணாயனத்தில் மரித்தவன் வித்யாபலனை யடைவதில்லை என்பது பூர்வ பக்ஷம். உத்தராயணாதி சப்தங்களால் ஆதிவாஹிகர்களான தேவர்கள் சொல்லப்பட்டிருப்பதாலும் தனது இஷ்டப்படி மரணம்வரட்டும் என்ற தனக்குள்ள வரத்தின் பெருமையைக் காட்டவேண்டி பீஷ்மர் உத்தராயணத்தை எதிர்பார்த்ததாக ஏற்படுவதாலும், வித்யைக்குப் பலன் நிஸ்சிதமாக ஏற்படுவதுதான் பொருந்துமாதலாலும் தக்ஷிணாயனத்தில் மரித்தபோதிலும் உபாஸகன் உபாஸனையின் பலனை அடையவே அடைகிறான் என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—ஆனதுபற்றியே=அதாவது:—ரஸ்மியை எதிர்பார்த்தல் பொருந்தாமையாலும், வித்யையானது அநித்யமானபலனுள்ளதாக இல்லாமையாலும், மரணத்தின் காலமானது நிஸ்சிதமாக இல்லாதிருப்பதாலும், வித்வான் தக்ஷிணாயனத்தில் மரித்தபோதிலுங்கூட வித்யையின் பலனை யடையவே அடைகிறான். உத்தராயணத்தில் மரிப்பது சிறப்புடையது என்ற ப்ரஸித்தியிருப்பதைக் கொண்டும் பீஷ்மர் அதை எதிர்பார்த்திருப்பதைக் கொண்டும் "சுக்லபக்ஷத்தினின்றும் சூரியன் எந்த ஆறுமாதங்களில் உத்தராயணத்தை யடைகின்றானோ அந்த மாஸங்களையும்" என ஸ்ருதியிருப்பதைக் கொண்டும் உத்தராயணமானது எதிர்பார்க்கக் கூடியதே என்ற இந்த ஆசங்கையை இந்த ஸூத்திரத்தினால் போக்குகிறார். உத்தராயணம் சிறந்தது என்ற ப்ரஸித்தியானது அவித்வானை (உபாஸனை செய்யாதவனை) விஷயமாகக் கொண்டது. பீஷ்மர் அதை எதிர்பார்த்ததானது அத்தகைய ஆசாரத்தைக் காக்கவேண்டியும், பிதிருக்களின் ப்ரஸாதத்தால் கிடைத்த ஸ்வச்சந்தமான (தானிச்சிக்கும் பொழுது கிடைக்கக்கூடியதான) மரணமுள்ளவராயிருத்தலை வெளிப்படுத்தவேண்டியுமாம். சுருதியின் பொருளையோ "ஆதிவாஹிகாஸ்தல்லிங்காத்" என்றதால் சொல்லவும் போகிறார். (12) (எ—று)

ननु च—'यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः। प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ' (गी० ८। २३) इति कालप्राधान्येनोपक्रम्याहरादिकालविशेषः स्मृतावपुनरावृत्तये नियमितः कथं रात्रौ दक्षिणायने वा प्रयातोऽनावृत्तिं यायादिति। अत्रोच्यते—

योगिनः प्रति च स्मर्यते स्मार्ते चैते ॥ २१ ॥

योगिनः प्रति चायमहरादिकालविनियोगोऽनावृत्तये स्मर्यते। स्मार्ते चैते योगसाङ्ख्ये न श्रौते। अतो विषयभेदात्प्रमाणविशेषाच्च नास्य स्मार्तस्य कालविनियोगस्य श्रौतेषु विज्ञानेष्ववतारः। ननु—'अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम्'। 'धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम्' (गी० ८। २४। २५) इति च श्रौतावेतौ देवयान-

---

அவதாரிகாபாஷ்யம்.—சங்கை—ஹேபரதர்ஷப! எந்தக் காலத்தில் மரணத்தை யடைந்தயோகிகள் அனுவிருத்தியையும், ஆவிருத்தியையும், அடைகின்றனரோ அந்தக் காலத்தைச் சொல்லுகிறேன்" எனக் காலத்தை ப்ரதானமாகக் கொண்டு உபதேசிக்கத் தொடங்கி ஸ்மிருதியில் அஹராதிகாலவிசேஷமானது அபுனராவிருத்தியையும் பொருட்டு (முக்தியையும் பொருட்டு) கட்டாயப் படுத்தப்பட்டிருக்கிறது. இவ்விதமிருக்க ராத்திரியிலோ தக்ஷிணாயனத்திலோ மரித்தவன் அனுவிருத்தியை எவ்விதம் அடையக்கூடும் எனின்?

உத்தரம்—அவ்விஷயத்தில் பதில் சொல்லப்படுகிறது—

(ஸூ) யோகிநः ப்ரதி ச ஸ்மர்யதே ஸ்மார்த்தே ச ஏதே (21)

(ப-ரை) **योगिनः प्रति च** (யோகிநः ப்ரதி ச)=யோகிகளைக் குறித்து இந்த அஹராதிகாலவிநியோகமானது **स्मर्यते** (ஸ்மர்யதே)=ஸ்மிருதியில் சொல்லப்படுகிறது. **एते** (ஏதே)=இங்குசொல்லிய யோகஸாங்கியங்கள் **स्मार्तेच** (ஸ்மார்த்தேச)=ஸ்மிருதியில் சொல்லப்பட்டனவாகும். (21) (எ-று)

பாஷ்யம்.—யோகிகளைக்குறித்து இந்த அஹராதிகாலவிநியோகமானது அனுவிருத்தியையும் பொருட்டு ஸ்மிருதியில் சொல்லப்படுகிறது. இவை ஸ்மிருதியில் சொல்லப்பட்ட † யோகஸாங்கியங்களே யொழிய் சுருதியில் சொல்லப்பட்டனவன்று. ஆனதுபற்றி விஷயவேறுபாட்டினாலும் ப்ரமாண விசேஷத்தினாலும், ஸ்மிருதியில் சொல்லிய இந்தக் காலவிநியோகத்துக்குச் சுருதியிற் சொல்லிய விக்ஞானங்களில் ஸம்பந்தமேற்பட மாட்டாது.

சங்கை—ஸ்மிருதியிலுங்கூட "அக்னி: ஜ்யோதிஸ் அஹஸ் சுக்லபக்ஷம், உத்தராயணமான ஆறுமாஸங்கள்" என்றும், "தூமம் ராத்ரி அதுபோல கிருஷ்ண பக்ஷம் தக்ஷிணாயனமான ஆறுமாஸங்கள்" என்றுமாக சுருதியில் சொல்லப்பட்ட தேவயான பிதிருயான மார்க்கங்களே நினைவூட்டப்படுகின்றனவன்றோ எனின்?

---

† பகவதாராதனபுத்தியுடன் அனுஷ்டிக்கப்பட்ட கர்மம் யோகமென்றும், தாரணையை முன்னிட்ட அகர்த்திருத்வானுபவம் ஸாங்கியமென்றும் சொல்லப்படும்.

पितृयाणौ प्रत्यभिज्ञायेते स्मृतावपीति। उच्यते—'तं कालं वक्ष्यामि' (गी० ८। २३) इति स्मृतौ कालप्रतिज्ञानाद्विरोधमाशङ्क्य परिहार उक्तः। यदा पुनः स्मृतावप्यग्न्याद्या देवता एवातिवाहिक्यो गृह्यन्ते तदा न कश्चिद्विरोध इति ॥ २१ ॥

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छङ्करभगवतः कृतौ शारीरक-मीमांसाभाष्ये चतुर्थाध्यायस्य द्वितीयः पादः ॥ २ ॥



## चतुर्थाऽध्याये तृतीयः पादः।

[अत्र पादे सगुणविद्यावतो मृतस्योत्तरमार्गाभिधानम्]

### १ अर्चिराद्यधिकरणम्। सू० १

### अर्चिरादिना तत्प्रथितेः ॥ १ ॥

---

உத்தரம்—சொல்லப்படுகிறது—"அந்தக் காலத்தைச் சொல்லப்போகிறேன்" என ஸ்மிருதியில் காலப்ரதிக்ஞை செய்திருப்பதைக் கொண்டு விரோதத்தை ஆசங்கித்துப் பரிஹாரமானது சொல்லப்பட்டது. ஸ்மிருதியிலுங்கூட அக்னியாதிகளான ஆதிவாஹிக தேவதைகளே கிரஹிக்கப்படுவாராயின் விரோதமெதுவுமில்லை. (21) (எ-று)

பதினொன்றுவது தக்ஷிணாயனாதிகரணம் முற்றிற்று.

இவ்விதம் ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்யர்களான ஸ்ரீமச்சங்கர பகவத்பாதர் அவர்களின் கிருதியான சாரீரகமீமாம்ஸாபாஷ்யத்தில் நான்காவது அத்தியாயத்தின் இரண்டாவதுபாதம் முற்றிற்று.



## நான்காவது அத்தியாயத்தின் மூன்றுவதுபாதம்.

### அர்ச்சிராதி அதிகரணம் 1.

(அ-கை) இரண்டாவதுபாதத்தினுல் ஜீவனது உத்க்ராந்தியை உபதேசித்துப் பின்னர் ஜீவன் செல்லும் மார்க்கத்தை யுபதேசிக்கவேண்டி இந்த மூன்றுவது பாதம் ஆரம்பிக்கப்படுகிறது. இதில் 16ஸூத்திரங்கள் கொண்ட 6அதிகரணங்கள் அடங்கியிருக்கின்றன. அவற்றுள் ஒரேஸூத்திரமுள்ள முதலாவது அதிகரணத்தில் அர்ச்சிஸ்ஸை (அர்ச்சிஸ்ஸுக்கு அபிமானிதேவதையை) ஆதியாகக் கொண்ட மார்க்கமானது உபதேசிக்கப்படுகிறது. அந்த முதலாவது ஸூத்திரம் பின்வருமாறு—

**(ஸூ) அர்ச்சிராதிநா தத்ப்ரதிதே: (1)**

(ப-ரை) **अर्चिरादिना** (அர்ச்சிராதிநா)=ஸகுணப்ரம்ஹத்தை யடைய வேண்டிச் செல்லும் எல்லாவுபாஸகர்களும் அர்ச்சிஸ்ஸை=அர்ச்சிரபிமானிதேவதையை

नानाविधो ब्रह्मलोकमार्गो यद्वार्चिरादिकः । नानाविधः स्याद्विद्यासु दर्शनादन्यथाऽन्यथा ॥ १ ॥

एक एवार्चिरादिः स्यान्नानाश्रुत्युक्तपर्वकः । यतः पञ्चाग्निविद्यायां विद्यान्तरवतां श्रुतः ॥ २ ॥

**आसृत्युपक्रमात्समानोत्क्रान्तिरित्युक्तम् । सृतिस्तु श्रुत्यन्तरेष्वनेकधा श्रूयते । नाडीरश्मिसंबन्धेनैका 'अथैतैरेव रश्मिभिरूर्ध्व आक्रमते' (छा० ८ । ६ । ५) इति । अर्चिरादिकैका 'तेऽर्चिषमभिसंभवन्त्यर्चिषोऽहः' (बृ० ६ । २ । १५) इति । 'स एतं देवयानं पन्थानमासाद्याग्निलोकमागच्छति' (कौ० १ । ३) इत्यन्या । यदा वै पुरुषोऽस्माल्लोकात्प्रैति स वायुमागच्छति' (बृ० ५ । १० । १) इत्यपरा । 'सूर्यद्वारेण ते विरजाः प्रयान्ति' (मुण्ड० १ । २ । ११) इति चापरा । तत्र संशयः—किं परस्परं भिन्ना एताः सृतयः किं वैकैवानेकविशेषणेति । तत्र प्राप्तं तावद्भिन्ना एताः सृतय इति । भिन्नप्रकरणत्वात् ।**

---

ஆதியாகக் கொண்டவழியினாலேயே செல்லுகின்றனர் என்று சொல்லுகிறோம். ஏன்? **तत्प्रथितेः** (தத்ப்ரதிதே:)=எல்லாஸகுணப்ரம்ஹோபாஸகர்களுக்கும் இந்த மார்க்கம் ப்ரஸித்தமாகவிருப்பதே அதன் காரணமாகும். (1) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) ப்ரம்ஹலோகமார்க்கமானது பலவிதமானதா? அல்லது அர்ச்சிஸ்ஸை ஆதியாகக் கொண்ட ஒன்றேதானா? என்பது ஸந்தேஹம். வித்யை (உபாஸனங்) களில் வெவ்வேறுவிதமாக வர்ணிக்கப்பட்டிருப்பதால் பற்பலவிதமாகவேதான் மார்க்கம் ஏற்படுகிறது என்பது பூர்வபக்ஷம். பல்வேறுபட்ட சுருதிகளாற் சொல்லப்பட்ட பர்வத்தை (நடுவிலுள்ள விடத்தை) யுடைய அர்ச்சிராதி மார்க்கம் ஒன்றேதானாகும். பஞ்சாக்னி வித்யையில் வேறுவித்யாவான்களுக்கு அவ்விதம் சொல்லப்பட்டிருப்பதே அதன் காரணமாகும் என்பது ஸித்தாந்தம்.

**பாஷ்யம்.**—மார்க்க மாரம்பிக்கும்வரை வித்வான் அவித்வான் இருவர்க்கும் உத்க்ராந்தியானது ஸமானம் எனச் சொல்லப்பட்டது. மார்க்கமோ வேறுசுருதிகளில் பற்பலவிதமாகச் சொல்லப்படுகிறது. அதாவது:—"பின்னர் இதே ரச்மிகளினாலேயே உயரக்கிளம்புகிறான்" என்பதாய் நாடீரச்மி ஸம்பந்தத்துடன் ஒன்றும், "அவர்கள் (உபாஸகர்கள்) அர்ச்சிஸ்ஸை யடைகின்றனர். அர்ச்சிஸ்ஸினின்றும் அஹஸ்ஸை யடைகின்றனர்" என்பதாய் அர்ச்சிஸ்ஸை ஆதியாகக் கொண்ட மற்றொன்றும், "அவன் இந்தத் தேவயான மார்க்கத்தை யடைந்து அக்னிலோகத்தை யடைகிறான்" என்பதாய் மற்றொன்றும், "எதுபோழ்து உபாஸக புருஷன் இந்தச் சரீரத்தினின்றும் வெளிக்கிளம்புகிறானோ அவன் வாயுலோகத்தை யடைகிறான்" என்பதாய் ஒன்றும், "ஸூரியனுடைய துவாரத்தினால் விரஜர்களான அவர்கள் செல்லுகின்றனர்" என்பதாய் வேறு ஒன்றுமாகக் காணப்படுகிறது என்றும். அவ்விஷயத்தில் ஸம்சயமுதயமாகிறது. அதாவது:—இந்தமார்க்கங்கள் ஒன்றுக்கொன்று வேறுபட்டனவா? அல்லது ஒன்றே அனேகம் விசேஷங்களுடன் (பர்வாக்களுடன்) கூடினதா? என்றும். அவ்விஷயத்தில் முதலில் கிடைப்பதாவது இந்த மார்க்கங்கள் வேறுபட்டனவே என்றும். வேறுப்ரகர

भिन्नोपासनाशेषत्वाच्च । अपि च 'अथैतैरेव रश्मिभिः' (छां० ८ । ६ । ५) इत्यवधारणमर्चिराद्यपेक्षायामुपरुध्येत । त्वरावचनं च पीडयेत 'स यावत्क्षिप्येन्मनस्तावदादित्यं गच्छति' (छां० ८ । ६ । ५) इति । तस्मादन्योन्यभिन्ना एवैते पन्थान इति । एवं प्राप्तेऽभिदध्महे—अर्चिरादिनेति । सर्वो ब्रह्मप्रेप्सुरर्चिरादिनैवाध्वना रंहतीति प्रतिजानीमहे । कुतः—तत्प्रथितेः । प्रथितो ह्येष मार्गः सर्वेषां विदुषाम् । तथाहि पञ्चाग्निविद्याप्रकरणे 'येऽचामी अरण्ये श्रद्धां सत्यमुपासते' (बृ० ६ । २ । १५) इति विद्यान्तरशीलिनामप्यर्चिरादिका सृतिः श्राव्यते । स्यादेतत् । यासु विद्यासु न काचिद्गतिरुच्यते तास्वियमर्चिरादिकोपतिष्ठतां यासु त्वन्या श्राव्यते तासु किमित्यर्चिराद्याश्रयणमिति । अत्रोच्यते—भवेदेतदेवं यद्यत्यन्तभिन्ना एवैताः सृतयः स्युः । एकैव त्वेषा सृतिरनेकविशेषणा ब्रह्मलोकप्रपदनी क्वचित्केनचिद्विशेषणेनोपलक्षितेति वदामः । सर्वत्रैकदेशप्रत्यभिज्ञानादितरे-

---

ணத்தில் படிக்கப்பட்டிருப்பதும், வேறுஉபாஸனங்களுக்கு அங்கங்களாக இருப்பதுமே அதன் காரணமாகும்.

மேலும் "பிறகு இந்த ரஸ்மிகளுடன் மட்டுமே" என்பதாய் தேற்றங்கொடுத்துக் கூறினது அர்ச்சிராதிகளின் அபேக்ஷை கூறும் பக்ஷத்தில் வீணுகிவிடும். "எதற்குள் மனதானது செல்லுமோ அதற்குள் ஆதித்யனை யடைகிறுன்" என்பதாய் த்வரையை (வேகத்தை) ச் சொல்லும் வசனமும் வீணுகிவிடும். ஆகவே இந்தவழிகள் ஒன்றுடனென்று வேறுபட்டனவே தானுகும். என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்த்தமாகவே "அர்ச்சிராதினு" என்றதனுல் ஸித்தாந்தத்தைச் சொல்லுகிறோம். ப்ரம்ஹத்தை யடையவிரும்பும் எல்லோரும் அர்ச்சிஸ்ஸை ஆதியாகவுடைய மார்க்கத்தினுலேயே செல்லுகின்றனர் எனப்ரதிக்ஞை செய்கின்றோம். ஏன்? அதன் ப்ரஸித்தி யிருப்பதால் என்க. எல்லாவுபாஸகர்களுக்கும் இந்த மார்க்கமானது ப்ரஸித்தமாகவன்றோ இருக்கின்றது. அதாவது:— பஞ்சாக்னி வித்யாப்ரகரணத்தில் "யாதொரு இவர் அரண்யத்தில் ஶ்ரத்தையுடன் கூடினவர்களாய் ஸத்யத்தை (ஹிரண்யகர்ப்பனை) உபாஸிக்கின்றனரோ" என்பதாய் வேறு உபாஸனப்பழக்கமுள்ளவர்க்குங்கூட அர்ச்சிஸ்ஸை ஆதியாகக் கொண்ட மார்க்கமானது சொல்லப்படுகிறது.

சங்கை—இஃதிருக்கட்டும். எந்த வித்யைகளில் ஒருவிதமான மார்க்கமும் சொல்லப்படவில்லையோ அந்த உபாஸனங்களில் இந்த அர்ச்சிராதியான மார்க்கமானது வரட்டும், எந்த உபாஸனங்களில் வேறுமார்க்கமானது. சொல்லப்படுகிறதோ அவற்றில் அர்ச்சிராதி மார்க்காஶ்ரயணம் எதற்கு எனின்?

உத்தரம்—இவ்விஷயத்தில் சொல்லப்படுகிறது. இந்த மார்க்கங்கள் ஒன்றுக்கொன்று முற்றிலும் வேறுபட்டனவாக இருக்குமாயின் இது இவ்விதமிருக்கலாம் தான். ஒன்றுகவே உள்ள இந்த மார்க்கமானது அனேகம் விசேஷணமுள்ளதாக ப்ரம்ஹலோகத்தை யடைவிக்கிறது. சிலவிடத்தில் ஒருவிசேஷணத்துடன் மட்டும் சொல்லப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறோம். (பொதுவாக) எல்லா

तरविशेषणविशेष्यभावोपपत्तेः । प्रकरणभेदेऽपि हि विद्यैकत्वे भवतीतरेतरविशेषणोपसंहारवद्गतिविशेषणानामप्युपसंहारः । विद्याभेदेऽपि तु गत्येकदेशप्रत्यभिज्ञानाद्गन्तव्याभेदाच्च गत्यभेद एव । तथाहि 'ते तेषु ब्रह्मलोकेषु पराः परावतो वसन्ति' (बृ० ६।२।१५), 'तस्मिन्वसन्ति शाश्वतीः समाः' (बृ० ५।१०।१), 'सा या ब्रह्मणो जितिर्या व्युष्टिस्तां जितिं जयति तां व्युष्टिं व्यश्नुते' (कौषी० १।४), 'तद्य एवैतं ब्रह्मलोकं ब्रह्मचर्येणानुविन्दति' (छा० ८।४।३) इति च तत्र तत्र तदेवैकं फलं ब्रह्मलोकप्राप्तिलक्षणं प्रदर्श्यते । यत्त्वेतैरेवेत्यवधारणमर्चिराद्याश्रयणे न स्यादिति । नैष दोषः । रश्मिप्राप्तिपरत्वादस्य । नह्येक एव शब्दो रश्मींश्च प्रापयितुमर्हत्यर्चिरादींश्च व्यावर्तयितुम् । तस्माद्रश्मिसंबन्ध एवायमवधार्यत इति द्रष्टव्यम् । त्वरावचनं त्वर्चिराद्यपेक्षायामपि गन्तव्यान्तरापेक्षया शैघ्र्यार्थत्वान्नोपरुध्यते । यथा निमेषमात्रेणात्रागम्यत इति । अपिच

---

விடத்திலுமே ஏகதேசத்துக்கு=யாதோவொன்றுக்கு, ப்ரத்யபிக்ஞை=அதுதானிது என்ற தோற்றம், ஏற்படுவதிலிருந்து ஒன்றுக்கொன்று விசேஷண விசேஷ்யத் தன்மை கொள்ளுவதுதான் பொருந்தக்கூடியதாக வாகிறது. ப்ரகரணம் வேறுபடினுங்கூட வித்யை (உபாஸனம்) ஒன்ருக இருக்குமாயின் அந்தந்த விசேஷணங்களுக்கு (குணங்களுக்கு) உபஸம்ஹாரம் சொல்லியிருப்பதுபோல கதியைப்பற்றிய விசேஷணங்களுக்கும் உபஸம்ஹாரம் சொல்லுவதுதான் பொருந்துகிறது. வித்யை வேறுபடுமிடத்திலோ வெனில் மார்க்கத்தின் ஏகதேசத்துக்கு (சிலவற்றுக்கு) ப்ரத்யபிக்ஞை (ஐக்யக்ஞானம்) இருப்பதைக்கொண்டும், போகவேண்டிய இடம் ஒன்ருக விருப்பதைக்கொண்டும் கதியானது ஒன்ருகவே தாகும். அதாவது:—"அவர்கள் நீண்ட ஆயுளை யுடைய ஹிரண்யகர்ப்பருடைய நீண்டவர்ஷங்கள் முழுதும் அந்த ப்ரம்ஹலோகங்களில் வஸிக்கின்றனர்" என்றும், "அந்த லோகத்தில் வெகுவருஷங்கள் வஸிக்கின்றனர்" என்றும், "ஹிரண்யகர்ப்பருடைய எல்லாவற்றிலுமுள்ள யாதொரு அந்த ஜயமுண்டோ, யாதொரு வியாப்தி (நிறைவுபெறல்) உண்டோ. அந்த ஜயத்தையும் அந்த வ்யாப்த்தியையும் அனுபவிக்கிருன்" என்றும், "ஆகவே எவர் இந்த ப்ரம்ஹலோகத்தை ப்ரம்ஹசர்யத்திஞல் அடைகின்றனரோ" என்றுமாக அந்தந்த விடங்களிலும் ப்ரம்ஹ ப்ராப்த்தி ரூபமான அந்த ஒரேபலனே காண்பிக்கப்படுகிறது. "இதே ரஸ்மிகளிஞல்" என்ற விடத்தில் அவதாரணம் (தேற்றம்) கொடுத்தது அர்ச்சிராதிகளை ஆஸ்ரயித்தால் பொருந்தாது எனயாதொன்று சொல்லப்பட்டதோ இதுதோஷமாகாது. இந்த அவதாரண (தேற்ற) மானது ரஸ்மியின் ப்ராப்த்தியைக் கூறுவதாக விருப்பதாலென்க. சுருதியில் एतैरेव (ஏதைரேவ) என்றவிடத்திலுள்ள ஏவ என்ற ஒரே சப்தமானது ரஸ்மிகளை யடையவிப்பதற்கும், அர்ச்சிராதிகளை மறுப்பதற்கும் தகுதியுள்ளதாகவாகாதன்ருே. ஆகவே ரஸ்மியின் ஸம்பந்தம்மட்டுமேதான் ஏவ என்றதால் அவதாரணம் (உறுதி) செய்யப்படுகிறது எனக் கண்டுகொள்ளவேண்டும். ("யாவத்க்ஷிப்யேத் மன:" என்றதால் சொல்லிய) த்வரா (விரைவு கூறும்) வசனமோவெனில் அர்ச்சிராதிகளின் அபேக்ஷையிருந்தபோதிலுங்கூட செல்ல

'अथैतयोः पथोर्न कतरेणचन' (छां ५। १०। ८) इति मार्गद्वयभ्रष्टानां कष्टं तृतीयं स्थानमाचक्षाणा पितृयाणव्यतिरिक्तमेकमेव देवयानमर्चिरादिपर्वाणं पन्थानं प्रथयति। भूयांस्यर्चिरादिस्मृतौ मार्गपर्वाण्यल्पीयांसि त्वन्यत्र। भूयसां चानुगुण्येनाल्पीयसां नयनं न्याय्यमित्यतोऽप्यर्चिरादिना तत्प्रथितेरित्युक्तम् ॥ १ ॥

## २ वाय्वधिकरणम्। सू० २

## वायुमब्दादविशेषविशेषाभ्याम् ॥ २ ॥

सन्निवेशयितुं वायुरत्राशक्योथ शक्यते। न शक्यो वायुलोकस्य श्रुतक्रमविवर्जनात् ॥ १ ॥

वायुच्छिद्राद्विनिष्क्रम्य स आदित्यं व्रजेदिति। श्रुतेर्वाय्वर्ब्दवायुर्देवलोकस्ततोऽप्यधः ॥ २ ॥

---

வேண்டிய வேறென்றை யபேக்ஷித்து விரைவைக் கூறவேண்டி யேற்பட்டதாதலால் விரோதப்படுவதற்கில்லை. நிமேஷமாத்திரத்தினுல் இங்கு வரப்படுகிறது என்பதுபோலவாம். மேலும் "பிறகு இவ்விரண்டு மார்க்கங்களுள் ஒரு மார்க்கத்தினுலும் செல்லுவதில்லை" என்றதால் இரண்டு மார்க்கங்களினின்றும் நழுவினவர்களுக்கு கஷ்டமான மூன்ருவது வழியைச் சொல்லுகின்ற சுருதியானது பிதிருயானத்தைவிட வேறுபட்டதாயும் அர்ச்சிராதி பர்வங்களையுடையதாயுமுள்ள தேவயானமார்க்கம் ஒன்றென்றே தெரிவித்து மிருக்கிறது. அர்ச்சிராதிவழியில் அனேகம்மார்க்க பர்வங்களும் மற்றவழியில் குறைந்தமார்க்க பர்வங்களுமிருக்கின்றன. வெகுவாயுள்ளதை யனுஸரித்து அற்பமாயுள்ளதை நயிப்பதுதான் நியாயமானது என்ற இக்காரணம் பற்றியும் கூட "அர்ச்சிராதினா தத்ப்ரதிதே:" என்று சொல்லப்பட்டது. (1) (எ—று)

ஒன்ருவது அர்ச்சிராதிஅதிகரணம் முற்றிற்று.



## வாய்வதிகரணம் 2.

## (ஸூ) வாயுமப்தாத் அவிசேஷவிசேஷாப்யாம். (2)

(ப—ரை) **वायुम्** (வாயும்)=வாயுவை **अब्दात्** (அப்தாத்)=ஸம்வத்ஸரத்துக்குப் பிறகு படித்துக்கொள்ளவேண்டும். ஏன்? **अविशेषविशेषाभ्याम्** (அவிசேஷவிசேஷாப்யாம்)=கௌஷீதகிசுருதியில் "வாயுலோகத்தையடைகிருன்" எனப் பொதுவாகச் சொல்லப்பட்டவாயுவுக்கு ப்ருஹதாரண்யகசுருதியில் "வாயுவை யடைந்து ஆதித்யனை யடைகிருன்" என விசேஷமான உபதேசம் (ஆதித்யனுக்கு முந்திச் சேர்க்கவேண்டுமென வுபதேசம்) காணப்படுவதே அதன் காரணமாகும். (2)

### வையாஸிக நியாயமாலை.

(க—ரை) மார்க்கபர்வாவை உபதேசிக்கும் இந்த விடத்தில் வாயுவைச் சேர்க்கமுடியாதா? அல்லது சேர்க்கமுடியுமா? என்பது ஸந்தேஹம். வாயுலோகமானது சுருதியிற் சொல்லிய மார்க்கக்கிரமத்தில் விடப்பட்டிருப்பதால் வாயுவைச்

केन पुनः सन्निवेशविशेषेण गतिविशेषणानामितरेतरविशेषणविशेष्यभाव इति तदेतत्सुहृद्भूत्वाचार्यो ग्रथयति। 'स एतं देवयानं पन्थानमापद्याग्निलोकमागच्छति स वायुलोकं स वरुणलोकं स इन्द्रलोकं स प्रजापतिलोकं स ब्रह्मलोकम्' (कौ० १।३) इति कौषीतकिनां देवयानः पन्थाः पठ्यते। तत्रार्चिरग्निलोकशब्दौ तावदेकार्थौ ज्वलनवचनत्वादिति नात्र सन्निवेशक्रमः कश्चिदन्वेष्यः। वायुस्त्वर्चिरादौ वर्त्मनि न श्रुतः कतमस्मिन् स्थाने निवेशयितव्य इति। उच्यते—'तेऽर्चिषमेवाभिसंभवन्त्यर्चिषोऽहरह्न आपूर्यमाणपक्षमापूर्यमाणपक्षाद्यान्षडुदङ्ङेति मासांस्तान् मासेभ्यः संवत्सरं संवत्सरादादित्यम्' (छा० ५।१०।१,२) इत्यत्र संवत्सरात्पराञ्चमादित्यादर्वाञ्चं वायुमभिसंभवन्ति। कस्मात्। अविशेषविशेषाभ्याम्। तथाहि—'स वायुलोकम्' (कौ० १।३) इत्यत्राविशेषोपदिष्टस्य

---

சேர்த்துக்கொள்ள முடியாது என்பது பூர்வபக்ஷம். "வாயுவின் மூலம் கிடைக்கும் ஓட்டையிலிருந்து வெளிக்கிளம்பி அவன் ஆதித்யனை யடைகிறான்" என ப்ருஹதாரண்யகஶ்ருதி யிருப்பதிலிருந்து ஸூரியலோகத்துக்கு முந்தி வாயுலோகத்தையும், வாயுவுக்குமுன் தேவலோகத்தையும் சேர்த்துக் கொள்ளுவதுதான் பொருந்தும் என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்—எத்தகைய அமைப்பு முறையை யொட்டி மார்க்கபர்வாக்களுக்கு ஒன்றுக்கொன்றுக்கு விசேஷண விசேஷ்யத்தன்மையானது (ஒன்றுக்குப் பிறகு மற்றொன்று இருப்பதாகக் கொள்ளுவதானது) ஏற்படுகிறது என்பதை ஆசிரியர் மித்திரன் முறையிலிருந்து உபதேசிக்கிறார். கௌஷீதகிகளின் உபநிடதத்தில் "அந்த உபாஸகன் இந்தத் தேவயானமார்க்கத்தை யடைந்து அக்னிலோகத்துக்கு வருகிறான். அவன் வாயுலோகத்தையும், அவன் வருணலோகத்தையும், அவன் இந்திரலோகத்தையும், அவன் ப்ராஜாபதிலோகத்தையும், அவன் ப்ரம்ஹலோகத்தையும், அடைகிறான்" என்றதால் தேவயானமார்க்கமானது படிக்கப்படுகிறது. அவ்விடத்திலுள்ள அர்ச்சிஸ் என்றும் அக்னிலோகம் என்றுமான இரண்டு சப்தங்களும் ஒரே பொருளுள்ளனவாகும். இரண்டும் ஜ்வலனத்தைச் சொல்லும் வசனமாக இருப்பதுபற்றி இவ்விஷயத்தில் ஸன்னிவேசத்தின் (அமைப்பின்) கிரமம்=முறை, ஒன்றும் அபேக்ஷிக்கப் படுவதில்லை. அர்ச்சிராதி மார்க்கத்திலோ வாயுசொல்லப்படாததுபற்றி அதை எந்தஸ்தானத்தில் வைக்கவேண்டும். எனின்? சொல்லப்படுகிறது. "அவர்கள் அர்ச்சிஸ்ஸையே அடைகின்றனர் அர்ச்சிஸ்ஸிலிருந்து அஹஸ்ஸையும், அஹஸ்ஸிலிருந்து சுக்லபக்ஷத்தையும், சுக்லபக்ஷத்திலிருந்து எந்த ஆறுமாதங்கள் முழுதும் வடக்கில் சூரியன் ஸஞ்சரிக்கின்றானோ அந்த ஆறுமாதங்களையும் (அதாவது உத்தராயணத்தையும்) மாதங்களிலிருந்து ஸம்வத்ஸரத்தையும், ஸம்வத்ஸரத்திலிருந்து ஆதித்யனையும் அடைகிறான்" என்ற இந்த விடத்தில் ஸம்வத்ஸரத்துக்கு மேலும் ஆதித்யனுக்கு முந்தியும் உள்ள வாயுவை அடைகின்றனர் என்றேற்படுகிறது. என்? பொதுவாகவும் தனியாகவும் உபதேசமிருப்பதாலென்க. அதாவது:—கௌஷீதகி உபநிடதத்தில் "அவன் வாயுலோகத்தை (யடைகிறான்)" என்றவிடத்தில் பொதுவாக வுபதேசிக்கப்பட்ட வாயுவு

वायोः श्रुत्यन्तरे विशेषोपदेशो दृश्यते 'यदा वै पुरुषोऽस्माल्लोकात्प्रैति स वायुमागच्छति तस्मै स तत्र विजिहीते यथा रथचक्रस्य खं तेन स ऊर्ध्वमाक्रमते स आदित्यमागच्छति' (बृ० ५। १०। १) इति। एतस्मादादित्याद्वायोः पूर्वत्वदर्शनाद्विशेषादब्दादित्ययोरन्तराले वायुर्निवेशयितव्यः। कस्मात्पुनरग्नेः परत्वदर्शनाद्विशेषादर्चिषोऽनन्तरं वायुर्न निवेश्यते। नैषोऽस्ति विशेष इति वदामः। ननूदाहृता श्रुतिः—'स एतं देवयानं पन्थानमापद्याग्निलोकमागच्छति स वायुलोकं स वरुणलोकम्' (कौषी० १। ३) इति। उच्यते—केवलोऽत्र पाठः पौर्वापर्येणावस्थितो नात्र क्रमवचनः कश्चिच्छब्दोऽस्ति। पदार्थोपदर्शनमात्रं ह्यत्र क्रियते एतमेतं चागच्छतीति। इतरत्र पुनर्वायुप्रत्तेन रथचक्रमात्रेण छिद्रेणोर्ध्वमाक्रम्यादित्यमागच्छतीत्यवगम्यते क्रमः। तस्मात्सूक्तमविशेषविशेषाभ्यामिति। वाजसनेयिनस्तु 'मासेभ्यो देवलोकं देवलोकादादित्यम्' (बृ० ६। २। १५) इति समामनन्ति। तत्रादि-

---

க்கு வேறுசுருதியில் "எப்பொழுது புருஷன் இந்தச் சரீரத்தினின்றும் வெளிக் கிளப்புகிறனே அப்பொழுது அவன் வாயுவை அடைகிறான், அச்சமயத்தில் அந்த வாயு தேரிலுள்ள சக்கிரத்தினது இடைவெளிபோலவிரிந்து கொடுக்கிறது அவன் அவ்வழியினல் உயரக்கிளப்பி ஆதித்யனை அடைகிறான்" என விசேஷமானது உபதேசிக்கப் பட்டிருக்கிறது. வாயுவுக்கு இங்குள்ள ஆதித்யனைக் காட்டிலும் முன்னிருத்தல் என்ற விசேஷம் காணப்படுவதைக்கொண்டு ஸம்வத்ஸரத்துக்கும் ஆதித்யனுக்கும் இடையில் வாயுவை வைக்கவேண்டுவதாக வாகிறது. அக்னி யைக்காட்டிலும் பரத்துவம் (மேலுள்ளதாகவிருத்தல்) என்ற விசேஷமானது காணப்படுவதைக் கொண்டு அர்ச்சிஸ்ஸுக்கு அடுத்தபடியாக வாயு ஏன் வைக்கப் படுவதில்லை. எனின்? இது விசேஷமாகவாகாதெனச் சொல்லுகிறோம்.

சங்கை—"அவன் இந்தத்தேவயானமார்க்கத்தை அடைந்து அக்னிலோகத் தையடைகிறான் அவன் வாயுலோகத்தையடைகிறான். அவன் வருணலோகத்தை யடைகிறான்" என ஶ்ருதியானது உதாஹரிக்க (எடுத்துக்காட்ட) ப்பட்டதன்றோ எனின்?

உத்தரம்—இவ்விஷயத்தில் பதில் சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் முன்னது பின்னதாகவுள்ள கேவலபாடம் மட்டும் காணப்படுகிறதே யொழிய இதற்குப் பிறகு இது எனக் கிரமத்தைச் சொல்லும் சப்தமொன்றும் காணப்படவில்லை. இதை இதை யடைகிறான் என்பதாய் பதார்த்தங்கள் (அடையும் பொருள்) மட்டும் காண்பிக்கப்படுகிறது. வேறிடத்திலோ வெனில் வாயுவினல் கொடுக்கப்பட்ட தேரின் சக்கிரவடிவமான ஓட்டையினல் உயரத்திலுள்ளதை யடைந்து அங்கிருந்து ஆதித்யனை யடைகிறான் என்பதாய் கிரமமானது அறியப்படுகிறது. ஆகவே ஸூத்திரத்தில் "அவிசேஷ விசேஷாப்யாம்" என்று சொன்னது மிக்கப்பொருத்தமானதே யாகும். வாஜஸநேயிகளோ "மாஸங்களினின்றும் தேவலோகத்தையும், தேவலோகத்தினின்றும் ஆதித்யனையும் அடைகிறான்" எனப்படிக்கின்றனர். அவ்விடத்தில் ஆதித்யனுக்கடுத்து வரவேண்டுவதற்காக தேவலோகத்தினின்றும் வாயுவையடைகின்றனர் என்றேற்படுகிறது. (ஸூத்திரத்தில்) "வாயும் அப்தாத்"

स्यानन्तर्याय देवलोकाद्वायुमभिसंभवेयुः। वायुमब्दादिति तु छन्दोगश्रुत्यपेक्षयोक्तम्। छान्दोग्यवाजसनेयकयोस्त्वेकत्र देवलोको न विद्यते परत्र संवत्सरः। तत्र श्रुतिद्वयप्रत्ययादुभावप्युभयत्र ग्रथयितव्यौ। तत्रापि माससंबन्धात्संवत्सरः पूर्वः पश्चिमो देवलोक इति विवेक्तव्यम् ॥ २ ॥

## ३ तडिदधिकरणम्। सू० ३

## तडितोऽधि वरुणः संबन्धात् ॥ ३ ॥

वरुणादेस्सन्निवेशो नास्ति तत्राथ विद्यते। नास्ति वायोरिवैतस्य व्यवस्था श्रुत्यभावतः ॥ १ ॥

विद्युत्संबन्धिवृष्टिस्थनीरस्याधिपतित्वतः। वरुणो विद्युतस्तूर्ध्वं तत इन्द्रप्रजापती ॥ २ ॥

'आदित्याच्चन्द्रमसं चन्द्रमसो विद्युतम्' (छा० ४।१५।५) इत्यस्या विद्युत

---

என்றதோவெனில் சாந்தோக்யச்ருதியை யொட்டிக் கூறப்பட்டதாகும். சாந்தோக்கியம் வாஜஸநேயகம் இவ்விரண்டனுள் ஒன்றில் தேவலோகம் சொல்லப்படவில்லை. மற்ருென்றில் ஸம்வத்ஸரம் சொல்லப்படவில்லை. அவ்விடத்தில் இரண்டுச்ருதிகளுக்கு முள்ள ப்ராமாண்யத்தைமுன்னிட்டு தேவலோகம் ஸம்வத்ஸரம் ஆகிய இரண்டையும் இரண்டிடத்திலும் சேர்க்கவேண்டுவதாகவே யாகிறது. அதிலும் மாஸத்தின் ஸம்பந்தமிருப்பதைக் கொண்டு முதலில் ஸம்வத்ஸரமும் பிறகு தேவலோகமுமெனப் பிரித்துச் சேர்த்துக் கொள்ளவேண்டும். (1)

இரண்டாவது வாய்வதிகரணம் முற்றிற்று.



## தடித் அதிகரணம் 3.

### (ஸூ) தடிதோ அதிவருணः ஸம்பந்தாத் (3)

(ப—ரை) तडितः (தடிதः)=மின்னலுக்கு अधि (அதி)=மேலே वरुणः (வருணः)= வருணலோகமானது சேர்க்கப்படவேண்டும். ஏன்? संबन्धात् (ஸம்பந்தாத்)= மின்னலுக்கும் வருணனுக்கும் ஸம்பந்தமிருப்பதாலென்க. (3)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) வருணுதிகளுக்கு இந்த மார்க்கத்தில் சேர்க்கை இல்லையா? அல்லது உண்டா? என்பது ஸந்தேஹம். வாயுவைச்சேர்த்துக் கொள்ளுவதில் போல இந்தவருணனைச் சேர்ப்பதில் வியவஸ்தையைச்செய்யக்கூடிய சுருதியில்லாதிருப்பதால் வருணனுக்கு இந்த மார்க்கத்தில் ஸம்பந்தம் கிடையாது என்பது பூர்வபக்ஷம். மின்னலின் ஸம்பந்தம் பெற்ற மழையிலிருக்கின்ற ஜலத்துக்கு வருணன் அதிபதியாக இருப்பதுபற்றி வருணனை மின்னலுக்கு அடுத்தபடியாகவும், வருணனுக்கு அடுத்தபடியாக இந்திரன் ப்ரஜாபதி இவர்களையும் சேர்த்துப் பொருள் காணவேண்டும் என்பதுஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—"ஆதித்யனிடமிருந்து சந்திரனையும் சந்திரனிடமிருந்து மின்னலையும் அடைகிறுன்" என்ற விடத்தில் இந்த மின்னலுக்கு மேலே அந்த

उपरिष्टात्स वरुणलोकमित्ययं वरुणः संबध्यते। अस्ति हि संबन्धो विद्युद्वरुणयोः। यदा हि विशाला विद्युतस्तीव्रस्तनितनिर्घोषा जीमूतोदरेषु प्रनृत्यन्त्यथापः प्रपतन्ति। "विद्योतते स्तनयति वर्षिष्यति वा' (छा० ७। ११। १) इति च ब्राह्मणम्। अपां चाधिपतिर्वरुण इति श्रुतिस्मृतिप्रसिद्धिः। वरुणादधीन्द्रप्रजापती स्थानान्तराभावात्पाठसामर्थ्याच्च। आगन्तुकत्वादपि वरुणादीनामन्त एव निवेशो वैशेषिकस्थानाभावाद्विद्युच्चान्त्यार्चिरादौ वर्त्मनि ॥ ३ ॥

## ४ आतिवाहिकाधिकरणम्। सू० ४–६

## आतिवाहिकास्तल्लिङ्गात् ॥ ४ ॥

मार्गचिह्नं भोगभूर्वा नेतारो वाऽर्चिरादयः। आद्यौ स्यातां मार्गचिह्नसारूप्याल्लोकशब्दतः ॥ १ ॥

अन्ते गमयतीत्युक्तेर्नेतारस्तेषु चेद्दशः। निर्देशोऽस्त्यत्र लोकाख्या तन्निवासिजनान् प्रति ॥ २ ॥

---

வருணனை யடைகிறான் என வருணன் சேர்த்துக்கொள்ளப்படுகிறான். மின்னலுக்கும் வருணனுக்கும் ஸம்பந்தமிருப்பது பிரஸித்தமன்றோ. எதுபோழ்து விசாலமான மின்னல்கள் கடுமையான இடிமுழக்கமுள்ளனவாய் மேகத்தின் வயிறுகளில் நடமாடுகின்றனவோ அதுபோழ்து ஜலம் விழுகின்றது. "மின்னுகிறது. இடி முழக்கங்காட்டுகிறது. அப்பொழுது மழையும் பொழிகிறது" என சுருதியுமிருக்கிறது. ஜலத்துக்கு வருணன் அதிபதி என்பது ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் ப்ரஸித்தமாகவு மிருக்கிறது. வருணனுக்கு அடுத்து இந்திரன் ப்ரஜாபதி இவர்கள் சேர்த்துக் கொள்ளத்தக்கவர். அவர்களுக்கு வேறுஸ்தானமில்லாமையும் அவர்கள் சுருதியில் படிக்கப்பட்டிருப்பதுமே அதன் காரணமாகும். வருணாதிகளுக்கு ஆகந்துகத்துவம் (வேறிடத்திலுள்ளதை இங்குசேர்த்துக்கொள்ளுதல்) இருப்பதையொட்டி முடிவிலேயே அவற்றுக்கு நிவேசம்(ஸம்பந்தம்)ஏற்படுகிறது. தனித்த ஸ்தானம் சொல்லப்படாதிருப்பதுபற்றி மின்னலும் அர்ச்சிராதிமார்க்கத்தில் முடிவிலுள்ளதாகவே தானாகும். (3)

மூன்றாவது தடித் அதிகரணம் முற்றிற்று.

## ஆதிவாஹிகாதிகரணம் 4.

## (ஸூ) ஆதிவாஹிகாஸ்தல்லிங்காத் (4)

(பட்ரை) அர்ச்சிஸ் தொடங்கி வித்யுத்தை முடிவாகக்கொண்டவைகள் **आतिवाहिकाः** (ஆதிவாஹிகாঃ=கொண்டு சேர்க்கும் சேதனர்களான தேவதைகளே யாவர். என்? **तल्लिङ्गात्** (தல்லிங்காத்)=அவ்விதஞ் கூறுவதற்குப் போதியலிங்கம் சுருதியில் காணப்படுவதாலென்க. (14)

வையாஸிக நியாயமாலை.

(க-ரை) அர்ச்சிஸ்தொடங்கி வித்யுத்முடிவாகக் கூறப்பட்டவைகள் மார்க்கத்தின் சிஹ்னமா? (அடையாளமா?) அல்லது போகபூமியா? அல்லது கொண்டு

तेष्वेवार्चिरादिषु संशयः—किमेतानि मार्गचिह्नान्युत भोगभूमयोऽथवा नेतारो गन्तॄणामिति। तत्र मार्गलक्षणभूता अर्चिरादय इति तावत्प्राप्तम्। तत्स्वरूपत्वादुपदेशस्य। यथाहि लोके कश्चिद्ग्रामं नगरं वा प्रतिष्ठासमानोऽनुशिष्यते गच्छेतस्त्वममुं गिरिं ततो न्यग्रोधं ततो नदीं ततो ग्रामं ततो नगरं वा प्राप्स्यसीत्येवमिहाप्यर्चिषोऽहरह्न आपूर्यमाणपक्षमित्याद्याह। अथवा भोगभूमय इति प्राप्तम्। तथाहि—लोकशब्देनाग्न्यादीननुबध्नाति 'अग्निलोकमागच्छति' (कौषी० १।३) इत्यादि। लोकशब्दश्च प्राणिनां भोगायतनेषु भाष्यते—'मनुष्यलोकः पितृलोको देवलोकः' (बृ० १।५।१६) इति च। तथाच ब्राह्मणम्—'अहोरात्रेषु ते लोकेषु सज्जन्ते' इत्यादि। तस्मान्नातिवाहिका अर्चिरादयः। अचेतनत्वादप्येतेषामातिवाहिकत्वानुपपत्तिः। चेतना हि लोके राजनियुक्ताः

---

சேர்க்கும் சேதனர்களா? என்பது ஸந்தேஹம். மார்க்கத்தினது அடையாளம் ஸமானமாக இருப்பதைக் கொண்டும் லோகசப்தமிருப்பதைக்கொண்டும் மார்க்க சிந்ஹமாகவும் போகபூமியாகவும் தான் சொல்லவேண்டும் என்பது பூர்வபக்ஷம். முடிவில் வித்யுத்தை யடைந்ததும் அமானவபுருஷர்கள் இவர்களை(உபாஸகர்களை) ப்ரம்ஹத்தையடையச் செய்விக்கின்றனர் எனச் சொல்லியிருப்பதால் அர்ச்சிராதி கள் கொண்டு சேர்க்கும்சேதனர்களே ஆவர். இவ்வித நிர்த்தேசமும் அர்ச்சிராதி களில் காணப்படுகிறது. லோகமென்ற பெயரானது அங்கு வஸிக்கும் ஜனங் களை யுத்தேசித்து சொல்லப்பட்டதாகும் என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம்.—அதே அர்ச்சிராதிகள் விஷயத்தில் ஸந்தேஹ முதயமாகிறது. அதாவது:—இவை மார்க்கத்தின் அடையாளங்களா? அல்லது போகபூமிகளா? அல்லது செல்லுகின்றவர்களைக் கொண்டுசேர்க்கும் சேதனர்களா? என்றும், அவ ற்றுள் அர்ச்சிராதிகள் மார்க்கத்தின் அடையாளங்களாகவே தானாகும் என ப்ரா ப்தமாகிறது. உபதேசமானது அதற்கு ஸமானமாக இருப்பதுபற்றியேஎன்க. அதாவது:—உலகில் கிராமத்தையோ நகரத்தையோ குறித்துக் கிளம்பின ஒருவன் இங்கிருந்து அந்தமலையை அடைவாயாக, பிறகு ஆலமரத்தை அடைந்து அங்கிரு ந்து நதியையும் பிறகு கிராமத்தையோ நகரத்தையோ அடையப்போகிறாய் என எவ்வித முபதேசிக்கப் படுகிறானோ இவ்விதமே இங்கும் அர்ச்சிஸ்ஸினின்றும், அஹஸ்ஸையும், அஹஸ்ஸிலிருந்து சுக்கிலபக்ஷத்தையும் என்பதாகச் சுருதி சொ ல்லுகிறது என்றும். அல்லது போகபூமிகள் என்றாவது கொள்ளலாகும். அதா வது:—"அக்னி லோகத்தை யடைகிறான்" என்றதாதியால் லோகசப்தத்துடன் அக்னியாதிகளை ஸம்பந்தப்படுத்திக் கூறுகிறது என்றும். தேவலோகம், மனுஷ்ய லோகம், பிதிருலோகம் என்றவிடத்தில் லோகசப்தமானது ப்ராணிகளின் போக ஸ்தானங்களில் படிக்கப்பட்டு மிருக்கிறது. அவ்விதமே ப்ராம்ஹணமும் "அவர் கள் அஹோராத்ரலோகங்களில் ஸங்கத்தை யடைகின்றனர்" எனச் சொல்லு கிறது. ஆனது பற்றி அர்ச்சிராதிகள் ஆதிவாஹிக சேதனர்களன்று. அசேத னமாக இருப்பதுபற்றியும் இவற்றுக்கு ஆதிவாஹிகத்துவமானது பொருத்தமற் றதாக வாகிறது. உலகில் சேதனர்களான புருஷர்கள் அன்றோ அரசனா லேவப்

पुरुषा दुर्गेषु मार्गेष्वतिवाह्यानतिवाहयन्तीति। एवं प्राप्ते ब्रूमः—आतिवाहिका एवैते भवितुमर्हन्ति। कुतः—तल्लिङ्गात्। तथाहि 'चन्द्रमसो विद्युतं तत्पुरुषोऽमानवः स एतान्ब्रह्म गमयति' (छा० ४।१५।५) इति सिद्धवद्गमयितृत्वं दर्शयति। तद्वचनं तद्विषयमेवोपक्षीणमिति चेत्। न। प्राप्तमानवत्वनिवृत्तिपरत्वाद्विशेषणस्य। यद्यर्चिरादिषु पुरुषा गमयितारः प्राप्तास्ते च मानवास्ततो युक्तं तन्निवृत्त्यर्थं पुरुषविशेषणममानव इति॥ ४॥

ननु तल्लिङ्गमात्रमगमकं न्यायाभावात्। नैष दोषः।

## उभयव्यामोहात्तत्सिद्धेः॥ ५॥

ये तावदर्चिरादिमार्गास्ते देहवियोगात्संपिण्डितकरणग्रामा इत्यस्वतन्त्रा अर्चिरादीनामप्यचेतनत्वादस्वातन्त्र्यमित्यतोऽर्चिराद्यभिमानिनश्चेतना देवताविशेषा अतियात्रायां

---

பட்டவர்களாய்க் கொண்டு வழிகளில் இட்டுச் சொல்லக்கூடியவர்களை இட்டுச் செல்லுகின்றனர் எனக் காண்கிறோம். என இவ்விதம் பூர்வபக்ஷம் ப்ராப்த்தமாகவே ஸித்தாந்தத்தைச் சொல்லுகிறோம். இவை ஆதிவாஹிகர்களாக ஆவது தான் பொருந்துகிறது. ஏன்? அவ்விஷயமான லிங்கமிருப்பதாலென்க. அதாவது:—"சந்திரனிடமிருந்து வித்யுத்தை யடைந்ததும் அந்த அமானவபுருஷன் இவர்களை ப்ரம்ஹத்தை யடைவிக்கிறான்" என நிஸ்சிதமாகக் கொண்டுசேர்க்கும் தன்மையைத் தெரிவிக்கிறது என்றும். அமானவபுருஷன் ப்ரம்ஹத்தை யடைவிக்கிறான் என்றவசனமானது வித்யுத்தோடுமட்டுமே முடிவடையுமென்கிறோம் எனின்? அவ்விதமில்லை. ப்ராப்த்தமான மானவத்வத்தை நிவிருத்தி செய்யவேண்டியே **अमानवः** (அமானவ:)=என விசேஷணம் (அடைமொழி) கொடுக்கப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். அர்ச்சிராதிகளில் கொண்டுசேர்ப்பவர் மானவர்களான சேதனர்கள் ப்ராப்த்தர்களானால் அப்பொழுது அவரைவிலக்கவேண்டி புருஷனுக்கு அமானவ: என்ற விசேஷணம் பொருந்தக்கூடியதாகவாகும். (4)

அவதாரிகாபாஷ்யம்.—அது வெறும் லிங்கமாகமட்டு மாகுமேயொழிய சேதனபுருஷனைத் தெரிவிப்பதாகவாகாது. போதிய நியாயமில்லாமையே அதன் காரணமாகும் எனின்? இந்தத்தோஷமில்லை எனச் சொல்லப்படுகிறது.

## (ஸூ) உபயவ்யாமோஹாத் தத்ஸித்தே: (5)

(ப—ரை) **उभयव्यामोहात्** (உபயவ்யாமோஹாத்)=மார்க்கம் அதில் செல்லுபவர் இருவரும் க்ஞானமற்றிருப்பதிலிருந்து **तत्सिद्धेः** (தத்ஸித்தே:)=சேதனர்களான ஆதிவாஹிகதேவதைகளின் ஸித்தியானது ஏற்படுகிறது. (5) (எ—று)

பாஷ்யம்.—எவர்கள் அர்ச்சிராதி மார்க்கத்தை யடைந்தனரோ அவர்கள் உருண்டையாக்கப்பட்ட கரணஸமூஹங்களை உடையவர்களாக இருப்பதுபற்றி ஸ்வாதந்திரியமற்றவர்களாயிருப்பது கொண்டும், அர்ச்சிராதி மார்க்கங்களும் அசேதனமாக இருப்பதுபற்றி அவற்றுக்கும் அஸ்வாதந்திரியமிருப்பது கொண்டும் அர்ச்சிராதிகளுக்கு அபிமானிகளும் சேதனர்களுமான தேவதாவிசேஷங்கள் அதி

नियुक्ता इति गम्यते। लोकेऽपि हि मत्तमूर्छितादयः संपिण्डितकरणाः परप्रयुक्तवर्त्मानो भवन्ति। अनवस्थितत्वादप्यर्चिरादीनां न मार्गलक्षणत्वोपपत्तिः। नहि रात्रौ प्रेतस्याह्नःस्वरूपाभिसंभव उपपद्यते। नच प्रतिपालनमस्तीत्युक्तं पुरस्तात्। ध्रुवत्वात्तु देवतात्मनां नायं दोषो भवति। अर्चिरादिशब्दता चैषामर्चिराद्यभिमानादुपपद्यते 'अर्चिषोऽहः' (छा० ४।१५।५, ५।१०।१) इत्यादिनिर्देशस्त्वातिवाहिकत्वेऽपि न विरुध्यते अर्चिषा हेतुनाऽहरभिसम्भवति। अह्ना हेतुना आपूर्यमाणपक्षमिति। तथाच लोके प्रसिद्धेष्वप्यातिवाहिकेष्वेवञ्जातीयक उपदेशो दृश्यते। गच्छ त्वमितो बलवर्माणं ततो जयसिंहं ततः कृष्णगुप्तमिति। अपि चोपक्रमे-'तेऽर्चिरभिसंभवन्ति' (बृ० ६।२।१५) इति संबन्धमात्रमुक्तं न संबन्धविशेषः कश्चित्। उपसंहारे तु 'स एतान्ब्रह्म गमयति' (छा० ४।१५।६) इति संबन्धविशेषोऽतिवाह्यातिवाहकत्वलक्षण उक्तस्तेन स एवोपक्रमेऽ-

---

யாத்ரையில் நியுக்தர்கள் எனவறியக்கிடக்கிறது. உலகிலுங்கூட மதங்கொண்டவர் மூர்ச்சையடைந்தவர் முதலியோர் ஒன்றுபட்ட கரணங்களையுடையவர்களாய் பிறரால் காட்டப்பட்ட மார்க்கங்களை உடையவர்களாகவே காணவும் படுகின்றனர். அர்ச்சிராதிகள் நிலைத்தனவாக இல்லாததுபற்றியும் அவற்றுக்கு மார்க்கலக்ஷணத்தன்மை பொருந்தக் கூடாததாகவே இருக்கிறது. ராத்திரியில் மரித்தவருக்கு பகலின் ஸ்வரூபப்ராத்தியானது பொருத்தமுள்ளதாகவு மாகமாட்டாது. இரவில் மரித்தவன் பகல் காலத்தை எதிர்பார்க்கிறான் என்பது ஸம்பவிக்காது என முன்னர் சொல்லவும் பட்டிருக்கிறது. தேவதாரூபமான ஆத்மாக்கள் நிலைத்தவர்களாக இருப்பதுபற்றி இந்தத்தோஷம் ஸம்பவிக்கமாட்டாது. இவர்களுக்கு அர்ச்சிராதி சப்தங்களால் சொல்லப்படுதலானது இவர்கள் அர்ச்சிராதிகளுக்கு அபிமானிகளாக இருப்பதுபற்றி பொருந்தக்கூடியதாகவு மாகிறது. "அர்ச்சிஸ்ஸினின்றும் அஹஸ்ஸையடைகிறான்" என்றதாதி நிர்த்தேசமோ வெனில் ஆதிவாஹிகத்வம் சொன்னபோதிலுங்கூட விரோதப்படுவதற்கில்லை. அர்ச்சிஸ்ஸாகிற ஹேதுவினால் அஹஸ்ஸை யடைகிறான். அஹஸ்ஸாகிற ஹேதுவினால் சுக்கிலபக்ஷத்தை யடைகிறான் என்றும். அவ்விதமே உலகில் ப்ரஸித்தர்களான ஆதிவாஹிகர்களிடத்தில் இம்மாதிரியான உபதேசமானது காணவும்படுகிறது. அதாவது: நீ இங்கிருந்து பலவர்மா என்பவனை அடைவாயாக. அங்கிருந்து ஜயஸிம்ஹனையும், அங்கிருந்து கிருஷ்ணகுப்தனையும் அடைவாயாக என்றும்.

மேலும் உபக்ரமத்தில் "அவர்கள் அர்ச்சிஸ்ஸை அடைகின்றனர்" என்றவிடத்தில் பொதுப்படையான ஸம்பந்தம் மட்டும் சொல்லப்பட்டதே யொழிய ஸம்பந்தவிசேஷமொன்றும் சொல்லப்படவில்லை. உபஸம்ஹாரத்திலோ வெனில் "அவன் இவர்களை ப்ரம்ஹத்தை அடையச் செய்விக்கிறான்" என்பதாய் ஆதிவாஹ்ய ஆதிவாஹகத்வ ரூபமான ஸம்பந்த விசேஷமானது சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் உபக்ரமத்திலுங்கூட அதேஸம்பந்த விசேஷந்தான் சொல்லவேண்டுமென நிச்சயிக்கப்படுகிறது. செல்லுபவர் ஒன்றுசேர்ந்த காணஸமூஹங்களுள்ளவராக இருப்பதுபற்றியே அங்கு அவர்க்கு உபபோகமானது ஸம்பவிக்க

पीति निर्धार्यते। संपिण्डितकरणत्वादेव च गन्तॄणां न तत्रोपभोगसंभवः। लोकशब्दस्त्वनुपभुञ्जानेष्वपि गन्तृषु गमयितुं शक्यते। अन्येषां तल्लोकवासिनां भोगभूमित्वात्। अतोऽग्निस्वामिकं लोकं प्राप्तोऽग्निनाऽतिवाह्यते वायुस्वामिकं प्राप्तो वायुनेति योजयितव्यम् ॥ ५॥

कथं पुनरातिवाहिकत्वपक्षे वरुणादिषु तत्संभवः। विद्युतो ह्यधि वरुणादय उपक्षिप्ता विद्युतस्त्वनन्तरमाब्रह्मप्राप्तेरमानवस्यैव पुरुषस्य गमयितृत्वं श्रुतमिति। अत उत्तरं पठति—

## वैद्युतेनैव ततस्तच्छ्रुतेः ॥ ६॥

ततो विद्युदभिसंभवनादूर्ध्वं विद्युदनन्तरवर्तिनैवामानवेन पुरुषेण वरुणलोकादिष्वतिवाह्यमाना ब्रह्मलोकं गच्छन्तीत्यवगन्तव्यम्। 'तान्वैद्युतात्पुरुषोऽमानवः स एत्य ब्रह्म-

---

மாட்டாது. லோகசப்தமோவெனில் செல்லுபவர்கள் விஷயங்களை அனுபவிக்காமலிருந்தபோதிலுங்கூட பொருந்திவிடக்கூடியதாக வாகலாம். அந்த லோகத்தில் வஸிக்கின்ற மற்றவர்களுக்கு அதுபோக பூமியாக வாவதே அதன் காரணமாகும். ஆகவே அக்னியை ஸ்வாமியாக (யஜமானனாக) உடைய லோகத்தை யடைந்தவன் அக்னியினால் அதிவாஹிக்க (சேர்ப்பிக்கப்) படுகிறான். வாயுவை ஸ்வாமியாக வுடைய லோகத்தை யடைந்தவன் வாயுவினால் சேர்ப்பிக்கப்படுகிறான் எனப் பொருத்திப் பொருள் கொள்ளவேண்டும். (5) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—ஆதிவாஹிகத்வம் சொல்லும் பக்ஷத்தில் வருணாதிகளிடத்தில் அது எவ்விதம் ஸம்பவிக்கும். வித்யுத்துக்குமேல் வருணாதிகள் சொல்லப்பட்டிருக்கின்றனர். வித்யுத்துக்குப் பிறகோ ப்ரம்ஹப்ராப்திவரை அமானவ புருஷனே அழைத்துச் செல்லுபவனாகச் சொல்லப்பட்டிருக்கிறது எனின்? இவ் விஷயத்தில் பதிலைச் சொல்லுகிறார்—

## (ஸூ) வைத்யுதேனைவ ததஃ தத்சுருதேஃ (6)

(ப—ரை) ततः (ததஃ)=வித்யுத்தை யடைந்தபிறகு वैद्युतेनैव(வைத்யுதேனைவ)= வித்யுத்துக்கு அடுத்துள்ள அமானவபுருஷனாலேயே வருணாதிகளான லோகங்களில் அழைத்துச் செல்லப்படுகின்றவர்களாய் ப்ரம்ஹலோகத்தை அடைகின்றனர் எனக் கண்டுகொள்ளவேண்டும். ஏன்? तच्छ्रुतेः (தத்சுருதேஃ)=அவ்விதம் சுருதியிருப்பதே அதன் காரணமாகும். (6) (எ—று)

பாஷ்யம்.—பிறகு=வித்யுத்தை யடைந்ததற்குப் பிறகு வித்யுத்துக்கு அடுத்த படியாக விருக்கின்ற அமானவபுருஷனாலேயே வருணாதிகளான லோகங்களில் அழைத்துச் செல்லபடுகின்றவர்களாய் ப்ரம்ஹ லோகத்தை யடைகின்றனர் எனவறிந்து கொள்ள வேண்டும். "அவர்களை வித்யுதபிமானியினிடமிருந்து அந்த அமானவபுருஷன் வந்து ப்ரம்ஹலோகத்தை அடைவிக்கிறான்" என அந்த அமானவபுருஷனுக்கே அழைத்துச் செல்லும் தன்மை சுருதியில் சொல்லப்பட்

लोकं गमयति' इति तस्यैव गमयितृत्वश्रुतेः। वरुणादयस्तु तस्यैवाप्रतिबन्धकरणेन साहाय्यानुष्ठानेन वा केनचिदनुग्राहका इत्यवगन्तव्यम्। तस्मात्साधूक्तमातिवाहिका देवतात्मानोऽर्चिरादय इति ॥ ६ ॥

## ५ कार्याधिकरणम्। सू० ७-१४

## कार्यं वादरिरस्य गत्युपपत्तेः ॥ ७ ॥

परं ब्रह्माथवा कार्यमुदङ्मार्गेण गम्यते। मुख्यत्वादमृतत्वोक्तेर्गम्यते परमेव तत् ॥ १ ॥
कार्यं स्याद्गतियोग्यत्वात् परस्मिंस्तदसंभवात्। सामीप்யाद्ब्रह्मशब्दोक्तिरमृतत्वं क्रमाद्भवेत् ॥ २ ॥

---

டிருப்பதாலென்க. வருணாதிகளோவெனில் அந்த அமானவபுருஷனுக்கே தடைசெய்யாமையினாலோ, வேறு உதவிசெய்வதினாலோ உபகரிக்கின்றனர் என வறியவேண்டும். ஆனதுபற்றி அர்ச்சிராதிகள் ஆதிவாஹிகர்களான தேவதா ஸ்வரூபமுள்ளவர் என்று சொல்லப்பட்டது ஸாதுவாகவே ஆகிறது. (6) (எ-று)

நான்காவது ஆதிவாஹிகாதிகரணம் முற்றிற்று.

### கார்யாதிகரணம் 5.

(அ-கை) இதுவரை மார்க்கமானது சொல்லப்பட்டது. இந்தமார்க்கத்தினால் அடையப்படுவது இன்னதென்பதைச் சொல்லவேண்டி 8 ஸூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணம் ஆரம்பிக்கப்படுகிறது. இதில் முதலிலுள்ள 5ஸூத்திரங்களால் ஸித்தாந்தமும், பின்னுள்ள 3ஸூத்திரங்களால் பூர்வபக்ஷமும் சொல்லப்படுகிறது. அவற்றுள் முதலிலுள்ள ஸித்தாந்த ஸூத்திரம் பின்வருமாறு—

### (ஸூ) கார்யம் பாதரி: அஸ்யகத்யுபபத்தே: (7)

(ப-ரை) **कार्यम्** (கார்யம்)=ஸகுணப்ரம்ஹத்தையே அமானவபுருஷன் அடையச் செய்விக்கின்றான் என **वादरिः** (பாதரி:)=பாதரி என்ற ஆசிரியர் எண்ணுகிறார். ஏன்? **अस्य** (அஸ்ய)=இந்த ஸகுணப்ரம்ஹத்துக்கு **गत्युपपत्तेः** (கத்யுபபத்தே:)=கதி (மார்க்கம்) பொருந்தக்கூடியதாக விருப்பதே அதன் காரணமாகும். (7)

வையாஸிக ந்யாயமாலை.

(க-ரை) உத்தராயண மார்க்கத்தினால் அடையப்படுவது பரம்ப்ரம்ஹமா? அல்லது அபர (ஸகுண) ப்ரம்ஹமா? என்பது ஸந்தேஹம். அமிருதத்வம் சொன்னது முக்கியமாகவாகவேண்டி பரப்ரம்ஹமே தான் உத்தராயண மார்க்கத்தினால் அடையப்படுகிறது என்பது **பூர்வபக்ஷம்.** மார்க்கம் பொருந்தக்கூடியதாகவாகவேண்டியும், பரப்ரம்ஹத்தினிடத்தில் மார்க்கம் ஸம்பவிக்காதாகையாலும் ஸகுணப்ரம்ஹமேதான் அர்ச்சிராதி மார்க்கத்தினால் அடையப்படுவதாக ஏற்படுகிறது. "இவர்களை ப்ரம்ஹத்தை யடையச்செய்கிறான்" என்பதாய் ஸகுணப்ரம்ஹத்தினிடத்தில் ப்ரம்ஹசப்தப்ரயோகமானது நிர்க்குணப்ரம்ஹத்துக்கே ஸகுணமாகவிருத்தல் ஏற்படுவதை யொட்டி செய்யப்பட்டதாக வாகிறது. அமிருதத்வமானது கிரமமுக்தியை யொட்டிச் சொல்லப்பட்டது என்பது **ஸித்தாந்தம்.**

'स एनान्ब्रह्म गमयति' (छां० ४। १५। ५) इत्यत्र विचिकित्स्यते—किं कार्यमपरं ब्रह्म गमयत्याहोस्वित्परमेवाविकृतं मुख्यं ब्रह्मेति। कुतः संशयः। ब्रह्मशब्दप्रयोगाद्गतिश्रुतेश्च। तत्र कार्यमेव सगुणमपरं ब्रह्मैनान्गमयत्यमानवः पुरुष इति बादरिराचार्यो मन्यते। कुतः—अस्य गत्युपपत्तेः। अस्य हि कार्यब्रह्मणो गन्तव्यत्वमुपपद्यते प्रदेशवत्त्वात्। नतु परस्मिन्ब्रह्मणि गन्तृत्वं गन्तव्यत्वं गतिर्वाऽवकल्पते। सर्वगतत्वात्प्रत्यगात्मत्वाच्च गन्तृणाम् ॥ ७ ॥

## विशेषितत्वाच्च ॥ ८ ॥

'ब्रह्मलोकान्गमयति ते तेषु ब्रह्मलोकेषु पराः परावतो वसन्ति' (बृ० ६। २। १५)

---

பாஷ்யம்—"அந்த அமானவபுருஷன் இவர்களை ப்ரம்ஹத்தை யடையச் செய்கிறான்" என்றவிடத்தில் காரிய ப்ரம்ஹத்தை யடையச் செய்கின்றனா? அல்லது எவ்வித விகாரமுமற்றதும் முக்கியமுமான பரப்ரம்ஹத்தையே அடையச் செய்கிறனா? என ஸந்தேஹிக்கப்படுகிறது. எதனால் ஸந்தேஹமுண்டாகிறது எனின்? ப்ரம்ஹசப்த ப்ரயோகமிருப்பதும், கதி சொல்லியிருப்பதுமே அதன் காரணமாகும். அவ்விடத்தில் கார்யமான=ஸகுணமான அபரப்ரம்ஹத்தையே அந்த அமானவபுருஷன் இவர்களை யடையச் செய்கிறான் எனப் பாதரி என்ற ஆசிரியர் எண்ணுகிறார். ஏன்? இந்த ஸகுணப்ரப்ஹத்துக்கு கமனம் பொருந்தக் கூடியதாக விருப்பதே அதன் காரணமாகும். இந்தக் கார்ய (ஸகுண) ப்ரம்ஹத்துக்கன்றோ அடையக்கூடியதாக விருத்தல் பொருந்தக்கூடியதாகவாகிறது. வேறுப்ரதேசமுள்ளதாக அது இருப்பதே அதன் காரணமாகும். பரப்ரம்ஹத்தினிடத்தில் கந்திருத்வமோ, (கமனகர்த்ருத்வமோ) கந்தவ்யத்வமோ (அடையக் கூடியதாகவிருத்தலோ) கதியோ பொருந்தமாட்டாதன்றோ. அது எங்கும் நீக்கமற நிறைந்திருப்பதும் போகின்றவர்களின் ப்ரத்யகாத்மரூபமாக விருப்பதுமே அதன் காரணமாகும்.

## (ஸூ) விசேஷிதத்வாத் ச (8)

(ப—ரை) "ब्रह्मलोकान् गमयति ते तेषु ब्रह्मलोकेषु पराः परावतो वसन्ति" அமானவபுருஷன் ப்ரம்ஹலோகங்களை அடைவிக்கிறான் சிறந்தவர்களான அவர்கள் தனது உபாஸகர்களை ரக்ஷிக்கின்ற ஹிரண்யகர்ப்பருடைய அந்தலோகங்களில் வஸிக்கின்றனர் என்றவிடத்தில் **विशेषितत्वाच्च** (விசேஷிதத்வாத்ச)=ப்ரம்ஹசப்தத்துக்கு லோகான் என்பதாய் பஹுவசனமுள்ள (பன்மையைக் கூறுகின்ற) லோகசப்தத்தை விசேஷ்யமாகக் கொடுத்திருப்பதாலும் "**सएनान् ब्रह्मगमयति** அமானவபுருஷன் இவர்களை ப்ரம்ஹத்தை யடையச்செய்விக்கிறான்" என்றவிடத்திலுள்ள ப்ரம்ஹ சப்தத்தால் கார்யமான ஸகுணப்ரம்ஹமே தான் சொல்லப்படும். (8) (எ—று)

பாஷ்யம்.—"(அமானவ புருஷன்) ப்ரம்ஹலோகங்களை அடைவிக்கிறான் பரர்களான (சிறந்த வுபாஸகர்களான) அவர்கள் தனது உபாஸகர்களை ரக்ஷிக்கி

इति च श्रुत्यन्तरे विशेषितत्वात्कार्यब्रह्मविषयैव गतिरिति गम्यते। नहि बहुवचनेन विशेषणं परस्मिन्ब्रह्मण्यवकल्पते। कार्ये त्ववस्थाभेदोपपत्तेः संभवति बहुवचनम्। लोकश्रुतिरपि विकारगोचरायामेव सन्निवेशविशिष्टायां भोगभूमावाञ्जसी। गौणी त्वन्यत्र 'ब्रह्मैव लोक एष सम्राट्' इत्यादिषु। अधिकरणाधिकर्तव्यनिर्देशोऽपि परस्मिन्ब्रह्मण्यनाञ्जसः स्यात्। तस्मात्कार्यविषयमेवेदं नयनम्॥ ८॥

ननु कार्यविषयेऽपि ब्रह्मशब्दो नोपपद्यते, समन्वये हि समस्तस्य जगतो जन्मादिकारणं ब्रह्मेति स्थापितमिति। अत्रोच्यते—

## सामीप्यात्तु तद्व्यपदेशः॥ ९॥

तुशब्द आशङ्काव्यावृत्त्यर्थः। परब्रह्मसामीप्यादपरस्य ब्रह்மणस्तस्मिन्नपि ब्रह्मशब्द-

---

ன்ற ப்ரம்ஹத்தினுடைய அந்த லோகங்களில் வஸிக்கின்றனர்" என்ற வேறு (ப்ருஹதாரண்யக) ஶ்ருதியில் (ப்ரம்ஹமானது பன்மையைக் கூறுகின்ற லோகசப்தத்தினல்) விசேஷிக்கப்பட்டிருப்பதிலிருந்து (ப்ரம்ஹசப்தத்துக்கு லோகசப்தத்தை விசேஷ்யமாகக் கொடுத்திருப்பதிலிருந்து "ஸஏநான் ப்ரம்ஹ கமயதி" என்றவிடத்திலும்)ஸகுணப்ரம்ஹவிஷயமான கதியே(மார்க்கமே)தான் சொல்லப்படுவதாக அறியப்படுகிறது. பரப்ரம்ஹத்தினிடத்தில் பஹுவசனத்தினல் விசேஷணமானது ஸம்பவிக்கமாட்டாதன்ருே. ஸகுணப்ரம்ஹத்தினிடத்திலோவெனில் அவஸ்தாபேதம் பொருந்தலாமானதால்பஹுவசனம் ஸம்பவிக்கலாம். (ப்ரம்ஹலோக) என்றவிடத்திலுள்ள லோகசப்தமும் கார்யவர்க்கத்தில் சேர்ந்ததும் ஒருமாதிரியான அமைப்புடன் கூடினதுமான போகபூமியில்தான் முக்கியமாகப் பொருந்துகிறது. "ப்ரம்ஹமே தான் லோகம் இதுவே ஸம்ராட்" என்றதாதி வேறிடத்திலோவெனில் லோகசப்தமானது கௌண்மாகவாகிறது. லோகங்களில் வஸிக்கின்றனர் என்பதாய் லோகங்களை ஆதாரமாகவும் வஸிப்பவரை ஆதேயமாகவும் சுருதி சொல்லுவதானது பரப்ரம்ஹத்தினிடத்தில் ருஜுவாகப் பொருந்தவும் மாட்டாது. ஆகவே இந்த நயநமானது (அடைவித்தல்ானது) ஸகுணப்ரம்ஹவிஷயமானதே தான் என்பது நிலைக்கிறது. (8)

அவதாரிகா பாஷ்யம்.—சங்கை—ஸகுணப்ரம்ஹத்தினிடத்திலும் கூட ப்ரம்ஹசப்தமானது பொருந்தமாட்டாது. ஸமன்வயாத்தியாயத்தில் எல்லாஜகத்துக்கும் ப்ரம்ஹம் ஜன்மாதிகாரணமென ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றதன்ருே எனின்? இவ்விஷயத்தில் அடுத்த ஸூத்திரத்தினல் பதில்சொல்லப்படுகிறது.

### (ஸூ) ஸாமீப்யாத்துதத்வ்யபதேச: (9)

(ப—ரை) तु (து)=முற்கூறிய ஆசங்கை பொருந்தாது. सामीप्यात् (ஸாமீப்யாத்)=அபரப்ரம்ஹத்துக்கு பரப்ரம்ஹத்தினது ஸாமீப்யமானது (அபேதமானது) இருப்பதால் तद्व्यपदेशः (தத்வ்யபதேச:)=ப்ரம்ஹசப்தத்தினல் ஸகுணப்ரம்ஹமும் உபதேசிக்கப்படுகிறது. (9)

பாஷ்யம்.—ஸூத்திரத்திலுள்ள து என்ற சப்தமானது ஆசங்கையைப்

प्रयोगो न विरुध्यते। परमेव हि ब्रह्म विशुद्धोपाधिसंबन्धं क्वचित्कैश्चिद्विकारधर्मैर्मनोमयत्वादिभिरुपासनायोपदिश्यमानमपरमिति स्थितिः ॥ ९ ॥

ननु कार्यप्राप्तावनावृत्तिश्रवणं न घटते। नहि परस्माद्ब्रह्मणोऽन्यत्र क्वचिन्नित्यतां संभावयन्ति। दर्शयति च देवयानेन पथा प्रस्थितानामनावृत्तिम् 'एतेन प्रतिपद्यमाना इमं मानवमावर्तं नावर्तन्ते' (छा० ४।१५।६) इति, तेषामिह न पुनरावृत्तिरस्ति 'तयोर्ध्वमायन्नमृतत्वमेति' (छा० ८।६।६, क० ६।१६) इति चेत्। अत्र ब्रूमः—

## कार्यात्यये तदध्यक्षेण सहातः परमभिधानात् ॥ १० ॥

कार्यब्रह्मलोकप्रलयप्रत्युपस्थाने सति तत्रैवोत्पन्नसम्यग्दर्शनाः सन्तस्तदध्यक्षेण हिरण्यगर्भेण सहातः परं परिशुद्धं विष्णोः परमं पदं प्रतिपद्यन्त इति। इत्थं क्रममुक्तिर-

---

போச்சுகிறது. பரப்ப்ரம்ஹத்தினது ஸாமீப்யம் (வாஸ்தவாபேதம்) அபரப்ரம்ஹத்துக்கிருப்பதால் அந்த அபரப்ரம்ஹத்தினிடத்திலுங்கூட ப்ரம்ஹசப்தத்தைப் பிரயோகிக்குது முறண்படமாட்டாது. பரப்ப்ரம்ஹமே விசுத்தமான உபாதிஸம்பந்தமுள்ளதாயும் மனோமயத்வம் முதலிய சிலவிகார (காரிய) தர்மங்களுடன் கூடினதாயும் சிலவிடத்தில் உபாஸனைக்கு வேண்டி உபதேசிக்கப்படுவதால் அது அபரம்ப்ரம்ஹமெனப்படுகிறது. (9) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—சங்கை—கார்யப்ரம்ஹ ப்ராப்த்தி சொல்லும் பக்ஷத்தில் சுருதியில் ஆவிருத்தி (திரும்புதல்) யின்மை சொன்னது பொருந்தமாட்டாது. பரப்ரம்ஹத்தைத் தவிர்த்து வேறு ஒருவிடத்திலும் நித்யத்வமிருப்பதாக ஊஹிக்கவும் முடியாதன்றோ? சுருதியோ தேவயான மார்க்கத்தினால் போகிறவர்களுக்கு “இவ்வழியினால் ப்ரம்ஹலோகத்தை யடைபவர் இந்த மன்வந்தரம் முழுவதும் திரும்பமாட்டார்” என்பதாய் திரும்புதலின் இன்மையைத் தெரிவித்திருக்கிறது. “அந்த ஸுஷும்ன நாடியினால் உயரக்கிளம்புபவர் அமிருதத்வத்தை யடைகிறார்” என்பதாய் அவர்களுக்கும் திரும்புதலினின்மையைச் சொல்லியிருக்கிறது எனின்? இவ்விஷயத்தில் சொல்லப்படுகிறது—

## (ஸூ) கார்யாத்யயே ததத்யக்ஷேண ஸஹ அத: பரமபிதானாத்

(ப—ரை) **कार्यात्यये** (கார்யாத்யயே)=ஹிரண்யகர்ப்பலோகத்துக்கு நாசம் வந்ததும் **तदध्यक्षेण सह** (ததத்யக்ஷேண ஸஹ)=அந்த லோகாதிபதியான ஹிரண்யகர்ப்பருடன் கூட **अतः परम्** (அத: பரம்)=இதற்கு மேல்பட்ட நிர்க்குண ப்ரம்ஹ ஸ்வரூபத்தை அடைகின்றனர். **अभिधानात्** (அபிதானாத்)=சுருதியில் அவ்விதமே சொல்லப்பட்டு மிருக்கிறது. (10)

பாஷ்யம்—கார்யமான ப்ரம்ஹலோகத்துக்கு ப்ரளயமானது வந்ததும் அவ்விடத்திலேயே உண்டான ஸம்யக்தர்சனத்தை (அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தை) யுடையவர்களாய்க் கொண்டு அந்த லோகத்துக்கு அத்யக்ஷரான ஹிரண்யகர்ப்ப

नावृत्त्यादिश्रुत्यभिधानेभ्योऽभ्युपगन्तव्या । नह्यञ्जसैव गतिपूर्विका परप्राप्तिः संभवतीत्युपपादितम् ॥ १० ॥

**स्मृतेश्च ॥ ११ ॥**

स्मृतिरप्येतमर्थमनुजानाति—'ब्रह्मणा सह ते सर्वे संप्राप्ते प्रतिसंचरे। परस्यान्ते कृतात्मानः प्रविशन्ति परं पदम्' इति । तस्मात्कार्यब्रह्मविषया गतिः श्रूयत इति सिद्धान्तः ॥ ११ ॥ कं पुनः पूर्वपक्षमाशङ्क्यायं सिद्धान्तः प्रतिष्ठापितः 'कार्यं बादरिः' (ब्र० सू० ४।३।७) इत्यादिनेति । स इदानीं सूत्रैरेवोपदर्श्यते—

**परं जैमिनिर्मुख्यत्वात् ॥ १२ ॥**

---

ருடன் கூட இதற்கு மேற்பட்டதும் விசுத்தமும் ஆன வியாபகமான (எங்கும் நீக்கமற நிறைந்துள்ள) பரமாத்மாவினுடைய மேலான ஸ்வரூபத்தை அடைகின்றனர் என்றும். இத்தகைய க்ரமமுக்தி யோ அனுவிருத்தியாதிகளைச் சொல்லும் சுருதிகளிலிருந்து ஒப்பித்திடவேண்டி வருகிறது. கதியை முன்னிட்ட பரப்ராப்தியானது ருஜுவாக ஸம்பவிக்கவே மாட்டாது எனச் சொல்லப்பட்டுமிருக்கிறது. (10) (எ—று)

## (ஸூ) ஸ்மிருதே: ச (11)

(ப—ரை) **स्मृतेश्च** (ஸ்மிருதேஸ்ச)=ஸ்மிருதியிலிருந்தும் முற்கூறிய பொருள் நிஸ்சிதமாகக் கிடைக்கிறது. (11)

பாஷ்யம்.—"ப்ரளயமானது வந்ததும் (ஹிரண்யகர்ப்பருடைய ஸமஷ்டிலிங்க சரீரரூபமான விகாரத்துக்கு நாசமேற்பட்டதும்) சுத்தமான புத்தியை யுடையவர்களான ப்ரம்ஹலோகவாஸிகள் யாவரும் ஸம்யக்ஞானத்தை யடைந்தவர்களாய் மோக்ஷத்தை யடைகின்ற ப்ரம்ஹதேவனுடன் கூட பரமபதத்தை (எங்கும் நீக்கமற நிறைந்துள்ள ப்ரம்ஹஸ்வரூபத்தை) யடைகின்றனர். அதாவது ப்ரம்ஹமாக ஆகின்றனர்" என்ற ஸ்மிருதியும் இந்த அர்த்தத்தை அனுமதிக்கின்றது. ஆகவே கார்யப்ரம்ஹவிஷயமான கதியானது சுருதியில் சொல்லப்பட்டது என்பது ஸித்தாந்தம். (11) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—எத்தகைய பூர்வபக்ஷத்தை ஆசங்கித்துக் கொண்டு "கார்யம்பாதரி:" என்றதாதியால் ஸித்தாந்தம் செய்யப்பட்டது எனின்? அந்த பூர்வபக்ஷமானது இதுபோழ்து 3ஸூத்திரங்களினால் சொல்லப்படுகிறது.—

## (ஸூ) பரம் ஜைமினிர் முக்யத்வாத் (12)

(ப—ரை) **स एनान्ब्रह्म गमयति** (ஸ ஏநான் ப்ரம்ஹ கமயதி)=என்ற விடத்தில் பரப்ப்ரம்ஹத்தையேதான் அமானவபுருஷன் அடைவிக்கிறான் என்று **जैमिनिः** (ஜைமினி:)=ஜைமினி என்ற ஆசிரியர் எண்ணுகிறார். ஏன்? **मुख्यत्वात्** (முக்யத்வாத்)=ப்ரம்ஹ சப்தத்துக்கு பரம்ப்ரம்ஹம் முக்கியமான பொருளாக இருப்பதே அதற்கு காரணமாகும். (12) (எ—று)

जैमिनिस्त्वाचार्यः 'स एनान्ब्रह्म गमयति' (छा० ४। १५। ६) इत्यत्र परमेव ब्रह्म प्रापयतीति मन्यते। कुतः—मुख्यत्वात्। परं हि ब्रह्म ब्रह्मशब्दस्य मुख्यमालम्बनं, गौणमपरं, मुख्यगौणयोश्च मुख्ये संप्रत्ययो भवति ॥ १२ ॥

## दर्शनाच्च ॥ १३ ॥

'तयोर्ध्वमायन्नमृतत्वमेति' (छा० ८। ६। ६, क० ६। १६) इति च गतिपूर्वकममृतत्वं दर्शयति। अमृतत्वं च परस्मिन्ब्रह्मण्युपपद्यते न कार्ये, विनाशित्वात्कार्यस्य। 'अथ यत्रान्यत्पश्यति तदल्पं तन्मर्त्यम्' (छा० ७। २४। १) इति प्रवचनात्। परविषयैव चैषा गतिः कठवल्लीषु पठ्यते। नहि तत्र विद्यान्तरप्रक्रमोऽस्ति 'अन्यत्र धर्मादन्यत्राधर्मात्' (क० २। १४) इति परस्यैव ब्रह्मणः प्रक्रान्तत्वात् ॥ १३ ॥

---

பாஷ்யம்—"அந்த அமானவ புருஷன் இவர்களை ப்ரப்ஹத்தை அடையச் செய்விக்கிறான்" என்றவிடத்தில் பரப்ப்ரப்ஹத்தையே அடைவிக்கிறான் எனவறியக்கிடக்கிறது என ஜைமினி என்ற ஆசிரியர் எண்ணுகிறார். ஏன்? முக்கியமாக இருப்பதாலென்க. பரப்ப்ரப்ஹமன்றோ ப்ரப்ஹசப்தத்துக்கு முக்கியமான பொருளாகவும் அபரப்ப்ரப்ஹம் கௌணமாகவும் ஆகிறது. முக்கியம் கௌணம் இவற்றுக்குள் முக்கியத்தைக் கொள்ளுவதுதான் பொருந்துகிறது. (12) (எ–று)

## (ஸூ) தர்சனாத்ச (13)

(ப–ரை) "அந்த ஸுஷும்ப்ன நாடியினால் மேலுள்ள லோகத்தை யடைந்து அமிருதத்வத்தையடைகிறான்" என்றவிடத்தில் சுருதியில் दर्शनाच्च (தர்சனாத்ச)= கதியை முன்னிட்டு அமிருதத்வத்தைச் சொல்லியிருப்பதும் மற்றொரு காரணமாகும். (13) (எ–று)

பாஷ்யம்.—"அந்த ஸுஷும்ப்னநாடியினால் மேலுள்ளலோகத்தை யடைந்து அமிருதத்வத்தை யடைகிறான்" என்றவிடத்தில் கதியை முன்னிட்டு அமிருதத்வத்தைச் சுருதி காண்பித்துமிருக்கிறது. அமிருதத்வமும் பரம்ப்ரம்ஹத்தினிடத்தில் பொருந்துமேயொழிய காரிய(ஸகுண)ப்ரம்ஹத்தினிடத்தில் பொருந்தாது. * காரியமானது அழிவுள்ளதாக இருப்பதே அதன் காரணமாகும். "பிறகு என்னிலையில் அன்யத்தை=பரப்ப்ரப்ஹத்தை விட வேறானவொன்றைப் பார்க்கின்றானோ அது அல்ப (காரிய) மாகும். அது அழியக்கூடியதுமாகும்" எனச் சாந்தோக்கியத்தில் சொல்லப்பட்டுமிருக்கிறது. பரப்ப்ரப்ஹவிஷயமாகவே உள்ள இந்தக் கதியானது கடவல்லிகளில் படிக்கப்படுகிறது. அவ்விடத்தில் வேறுவித்தையின் தொடர்ச்சமில்லையன்றோ. "தர்மத்தைவிட வேறுபட்டதும் அதர்மத்தை விட வேறுபட்டதும்" என்றதால் பரப்ப்ரப்ஹமே உபதேசிக்கத் தொடங்கப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். (13) (எ–று)

---

* ப்ரம்ஹோபாதியின் நாசத்தை யொட்டி உபாதியின்மூல மேற்பட்ட நாசமானது காரியப்ரம்ஹத்துக்கும் சொல்லப்பட்டதாகக் கொள்ளவேண்டும்.

## नच कार्ये प्रतिपत्त्यभिसन्धिः ॥ १४ ॥

अपि च 'प्रजापतेः सभां वेश्म प्रपद्ये' (छा० ८।१४।१) इति नायं कार्यविषयः प्रतिपत्त्यभिसन्धिः 'नामरूपयोर्निर्वहिता ते यदन्तरा तद्ब्रह्म' (छा० ८।१४।१) इति कार्यविलक्षणस्य परस्यैव ब्रह्मणः प्रकृतत्वात्। 'यशोऽहं भवामि ब्राह्मणानाम्' (छा० ८।१४।१) इति च सर्वात्मत्वेनोपक्रमणात्। 'न तस्य प्रतिमा अस्ति, यस्य नाम महद्यशः' (श्वेता० ४।१९) इति च परस्यैव ब्रह्मणो यशोनामत्वप्रसिद्धेः। सा चेयं वेश्मप्रतिपत्तिर्गतिपूर्विका हार्दविद्यायामुदिता 'तदपराजिता पूर्ब्रह्मणः प्रभुविमितं हिरण्मयम्' (छा० ८।५।३) इत्यत्र। पदेरपि च गत्यर्थत्वान्मार्गापेक्षाऽवसीयते। तस्मात्परब्रह्मविषया गतिश्रुतय इति पक्षान्तरम्॥

तावेतौ द्वौ पक्षावाचार्येण सूत्रितौ गत्युपपत्त्यादिभिरेको मुख्यत्वादिभिरपरः। तत्र

---

## (ஸூ) நச கார்யே ப்ரதிபத்யபிஸந்தி: (14)

(ப-ரை) प्रतिपत्त्यभिसन्धिः (ப்ரதிபத்யபிஸந்தி:)="ப்ரஜாபதியின் ஸபையாகிற வேஸ்மமாகிய (வீட்டை) யடைவேனாக" என்றதாய்ச் சொல்லப்படும் இந்த வேஸ்ம ப்ராப்த்தி த்யானமானது कार्ये (கார்யே)=கார்ய ப்ரம்ஹவிஷயத்தில் नच (நச)= பொருந்தவும் மாட்டாது. அது கார்யவிலக்ஷணமான பரப்ரம்ஹத்தின் ப்ரகரண மாக விருப்பதே அதன் காரணமாகும். (14) (எ-று)

பாஷ்யம்.—மேலும் "ப்ரஜாபதியினுடைய ஸபையாகிற வீட்டை யடைவே னாக" என்ற இது கார்யப்ரம்ஹவிஷயமான ப்ராப்த்தி த்யானமன்று. "நாமரூ பங்களை வஹிக்கிறது. அந்த நாமரூபங்கள் எதில் கல்பிக்கப்பட்டனவோ அது ப்ரம்ஹம்" என்பதாய் கார்யவிலக்ஷணமான (கார்யப்ரம்ஹத்தைவிட வேறுபட்ட) பரப்ரம்ஹத்தினுடைய ப்ரகரணமாக இருப்பதே அதன் காரணமாகும். "நான் ப்ராம்ஹணர்களின் ஆத்மாவாக ஆகிறேன்" என ஸர்வாத்மபாவத்துடன் உபக் கிரமம் காணப்படுகிறது. "எதற்கு மஹத்யஶஸ் என்ற பெயரோ அதற்கு ஸமா னமானதொன்றுமில்லை" என்பதாய் பரம்ப்ரம்ஹத்துக்கே யஶஸ் என்ற பெயருள் ளதாக இருத்தல் ப்ரஸித்தமாகவு மிருக்கிறது. அந்த இந்த வேஸ்மப்ராப்த்தியா னது கதியை முன்னிட்டு ஏற்படுவதாக தஹரவித்யையில் சொல்லப்பட்டிருக்கி றது. அதாவது:—"அந்தப்ரம்ஹலோகத்தில் வித்யையில்லாதவனால் அடையமுடி யாத ப்ரம்ஹாவினுடைய பட்டணமிருக்கிறது. ப்ரபுவான அதேப்ரம்ஹாவினால் நிர்மாணம் செய்யப்பட்ட ஹிரண்மயமான மண்டபமானதிருக்கிறது" என்ற விடத்தில் என்றும். (ப்ரபத்யே என்றவிடத்திலுள்ள) पद् (பத்) என்ற தாதுவுக்கு கதி என்பது பொருளாகையால் மார்க்கத்தின் அபேக்ஷை நிஶ்சயிக்கப்படுகிறது. ஆகவே கதியைச் சொல்லும் சுருதிகள் பரப்ரம்ஹத்தை விஷயமாகக் கொண்டன என்பது வேறுபக்ஷமாகும்.

கதியின் பொருத்தம் முதலியவற்றால் ஒன்றும், முக்கியத்வாதிகளினால் மற் றொன்றுமாக அந்த இரண்டு பக்ஷங்களும் ஆசிரியரால் ஸூத்திரத்தில் சொல்லப்

गत्युपपत्त्यादयः प्रभवन्ति मुख्यत्वादीनाभासयितुं नतु मुख्यत्वादयो गत्युपपत्त्यादीनित्याद्य एव सिद्धान्तो व्याख्यातो द्वितीयः पूर्वपक्षः। न ह्यसत्यपि संभवे मुख्यस्यैवार्थस्य ग्रहणमिति कश्चिद् ज्ञापयिता विद्यते। परविद्याप्रकरणेऽपि च तत्स्तुत्यर्थं विद्यान्तराश्रयगत्यनुकीर्तनमुपपद्यते 'विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति' (छा० ८। ६। ६) इतिवत्। 'प्रजापतेः सभां वेश्म प्रपद्ये' (छा० ८। १४। १) इति तु पूर्वस्य वाक्यविच्छेदेन कार्येऽपि प्रतिपत्त्यभिसन्धिर्न विरुध्यते। सगुणेऽपि च ब्रह्मणि सर्वात्मत्वसङ्कीर्तनं सर्वकर्मा सर्वकाम इत्यादिवदवकल्पते। तस्मादपरविषया एव गतिश्रुतयः। केचित्तु पुनः पूर्वाणि पूर्वपक्षसूत्राणि भवन्त्युत्तराणि सिद्धान्तसूत्राणीत्येतां व्यवस्थामनुरुध्यमानाः परविषया एव गतिश्रुतीः प्रतिष्ठापयन्ति, तदनुपपन्नं गन्तव्यत्वानुपपत्तेर्ब्रह्मणः। यत्सर्वगतं सर्वान्तरं

---

பட்டன. அவற்றுள் * கத்யுபபத்யாதிகள் முக்யத்வாதிகளை ஆபாஸப்படுத்தக் கூடியனவே யொழிய முக்கியத்வாதிகள் கத்யுபபத்யாதிகளை ஆபாஸப்படுத்தக் கூடியனவன்று என்பதுபற்றி முதலிலுள்ளதே ஸித்தாந்தமென்றும், இரண்டாவதாகவுள்ளது பூர்வபக்ஷமென்றும் வியாக்கியானஞ் செய்யப்பட்டது. பொருத்தமில்லாவிடினுங்கூட முக்கியமான பொருளையே தான் கிரஹிக்க வேண்டுமென ஆச்ஞாபிப்பவர் இல்லையன்றோ. (வித்யையுடன் ஸம்பந்தப்பட்ட ஸுஷும்னு நாடியை ஸ்துதிக்கவேண்டி) "வேறுநாடிகள் நாநாவிதமான உத்க்ரமணத்தி லுபயோகப்படுகின்றன" என்று சொல்லப்படுவதுபோல பரவித்யாப்ரகரணத்திலுங் கூட அதை ஸ்துதிக்கவேண்டி வேறுவித்யையை யாச்ரயித்த கதியைச் சொன்னது பொருத்தமுள்ளதாகவும் ஆகிறது. "ப்ரஜாபதியினுடைய ஸபையாகிற வீட்டையடைவேனாக" என்றதோ முன்னுள்ள வாக்கியத்தின் விச்சேதத்தால் (முன்னுள்ள பரவித்யாப்ரகரணத்தை விடுத்து) காரியப்ரம்ஹவிஷயத்தில் வேப்பமப்ராப்தித்யானஞ் செய்யப்பட்டதாகச் சொல்லுவதில் விரோதமேதுவு மேற்படாது. ஸகுணப்ரம்ஹத்திலுங்கூட "ஸர்வகர்மமுள்ளது ஸர்வகாமமுள்ளது" என்றதாதி போல ஸர்வாத்மத்வம் சொன்னது பொருந்துகிறது. ஆகவே கதிச்ருதிகள் அபரவித்யாவிஷயங்களே யாகும்.

வேறு சிலரோ வெனில் முன்னுள்ள ஐந்தும் பூர்வபக்ஷஸூத்திரங்களென்றும், பின்னுள்ள மூன்றும் ஸித்தாந்த ஸூத்திரங்களென்றுமான இந்த வ்யவஸ்தையை அனுஸரித்தவர்களாய்க் கொண்டு கதிச்ருதிகள் பரவித்யாவிஷயங்களே யாகும் என ஸ்தாபிக்கின்றனர். அது பொருந்தாது. ப்ரம்ப்ரம்ஹமானது கந்தவ்யமாக (கதியினலடையக் கூடியதாக) இல்லாததே அதன் காரணமாகும். "ஆகாசம் போல ஸர்வகதமும் நித்யமுமானது" "எது கௌணமில்லாததும்,

---

* कार्यं बादरिरस्य गत्युपपत्तेः என்றுதொடங்கி स्मृतेश्च என்ற 11-வது ஸூத்திரம் முடியவுள்ள 5 ஸூத்திரங்களால் சொல்லப்பட்டவை கத்யுபத்தியாதி என்றதாலும் 12, 13, 14 இந்த மூன்று ஸூத்திரங்களாலும் சொல்லப்பட்டது முக்யத்துவாதிகளென்றதாலும் சொல்லப்பட்டதாகக் கொள்ளவேண்டும்.

सर्वात्मकं च परं ब्रह्म 'आकाशवत्सर्वगतश्च नित्यः', 'यत्साक्षादपरोक्षाद्ब्रह्म' (बृ० ३। ४। १), 'य आत्मा सर्वान्तरः' (बृ० ३। ४। १), 'आत्मैवेदं सर्वम्' (छा० ७। २५। २), 'ब्रह्मैवेदं विश्वमिदं वरिष्ठम्' (मु० २। २। ११) इत्यादिश्रुतिनिर्धारितविशेषं तस्य गन्तव्यता न कदाचिदप्युपपद्यते। नहि गतमेव गम्यते। अन्यो ह्यन्यद्गच्छतीति प्रसिद्धं लोके। ननु लोके गतस्यापि गन्तव्यता देशान्तरविशिष्टा दृष्टा। यथा पृथिवीस्थ एव पृथिवीं देशान्तरद्वारेण गच्छतीति। तथानन्यत्वेऽपि बालस्य कालान्तरविशिष्टं वार्धकं स्वात्मभूतमेव गन्तव्यं दृष्टं तद्वद्ब्रह्मणोऽपि सर्वशक्त्युपेतत्वात्कथञ्चिद्गन्तव्यता स्यादिति॥

न। प्रतिषिद्धसर्वविशेषत्वाद्ब्रह्मणः। 'निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनम्' (श्वेता० ६। १९) 'अस्थूलमनण्वह्रस्वमदीर्घम्' (बृ० ३। ८। ८), 'सबाह्याभ्यन्तरो ह्यजः' (मु० २। १। २), 'स वा एष महानज आत्माऽजरोऽमरोऽमृतोऽभयो ब्रह्म' (बृ० ४। ४। २५), 'स एष नेति नेत्यात्मा' (बृ० ३। ९। २६) इत्यादिश्रुतिस्मृतिन्या-

---

எவ்விதமறைவுமில்லாததோ அது ப்ரம்ஹமாகும்" "யாதொரு ஆத்மாவுண்டோ அது ஸர்வாந்தரமானது" "இவையாவும் ஆத்மாவே" "இந்த விப்வம் யாவும் இந்தச் சிறந்த ப்ரம்ஹமே" என்றதாதி சுருதிகளால் நிப்பரயிக்கப்பட்ட விசேஷத்தை யுடையதும், ஸர்வகதமும், (எங்கும் நீக்கமற நிறைந்ததும்) ஸர்வாந்தரமுமான யாதொரு பரப்ரம்ஹமுண்டோ அதற்குக் கந்தவ்யத்வமானது (கதியினால் அடையக்கூடியதாக இருத்தலானது) ஒருபொழுதும் ஸம்பவிக்கமாட்டாது. அடையப்பட்டதே திரும்பவும் அடையப்படமாட்டாதன்றே. வேறாகவுள்ளவன் வேறாகவுள்ளதை அடைகிறான் என்றல்லவோ உலகில் ப்ரஸித்திபிருக்கிறது.

சங்கை—உலகில் அடையப்பட்டவற்றுக்குங்கூட வேறுதேசத்தை (அவயத்தை) யொட்டி கதியினால் அடையப்படுதல் காணப்படுகிறது. அதாவது:—பூமியிலிருப்பவனே வேறுதேசத்தை யொட்டி பூமியை அடைகிறான் என்றும். அவ்விதமே வேறுபடாவிடினுங்கூட பாலன் வேறுகாலத்தை யொட்டி யேற்படுவதும் தன்னிடமே உள்ளதுமான கிழத்தன்மையை யடைவதாகக் காணப்படுகிறது. அதுபோல ப்ரம்ஹமும் ஸர்வசக்தியுடனும் கூடியிருப்பதால் யாதானுமொருமுறையில் அதற்குக் கந்தவ்யத்வமானது ஸம்பவிக்கலாம் எனின்?

உத்தரம்—இல்லை. ப்ரம்ஹம் எத்தகைய விசேஷமுமற்றதெனச் சொல்லப்பட்டிக்கிறது. "அவயவமற்றது, கிரியையற்றது, சாந்தமானது, குற்றமற்றது, அழுக்கற்றது" என்றும், "ஸ்தூலத்தைவிட வேறுபட்டது, அணுவைவிட வேறுபட்டது, ஹ்ரஸ்வத்தைவிட வேறுபட்டது, தீர்க்கத்தைவிட வேறுபட்டது" என்றும், "உள்ளிலும் வெளியிலும் கலந்துள்ளது, ஜனனமற்றது" என்றும், "அந்த இந்த மஹானும் அஜனும் அஜரனும், அமரனும் அமிருதனும் அபயனுமான ஆத்மாவானது ப்ரம்ஹமாகும்" என்றும், "அந்த இந்த ஆத்மா இதில்லை இதில்லை எனவிலக்கிக் காணக்கூடியது" என்றுமாதிய ப்ருதிஸ்மிருதி நியாயங்களைக் கொண்டு தேசம் காலம் முதலிய எத்தகைய விசேஷத்தின் சேர்க்கையும்

येषां न देशकालादिविशेषयोगः परमात्मनि कल्पयितुं शक्यते। येन भूप्रदेशवयोवस्थान्यायेनास्य गन्तव्यता स्यात्। भूवयसोस्तु प्रदेशावस्थादिविशेषयोगादुपपद्यते देशकालविशिष्टा गन्तव्यता। जगदुत्पत्तिस्थितिप्रलयहेतुत्वश्रुतेरनेकशक्तित्वं ब्रह्मण इति चेत्। न। विशेषनिराकरणश्रुतीनामनन्यार्थत्वात्। उत्पत्त्यादिश्रुतीनामपि समानमनन्यार्थत्वमिति चेत्। न। तासामेकत्वप्रतिपादनपरत्वात्। मृदादिदृष्टान्तैर्हि सतो ब्रह्मण एकस्य सत्यत्वं विकारस्य चानृतत्वं प्रतिपादयच्छास्त्रं नोत्पत्त्यादिपरं भवितुमर्हति। कस्मात्पुनरुत्पत्त्यादिश्रुतीनां विशेषनिराकरणश्रुतिशेषत्वं न पुनरितरशेषत्वमितरासामिति। उच्यते—विशेषनिराकरणश्रुतीनां निराकाङ्क्षार्थत्वात्। नह्यात्मन एकत्वनित्यत्वशुद्धत्वाद्यवगतौ सत्यां भूयः काचिदाकाङ्क्षोपजायते पुरुषार्थसमाप्तिबुद्ध्युपपत्तेः 'तत्र को मोहः कः शोक

---

பரமாத்மாவினிடத்தில் கல்பிக்கமுடியாது. அவ்விதமானாலன்றோ பூமியின்ப்ரதேசம், வயதின் அவஸ்தை இவற்றின் நியாயத்தைக் கொண்டு ப்ரம்ஹத்துக்கு கந்தவ்யத்வம் சொல்லுவது பொருந்தும். பூமிக்கும் வயதுக்குமோ ப்ரதேசம் அவஸ்தை முதலியவிசேஷயோக மிருப்பதால் தேசகாலவிசேஷத்தை யொட்டிக் கந்தவ்யத்வம் சொல்லுவது பொருந்தலாம்.

சங்கை—ஜகத்தின் உத்பத்தி ஸ்திதி, ப்ரளயம் இவற்றுக்குக்காரணமாக விருத்தலைச் சொல்லும் சுருதி யிருப்பதால் ப்ரம்ஹத்துக்கு அனேக சக்தியுள்ளதாக இருத்தல் ஸம்பவிக்கலாம் எனின்?

உத்தரம்—அது பொருந்தாது. எத்தகைய விசேஷத்தையும் மறுக்கும் சுருதிகளுக்கு வேறுபயன் ஸம்பவிக்காமலிருத்தலே அதன் காரணமாகும்.

சங்கை—உத்பத்தியாதிகளைச் சொல்லும் சுருதிகளுக்கும் வேறு பயன் ஸம்பவிக்காதிருத்தல் ஸமானமாகவே இருக்கிறது எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. அந்த ஶ்ருதிகள் ஐக்கியத்தைச் சொல்லுவதாக ஏற்படுவதே அதன் காரணமாகும். மிருத் முதலியவற்றின் திருஷ்டாந்தங்களினால் ஸத்தும் ஏகமுமான ப்ரம்ஹத்துக்கு ஸத்யத்வத்தையும், காரியத்துக்கு அந்ருதத்வத்தையும் சொல்லுகிற சாஸ்திரமானது உத்பத்தியாதிகளைச் சொல்லவந்ததாகக் கொள்ளமுடியாது.

சங்கை—உத்பத்யாதிகளை சொல்லும் ஶ்ருதிகள் விசேஷத்தை மறுக்கும் (நிர்விசேஷ) ஶ்ருதிகளுக்கு அங்கமெனச் சொல்லவேண்டுமேயொழிய உத்பத்யாதிஶ்ருதிகளுக்கு நிர்விசேஷஶ்ருதிகள் அங்கமெனச் சொல்லமுடியாதென்பது எங்ஙனம் எனின்?

உத்தரம்—இவ்விஷயத்தில் சொல்லப்படுகிறது. விசேஷத்தை மறுக்கும் ஶ்ருதிகள் மற்றெதையும் எதிர்பாராது தனது பொருளை விளக்கக்கூடியனவாகவிருக்கின்றன. ஆத்மா ஏகனென்றும் நித்யனென்றும் சுத்தனென்றும் அறிவு ஏற்பட்டதும் திரும்பவும் வேறு அபேக்ஷை எதுவும் உண்டாவதில்லை. புருஷார்த்தமானது கிடைத்துவிட்டதென்ற எண்ணம் பொருந்தக்கூடியதாக வாவதே அதன்

एकत्वमनुपश्यतः' (ईशा० ७), 'अभयं वै जनक प्राप्तोऽसि' (बृ० ४।२।४), 'विद्वान्न बिभेति कुतश्चन। एतं ह वाव न तपति किमहं साधु नाकरवं किमहं पापमकरवम्' (तैत्ति० २।९।१), इत्यादिश्रुतिभ्यः। तथैव च विदुषां तुष्ट्यनुभवादिदर्शनात्। विकारानृताभिसन्ध्यपवादाच्च 'मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति' इति। अतो न विशेषनिराकरणश्रुतीनामन्यशेषत्वमवगन्तुं शक्यते। नैवमुत्पत्त्यादिश्रुतीनां निराकाङ्क्षार्थप्रतिपादनसामर्थ्यमस्ति। प्रत्यक्षं तु तासामन्यार्थत्वं समनुगम्यते। तथाहि 'तत्रैतच्छुङ्गमुत्पतितं सोम्य विजानीहि नेदममूलं भविष्यति' (छा० ६।८।३) इत्युपन्यस्योदर्के सत एवैकस्य जगन्मूलस्य विज्ञेयत्वं दर्शयति। 'यतो वा इमानि भूतानि जायन्ते। येन जातानि जीवन्ति। यत्प्रयन्त्यभिसंविशन्ति। तद्विजिज्ञासस्व। तद्ब्रह्मेति'

---

காரணமாகும். அவ்விதமே "ப்ரம்ஹாத்ம ஏகத்வத்தை ஸாக்ஷாத்கரிப்பவர்க்கு அந்நிலையில் மோஹமேது? சோகமேது? என்றும், "ஹேஜனக! அபயத்தையே யன்றோ யடைந்தவனாகின்றாய்" என்றும், "ஐக்யஸாக்ஷாத்காரத்தை யடைந்தவன் எதனின்றும் பயத்தை யடைவதில்லை. இத்தகைய ஆத்மக்ஞானியை நான் என் புண்ணியத்தைச் செய்தேனில்லை. பாபத்தை ஏன் செய்தேன் என்ற எண்ணம் வாட்டுவதில்லை" என்றுமாகிய சுருதிகளுமிருக்கின்றன. அவ்விதமே ஐக்யஸாக்ஷாத்கரத்தை யடைந்தவித்வான்களுக்கு துஷ்டியனுபவாதிகள் (ஆத்மக்ஞானத்தைத் தவிர்த்து மற்றதில் பற்றின்மை) காணவும் படுகின்றன. பொய்பான காரியத்தில் அபிஸந்தி (பற்று) யுள்ளவனுக்கு இத்தகைய அனுபவம் மறுக்கவும் பட்டிருக்கிறது. அதாவது:—"எவன் இவ்விஷயத்தில் பேதமுள்ளது போலப் பார்க்கிறானோ அவன் மரணத்தினின்றும் மரணத்தை (ஜனனமரணாத்மகமான துக்கத்தை) அடைகிறான்" என்றும். உத்பத்தியாதி ஸ்ருதிகளுக்கோ இவ்விதம் எவ்வித ஆகாங்க்ஷையு மில்லாதபொருளைத் தெரிவித்தல் ஸம்பவிக்கமுடியாது. அந்த உத்பத்தியாதி ஸ்ருதிகளுக்கு வேறுபொருளைப் போதித்தலானது ப்ரத்யக்ஷமாகவே தொடர்ந்து காணவும்படுகிறது. அதாவது:—"அந்த மூலகாரணமான ப்ரம்ஹத்தினிடத்தில் இந்தச் சுங்கமானது (ஜகத்ரூபமான காரியமானது) உண்டாயிற்று என ஹே ஸோம்ய! நீ அறிந்து கொள்ளு. இந்தக்கார்யமானது காரணமில்லாது உண்டாகமாட்டாது" என்று சொல்லி முடிவில் ஜகத்காரணமான ஸத்பத்பொருள் ஒன்றுக்கே விக்ஞேயத்வத்தைச் சுருதி தெரிவிக்கிறது. "எதிலிருந்தே இந்தப் பூதங்கள் உண்டாகின்றனவோ உண்டானவை எதனால் ஜீவிக்கின்றனவோ லயத்தையடையும் எவை எதில் லயத்தையடைகின்றனவோ அதை அறிந்துகொள்ள விரும்புவாயாக. அது ப்ரம்ஹமாகும்" என்றும் சொல்லுகிறது. இவ்விதம் உத்பத்தியாதி ஸ்ருதிகளுக்கு ஐகாத்ம்யக்ஞானத்தை உபதேசிக்கும் தன்மை காணப்படுவதால் ப்ரம்ஹத்துக்கு அனேக சக்தியுடன் சேர்க்கை ஸம்பவிக்கமாட்டாது. அதனால் கந்தவ்யமாக (கதியினாலடையக்கூடியதாக) இருத்தலும் பொருந்த மாட்டாது. "அவனுடைய ப்ராணன்கள் வெளிக்கிளம்புவதில்லை ப்ரம்ஹமாகவே இருந்துகொண்டு ப்ரம்ஹத்தை யடைகிறான்" என்று

(तै० ३।१।१) इति च। एवमुत्पत्त्यादिश्रुतीनामैकात्म्यावगमपरत्वान्नानेकशक्तियोगो ब्रह्मणः। अतश्च गन्तव्यत्वानुपपत्तिः। 'न तस्य प्राणा उत्क्रामन्ति ब्रह्मैव सन्ब्रह्माप्येति' (बृ० ४।४।६) इति च परस्मिन्ब्रह्मणि गतिं निवारयति। तद्व्याख्यातं 'स्पष्टो ह्येकेषाम्' (ब्र० सू० ४।२।१३) इत्यत्र॥

गतिकल्पनायां च गन्ता जीवो गन्तव्यस्य ब्रह्मणोऽवयवो विकारो ऽन्यो वा ततः स्यात्। अत्यन्ततादात्म्ये गमनानुपपत्तेः। यद्येवं ततः किं स्यात्। उच्यते। यद्येकदेशस्तेनैकदेशिनो नित्यप्राप्तत्वान्न पुनर्ब्रह्मगमनमुपपद्यते। एकदेशैकदेशित्वकल्पना च ब्रह्मण्यनुपपन्ना निरवयवत्वप्रसिद्धेः। विकारपक्षेऽप्येतत्तुल्यं विकारेणापि विकारिणो नित्यप्राप्तत्वात्। नहि घटो मृदात्मतां परित्यज्यावतिष्ठते परित्यागे वाऽभावप्राप्तेः। विकारावयवपक्षयोश्च तद्वतः स्थिरत्वाद्ब्रह्मणः संसारगमनमप्यनवक्लृप्तम्। अथान्य एव जीवो ब्रह्मणः। सोऽणुर्व्यापी मध्यमपरिमाणो वा भवितुमर्हति। व्यापित्वे गमनानुपपत्तिः।

---

மான ஶ்ருதியானது பரம்ப்ரம்ஹத்தினிடத்தில் கதியை மறுக்கிறது. அது "ஸ்பஷ்டோஹி ஏகேஷாம்" என்ற விடத்தில் வியாக்யானஞ் செய்யப்பட்டுமிருக்கிறது.

கதியைக் கல்பித்தாலோ அப்பொழுது கந்தாவான (போகிறவனுன) ஜீவன் கந்தவ்யமான (போகவேண்டியதான) ப்ரம்ஹத்துக்கு அவயவமாகவோ, காரியமாகவோ வேருகவோ ஆகவேண்டி வந்துவிடும். அத்யந்ததாதாத்மியம் (முற்றிலும் ப்ரம்ஹஸ்வரூபமாகவே இருத்தல்) சொன்னுலோ கமனமானது பொருந்தவும் மாட்டாது. இவ்விதம் சொன்னுல் அதனின்றும் கிடைப்பது யாதென்னில்? சொல்லுகிருேம். ஜீவன் ப்ரம்ஹத்தினுடைய ஏகதேசம் (அவயவம்) ஆனுலோ அந்த அவயவமான ஜீவனுல் அவயவியான ப்ரம்ஹமானது எப்பொழுதுமே அடையப்பட்டிருப்பதால் திரும்பவும் ப்ரம்ஹத்தை யடைவதாகச் சொல்லுவது பொருந்தாது. ப்ரம்ஹத்தினிடத்தில் அவயவாவயவிகல்பனை செய்வதும் பொருந்தாது. ப்ரம்ஹம் எவ்வித அவயவமும் அற்றது என்ற (ஶ்ருதி) ப்ரஸித்தியிருப்பதே அதன் காரணமாகும். ஜீவனை ப்ரம்ஹத்தின் காரியம் என்று சொல்லும் பக்ஷத்திலுங் கூட இந்தத் தோஷம் ஸமானமாகவே இருக்கிறது. காரியத்துடன் காரணப்பொருள் நித்யப்ராப்தமாகவே இருக்கிறது என்ரும். குடமாகிற காரியமானது காரணமாகிற மண்ணினுருவத்தை விடுத்து தனித்து இருப்பதில்லையன்ருே. விட்டுத் தனித்திருக்குமாயின் காரியரூபத்துக்கே அபாவம் ப்ராப்த்தமாகவாகிவிடும். (ஜீவன்) ப்ரம்ஹத்தின் காரியமென்ருே அவயவமென்ருே சொல்லும் பக்ஷங்களிலும் அவ்விரண்டுமுள்ள ப்ரம்ஹமானது ஸ்திரமாக விருப்பதால் அதற்கு ஸம்ஸாரகமனஞ் சொல்லுவதும் பொருத்தமற்றதாக வாகிவிடத்தெரியும். ஜீவன் ப்ரம்ஹத்தைவிட வேறுபட்டவனே என்ருலோ. அந்த ஜீவன் அணுவாகவோ, வியாபியாகவோ, மத்யமபரிமாண முள்ளவனுகவோ தான் ஆகவேண்டும்,

मध्यमपरिमाणत्वे चानित्यत्वप्रसङ्गः। अणुत्वे कृत्स्नशरीरवेदनानुपपत्तिः। प्रतिषिद्धे चाणुत्वमध्यमपरिमाणत्वे विस्तरेण पुरस्तात्। परस्माच्चान्यत्वे जीवस्य 'तत्त्वमसि' (छां० ६।८।७) इत्यादिशास्त्रबाधप्रसङ्गः। विकारावयवपक्षयोरपि समानोऽयं दोषः। विकारावयवयोस्तद्वतोऽनन्यत्वाददोष इति चेत्। न। मुख्यैकत्वानुपपत्तेः। सर्वेष्वेतेषु पक्षेष्वनिर्मोक्षप्रसङ्गः। संसार्यात्मत्वानिवृत्तेः। निवृत्तौ वा स्वरूपनाशप्रसङ्गः। ब्रह्मात्मत्वानभ्युपगमाच्च। यत्तु कैश्चिज्जल्प्यते नित्यानि नैमित्तिकानि कर्माण्यनुष्ठीयन्ते प्रत्यवायानुत्पत्तये काम्यानि प्रतिषिद्धानि च परिह्रियन्ते स्वर्गनरकानवाप्तये सांप्रतदेहोपभोग्यानि च कर्माण्युपभोगेनैव क्षप्यन्त इत्यतो वर्तमानदेहपातादूर्ध्वं देहान्तरप्रतिसंधानकारणाभावात्स्वरूपावस्थानलक्षणं कैवल्यं विनापि ब्रह्मात्मतयैवंवृत्तस्य सेत्स्यतीति। तदसत्। प्रमाणाभा-

---

வியாபியாகச் சொல்லும் பக்ஷத்தில் அவனுக்கு கமனம் பொருந்த மாட்டாது. மத்யம பரிமாணம் சொன்னுலோ அநித்யத்வம் வந்து விடத்தெரியும். அணுத்வம் சொன்னுலோ முழுசரீரத்திலுமுள்ள அறிவு ஏற்படாமல் ஆகிவிடும். அணுத்வம் மத்யமபரிமாணத்வம் இரண்டும் முந்தி இரண்டாவது அத்தியாயத்தில் மறுக்கப் பட்டு மிருக்கிறது. ஜீவனைப் பரமாத்மாவைவிட வேருகச் சொன்னுல் "அதாக நீ இருக்கிருய்" என்றதாதி சாஸ்திரத்துக்குப் பாதம் வந்துவிடும். விகாரம்(காரியம்) அவயவம் என்ற இரண்டுபக்ஷங்களிலும் கூட இந்தத்தோஷம் ஸமானமாகவே இருக்கிறது.

சங்கை—விகாரம் அவயவம் இவ்விரண்டுக்கும், அவையுள்ளவற்றுக்கும் அபேதமிருப்பதால் தோஷமில்லை என்கிருேம் எனின்?

உத்தரம்—அது பொருந்தாது. முக்கியமான ஏகத்வம் (அபேதம்) ஸம்பவிக் காததே அதன் காரணமாகும். இந்த எல்லாப்பக்ஷங்களிலும் மோக்ஷம் ஸம்பவிப் பதற்கு மில்லாமல் போகத்தெரியும். ஸம்ஸாரி ஆத்மத்தன்மைக்கு நிவிருத்தியில் லாதிருப்பதே அதன் காரணமாகும். (இவர்களால்) ப்ரம்ஹாத்மைக்யம் ஒப்பப் படாமலு மிருக்கிறது.

நித்யங்களும் நைமித்திகங்களுமான கர்மங்களை ப்ரத்யவாயத்தை(பாபத்தைப்) போக்கவேண்டி அனுஷ்டிக்கிருேம். ஸ்வர்க்கமோ நரகமோ வராமலிருக்கவேண்டி காம்யங்களும், சாஸ்திரநிஷித்தங்களுமான கர்மங்களை விலக்கி விடுகிருேம். இது போழ்துள்ள தேஹத்தினுல் அனுபவிக்கத்தகுந்தகர்மங்களை அனுபவித்தே தேய்த்து விடுகிருேம். ஆனதுபற்றி இந்தத் தேஹம் போனபிறகு வேறுதேஹம் வரு வதற்குரிய காரணமில்லாமையால் ப்ரம்ஹாத்மைக்யக்ஞானமில்லாமலே ஸ்வரூபா வஸ்தான ரூபமான கைவல்யமானது இம்மாதிரியுள்ளவனுக்குத் தானுகவே ஸித் தித்து விடலாம் எனச் சிலர் சொல்லுகின்றனர். அதுபொருந்தாது. ப்ரமாண மில்லாமையே அதன் காரணமாகும். மோக்ஷத்தில் விருப்பமுள்ளவன் இவ்விதம் செய்யவேண்டுமென ஒரு சாஸ்திரத்திலும் இது சொல்லப்படவில்லை யன்ருே. யாது காரணத்தால் ஸம்ஸாரமானது கர்மமூலமேற்படுகிறதோ அதேகாரணத்தால்

वात्। नह्येतच्छास्त्रेण केनचित्प्रतिपादितं मोक्षार्थीत्थं समाचरेदिति। स्वमनीषया त्वेतत्तर्कितं यस्मात्कर्मनिमित्तः संसारस्तस्मान्निमित्ताभावान्न भविष्यतीति। नचैतत्तर्कयितुमपि शक्यते निमित्ताभावस्य दुर्ज्ञानत्वात्। बहूनि हि कर्माणि जात्यन्तरसंचितानीष्टानिष्टविपाकान्येकैकस्य जन्तोः संभाव्यन्ते। तेषां विरुद्धफलानां युगपदुपभोगासंभवात्कानिचिल्लब्धावसराणीदं जन्म निर्मिमते कानिचित्तु देशकालनिमित्तप्रतीक्षाण्यासत इत्यतस्तेषामवशिष्टानां सांप्रतेनोपभोगेन क्षपणासंभवान्न यथावर्णितचरितस्यापि वर्तमानदेहपाते देहान्तरनिमित्ताभावः शक्यते निश्चेतुम्। कर्मशेषसद्भावसिद्धिश्च "तद्य इह रमणीयचरणाः" "ततः शेषेण" इत्यादिश्रुतिस्मृतिभ्यः। स्यादेतत्। नित्यनैमित्तिकानि तेषां क्षेपकाणि भविष्यन्तीति। तन्न। विरोधाभावात्। सति हि विरोधे क्षेप्यक्षेपकभावो भवति। नच जन्मान्तरसञ्चितानां सुकृतानां नित्यनैमित्तिकैरस्ति विरोधः। शुद्धिरूपत्वाविशेषात्। दुरितानां त्वशु-

---

நிமித்தமில்லாவிடில் ஸம்ஸாரம் போய்விடும் எனத் தனது புத்தியால் இது ஊஹிக்கப்பட்டதே யாகும். நிமித்தமின்மையானது அறிதற்கியலாததாகையால் இது ஊஹிப்பதற்குக் கூடியது மன்று. ஒவ்வொருமனுஷ்யனுக்கும் சுகதுக்கபலனைத் தரக்கூடியனவும் வேறுபிறவியில் ஸம்பாதிக்கப்பட்டனவுமான வெகுகர்மங்கள் ஸம்பவிக்கக் கூடியனவன்றோ? விருத்தமான பலனையுடைய அந்தக்கர்மங்களுக்கு ஒரேஸமயத்தில் உபபோகம் ஸம்பவிக்காததலால் சிலகர்மங்கள் பலனைத்தர வாரம்பித்தனவாய் இந்தஜன்மத்தைத் தருகின்றன, சிலகர்மங்கள் தேசம் காலம் நிமித்தம் இவற்றை எதிர்பார்த்துக் கொண்டு இருக்கின்றன, என்ற இக்காரணத்தால் மீதமாயுள்ள அந்தக்கர்மங்களுக்கு இந்தப் பிறவியிலுள்ள அனுபவத்தினல்தேய்தல் ஸம்பவிக்காததலால் முன்னர் வர்ணிக்கப்பட்ட ஆசாரமுள்ளவனுக்குங்கூட இப்பொழுதுள்ள தேஹம் போனபோதிலும் வேறுதேஹத்துக்குரிய நிமித்தத்தின் அபாவமானது நிஸ்சயிக்க முடியாததாக இருக்கிறது. மேலும் "அவர்களுள் எவர்கள்ரமணீயமான ஆசார முள்ளவர்களோ அவர்கள் ரமணீயமான பிறவியை யடைகின்றனர்." என்றும், "அனுபவிக்கப்பட்ட கர்மத்தைக் காட்டிலும் மீதமுள்ளகர்மத்தினல் (சிறந்த பிறவி முதலியவற்றை யடைகின்றனர்)" என்றுமாதிய சுருதிஸ்மிருதிகளைக் கொண்டு அனுபவிக்கப்பட்ட கர்மத்தைக் காட்டிலும் மீதமான கர்மத்தின் இருப்பானது ஸித்திக்கிறது.

இஃதிருக்கட்டும். நித்ய நைமித்திகங்களான கர்மங்கள் அந்த மீதமுள்ள கர்மங்களைத் தேய்க்கக்கூடியனவாகவாகலாமன்றோ எனின்? அது சொல்ல முடியாது. விரோதமில்லாமையே அதன் காரணமாகும். விரோதமிருந்தாலன்றோ ஒருகர்மாவினல் மற்றொரு கர்மம் தேய்க்கப்படுகிறது என்பது ஸம்பவிக்கும். வேறுபிறவியில் ஸஞ்சிதங்களான புண்ணியகர்மங்களுக்கு நித்தியநைமித்திக கர்மங்களுடன் விரோதமானது ஸம்பவிக்கமாட்டாதன்றோ. சுத்திரூபமாக இருத்தல் இரண்டுக்கும் ஸமானமாக இருப்பதால் என்றும். பாபகர்மங்களோ அசுத்திரூபமாக இருப்பதால் விரோதமேற்படுங்கால் நித்யநைமித்திகங்களால் அவற்றுக்குத் தேய்தல் ஸம்பவிக்கட்டும். அவ்வளவினல் மட்டும் வேறுதேஹம் வருவதற்குரிய

च्छिद्ररूपत्वात्सति विरोधे भवतु क्षपणं न तु तावता देहान्तरनिमित्ताभावसिद्धिः। सुकृतनिमित्तत्वोपपत्तेः। दुरितस्याप्यशेषक्षपणानवगमात्। नच नित्यनैमित्तिकानुष्ठानात्प्रत्यवायानुत्पत्तिमात्रं न पुनः फलान्तरोत्पत्तिरिति प्रमाणमस्ति फलान्तरस्याप्यनुनिष्पादिनः संभवात्। स्मरति ह्यापस्तम्बः—'तद्यथाम्रे फलार्थे निर्मिते छायागन्धावनूत्पद्येते एवं धर्मं चर्यमाणमर्था अनूत्पद्यन्ते' इति। नचासति सम्यग्दर्शने सर्वात्मना काम्यप्रतिषिद्धवर्जनं जन्मप्रायणान्तराले केनचित्प्रतिज्ञातुं शक्यम्। सुनिपुणानामपि सूक्ष्मापराधदर्शनात्। संशयितव्यं तु भवति तथापि निमित्ताभावस्य दुर्ज्ञानत्वमेव। नचानभ्युपगम्यमाने ज्ञान गम्ये ब्रह्मात्मत्वे कर्तृत्वभोक्तृत्वस्वभावस्यात्मनः कैवल्यमाकाङ्क्षितुं शक्यम्। अग्न्यौष्ण्यवत्स्वभावस्यापरिहार्यत्वात्। स्यादेतत्। कर्तृत्वभोक्तृत्वकार्यमनर्थो न तच्छक्तिस्तेन शक्त्यवस्थानेऽपि कार्यपरिहारादुपपन्नो मोक्ष इति। तच्च न। शक्तिसद्भावे कार्यप्रसवस्य दुर्निवारत्वात्। अथापि स्यान्न केवला शक्तिः कार्यमारभतेऽनपेक्ष्यान्यानि निमित्तानि।

---

நிமித்தத்தின் அபாவமானது ஸித்திக்காதன்றோ? புண்ணியகர்ம நிமித்தமாக அவைஸம்பவிக்கக் கூடியதாக இருப்பதாலென்க. பாபகர்மத்துக்குங்கூட மீதமின்றி நாசமேற்பட்டதாக அறியவும் முடியாது. நித்தியநைமித்திக கர்மானுஷ்டானத்திலிருந்து ப்ரத்யவாயம் (பாபம்) மட்டுமுண்டாவதில்லையே யொழிய வேறுபலன் எதுவுமுண்டாகமாட்டாது என்பதில் ப்ரமாணம் கிடையாது. அவற்றையொட்டி யுண்டாகும் வேறுபலனும் ஸம்பவிக்கலாம். அவ்விதமே ஆபஸ்தம்பரும் "மாமரம் பழத்துக்கு வேண்டி நடப்பட்டபோதிலும் நிழலும் மணமும் ஏற்படுகின்றது எவ்விதமோ அவ்விதமே அனுஷ்டிக்கப்படும் தர்மத்தை யொட்டிப் பலன்களும் உண்டாகின்றன" என வுபதேசித்திருக்கிறார். ஸம்யக்தரிசனம் (ப்ரம்ஹாத்மைக்ய ஜ்ஞானம்) இல்லாவிடில் பிறவிக்கும் மரணத்துக்கும் இடையில் முற்றிலும் காம்யகர்மம் நிஷித்தகர்மம் இவற்றின் அபாவத்தை ஒருவனாலும் ப்ரதிக்ஞை செய்யமுடியாதன்றோ. மிக்கநுட்பமான புத்தியுள்ளவர்களுக்குங்கூட நுட்பமான அபராதம் (தவறு) காணவும் படுகிறது. ஸம்சயப்படகூடியதாகமட்டுமாகிறது, ஆயினும் நிமித்தமின்மையானது அறியமுடியாததாகவே யாகிறது. ஜ்ஞானத்தினால் ஏற்படக்கூடிய ப்ரம்ஹாத்மைக்யத்தை யொப்பாவிடில் கர்த்ருத்வ போக்திருத்வத்தை ஸ்வபாவமாக வுடைய ஆத்மாவுக்குக் கைவல்யத்தை ஆகாங்க்ஷிக்க (எதிர்பார்க்க) வும் முடியாது. அக்னியின் சூடுகையானது போல ஸ்வபாவமானது விலக்கமுடியாததாகவே ஆகிவிடும்.

சங்கை—கர்த்ருத்வம் போக்த்ருத்வம் இவற்றின் காரியமானது அனர்த்தத்தைத் தருமே யொழிய அவற்றின் சக்தியானது அனர்த்தத்தைத் தரமாட்டாது. சக்தியானது இருந்தபோதிலுங்கூட காரியமானது இல்லாமலாகி விடுவதால் மோக்ஷமுண்டாவது பொருந்தலாம் எனின்?

உத்தரம்—அதுவும் பொருந்தாது. சக்தியிருக்குமாயின் அதன் மூலம் காரியமுண்டாவதைத் தடுக்கவே முடியாது.

अत एकाकिनी सा स्थितापि नापराध्यतीति। तच्च न। निमित्तानामपि शक्तिलक्षणेन संबन्धेन नित्यसंबद्धत्वात्। तस्मात्कर्तृत्वभोक्तृत्वस्वभावे सत्यात्मन्यसत्यां विद्यागम्यायां ब्रह्मात्मतायां न कथंचन मोक्षं प्रत्याशाऽस्ति। श्रुतिश्च—'नान्यः पन्था विद्यतेऽयनाय' (श्वे० ३। ८) इति ज्ञानादन्यं मोक्षमार्गं वारयति। परस्मादनन्यत्वेऽपि जीवस्य सर्वव्यवहारलोपप्रसङ्गः प्रत्यक्षादिप्रमाणाप्रवृत्तेरिति चेत्। न। प्राक्प्रबोधात्स्वप्नव्यवहारवत्तदुपपत्तेः। शास्त्रं च 'यत्र हि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति' (बृ० २।४।१४;४।५।१५) इत्यादिनाऽप्रबुद्धविषये प्रत्यक्षादिव्यवहारमुक्त्वा पुनः प्रबुद्धविषये 'यत्र त्वस्य सर्वमात्मैवाभूत्तत्केन कं पश्येत्' (बृ० २।४।१४;४।५।१५) इत्यादिना तदभावं दर्शयति। तदेवं परब्रह्मविदो गन्तव्यादिविज्ञानस्य बाधितत्वान्न कथञ्चन गतिरुपपादयितुं शक्या॥

---

சங்கை—வேறு நிமித்தங்களை யபேக்ஷிக்கமால் தனித்த சக்திமட்டும் காரியத்தை யாரம்பிக்கமாட்டாது. ஆகவே தனித்த அந்த சக்தியிருந்த போதிலுங்கூட கெடுதலை யுண்டுபண்ணிவிடாது எனின்?

உத்தரம்—அதுவும் பொருந்தாது. (சக்தியானது எந்த நிமித்தங்களை யபேக்ஷித்துக் காரியத்தை யுண்டாக்குமோ) அந்த * நிமித்தங்களும் சக்திருபமான ஸம்பந்தத்தால் எப்பொழுதும் ஆத்மாவினிடம் ஸம்பந்தத்திருப்பதாலென்க. ஆகவே ஆத்மாவானவன் கர்த்ருத்வ போக்த்ருத்வ ஸ்வபாவமுள்ளவனுக விருக்குங்கால் வித்யைமூலம் ஏற்படக்கூடிய ப்ரம்ஹாத்மைக்யமானது இல்லாமல் போகவே மோக்ஷத்தைக் குறித்து ஆசைப்படக்கூட ஒருபொழுதும் முடியாது. சுருதியும் "மோக்ஷத்தையும் பொருட்டு (க்ஞானத்தைவிட) வேறுன மார்க்கம் கிடையாது" என்றதால் க்ஞானத்தைக் காட்டிலும் வேறுன மோக்ஷமார்க்கத்தை மறுக்கிறது.

சங்கை—ஜீவன் பரமாத்மாவை விட வேறுபட்டவனன்று என்றுல் ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களுக்கு ப்ரவிருத்தியில்லாமல் போய்விடுவதால் எல்லா வியவஹாரங்களுக்கும் லோபம் (இன்மை) வந்துவிடும் எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரம் வரும்வரை ஸ்வப்பினவியவஹாரம் போல அது பொருந்தக்கூடியதாகவே ஆகிறது. சாஸ்திரமும் "எந்நிலையில் த்வைதம்போல வாகிறதோ அந்நிலையில் இதரனுக இருந்து கொண்டு இதரத்தைப் பார்க்கிறுன்" என்றதாதியினுல் க்ஞானமுண்டாகாதவன் விஷயத்தில் ப்ரத்யக்ஷாதி வியவஹாரத்தைச் சொல்லித்திரும்பவும் க்ஞானம் வந்தவன் விஷயத்தில் "எந்நிலையில் இவனுக்கு எல்லாம் ஆத்மாவாகவே ஆகுமோ அந்நிலையில் எதைக் கொண்டு எதைப்பார்ப்பான்" என்றதாதியினுல் ப்ரத்ய

---

* கர்த்திருத்வ போக்திருத்வ சக்தி எப்படி நித்யமாக வொப்பப்படுகிறதோ அப்படியே நிமித்தங்களின் சக்தியும் நித்தியமாக இருப்பதால் இவ்விரண்டுக்கும் ஸம்பந்தமும் நித்யமாகவே ஆகக்கூடுமாதலால் மோக்ஷம் ஏற்படுவதற்கிடமில்லாமலாகிவிடும் என்பது கருத்து.

किंविषयाः पुनर्गतिश्रुतय इति। उच्यते—सगुणविद्याविषया भविष्यन्ति। तथाहि क्वचित्पञ्चाग्निविद्यां प्रकृत्य गतिरुच्यते क्वचित्पर्यङ्कविद्यां क्वचिद्वैश्वानरविद्याम्। यत्रापि ब्रह्म प्रकृत्य गतिरुच्यते यथा 'प्राणो ब्रह्म कं ब्रह्म खं ब्रह्म' (छा० ४।१०।५) इति 'अथ यदिदमस्मिन्ब्रह्मपुरे दहरं पुण्डरीकं वेश्म' (छा० ८।१।१) इति च तत्रापि वामनीत्वादिभिः सत्यकामादिभिश्च गुणैः सगुणस्यैवोपास्यत्वात्संभवति गतिः। न क्वचित्परब्रह्मविषया गतिः श्राव्यते यथा गतिप्रतिषेधः श्रावितः 'न तस्य प्राणा उत्क्रामन्ति' (बृ० ४।४।६) इति। 'ब्रह्मविदाप्नोति परम्' (तै० २।१।१) इत्यादिषु तु सत्यप्याप्नोतेर्गत्यर्थत्वे वर्णितेन न्यायेन देशान्तरप्राप्त्यसंभवात्स्वरूपप्रतिपत्तिरेवेयमविद्याध्यारोपितनामरूपप्रविलयापेक्षयाऽभिधीयते 'ब्रह्मैव सन्ब्रह्माप्येति' बृ० (४।४।७) इत्यादिवदिति द्रष्टव्यम्। अपिच

---

க்ஷாதி வியவஹாரத்தின் அபாவத்தைக் காட்பித்திருக்கிறது. ஆகவே இவ்விதம் பரப்ரம்ஹ க்ஞானமுள்ளவர்க்கு கந்தவ்யாதி விக்ஞானத்துக்கு (செல்லவேண்டிய இடத்தைப்பற்றிய க்ஞானத்துக்குப்) பாதமேற்படுவதால் அவர்க்குக் கதியை எப்பாடுபட்டும் ஸாதிக்கமுடியாது.

கதியைச் சொல்லும் சுருதிகள் எதை விஷயமாகக் கொண்டன எனின்? சொல்லப்படுகிறது. ஸகுணப்ரம்ஹோபாஸனத்தை விஷயமாகக் கொண்டதாக ஏற்படுகிறது. அதாவது:—சிலவிடத்தில் பஞ்சாக்னிவித்யையையும், சிலவிடத்தில் பர்யங்கவித்யையையும், சிலவிடத்தில் வைஶ்வாநரவித்யையையும் சொல்லத் தொடங்கி மார்க்கம் சொல்லப்படுகிறது என்றும். எந்தவிடத்தில் ப்ரம்ஹத்தைச் சொல்லத் தொடங்கி "ப்ராணோ ப்ரம்ஹ கம் ப்ரம்ஹ க்கம் ப்ரம்ஹ" என்றும் "பிறகு இந்தச் சரீரத்தில் யாதொரு இந்த ஸூக்ஷ்மமான புண்டரீகமாகிற இடமுண்டோ" என்றுமாகத் தொடங்கி மார்க்கமானது சொல்லப் படுகிறதோ அவ்விடத்திலுங்கூட வாமனீத்வம் முதலியனவும், ஸத்யகாமத்வம் முதலியனவுமான குணங்களுடன் ஸகுணப்ரம்ஹத்துக்கே உபாஸ்யத்வமானது ஸம்பவிப்பதால் அவ்விஷயத்தில் மார்க்கமானது ஸம்பவிக்கலாம். "அவனுடைய ப்ராணன்கள் வெளிக்கிளம்புவதில்லை" என்பதாய் எவ்விதம் கதியின் மறுப்பானது சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறதோ இவ்விதம் பரப்ரம்ஹவிஷயமான மார்க்கமானது ஒரு விடத்திலும் சொல்லப்படவில்லை. "ப்ரஹ்வித்தானவன் பரத்தை யடைகிறான்" என்றதாதி விடங்களிலோ வெனில் ஆப்னோதி என்றதற்குக் கதி என்ற அர்த்தமானதிருந்தபோதிலுங்கூட இதுவரை சொல்லப்பட்ட யுக்தியைக் கொண்டு தேசாந்தரப்ராப்தி யென்பது ஸம்பவிக்காதாகையால் அவித்யையினால் அத்யாரோபிதமான நாமரூபங்களின் ப்ரவிலயத்தை யொட்டி யேற்படும் இந்த ஸ்வரூபப்ராப்த்தியேதான் "ப்ரம்ஹமாகவே இருந்து கொண்டு ப்ரம்ஹத்தை யடைகிறான்" என்றதாதி விடங்களில் போலவே சொல்லப்படுகிறது எனக் கண்டுகொள்ளவேண்டும்.

மேலும் பரப்ரம்ஹவிஷயமாகச் சொல்லப்படும் கதியானது ருசியையுண்டு பண்ணுவதற்கு வேண்டியோ, அதைத்யானிப்பதற்கு வேண்டியோ தானிருக்க வேண்டும். அவற்றுள் கதியைச் சொல்லுதல் மூலம் பரப்ரம்ஹவித்துக்கு ருசி

परविषया गतिर्व्याख्यायमाना प्ररोचनाय वा स्यादनुचिन्तनाय वा। तत्र प्ररोचनं तावद्ब्रह्मविदो न गत्युक्त्या क्रियते। स्वसंवेद्येनैवाव्यवहितेन विद्यासमर्पितेन स्वास्थ्येन तत्सिद्धेः। नच नित्यसिद्धनिःश्रेयसनिवेदनस्यासाध्यफलस्य विज्ञानस्य गत्यनुचिन्तने काचिदपेक्षोपपद्यते। तस्मादपरब्रह्मविषया गतिः॥

तत्र परापरब्रह्मविवेकानवधारणेनापरस्मिन्ब्रह्मणि वर्तमाना गतिश्रुतयः परस्मिन्नध्यारोप्यन्ते। किं द्वे ब्रह्मणी परमपरं चेति। बाढं द्वे 'एतद्वै सत्यकाम परं चापरं च ब्रह्म यदोङ्कारः' (प्र० ५।२) इत्यादिदर्शनात्। किं पुनः परं ब्रह्म किमपरमिति। उच्यते। यत्राविद्याकृतनामरूपादिविशेषप्रतिषेधादस्थूलादिशब्दैर्ब्रह्मोपदिश्यते तत्परम्। तदेव यत्र नामरूपादिविशेषेण केनचिद्विशिष्टमुपासनायोपदिश्यते 'मनोमयः प्राणशरीरो भारूपः' (छा ३।१४।२) इत्यादिशब्दैस्तदपरम्। नन्वेवमद्वितीयश्रुतिरुपरुध्येत। न। अविद्याकृत-

---

யை யுண்டுபண்ணுதலானது செய்யப்படுவதில்லை. ஸ்வஸம் வேத்யமும் (தன்னாலேயே அறியக்கூடியதும்) எவ்விதமறைவு மற்றதும், வித்யையினால் ஸமர்ப்பிக்க (அறிவிக்கப்) பட்டதுமான ஸ்வாஸ்த்ய (ஸ்வரூபாவஸ்தானத்) தினாலேயே அது ஸித்தித்து விடுவதே அதன் காரணமாகும். மேலும், நித்யஸித்தமான நிஃஸ்ரேயஸத்தைத் தெரிவிப்பதும் ஸாத்யமான பலனற்றதுமான விக்ஞானத்துக்கு கதியை (மார்க்கத்தை) அனுசிந்தனம் செய்யும் விஷயத்தில் ஒருவிதமான அபேக்ஷையும் பொருந்துவதற்கில்லை. ஆகவே மார்க்கமானது அபரப்ரம்ஹ விஷயமானதேயாகும். அவ்விஷயத்தில் பரப்ரம்ஹம் இன்னது அபரப்ரம்ஹம் இன்னது எனப் பிரித்தறியாமை காரணமாக அபரப்ரம்ஹ விஷயமாகவுள்ள கதிஸ்ருதிகள் பரப்ரம்ஹத்தினிடத்தில் அத்யாரோபிக்க (ஏற்றிகூற) ப்படுகின்றன.

பரம் என்றும், அபரம் என்றுயாக ப்ரம்ஹம் இரண்டுண்டோ எனின்? ஆம். இரண்டுண்டு என்கிறோம் "ஹே ஸத்ரகாம! ஓங்காரம் எனபது யாதுண்டோ இதுவேதான் பரமும் அபரமுமான ப்ரம்ஹமாகும்" என்றதாதி சுருதிநிர்த்தேசம் காணப்படுவதே அதன் காரணமாகும். பரப்ரம்ஹம் என்பது எது? அபரப்ரம்ஹம் என்பது எது? எனின். சொல்லப்படுகிறது. எங்கிலேயில் அவித்யையினால் செய்யப்பட்ட நாமரூபாதி விசேஷங்களை மறுக்கும்வாயிலாக "அஸ்தூலம்" முதலிய சப்தங்களினால் ப்ரம்ஹமானது உபதேசப்படுகிறதோ அது பரம்ப்ரம்ஹமாகும், அந்த பரம்ப்ரம்ஹமே எங்கிலேயில் சிலநாமரூபாதி விசேஷத்துடன் கூடினதாக "மனோமய: ப்ராணசரீர: பாரூப:" என்றதாதி சப்தங்களினால் உபாஸனைக்கு வேண்டி உபதேசிக்கப்படுகிறதோ அது அபரப்ரம்ஹமாகும்.

சங்கை—அங்ஙனமாயின் அத்விதீயம் (இரண்டாவதற்றது) என்றுகூறும் சுருதி வீணாகிவிடுமன்றோ எனின்?

உத்தரம்—இல்லை. அவித்யையினால் செய்யப்பட்ட நாமரூபோபாதியுள்ளதாக இருப்பதுபற்றி அந்தத்தோஷம் பரிஹரிக்கப்பட்டதாக வாகிவிடுகிறது. அந்த அபரப்ரம்ஹோபாஸனத்துக்கு அவ்விடத்தில் "அவன் பிதிருலோகத்தில்

नामरूपोपाधिकतया परिहृतत्वात्। तस्य चापरब्रह्मोपासनस्य तत्संनिधौ श्रूयमाणम् 'स यदि पितृलोककामो भवति' (छा० ८।२।१) इत्यादि जगदैश्वर्यलक्षणं संसारगोचरमेव फलं भवति। अनिवर्तितत्वादविद्यायाः। तस्य च देशविशेषावबद्धत्वात्तत्प्राप्त्यर्थं गमनमविरुद्धम्। सर्वगतत्वेऽपि चात्मन आकाशस्येव घटादिगमने बुद्ध्याद्युपाधिगमने गमनप्रसिद्धिरित्यवादिष्म 'तद्गुणसारत्वात्' (ब्र० सू० २।३।२९) इत्यत्र। तस्मात् 'कार्यं बादरिः' (ब्र० सू० ४।३।७) इत्येष एव स्थितः पक्षः। 'परं जैमिनिः' (ब्र० सू० ४।३।१२) इति तु पक्षान्तरप्रतिभानमात्रप्रदर्शनं प्रज्ञाविकासनायेति द्रष्टव्यम्॥ १४॥

### ६ अप्रतीकालम्बनाधिकरणम्। सू० १५-१६

### अप्रतीकालम्बनान्नयतीति बादरायण उभयथाऽदोषात्तत्क्रतुश्च॥ १५॥

---

காமனையுள்ளவனாக ஆவானேயானால்" என்றதாதியால் சொல்லப்படும் ஜகதைஶ்வர்ய ரூபமான பலனானது ஸம்ஸாரத்துக்குள் சேர்ந்ததேயாகும். அவித்யையானது போக்கப்படாததாக விருப்பதே அதன் காரணமாகும். அத்தகைய பலன் தேச விசேஷ ஸம்பந்தமுள்ளதாக இருப்பதுபற்றி அதை யடைவதற்குவேண்டி கதியானது விரோதப்படமாட்டாது. ஆத்மாவானது ஸர்வகதமாக (எங்கும் நீக்கமற நிறைந்துள்ளதாக) இருந்தபோதிலுங்கூட குடம்முதலியவற்றின் கமனத்தில் ஆகாசத்துக்குப் போல புத்தி முதலிய உபாதியின் கமனமேற்படும் பொழுது (ஆத்மாவுக்கும்)கமனப்ரஸித்தி யேற்படுறது என "தத்குணஸாரத்வாத்" (ப்ர-ஸூ-2, 3, 29) என்றவிடத்தில் சொல்லியிருக்கிறோம். ஆகவே "கார்யம் பாதரி:" என்றதாதியாற் சொல்லப்பட்டதே நிலைத்த பக்ஷமாகும் (ஸித்தாந்தமாகும்.) "பரம்ஜைமினி:" என்றதாதியாற் சொல்லப்பட்டதோவெனில் அறிவு விரிவுபடுவதற்கு வேண்டி வேறுபக்ஷத்தின் (பூர்வபக்ஷத்தின்) தோற்றத்தைக் காட்டியதாகவாகும் எனக் கண்டுகொள்ளவேண்டும். (14) (எ-று)

ஐந்தாவது கார்யாதிகரணம் முற்றிற்று.



### அப்ரதீகாலம்பனாதிகரணம் 6.

### (ஸூ) அப்ரதீகாலம்பநான் நயதீதி பாதராயண: உபயதா அதோஷாத் தத்க்ரது: ச (15)

(ப-ரை) [अमानवः पुरुषः (அமானவ: புருஷ:)=முகூறிய அமானவபுருஷனானவன் अप्रतीकालंबनान् (அப்ரதீகாலம்பநான்)=ப்ரதீகோபாஸ்தி செய்தவர்களைத் தவிர்த்து வேறு உபாஸனஞ்செய்தவர்களை नयतीति (நயதீதி)=ப்ரம்ஹலோகத்தை யடைவிக்கிறான் என बादरायणः (பாதராயண:) = பாதராயணர் எண்ணுகிறார் उभयथा (உபயதா)=இவ்விதம் இரண்டுவிதமாக (ப்ரதீகோபாஸகர்களை ப்ரம்ஹ

प्रतीकोपासकान् ब्रह्म लोकं नयति वा नवा। अविशेषश्रुतेरेतान् ब्रह्मोपासकवन्नयेत् ॥ १ ॥
ब्रह्मक्रतोरभावेन प्रतीकार्हफलश्रवात्। न तान्नयति पञ्चाग्निविदो नयति तच्छ्रुतेः ॥ २ ॥

स्थितमेतत्कार्यविषया गतिर्न परविषयेति। इदमिदानीं संदिह्यते किं सर्वान्विकारालम्बनानविशेषेणैवामानवः पुरुषः प्रापयति ब्रह्मलोकमुत कांश्चिदेवेति। किं तावत्प्राप्तं सर्वेषामेवैषां विदुषामन्यत्र परस्माद्ब्रह्मणो गतिः स्यात्। तथाहि—'अनियमः सर्वासाम्—'(ब्र० सू० ३। ३। ३१) इत्यत्राविशेषेणैवैषा विद्यान्तरेष्ववधारितेति। एवं प्राप्ते प्रत्याह—अप्रतीकालम्बनानिति। प्रतीकालम्बनान्वर्जयित्वा सर्वानन्यान्विकारालम्बनान्नयति ब्रह्मलोकमिति बादरायण आचार्यो मन्यते। नह्येवमुभयथाभावाभ्युपगमे कश्चिद्दो-

---

லோகஞ்சேர்ப்பதில்லை என்றும், மற்றவுபாஸகர்களை ப்ரம்ஹலோகம் சேர்ப்பிக்கின்றனரென்றும்) சொல்லுவதில் **अदोषात्** (அதோஷாத்)=தோஷம் ஸம்பவிக்கவும்மாட்டாது **तत्क्रतुश्च** (தத்க்ரதுஶ்ச)=இவ்விஷயத்தில் தத்க்ரது நியாயமும் உபோத்பலகமாகவிருக்கிறது. (15) (எ—று)

வையாஸிக நியாயமாலை.

(க—ரை) அமானவபுருஷன் ப்ரதீகோபாஸகர்களை ப்ரம்ஹலோகத்தை சேர்ப்பிக்கின்ருனு? அல்லது இல்லையா? என்பது **ஸந்தேஹம்.** விசேஷஶ்ருதி ஒன்றுமில்லாதிருப்பதால் ப்ரம்ஹோபாஸகர்களைப் போல இந்த ப்ரதீகோபாஸகர்களையும் ப்ரம்ஹலோகத்தில் சேர்க்கவேசெய்கின்ருன் என்பது **பூர்வபக்ஷம்.** ப்ரம்ஹ விஷயகமான தியானமில்லாதிருப்பதாலும், ப்ரதீகத்யானத்துக்குரிய பலன் சொல்லப்பட்டிருப்பதாலும் ப்ரதீகோபாஸகர்களை ப்ரம்ஹலோகம் சேர்ப்பிப்பதில்லை பஞ்சாக்னிவித்யோபாஸகர்களையோ ப்ரம்ஹலோகம் சேர்ப்பிக்கின்ருன். அவ்விதம் சாஸ்திரம் சொல்லியிருப்பதே அதன் காரணமாகும் என்பது **ஸித்தாந்தம்.**

பாஷ்யம்.—கதியானது கார்ய ப்ரம்ஹவிஷயமானதே யொழிய பரப்ரம்ஹ விஷயமானதன்று என்பது நிலைத்தது. இப்பொழுது அமானவ புருஷன் விகாரோபாஸனஞ் செய்பவர் யாவரையும் பொதுவாகவே ப்ரம்ஹலோகம் சேர்ப்பிக்கின்ருனு? அல்லது சிலரையேதான் சேர்ப்பிக்கின்ருனு? என்ற இது ஸந்தேஹித்து நிஶ்சயிக்கப்படுகிறது. முதலில் கிடைப்பதாவது:—பரப்ரம்ஹத்தைத் தவிர்த்து எல்லாவுபாஸகர்களுக்கும் இந்தக் கதியானது உண்டு. அதாவது:— "அநியம: ஸர்வாஸாம்" என்ற விடத்தில் பொதுவாகவே இந்தக் கதியானது வேறுவித்யைகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது என்றும். என இவ்விதம் பூர்வ பக்ஷம் ப்ராப்த்தமாகவே "அப்ரதீகாலம்பநான்" என்றதாதியால் பதில் சொல்லுகிருர். ப்ரதீகோபாஸனஞ் செய்கின்றவர்களைத் தவிர்த்து மற்ற எல்லா விகாரோபாஸகர்களையும் (அமானவபுருஷன்) ப்ரம்ஹலோகத்தைச் சேர்ப்பிக்கிருன் என பாதராயண ஆசிரியர் எண்ணுகிருர். இவ்விதமுபயதாபாவம் ஒப்புக்கொள்ளுவதில் (இரண்டுவிதமாகப் பொருள் கொள்ளுவதில்) ஒருதோஷமுமில்லை யன்ரோ. முன்னர் சொன்ன அநியம நியாயமானது ("அநியமஸ்ஸர்வாஸாம்" என்ற ஸூத்

षोऽस्ति । अनियमन्यायस्य प्रतीकव्यतिरिक्तेष्वप्युपासनेषूपपत्तेः । तत्क्रतुश्चास्योभयथाभावस्य समर्थको हेतुर्द्रष्टव्यः । यो हि ब्रह्मक्रतुः स ब्राह्ममैश्वर्यमासीदेदिति श्लिष्यते 'तं यथा यथोपासते तदेव भवति' इति श्रुतेः । नतु प्रतीकेषु ब्रह्मक्रतुत्वमस्ति प्रतीकप्रधानत्वादुपासनस्य । नन्वब्रह्मक्रतुरपि ब्रह्म गच्छतीति श्रूयते यथा पञ्चाग्निविद्यायाम् 'स एनान्ब्रह्म गमयति' (छा० ४ । १५ । ५) इति । भवतु यत्रैवमाहत्यवाद उपलभ्यते तदभावे त्वौत्सर्गिकेण तत्क्रतुन्यायेन ब्रह्मक्रतूनामेव तत्प्राप्तिर्नेतरेषामिति गम्यते ॥ १५ ॥

## विशेषं च दर्शयति ॥ १६ ॥

नामादिषु प्रतीकोपासनेषु पूर्वस्मात्पूर्वस्मात्फलविशेषमुत्तरस्मिन्नुत्तरस्मिन्नुपासने दर्शयति—'यावन्नाम्नो गतं तत्रास्य यथाकामचारो भवति' (छा० ७ । १ । ५) 'वाग्वाव

---

திரத்தால் நிரூபித்த நியாயமானது) ப்ரதீகத்தை விட வேருன உபாஸனங்களிலும் பொருந்தக் கூடியதாகவே ஆகிறது. தத்க்ரது நியாயமும் இந்த இரண்டு விதமான பொருள்கொள்ளுவதைச் சாதிக்கக்கூடிய ஹேதுவாக (காரணமாக) வும் காணப் படுகிறது. எவன் ப்ரம்ஹவிஷயமான ஸங்கல்பமுள்ளவனே அவன் ப்ரம்ஹஸம் பந்தியான ஐஸ்வரியத்தை அடைவான் என்பது பொருந்துகிறது. "அதை எங் தெந்த விதமாக உபாஸிக்கின்றனரோ அவ்விதமே ஆகின்றனர்" என ஶ்ருதியு மிருக்கிறது. ப்ரதீகங்களில் (சாளக்ராவசிலை முதலியன ப்ரதீகங்களெனப்படும்) ப்ரம்ஹக்ரதுத்வமானது (ப்ரம்ஹமென்ற ஸங்கல்பமானது) கிடையாது. அவ் வுபாஸனமானது ப்ரதீகத்தை ப்ரதான (முக்கிய) மாகக்கொண்டிருப்பதே அதன் காரணமாகும்.

சங்கை—பஞ்சாக்னிவித்யையில் "அந்த அமானவபுருஷன் இவர்களை ப்ரம் ஹத்தை யடைவிக்கிருன்" என்பதாய் ப்ரம்ஹத்யானமில்லாதவன் கூட ப்ரம்ஹத் தை யடைவதாகச் சுருதியில் கூறப்படுகின்றதன்ருே எனின்?

உத்தரம்—எங்கு இவ்விதம் ப்ரதீகோபாஸகன் விஷயத்தில் தனியான உப தேசம் காணப்படுகிறதோ அங்கு இவ்விதமிருக்கட்டும். அவ்விதம் சொல்லப் படாத விடத்திலோ பொதுவாகவே உள்ள தத்க்ரது நியாயத்தினுலேயே ப்ரம்ஹ விஷயமான தியானஞ் செய்பவர்க்கு ப்ரம்ஹப்ராப்த்தியே யொழிய மற்றவர்க் கில்லை என்பது அறியப்படுகிறது. (15) (எ—று)

## (ஸூ) விசேஷம் ச தர்சயதி (16)

(ப—ரை) **विशेषञ्च** (விசேஷஞ்ச)=முன்முன்னுள்ள நாமாதிப்ரதீக உபாஸ னங்களை விட மேல்மேலுள்ளவாகாதிப்ரதீக உபாஸனங்களில் பலவிசேஷத்தை யும் **दर्शयति** (தர்ஶயதி)=சுருதியானது காண்பித்து மிருக்கிறது. (16) (எ—று)

பாஷ்யம்.—நாமாதிகளான ப்ரதீகோபாஸனங்களில் முன் முன்னுள்ளதைக் காட்டிலும் மேன் மேலுள்ள ப்ரதீகோபாஸனத்தில் பலவிசேஷத்தைச் சுருதி காண்பித்திருக்கிறது. அதாவது: "நாமாவுக்குக் கதியானது எதுவரையுண்டோ

नाम्नो भूयसी' (छा० ७।२।१) 'यावद्वाचो गतं तत्रास्य यथाकामचारो भवति' (छा० ७।२।२) 'मनो वाव वाचो भूयः' (छा० ७।३।१) इत्यादिना। स चायं फलविशेषः प्रतीकतन्त्रत्वादुपासनानामुपपद्यते। ब्रह्मतन्त्रत्वे तु ब्रह्मणोऽविशिष्टत्वात्कथं फलविशेषः स्यात्। तस्मान्न प्रतीकालम्बनानामितरैस्तुल्यफलत्वमिति ॥ १६ ॥

इति श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्य श्रीमच्छङ्करभगवत्पादकृतौ श्रीशारीरकमीमांसाभाष्ये चतुर्थाध्यायस्य तृतीयः पादः ॥ ३ ॥



## चतुर्थाध्याये चतुर्थः पादः।

[अत्र पादे ब्रह्मप्राप्ति–ब्रह्मलोकस्थितिनिरूपणम्]

### १ संपद्याविर्भावाधिकरणम्। सू० १–३

**संपद्याविर्भावः स्वेन शब्दात् ॥ १ ॥**

---

அவற்றில் இவனுக்கு (நாமோபாஸகனுக்கு) தனதிஷ்டப்படி நடத்தல் ஏற்படுகிறது" என்றும் "வாக்கே நாமாவைக் காட்டிலும் மேலானது" "வாக்குக்கு எவ்வளவு தூரம் கதியுண்டோ அவ்விடத்தில் இவனுக்கு (வாகிந்திரியோபாஸகனுக்கு) தனதிஷ்டப்படி நடத்தல் ஏற்படுகிறது. "மனஸ்ஸே வாக்கைக் காட்டிலும் மேலானது" என்றதாதியாம். அந்த இந்தப் பலவிசேஷமும் உபாஸனமானது (வாகாதி) ப்ரதீகத்தையொட்டியதாக இருப்பதால் பொருந்தக் கூடியதாகவாகிறது. ப்ரம்ஹாதீனமாக உபாஸனமிருந்தாலோ ப்ரம்ஹமானது எங்கும் ஓரேமாதிரியாக இருப்பதால் பலவிசேஷமானது எவ்விதம் ஏற்படும். ஆகவே ப்ரதீகோபாஸகர்களுக்கு மற்றவுபாஸகர்களுடன் துல்யமானபலன் ஏற்படமாட்டாது என்றேற்பட்டது. (16) (எ—று)

ஆறுவது அப்ரதீகாலம்பனாதிகரணம் முற்றிற்று.

ஸ்ரீகோவிந்தபகவத்பூஜ்யபாத சிஷ்யர்களான ஸ்ரீமச்சங்கரபகவத்பாதர்களின் க்ருதியான ஸ்ரீசாரீரகமீமாம்ஸாபாஷ்யத்தில் நன்காவது அத்தியாயத்தின் மூன்றுவதுபாதம் முற்றிற்று.



## நான்காவது அத்தியாயத்தின் நான்காவதுபாதம்.

### ஸம்பத்யாவிர்ப்பாவாதிகரணம் 1.

(அ—கை) முந்தின மூன்றுபாதங்களிலும் நிர்க்குண ப்ரம்ஹஸாக்ஷாத்காரமுள்ளவர்களுக்கு புண்ணியபாபகர்மங்கள் யாவும் தேய்ந்ததும் இவ்விடத்திலேயே ப்ராணன்களுக்கு லயமேற்படுகிறதேயொழிய உத்க்ராந்தியானது கிடையாது என்பது சொல்லப்பட்டது. அத்துடன் ஸகுண ப்ரம்ஹோபாஸகர்களுக்கு

புண்ணியபாபங்கள் தேய்ந்ததும் தலையிலுள்ள ஸுஷும்னநாடிவழியாக வெளிக்கிளம்பி அர்ச்சிராதிமார்க்கமாக ஸகுணப்ரம்ஹப்ராப்தி யேற்படுவதாகச் சொல்லப்பட்டது. 22 ஸூத்திரங்களும் 7 அதிகாரணங்களுமுள்ள இந்தநான்காவது பாதத்தில் நிர்க்குணப்ரம்ஹ ஸாக்ஷாத்காரத்தை யடைந்து அதிலேயே ஒடுங்கின ப்ராணனுள்ளவர்களுக்கு இயற்கையாக வுள்ளதும் விசுத்த சித்ரூபமுமான ப்ரம்ஹாபேதத்துடனும், ஆரோபிதமான ஸர்வக்ஞத்வாதிரூபத்துடனும் அவஸ்தானமும், ஸகுண ப்ரம்ஹோபாஸனஞ் செய்து ஸகுணப்ரம்ஹத்தை யடைந்தவர்களுக்கு ஸகுணப்ரம்ஹ ஸாயுஜ்யத்துடன் அவஸ்தானமும் நிரூபிக்கப்படுகிறது.

சாந்தோக்கியத்தில் "**एवमेवैष संप्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते**" எனப் படிக்கப்படுகிறது. **एवमेव** (ஏவமேவ) இவ்விதமே, **एष संप्रसादः** (ஏஷஸம்ப்ரஸாத:) அவித்யாதிதோஷங்களினின்றும் விடுபட்ட இந்தச் சுத்தஜீவன், **अस्मात् शरीरात्** (அஸ்மாத் சரீராத்) இந்தச் சரீரத்தினின்றும் (அழியக் கூடிய, அதாவது: அநிருத ஜடதுக்காத்மகமான ஸ்தூல ஸூக்ஷ்ம காரணசரீரத்தினின்றும் என்றும்.) **समुत्थाय** (ஸமுத்தாய) வெளிக்கிளம்பி (ஸ்தூலஸூக்ஷ்மகாரணசரீராபிமானத்தை விலக்கிக் கொண்டு) **परंज्योतिरुपसंपद्य** (பரம்ஜ்யோதிருபஸம்பத்ய) பரமானஜ்யோதிஸ்ஸை யடைந்து, **स्वेन रूपेण** (ஸ்வேந ரூபேண) சொந்தமான ரூபத்துடன், **अभिनिष्पद्यते** (அபிநிஷ்பத்யதே) அபிவ்யக்தனுக வாகிறுன். என்பது ஸித்தாந்தப்படி அதன் பொருளேற்படுகிறது.

இவ்விடத்தில் "**स्वेन रूपेणाभिनिष्पद्यते**" என்றதால் தேவலோகாதி உபபோகஸ்தானங்களில் போல ஆகந்துகமான (புதிதாக ஏற்படுகின்ற) வேறு ரூபத்துடன் சேருகிறுன் என்று பொருள் கொள்ளுவது நியாயமா? அல்லது தனது சொந்தமான ஸ்வரூபத்துடன் மட்டும் பிரகாசத்தையடைகிறுன் என்று பொருள் கொள்ளுவது நியாயமா? எனஸந்தேஹித்து சொந்த ரூபத்துடன் மட்டும் ப்ரகாசிக்கிறுன் என்றுதான் பொருள் கொள்ளவேண்டும் என்று ஸித்தாந்தப்படுத்த வேண்டி 3 ஸூத்திரங்கள்கொண்ட இந்த அதிகரணமானது ஆரம்பிக்கப் படுகிறது. அதன்முதல் ஸூத்திரம் பின்வருமாறு—

## (ஸூ) ஸம்பத்யாவிர்ப்பாவ: ஸ்வேந சப்தாத் (1)

(ப-ரை) ["**अस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते** (அஸ்மாத்சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணுபிநிஷ்பத்யதே)" எனமோக்ஷத்தைச் சொல்லும் சுருதியில்] **संपद्य** (ஸம்பத்ய)=பரமானஜ்யோதிஸ்ஸை யடைந்து அபேதஸாக்ஷாத்காரத்தை யடைந்து, **आविर्भावः** (ஆவிர்ப்பாவ:)=முன்னரே இருக்கின்ற சொந்தஸ்வரூபத்தின் பிரகாசமானது ஏற்படுவதாகச் சொல்லப்படுகிறது. ஏன்? **स्वेन शब्दात्** (ஸ்வேந ஶப்தாத்)=சுருதியில் ஸ்வேந என்றதால் ஸ்வரூபபோதகமான சப்தம் பிரயோகிக்கப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். (1) (எ-று)

नाकवन्नूतनं मुक्तिरूपं यद्वा पुरातनम् । अभिनिष्पत्तिवचनात् फलत्वादपि नूतनम् ॥ १ ॥

स्वेन रूपेणेति वाक्ये स्वशब्दात्तत्पुरातनम् । आविर्भावोऽभिनिष्पत्तिः फलञ्चाज्ञानहानितः ॥ २ ॥

"एवमेवैष संप्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यत इति श्रूयते । तत्र संशयः—किं देवलोकाद्युपभोगस्थानेष्विवागन्तुकेन केनचिद्विशेषेणाभिनिष्पद्यत आहोस्विदात्ममात्रेणेति । किं तावत्प्राप्तम् । स्थानान्तरेष्विवागन्तुकेन केनचिद्रूपेणाभिनिष्पत्तिः स्यात् । मोक्षस्यापि फलत्वप्रसिद्धेः । अभिनिष्पद्यत इति चोत्पत्तिपर्यायत्वात् । स्वरूपमात्रेण चेदभिनिष्पत्तिः पूर्वास्वप्यवस्थासु स्वरूपानपायाद्विभाव्येत । तस्माद्विशेषेण केनचिदभिनिष्पद्यत इति । एवं प्राप्ते ब्रूमः—केवलेनैवात्मनाविर्भ-

---

வையாஸிக நியாயமாலே.

(க—ரை) முக்தி ஸ்வரூபமானது ஸ்வர்க்கமானது போல புதிதாக ஏற்படுகிறதா? அல்லது முன்னரே உள்ளதா? என்பது ஸந்தேஹம். "அபிநிஷ்பத்யதே" என்ற வசனமிருப்பதைக் கொண்டும், பலனுக வாவதைக் கொண்டும் முக்திஸ்வரூபமானது புதிதாக ஏற்படுவதாகத்தான் சொல்லவேண்டும் என்பது பூர்வபக்ஷம். "ஸ்வேந ரூபேண" என்ற வாக்கியத்தில் ஸ்வேந (சொந்தமான=முன்னரே யுள்ள) என்ற சப்தமிருப்பதைக் கொண்டு முக்திஸ்வரூபத்தை முன்னருள்ளதாகவேதான் கொள்ளவேண்டும். அபிநிஷ்பத்யதே=என்றதாற் சொல்லப்படும் அபிநிஷ்பத்தியானது ஆவிர்ப்பாவமாகவேதான் ஏற்படுகிறது. அக்ஞான நிவிருத்தியானது பலனுகவாகிறது என்பது ஸித்தாந்தம். (எ—று)

பாஷ்யம் —"* ஏவமேவ ஏஷஸம்ப்ரஸாதோ அஸ்மாத் சரீராத் ஸமுத்தாய, பரம் ஜ்யோதிருபஸப்பத்ய ஸ்வேந ரூபேண அபிநிஷ்பத்யதே" என ஸ்ருதியில் படிக்கப்படுகிறது. அதில் ஸம்சயமுண்டாகிறது. அதாவது:—தேவலோகாதிகளான உபபோகஸ்தானங்களில் போல ஆகந்துகமான (புதிதாகக் கிடைத்த) ஏதோவொரு விசேஷத்தினுல் அபிநிஷ்பத்தியை அடைகிருனு? அல்லது ஸ்வரூபத்தினுல் மட்டும் அபிநிஷ்பத்தியை யடைகிருனு? என்ரும். முதலில் கிடைப்பது யாதென்னில், வேறு ஸ்தானங்களில் போல ஆகந்துகமான (புதிதாகக்கிடைத்த) ஏதோவொரு ரூபத்தினுல் அபிநிஷ்பத்தியானது ஏற்படுகிறது. மோக்ஷத்துக்கும் பலத்தன்மை ப்ரஸித்தமாகவிருப்பதே அதன்காரணமாகும். "‡ அபிநிஷ்பத்யதே" என்றபதம் உத்பத்தியைச் சொல்லும் மாற்றுப்பதமாகும். ஸ்வரூபமாத்திரத்தினுல் அபிநிஷ்பத்தியானது (ஆவிர்ப்பாவமானது) சொல்லப்படுமானுல் முந்தின நிலேகளிலுங் கூட ஸ்வரூபத்துக்கு நாசமானது இல்லாதபடியால் அது அறியப்படவேண்டிவரும் (அவ்விதமோ இல்லே) ஆகவே ஏதோ ஒரு விசேஷத்துடன் (வேறு தர்மத்துடன்) உத்பத்தியை யடைகிருன் என்றுதான் சொல்லவேண்டும் எனப்

---

* இந்தச் சுருதியின்பொருளே ஸித்தாந்தப்படி அவதாரிகையிற் காண்க.

‡ பூர்வபக்ஷத்தில் "அபிநிஷ்பத்யதே" என்றதற்கு உண்டாகிருன் என்று பொருள். ஸித்தாந்தத்தில், ஆவிர்ப்பாவத்தை (ப்ரகாசத்தை) யடைகிருன் என்றுபொருள்.

वति न धर्मान्तरेणेति । कुतः—स्वेन रूपेणाभिनिष्पद्यत इति स्वशब्दात् । अन्यथा हि स्वेनेति शब्देन विशेषणमनवक्लृप्तं स्यात् । नन्वात्मीयाभिप्रायः स्वशब्दो भविष्यति । न । तस्यावचनीयत्वात् । येनैव हि केनचिद्रूपेणाभिनिष्पद्यते तस्यैवात्मीयत्वोपपत्तेः स्वेनेति विशेषणमनर्थकं स्यात् । आत्मवचनतायां त्वर्थवत्केवलेनैवात्मरूपेणाभिनिष्पद्यते नागन्तुकेनापररूपेणापीति ॥ १ ॥

कः पुनर्विशेषः पूर्वास्ववस्थास्विह च स्वरूपानपायसाम्ये सतीत्यत आह—

**मुक्तः प्रतिज्ञानात् ॥ २ ॥**

योऽत्राभिनिष्पद्यत इत्युक्तः स सर्वबन्धविनिर्मुक्तः शुद्धेनैवात्मनाऽवतिष्ठते । पूर्वत्र

---

பூர்வபக்ஷம் ப்ராப்த்தமாகவே ஸித்தாந்தத்தைச் சொல்லுகிறோம். தனித்த ஆத்மாவினுல் மட்டும் ஆவிர்ப்பாவத்தை யடைகிருனே யொழிய வேறுதர்மத்துடன் கூட உத்பத்தியை யடைவதில்லை. ஏன்? "**स्वेन रूपेणाभिनिष्पद्यते** (ஸ்வேநரூபேண அபிநிஷ்பத்யதே) என்றவிடத்தில் **स्वेन** (ஸ்வேந) என்ற சப்தமிருப்பதே அதன் காரணமாகும். அவ்விதமில்லாவிடில் ஸ்வேந என்றதால் கூறியவிசேஷணம் (அடைமொழி) பயனற்றதாகவாகிவிடும்.

சங்கை—**स्व** (ஸ்வ) என்ற சப்தமானது தன்னைச் சேர்ந்தது என்ற பொருளுள்ளது என்கிறோம் எனின்?

உத்தரம்—அதுபொருந்தாது. அதைச் சொல்லவேண்டிய அவஸ்யமில்லாமலிருப்பதுபற்றியே என்க. எந்த வொருரூபத்துடன் அபிநிஷ்பத்தியை (உத்பத்தியை) அடைகிருனே அது தன்னைச் சேர்ந்ததாகவே இருப்பதால் ஸ்வேந என்ற விசேஷணம்(அடைமொழி)பயனற்றதாகவே ஆகிவிடும். (ஸ்வ என்றசப்தத்துக்கு) சொந்தமான என்ற பொருள் கொண்டாலோ தனித்த ஆத்மஸ்வரூபத்துடன் மட்டுமே ஆவிர்ப்பாவத்தை யடைகிருனே யொழிய இடையில் வந்த வேறு ரூபத்தால் இல்லை யானதுபற்றி [**स्वेन** (ஸ்வேந) என்ற விசேஷணமானது] பயனுள்ளதாக வாகிறது. (1) (எ—று)

**அவதாரிகா பாஷ்யம்.**—ஸ்வரூபத்துக்கு அபாயம் (அழிவு) இல்லாமைஸமானமாகவிருக்கும் பொழுது முன்னிலைகளிலும் இதிலும் என்னவிசேஷமிருக்கிறது எனின்? அதைப் பின்வரும் ஸூத்திரத்தினுல் சொல்லுகிறூர்—

**(ஸூ) முக்தः ப்ரதிக்ஞானுத் (2)**

(ப—ரை) ஸ்வரூபத்துடன் இப்பொழுது அபிநிஷ்பத்தியை (ஆவிர்ப்பாவத்தை) அடைபவன் எவனே அவன் **मुक्तः** (முக்தः)=முக்தன் எனப்படுகிறுன். ஏன்? **प्रतिज्ञानात्** (ப்ரதிக்ஞானுத்)=அவ்விதமே ஸ்ருதியில் ப்ரதிக்ஞைகாணப்படுவதே அதன் காரணமாகும். (2) (எ—று)

**பாஷ்யம்.**—எவன் இங்கிலையில் அபிநிஷ்பத்தியை யடைகிறுன் எனச் சொல்லப்பட்டானே அவன் எல்லாபந்தத்தினின்றும் விடுபட்டவனுய் சுத்தமான ஆத்

त्वन्धो भवत्यपि रोदितीव विनाशमेवापीतो भवतीति चावस्थात्रयकलुषितेनात्मनेत्ययं विशेषः। कथं पुनरवगम्यते मुक्तोऽयमिदानीं भवतीति—प्रतिज्ञानादित्याह। तथा हि ‘एतं त्वेव ते भूयोऽनुव्याख्यास्यामि’ (छा० ८। ९। ३, ८। १०। ४, ८। ११। ३) इत्यवस्थात्रय दोषविहीनमात्मानं व्याख्येयत्वेन प्रतिज्ञाय ‘अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः’ (छा० ८। १२। १) इति चोपन्यस्य ‘स्वेन रूपेणाभिनिष्पद्यते स उत्तमः पुरुषः’ (छा० ८। १२। ३) इति चोपसंहरति। तथाख्यायिकोपक्रमेऽपि ‘य आत्माऽपहतपाप्मा’ (छा० ८। ७। १) इत्यादि मुक्तात्मविषयमेव प्रतिज्ञानम्। फलत्वप्रसिद्धिरपि मोक्षस्य बन्धनिवृत्तिमात्रापेक्षा नापूर्वोपजननापेक्षा। यदप्यभिनिष्पद्यत इत्युत्पत्तिपर्यायत्वं तदपि पूर्वावस्थापेक्षं यथा रोगनिवृत्तावरोगोऽभिनिष्पद्यत इति तद्वत्। तस्माददोषः ॥ २ ॥

आत्मा प्रकरणात् ॥ ३ ॥

---

மாவுடனேயே (ஸ்வரூபத்துடனேயே) எழுகிறான். முன்னிலையிலோவெனில் பொட்டையாகவானவன் போலும், அழுகின்றவன் போலும் விநாசத்தை யடைந்தவனாகவே ஆயினன் என்பதுபற்றி மூன்றுவிதமான அவஸ்தைகளுடன் கலங்கின ஸ்வரூபத்துடனே இருந்தான் என்ற விசேஷம் தெரிகிறது. இப்பொழுது முக்தனாகவாகிறான் என்பது எவ்விதமறியப்படுகிறது எனின்? ப்ரதிக்ஞானத்தால் (உபதேசத்தால்) என்று சொல்லுகிறார். அதாவது:—“இவனையே உனக்குத் திரும்பவும் விளக்கமாக உபதேசிக்கிறேன்” என்றதால் அவஸ்தாத்ரயரூபமான தோஷமற்ற ஆத்மாவை விளக்கவேண்டியவனாக ப்ரதிக்ஞை செய்து “சரீரமற்றிருப்பவனை சுகதுக்கங்கள் ஸ்பந்திப்பதில்லை” எனவுபதேசித்து. “சொந்தரூபத்துடன் ஆவிர்ப்பாவத்தை யடைகிறான் அவன் உத்தமபுருஷனாகிறான்” எனச் சுருதி முடித்திருக்கிறது. அவ்விதமே கதையின் தொடக்கத்திலுங்கூட “பாப ஸம்பந்தமற்ற யாதொரு ஆத்மாவுண்டோ” என்பதாய் முக்தனான ஆத்மவிஷயமாகவே ப்ரதிக்ஞை செய்யப்பட்டிருக்கிறது. மோக்ஷத்துக்குப் பலத்தன்மையின் பிரஸித்தியும் பந்தநிவிருத்தியை மட்டும் அபேக்ஷித்ததே யொழிய புதிதானவொன்றின் உத்பத்தியை யபேக்ஷித்ததன்று. அபிநிஷ்பத்யதே என்பது உத்பத்தியைக் கூறும் மாற்றுப்பதம் என யாதொன்று சொல்லப்பட்டதோ அதுவும், ரோகம் நிவிருத்தித்ததும் ஆரோகியாக அபிநிஷ்பத்தியை யடைகிறான் (ஆகிவிடுகிறான்) என்பது போல முந்தினநிலையை யபேக்ஷித்ததாகவாகும். ஆகவே தோஷமில்லை. (2) (எ-று)

## (ஸூ) ஆத்மாப்ரகரணாத் (3)

(ப-ரை) **परं ज्योतिरुपसंपद्य** (பரம் ஜ்யோதிருபஸம்பத்ய) = என்றவிடத்திலுள்ள ஜ்யோதி: என்ற பதத்தால் சொல்லப்படுவது **आत्मा** (ஆத்மா)=ஆத்மாவேயாகும் என்? **प्रकरणात्** (ப்ரகரணாத்)=பரமாத்மப்ரகரணமாக இருப்பதே அதன் காரணமாகும். (3) (எ-று)

